பெரிய

# சிவவாக்கியர் பாடல்

மூலமும் - உரையும்

வித்வான் கூ. அப்பன் செட்டியாரவர்கள்
மாணாக்கரும், மருத்துவக் கலைஞருமாகிய
மா. வடிவேலு முதலியா ரவர்களால்
எழுதப்பெற்ற
உரையுடன்

519 - பாடல்கள்

B. இரத்தின நாயகர் & ஸன்ஸ்,
திருமகள்விலாச அச்சியந்திரசாலை,
சென்னை.

1933.

 [விலை ரூபா 2.



# ஸ்ரீ சிவவாக்கியர்
## சரித்திரச் சுருக்கம்

பூர்வத்திலே திருமழிசையென்னுந் திவ்விய க்ஷேத்திரத்திலே ஸ்ரீ பிருகுமகாரிஷியானவர் தம்முடைய கருவிகளையெல்லாம் புற இந்திரியங்களிற் செல்லவொட்டாமல் அடக்கி,

"சிவத்தைப்பேணில் தவத்திற்கழகு"

என்பதுபோல ஸ்ரீ பார்வதீ சமேதராகிய பரமேஸ்வரனை உள்ளபடியே மனத்தில்கொண்டு நெடுங்காலமாகத் தவஞ்செய்திருந்தனர். அதுசமயத்தில் தேவேந்திரனானவன் இவரது தவத்தைக்கெடுக்க எண்ணங்கொண்டு ஒரு தேவஸ்திரீயை அவரிடத்தில் அநுப்பினான். அந்தப்பெண்ணும் தேவலோகத்தினின்றும் விரைந்துவந்து திருமழிசையம்பதியைக் கண்டு பிருகுமுனிவர் தவஞ்செய்யுமிடத்தை ஆராய்ந்து அவர்பால் சென்று பெண்கள் மயக்கவேண்டிய,

"முத்தனையமூரலும் பவளவாயின்சொலு
முகத்திலகு பசுமஞ்சளு
மூர்ச்சிக்கவிரக சந்ததமேற்றவிரு
கொங்கை மணி மாலைநால
வைத்தெனைமயக்கியிரு கண்வலையைவீசியே"

என்றவண்ணம் பலவிதத்தாலும் அவரைமயக்கி அவருடைய தபசைக்கெடுத்து அவரைத் தன்வசப்படுத்தி அவருடன் கலந்து ஒரு மகவைப்பெற்று அப்பதியிலேயே விட்டுவிட்டுத் தான் தேவலோகஞ் சென்றனள். பிறகு பிருகுமகாரிஷியுந் தவத்தி லிருந்துவிட்டார்.

இங்ஙனம் பிருகு மகாரிஷிக்குப் பிறந்ததால் அது பிறக்கும்போது;

"சிவவென வாக்குடனேவந்த"

என்று ஸ்ரீ தாயுமான சுவாமிகளின் திருவாக்குப்படி "சிவ சிவ" என்று சிவநாமத்தை உச்சரித்துக்கொண்டேவந்தது.

இங்ஙனம்பிறந்த குழந்தை தாயுந் தந்தையும் தன்னை அநுசரிக்காமல் விட்டுவிடவே பசிமிகுதியாலோ! அன்றி சர்வேஸ்வரனை நினைந்தோ கா! கா!! என்று அழுதுகொண்டிருந்தது. அப்போது ஜகதீஸ்வரரானவர் சத்திசமேதராய் எழுந்தருளிவந்து அக்குழந்தைக்கு எவ்வித துன்பமும் உண்டாகாம லிருக்கவென்று திருவருள்செய்து அவ்வழுகைக் குரலைமாற்றி அகன்று போயினர்.

அதுசமயத்தில் அவ்வழியேவந்த பிள்ளைப்பேறில்லாதவனான திருவாளனென்னும் வேடன் அக்குழந்தையைக் கண்டு அதிக ஆவலோடு எடுத்துக்கொண்டுபோய் தன்

னுடைய பத்தினிகையிற் கொடுத்து வரலாற்றைக் கூறினன். உடனே அவள் குழந்தையை மார்போடணைத்து உச்சி மோந்து முத்தமாடவே தன்னுடைய இரண்டு ஸ்தனங்களி லும் பாலானது ஊற்றைப்போல் சுரந்தது. அவள் அதை உண்பிக்க அது பேரானந்தப்பாலை உண்ணவிருக்குங் குழந் தையாதலால் இந்தப்பாலை உண்ணுமலே வளர்ந்து வந்தது.

இங்ஙனஞ் சிலநாள் செல்ல தந்தையாகிய திருவாள னென்பான் தனக்கு அரிதாகக் கிடைத்த புத்திரனுக்கு சில சோதிட வல்லவர்களைக்கொண்டு திருமழிசையில் பிறந்தமை யால், 'திருமழிசையான்' என்கிற திருநாமஞ் சாற்றினர். பின்னர் அவருக்கு திருமழிசையாழ்வார் என்கிற திருநாமம் வழங்கிக்கொண்டு வருகிறது.

இங்ஙனமாகிய இவர் சில ஆண்டுகளுக்குப் பின்னர் தம்மை வளர்த்துவந்த திருவாளன் வைஷ்ணவ சம்பந்தியா யிருந்தபடியால் வைஷ்ணவ மதத்திற் பிரவேசித்து அதனை சில ஆண்டுகள் ஆராய்ந்துவந்து அதனாற் பயனின்றென்று தான் உதித்தபோது தனக்கு உண்டான சிவ என்னும் வாக் கின் விசேஷத்தால்,

> "சந்ததமும் வேதமொழி யாதொன்றுபற்றினது
> தான் வந்துமுற்றும்"

என்று ஸ்ரீ தாயுமானவர் திருவாய் மலர்ந்தவண்ணம் ஆரம் பத்தில் எது உதிக்கின்றதோ அதுவே முடியும் என்பது

போல சைவசமயத்தில் நுழைந்து, "சிவவாக்கியர்" என்கிற பேருடையவராய் சைவமதத்தைப்பற்றி அநேகமான பாடல் களைப் பாடி பின் சிவபெருமானுடைய திருவடிநிழலை யடைந்து சிவத்துடன் இரண்டறக்கலத்தலாகிய மோட்ச சாம்ராஜ்யத்தை யடைந்தனர்.

இது கர்ணபரம்பரையாகக் கேட்டதுபோல் எழுதப் பட்டது.

சுபம்! சுபம்! சுபம்!



உ

சிவமயம்

# ஸ்ரீ சிவவாக்கியர் பாடல்

## மூலமும் - உரையும்

---

## விநாயகர் துதி

### எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

அரியதோர் நமச்சிவாய மாதியந்த மானதும்
ஆறிரண்டு நூறுதேவ ரன்றுரைத்த மந்திரம்
சுரியதோ ரெழுத்தையுன்னி சொல்லுவேன் சிவவாக்கியம்
தோஷதோஷ பாவமாயை தூரதூர வோடவே
கரியதோர் முகத்தையுற்ற கற்பகத்தைக் கைதொழக்
கலைகணூற்கண் ஞானமுங் கருத்தில்வந் துதிக்கவே
பெரியபேர்கள் சிறியபேர்கள் கற்றுணர்ந்த பேரெலாம்
பேயனாகி யோதிடும் பிழைபொறுக்க வேண்டுமே.

### (பொழிப்புரை)

ஆதி முனிவர்களால் உரைக்கப்பட்ட சாஸ்திரங்களும், புராண முதலிய மற்றைய நூல்களும், அவற்றினுட் கிடைகளை உணரும் உணர்ச்சியும், எனக்கு உதயமாகும் பொருட்டு, யானை முகத்தைப் பெற்றுள்ளவராகிய கற்பக விநாயகரை நமஸ்காரஞ்செய்து, அருமையான பஞ்சாட்சரங்களுக்கு ஆதியந்தமாய் விளங்குவதும், அநேக கோடி தேவர்களால் ஸ்மரிக்கப்பட்டதும், சுரிந்த ரூபத்தை வாய்ந்ததுமான (ஷை விநாயகர்க்கு முக்கிய மந்திரமாகிய) பிரணவ மந்திரத்

தைத் தியானஞ்செய்து, (என்றற் பூர்வ ஜென்மத்தில் செய்யப்பட்டு இச்சென்மத்தில் பிராரத்துவத்தின் நிமித்தம் என்னைவந்து தொடர்ந் துள்ள) மாயாசம்பந்தப்பட்ட பாவங்கள் யாவும் தொடராமே நீங்கும் படி, **"சிவவாக்கியம்"** என்னும் காரணப்பெயரைச் சமைந்துள்ள ஒரு அரிய நூலைச் சொல்லுகின்றேன். ஆனல், இதில் ஏதாவது குற்றங்கள் விரவிக் கிடக்கினும் வயதிற் பெரியோர், சிறியோர் யாவ ரும் (தாங்கள் கற்றுணர்ந்த கல்வியின் தேர்ச்சியால்) அக் குற்றங்களைக் கொள்ளாது குணத்தையே கைக்கொள்ளக் கடவர் எ - று.

இச்செய்யுள் வழிபடுகடவுள் வணக்கம் உணர்த்து முகத்தானே அவையடக்கமும் உணர்த்துதல் நுதலிற்று. அது,

"பெரியபேர்கள் சிறியபேர்கள் கற்றுணர்ந்த பேரெலாம்
பேயனுகி யோதிடும் பிழைபொறுக்க வேண்டுமே" என்பதாம்

இந்நூலாசிரியர், இங்ஙனம் கூறுது விடுவராயின், இந்நூல் பெரும்பாலும் யோகஞானங்களையே விளக்குகின்ற தாகையால் இதினைச் சமயவாதிகள் கொள்ளாது மதசம்மதம் பெறுமையாகிய காரணத்தால் இதற்குப் பலகுற்றங்கள் எடுத்துப் பேசத்தலைப்படுவ ராகையால், இவர் அவையடக்கமுகத்தான் அவர்களை யெல்லாம் அங்ஙனங் குற்றங் கூறுதபடி கேட்டுக்கொண்ட தென்க. 1

## அக்ஷர நிலை

ஆனவஞ் செழுத்துளே யண்டமு மகண்டமும்
ஆனவஞ் செழுத்துளே யாதியான மூவரும்
ஆனவஞ் செழுத்துளே யகாரமும் மகாரமும்
ஆனவஞ் செழுத்துளே யடங்கலாவ வுற்றவே.

(பொ - ரை) வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்ற பஞ்சாட் சரகிரமத்தின் கண்ணே சர்வ அண்டங்களும், அவற்றினுட் கிடைப்

பொருள்களும்,, திரிமூர்த்திகளும், யகார, மகார பீசங்களும், ஆகிய யாவும் உதிக்கின்றன எ - று.

வேதங்களிற் சொல்லப்படுவன பஞ்சாட்சரங்களின் கிரமங் களேயென்பார், 'ஆனவஞ்செழுத்துளே' எனவும், அப்பஞ்சாட்சர மே எல்லாவற்றிற்கும் மேம்பட்டதென்பார், 'அண்டமு மகண்ட மும்' எனவும், அதுவே பஞ்சகர்த்தர்களுக் குரிய தென்பார், 'ஆதி யான மூவரும்' எனவும், யோகிகளுக்கு யகார, மகார ஸ்தானங்க ளே சிறந்தவையென்பார், யகாரமும், மகாரமும் எனவுங் கூறினர்.

இது எழுத்துக்களின் கிரமங்களை விளக்குதலின் அக்ஷரநிலை என்னப் பட்டது. 2

## சரியை விலக்கல்

ஓடியோடி யோடியோடி யுட்கலந்த சோதியை
நாடிநாடி நாடிநாடி நாட்களும் கழிந்துபோய்
வாடிவாடி வாடிவாடி மாண்டுபோன மாந்தர்கள்
கோடிகோடி கோடிகோடி யெண்ணிறந்த கோடியே.

(பொ - ரை) ஒவ்வொரு ஆன்மாக்களிலும் சோதி சொரூபனாய்க் கலந்திருக்கிற சுவாமியைத் தம்முள் கலந்திருக்கின்றாரென்று உணர்ந்து அவனை அறியும் வழியை ஆராய்ந்து பாராமல் காடு, மலை, நாடு முதலிய இடங்களுக்கு அவனைத் தேடிக்கொண்டு போய் வீணே இறந்தவர்கள் அநேக மனிதர்கள் எ - று.

இப்படி யிருப்பதால், இனி உலக மாக்களே! நீங்கள் அங்ஙனம், திரியாமல் உங்களுக்குள்ளேயே நாடிப் பாருங்கள் என்பது கருத்து.

இது வீணே பூப்பிரதக்ஷணம் செய்து வருந்தாமல் உங்களுக் குள்ளேயே நாடிப் பாருங்கள் என்று விளக்குதலின் சரியை விலக்கல் என்னப்பட்டது. 3

## யோகநிலை

உருத்தரித்த நாடியி லொடுங்குகின்ற வாயுவைக்
கருத்தினு லிருத்தியே கபாலமேற்ற வல்லிரேல்
விருத்தரும் பாலராவர் மேனியுஞ் சிவந்திடும்
அருட்டரித்த நாதர்பாத மம்மைபாத முண்மையே.

(பொ - ரை) சரீரத்தில் முதலம்சமாகிய மூல நாடியின்கண் உதித்து அதின்கண்ணே ஒடுங்கிவிடுகின்ற பிராணவாயுவை நல்ல சாதகமனத்தைக்கொண்டு, இரேசக, பூரக, கும்பக முறைப்படி சிரசின் முட்டச்செய்து அதினுல் அவ்விடத்தி லுண்டாகும் அமிர்தத்தைப் பானஞ்செய்ய வல்லமையுடையவர்கள் யாரோ அவர்கள் வயோதிகரா யிருப்பினும், பாலியராவார்கள் அவர்களுக்குண்டா யிருக்கும் நரை, திரை நீங்கித் தேகம் செம்மை நிறத்தை யடையும். இது திருவருளையே தமக்கொரு பட்டமாகத் தரித்துக்கொண் டிருக்கின்ற சிவன், சத்தி இவர்களுடைய திருவடிகளில் சத்தியமாக மெய்யே யாகும்; பொய்யல்ல எ - று.

இது வாயுசாதகத்தை வெளிப்படுத்தலின் யோகநிலை என்னப் பட்டது. 4

## தேகநிலை

வடிவுகண்டு கொண்டபெண்ணை மற்றொருவ னத்தினுல்
விடுவனோ வவனைமுன்னர் வெட்டவேண்டு மென்பனே
நடுவன்வந் தழைத்தபோது நாறுமிந்த நல்லுடல்
சுடலைமட்டுங் கொண்டுபோய்த் தோட்டிகைக் கொடுப்பரே.

(பொ - ரை) சாமுத்திரிகா சாஸ்திரத்தில் சொல்லியுள்ள இலக்கணங்களுக்குச் சற்றேறக்குறையப் பொருந்திய அழகுள்ள பெண்ணு

கத் தேடிக் கலியாணஞ் செய்துகொண்ட அவளை வேறொரு புருடன் இச்சிப்பானானால், அதையுணர்ந்த கணவன் அவனைச் சும்மா விட்டு விடாமல் முன்னர் கொல்லவேண்டு மென்பான். இங்ஙனம் இவன் வாஞ்சைசவைத்துள்ள அந்தத்தேகத்தை எமனானவன் வந்து அழைத்துக்கொண்டு போனகாலத்தில் (சாதியார்கள் கூடி) சுடலைக்குச் சுமந்துகொண்டுபோய் ஆங்குள்ள வெட்டியான் வசம் ஒப்புவிப்பானன்றோ? ஆம் எ - று.

அப்படிப்பட்ட லட்சணத்தோடு கூடியதேகத்தைக் கொண்டிருந்த மனைவியின் வாஞ்சையால் மற்றோருயிரைக் கொல்லவேண்டுமென்று நினைத்த இவனைப் பெரியோர் என் சொல்லுவரோ? அறியேம் என்பது கருத்து.

இச்செய்யுள் தேகநிலையாமையென்றும், அந்தத்தேகத்தில் பற்றுதல் கூடாமையென்றும், மனைவி முகாந்தரமாகக் கூறப்பட்டது.

இதின் கூற்று வெளிப்படை. 5

ஞான நிலை

என்னிலே யிருந்தவொன்றை யானறிந்த தில்லையே
என்னிலே யிருந்தவொன்றை யானறிந்து கொண்டபின்
என்னிலே யிருந்தவொன்றை யாவர்காண வல்லரோ
என்னிலே யிருந்திருந்து யானுணர்ந்து கொண்டேனே.

(பொ - ரை) என்னுடைய இதயாகாலத்தில் உனக்கு உணர்தற்குக் கூடாதபடி கலவாமற் கலந்திருக்கின்ற ஒரு பொருளை, நான் இதுகாறும் அறிந்து கொண்டேனில்லை அங்ஙனம் கலந்திருப்பதை யான் சுவாநுபூதிமார்க்கமாய் அறிந்துகொண்டபிறகு, அச்சுவாநுபவத்திலேயே இடைவிடாது அமர்ந்திருந்து என்னுடைய லட்சணங்களையும், எனக்குத் தலைவனாகிய அவனுடைய லட்சணங்களையும்

நன்று யுணர்ந்துகொண்டேன். இங்ஙனம் என்னிற் கலந்திருந்த பொருளை யறிந்து கொள்ளும் வலிமையுடையோர் வேறுயாவர் எ - று.

இது அந்தர்முகதரிசனம் விளக்குதலின் ஞானநிலை யென்னப் பட்டது. 6

## இதுவுமது

நினைப்பதொன்று கண்டிலே னீயலாது வேறிலை
நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாயை மாயையோ
அனைத்துமா யகண்டமா யனாதிமுன் னனாதியாய்
எனக்குனீ யுனக்குனா னினைக்குமாற தெங்ஙனே.

(பொ - ரை) நான் எண்ணுகின்ற எண்ணங்களெல்லாம் நீயே முன்னின்று எண்ணுவிக்கின்றாயே யொழிய வேறில்லை. அங்ஙனம் உணரும் என்னுடைய நல்லுணர்ச்சியை ஒரு மாயையானது வெளிப் பட்டு வந்து நினைத்தலாகவும், மீண்டு மறத்தலாகவும் செய்து கெடுத்து விடுகின்றது, அதுவென்ன மாயமோ தெரியாது. ஆனாலும், ஒரு வாறு அதை நீங்கியகாலத்தில் சர்வ பொருள்களாகவும் கண்டிக்கப் படாத பொருளாகவும், அநாதிப் பொருளாகவுமுள்ள நீ எனக்குள்ளே கலந்திருக்கின்றதாகவும், நான் உனக்குள்ளடங்கி அடிமைப்பட்டிருப்ப தாகவும் தெரியவருகின்றது. அப்படியிருப்பதால் நான் உன்னை எவ் விடத்திநின்று எப்படி துதிசெய்வதோ, எனக்குத் தெரியவில்லை எ - று.

சிவபெருமான் எல்லாவுயிர்களிலும் அத்துவிதமாய்க் கலந்திருப் பதால் அவனை எப்படி துதிசெய்வதென்பார் 'எனக்குனீயுனக்குனா னினைக்குமாற தெங்ஙனே' என்றார். இங்ஙனமே, ஸ்ரீ தாயுமான சுவாமிகளும்;

'பண்ணேனுனக்கான பூசையொருவடிவிலே பாவித்திறைஞ்ச வாங்கே, பார்க்கின்றமலருடு நீயேயிருத்தியப் பனிமலரெடுக்கமனமும், நண்ணேனலாமலிரு கைதான்குவிக்கவெனி னானுமென்னுளநிற்றிநீ, நான்கும்பிடும்போதரைக் கும்பிடாதலானுன் பூசைசெய்யன்முறை யோ'' என்று திருவாய் மலர்ந்திருக்கின்றனர். 7

சர்வம் சிவம்

மண்ணும்நீ விண்ணும்நீ மறிகடல்க ளேழும்நீ
எண்ணும்நீ எழுத்தும்நீ யிசைந்த பண்ணெழுத்தும்நீ
கண்ணும்நீ மணியும்நீ கண்ணுளாடும் பாவைநீ
நண்ணுநீர்மை நின்றபாதம் நண்ணுமா றருளிடாய்.

(பொ - ரை) பஞ்சபூதங்களும், மடிகின்ற தன்மையையுடைய சத்தசாகரங்களும், கணிதங்களும், இலக்கணவிசேஷங்களும், இசை நூலின் விஷயமாத்திரை யட்சரங்களும், கண்ணும், கண்ணின் மணி யும், அதின் கண்பார்வையும், ஆகிய யாவும் நீயேயா யிருக்கின்றாய். ஆகையால், ஆன்மகோடிகள் அடைந் துய்யும்படியான தங்களுடைய திருவடிகளை அடையும்விதம் எப்படியோ? அறிந்திலேம். அதைத் தாங்களே அருளிச் செய்யவேண்டும் எ - று.

சர்வ பூதவடிவினன் இறைவனே யென்பார், 'மண்ணும்நீ விண் ணும்நீ கண்ணுளாடும் பாவைநீ' என்றார். இங்ஙனமே, ஸ்ரீ தாயுமான சுவாமிகளும்,

''விண்ணே விணுதியாம் பூதமே வேதமே வேதாந்தமே நாதமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள் வித்தேயவித்தின் முளையே
கண்ணே கருத்தே யெண்ணேயெழுத்தே கதிக்கானமோனவடிவே''

என்று திருவாய்மலர்ந்திருக்கின்றனர் 8

## சிவத்தி னுண்மை

அரியுமல்ல வயனுமல்ல வப்புறத்தி லப்புறம்
கருமைசெம்மை வெண்மையைக் கடந்துநின்ற காரணம்
பெரியதல்ல சிறியதல்ல பற்றுமின்கள் பற்றுமின்கள்
துரியமுங் கடந்துநின்ற தூரதூர தூரமே.

(பொ - ரை) நம்மையெல்லாம் காப்பாற்றிக்கரையேற்றுவதையே ஒருதொழிலாகப் பூண்டுள்ள அந்தப்பொருள், விஷ்ணுவல்ல, பிரமாவல்ல, இவ்விருவருக்கு மப்புறப்பட்ட ருத்திரனல்ல, அதற்கு மப்புறப் பட்டதாகும் ஆனல் யாதொரு நிறத்திலும் சம்பந்தப்பட்டதும், பெரியதும், சிறியதுமல்ல, ஆயினும் அது துரியாதீத ஸ்தானத்தில் விளங்கும் பொருளேயாகும்; தொடர்ந்து செல்லுவோர்க்குத் தூரத்திற் போய் அவர்களுக்கொரு கஷ்டத்தை விளைவிக்கும் அப்படிப்பட்ட பொருளை ஓ! உலகமாக்களே! நீங்கள் பிடித்துக் கொள்ளுங்கள்; பிடியாது விட்டுவிடுவீரானல் நீர் ஒருக்காலும் முத்தி யடையமாட்டீர்.

யாதொரு நாலாவது ஸ்தானமாகிய துரியப் பொருளாயுள்ள சிவமே, அதைக்கடந்து மிருப்ப தென்பார், 'துரியமுங்கடந்து' என உம்மை கொடுத்துக் கூறினர் இதினை, "சதுர்த்தேசிவம்" என்னும் உபநிஷ வாக்கியத்தாலுணர்க. 9

## யோகநிலை

சாத்திரங்க ளோதுகின்ற சட்டநாத பட்டரே
வேர்த்திரைப்பு வந்தபோது வேதம்வந் துதவுமோ
மாத்திரைப்போ தும்முளே மறித்துநோக்க வல்லிரேல்
சாத்திரப்பை நோய்களேது சத்திமுத்தி சித்தியே.

(பொ - ரை) நாலு வேதங்களையும், ஆறு சாஸ்திரங்களையும், தினந்தோறும் பாராயணஞ் செய்து வருகின்ற ஓ! பட்டரே! உங்க

ளுக்கு வேர்வையும், இரைப்பும் உண்டாக விருக்கின்ற சரமதிசையில் இப்பொழுது பாராயணஞ் செய்யப்படுகின்ற இந்த வேதங்கள் வந்து உதவுவனவாமோ? ஆகா! ஆகையால், நீங்கள் ஒரு மாத்திரை நேரமானாலும், உம்முள்ளிருந்து வெளிப்பட்டு எட்டங்குலம் வீணே போகின்ற வாயுவையடக்கி யோகசாதனஞ் செய்வீரானால், எந்த ரோகப் பீடிப்பையு மடையாமல் சிவயோக சாம்ராஜ்யத்தைப் பெறுவீர் எ - று. 10

## ஞானநிலை

தூரந்தூரந் தூரமென்று சொல்லுவார்கள் சோம்பர்கள்
பாரும்விண்ணு மெங்குமாய்ப் பரந்தவிப் பராபரம்
ஊருநாடு காடுதேடி யுழன்றுதேடு மூமைகாள்
நேர தாக வும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே.

(பொ - ரை) பூமிமுதல் ஆகாயம்வரைக்குமுள்ள சர்வ இடங்களிலும் வியாபித்திருக்கின்ற இந்தப் பராபரத்தை, அறிந்து கொள்ளும் வழியை யுணராமல் சோம்பேறிகளெல்லாம் தூரம், தூரம் என்று சொல்லுவார்கள். அவர்களுடைய பேச்சைக் கேட்டு, ஊர், நாடு, காடு முதலிய இடங்களிற் சென்று தேடித்தேடி யலுத்த அறிவீனர்களே! நீங்கள், இனியாயினும் உங்களுக்குள்ளாகவே அந்தத் தலைவனை யுணர்ந்து கொள்வீராக எ - று. 11

## யோகநிலை

நாலுவேத மோதுவீர் ஞானபாத மறிகிலீர்
பாலுணெய் கலந்தவாறு பாவிகா ளறிகிலீர்
ஆலமுண்ட கண்டனா ரகத்துளே யிருக்கவே
காலனென்று சொல்லுவீர் கனவிலும் மதில்லையே.

(பொ - ரை) நான்கு வேதங்களைமாத்திரம் பாராயணஞ் செய்யத் தெரிந்து கொண்டீர், ஞானபாதமிதுவென்று அறிந்தீரில்லை.

ஆகையால், ஆலகாலவிஷத்தையுண்ட சிவபெருமான் பாலின்கண் நெய் கலந்திருப்பதுபோல உங்களுடைய மனத்தின்கண் கலந்திருப்பதை யுணராமல், எமன் இருக்கிருனென்றும், என்றைக்காயினும் அவன்கையி லகப்படவேண்டும் என்றுஞ் சொல்லுகின்றீர். எங்களுக்கு அது கனவிலும் இல்லை எ - று.

பாலின்கண் நெய் எங்ஙனம் மறைந்து கிடக்கின்றதோ, அங்ஙனமே சர்வ ஆன்மாக்கள்தோறும் மறைந்திருக்கிருனென்றும், அப்பாலை முயற்சிக்க நெய் வெளிப்படுமாறுபோல அன்பை வளர்க்க அவன் வெளிப்படுவானென்றும் உணர்த்துவான் 'பாலுணெய் கலந்தவாறு' என்ருர் இதனை. 12

"விறகிற்றீயினன் பாலிற்படு நெய்போல்
மறையநின்றுளான் மாமணிச் சோதியான்
உறவுகோனட் டுணர்வு கயிற்றினல்
முறுகவாங்கிக் கடைய முன்னிற்பனே".

என்று ஸ்ரீ திருநாவுக்கரசர் திருவாய்மலர்ந்தருளி யிருப்பதினு லறிக.

## சிவனின்றி, ஜீவனில்லையெனல்

வித்தில்லாத சம்பிரதாய மேலுமில்லை கீழுமில்லை
தச்சில்லாத மாளிகை சமைந்தவாற தெங்ஙனே
பெற்றதாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதைகாள்
சித்தில்லாத போதுசிவ னில்லையில்லை யில்லையே.

(பொ - ரை) தன்னைப் பெருங்கஷ்டங்களையெல்லாம் அநுபவித்துப் பெற்று வளர்த்துவிட்ட தாயைவிற்றும், அடிமையாக்கியும் கொள்ளுகின்ற அறிவீனர்களே! வித்தில்லாத சம்பிரதாயம் எவ்விடத்தும் இல்லாமைபோலவும், தச்சனில்லாமல் வீடு அமையாமை போல

வும், சித்தாகிய தலைவன் இல்லாவிட்டால், ஜீவனாகிய அடிமையில்லை யன்றோ? ஆம் எ - று.

இப்படியிருப்பதைவிட்டு ஜீவனே சிவம், இதற்கு அந்நியமாய் வேறு சிவம் வேண்டப்படுவதில்லை என்று வாய்ஞானம் பேசும் கசடர்களைப் பெரும்பாலும் இச் செய்யுள் திருத்திவிடுமென்று நான் நம்புகின்றேன். 13

## அட்சரத்தி னுண்மை

அஞ்சுமூன்று மெட்டதா மநாதியான மந்திரம்
நெஞ்சிலே நினைந்துகொண்டு நூறுருச் செபிப்பிரேல்
பஞ்சமான பாதகங்க ளூறுகோடி செய்யினும்
பஞ்சுபோல் பறக்குமென்று நான்மறைகள் பன்னுமே.

(பொ - ரை) பஞ்சாட்சரமும், அதற்கு உயிராகவுள்ள மூன்றெழுத்தா லாயின பிரணவமும் கூடிய எட்டட்சரமே அநாதியான மந்திரமாகும். அதை நல்ல சாதகமனத்தில் நினைக்கவேண்டிய முறைப்படி நினைந்து வாயசையாமலும், நாவாடாமலும் நூறு உருச் செபிப்பீர்களானால், நீங்கள் எவ்வளவு கொடிய பஞ்சமா பாதகங்களைச் செய்திருந்தபோதிலும் அவைகளெல்லாம் காற்றிற்பட்ட பஞ்சியைப்போல் நிற்காமல் போய்விடுமென்று வேதங்கள் முறையிடுகின்றன எ - று.

"அஞ்சுமூன்று மெட்டதா மநாதியான மந்திரம்" என்றது ஓம் நமசிவய, என்னும் மந்திரத்தை யென்றறிக. 14

## சிற்றின்பம் விலக்கல்

சாமநாலு வேதமுஞ் சகலசாத் திரங்களும்
சேமமாக வோதிலுஞ் சிவனைநீ ரறிகிலீர்
காமநோயை விட்டுநீர் கருத்துளே யுணர்ந்தபின்
ஊன்[illegible] காயமா யிருப்பனெங்க ளீசனே.

(பொ - ரை) சாமங்கள்தோறும் நான்கு வேதங்களையுஞ் சந்தச் சிதைவு வாராதபடி பாராயணஞ் செய்தாலும், சகல சாஸ்திரங்களையும் ஐயந் திரிபற, ஆராய்ந்தாலும், சிவனை யறிந்து கொள்ளமாட்டீர். பின்னர் அவனை யுணரும் வழி எப்படியெனில், சிற்றின்பமாயையை யொழித்து நல்ல சிந்தனையுடன் அவனை யுணர்ந்துகொண்ட பிறகு, அவன் உங்களுடைய சரீரத்தின் கண்ணே யிருந்து உங்களை மௌனிகளாக்கி, அவனும் மௌனமாகவே யமர்ந்திருப்பான் எ - று.

சிவபெருமான் தன்னை யடைந்தவர்களையும் தன் குணத்தாக்கி விடுகின்றான் என்பது இச்செய்யுட் கருத்து. 15

## யோக மார்க்கம்

சங்கிரண்டு தாரையொன்று சன்னபின்ன லாகையால்
மங்கிமாளு தேயுலகில் மானிடங்க ளெத்தனை
சங்கிரண்ட யுந்தவிர்ந்து தாரையூத வல்லிரேல்
கொங்கைமங்கை பங்கரோடு கூடிவாழ லாகுமே.

(பொ - ரை) உலகத்தின்கண் அவனை யடையும்படியான வழியை யுணர்ந்த ஜனங்களெல்லாம் பலபல வாத்தியங்கள் ஒலிக்கும் படி இறந்து படுகின்றார்க ளல்லவா? ஆம். அங்ஙனம் ஒலிக்கும் வாத்தியங்களில் சங்கு இரண்டும், தாரை ஒன்றுமல்லவா? அந்த இரண்டு சங்கையும் நீக்கி இவ்விடத்தில் ஒரு தாரையூத வல்லமையுடையவர்களாவாரானால், சிவபெருமானோடு கூடி வாழலாமன்றோ? ஆம் எ - று.

தாரை யூதலாவது மூச்சடக்கும் விதம். 16

## ஞான நிலை

தங்கமொன்று ரூபம்வேறு தன்மையான வாறுபோல்
செங்கண்மாலு மீசனுஞ் சிறந்திருந்த தெம்முளே

விங்களங்கள் பேசுவார் விளங்குகின்ற மாந்தரே
எங்குமாகி நின்றநாமம் நாமமிந்த நாமமே.

(பொ - ரை) தங்கமானது ரூபத்தில் ஒன்றாயிருந்தும் ஆபா ணங்களின் வேறுபாட்டால் பல நாமங்களை யடைவதுபோல, சிவ பெருமானும், விஷ்ணுவும் கலந்து எம்முள்ளிருந்ததாகும். இங்ஙன மிருப்பதை அறியாத சிலர் பலவகையான வித்தியாசங்களை எடுத்துக் காட்டி தத்தமக்கேற்றவண்ணம் பேசித்திரிவார்கள். ஆனாலும், நான் சொல்லியபேர் சர்வ வியாபகத்தின் பெயரேயாம் எ - று.

தங்கமானது ஆபரண ரூபங்களின் வேறுபாட்டால் பல நாமங்க ளடைந்தாலும் கடைசியில் அவ்வாபரணங்களை யெல்லாம் அழிய பார்க்குங்காலையில் மீண்டும் தங்கமே யாயவாறுபோல் பஞ்ச சத்திய காரணத்தால் பிரம, விஷ்ணு, ருத்திர, மகேச, சதாசிவ மூர்த்தங்களாய தேவர்கள் சர்வசங்கார காலத்தில் அந்தச் சதாசிவமே யாய் நிற்பதால், "செங்கண்மாலுமீசனும் சிறந்திருந்தவெம்முளே" என்றார். 17

## யோகநிலை

அஞ்செழுத்தி லேபிறந்து அஞ்செழுத்தி லேவளர்ந்து
அஞ்செழுத்தை யோதுகின்ற பஞ்சபூத பாவிகாள்
அஞ்செழுத்தி லோரெழுத் தறிந்துகூற வல்லிரேல்
அஞ்சலஞ்ச லென்றுநாத னம்பலத்தி லாடுமே.

(பொ - ரை) பஞ்சாக்ஷரத்தையே இடைவிடாமல் துதிசெய் கின்ற பஞ்சபூத ஜென்மிகளாகிய பாவிகளே! நீங்கள் அந்தப் பஞ்சா க்ஷர காரணமாகவே பிறந்தும், அதிலேயே வளர்ந்தும் அந்த அஞ் செழுத்தில் முக்கிய எழுத்தாகிய ஒரு எழுத்தை தெரிந்து துதிசெய் தீரில்லை. அங்ஙனந் தெரிந்து துதிசெய்ய வல்லமை யுடையீரானால்

யாவருக்குந் தலைவணுகிய கடவுள் பயப்படாதீர்! பயப்படாதீர்!! என்று அசரீரி வாக்கைக்கொடுத்து பிறகு வெளிவந்து சிற்றம்பலத்தின்கண் ஆனந்தத் தாண்டவத்தையுங் காட்டுவான் எ - று.

ஸ்தூலபஞ்சாக்ஷரங்களில் நகாரம் பிருதிவியும், மகாரம் அப்புவும், சிகாரம் தேயுவும், வகாரம் வாயுவும், யகாரம் ஆகாயமுமாகிய பஞ்ச பூதங்களின் அட்சரங்களாகையால், 'அஞ்செழுத்திலே பிறந்து அஞ் செழுத்திலேவளர்ந்து' எனவும், உயிர்கள் தத்தமது பாவங்களை நிவர்த்தி செய்துகொள்ளும் பொருட்டு, ஸ்மரிக்கவேண்டியது பஞ்சாக்ஷரமாகை யால், 'அஞ்செழுத்தை ஓதுகின்ற' எனவும், பஞ்சாக்ஷரங்களில் முக் கிய எழுத்தாகவும், விட்டும்விடா எழுத்து என்றும், நாயோட்டு மந் திரமென்றும், பெயர்பெற்றுள்ள ஒரெழுத்தை உலகத்தார் அறியார் என்பார், 'அஞ்செழுத்தி லோரெழுத் தறிந்துகூற வல்லிரேல்' என வும், அவ்வோரெழுத்தை அறிந்து துதிக்கின்றவர்களுக்கு இறைவ னது திருநடன தரிசனங் கிடைக்குமென்பார், 'அஞ்சலஞ்சலென்று நாத னம்பலத்திலாடுமே' எனவுங் கூறினர். 18

## அட்சர மகிமை

அஞ்சுமஞ்சு மஞ்சுமே யனாதியான தஞ்சுமே
பிஞ்சுபிஞ்ச தல்லவோ பித்தர்காள் பிதற்றுறீர்
நெஞ்சிலஞ்சு கொண்டுநீர் நின்றுதொக்க வல்லிரேல்
அஞ்சுமில்லை யாறுமில் லனாதியான தொன்றுமே.

(பொ - ரை) உலகத்தின்கண் வசிக்கின்ற மாயாசகிதர்களே! நீங் கள் ஸ்மரிப்பது பிஞ்சைப்போன்ற ஸ்தூல பஞ்சாக்ஷரமல்லவோ? ஆம் அதை ஸ்மரிப்பதைவிட்டு அனாதிலக்ஷணத்தையுடைய சூக்குமபஞ்சா க்ஷரத்தை சாதக மனங்கொண்டு ஸ்மரிப்பீரானால், அந்த ஸ்தூல பஞ்சாக்ஷரமும் அதின் கிரமப்படி யிருக்கும் ஆறுதாரப்படிகளும் உங் களை விட்டு நீங்கிவிடும். அக்காலத்தில் அனாதியான சூக்குமபஞ்சாக்ஷர

காரண சங்கற்ப ரூபனுன ஒருவன் வெளிப்பட்டு தரிசனந்தருவன் எ - று.

ஓ உலகமாக்களே! நீங்கள் ஸ்தூலபஞ்சாக்ஷர தியானத்தைவிட்டு சூக்குமபஞ்சாக்ஷர தியானஞ் செய்வீராஞல் உங்களுக்கு கூடியசீக்கிரத்தில் அனுதிப்பொருளான சிவம் வெளிப்படும் என்பது கருத்து.

## சிவபூசை வேண்டுமெனல்

நீளவீடு கட்டுறீர் நெடுங்கதவு சாத்துறீர்
வாழவேண்டு மென்றலோ மகிழ்ந்திருந்த மாந்தரே
காலனேலே வந்தபோது கையகன்று நிற்பிரே
ஆலமுண்ட கண்டர்பாத மம்மைபாத முண்மையே.

(பொ - ரை) உலகத்தின்கண் நல்ல க்ஷேமத்தோடு வாழ வேண்டுமென்கிற எண்ணங்கொண்டு மகிழ்ச்சியடைந்திருந்த மனிதர்களே! நீங்கள் பெரியவீட்டைக் கட்டுவதும், அதின் கதவை யடைப்பதும், அதினுலன்ளுே? நீர் எமனுடைய ஓலே வந்தகாலத்தில் மேற்சொன்ன வீடுமுதலியவைகளேவிட்டு நிற்பீர், இது சிவபெருமான் பாதத்தின் பேரிலும் பார்வதிதேவியின் பாதத்தின் பேரிலும் சத்தியமாக மெய்யேயாகும் எ - று.

உலகத்தில் வீடு முதலியவை கட்டி வாழும் வாழ்க்கை சதமன்றென்பது கருத்து.

20

## ஞான நிலே

அந்திமாலே யுச்சிமூன்று மாடுகின்ற தீர்த்தமும்
சந்திதர்ப் பணங்களுந் தபங்களுஞ் செபங்களும்
சிந்தைமேவு ஞானமுந் தினஞ்செபிக்கு மந்திரம்
எந்தைராம ராமராம ராமவென்னு நாமமே.

(பொ - ரை.) காலை, உச்சி, மாலை ஆகிய மூன்றுவேளைகளில் தீர்த்தமாடும்போதும், மாலையில் தர்ப்பணம், தபம், ஜெபம் ஆகிய இவைகளைச் செய்யும்போதும், ஞானமார்க்கத்தில் மனத்தைச்செலுத்தும்போதும் ஸ்மரிக்கின்ற மந்திரமாயுள்ளது என் தந்தையின் ராம மந்திரமே யாகும் எ - று.

இம் மந்திரத்தைப்போன்று இம் மதத்தில் வேறு சிறந்த மந்திரம் கிடையாதென்பார், "எந்தைராம ராமராம ராமவென்னு நாமமே" என்றார்.

இதுமுதல் மூன்று செய்யுட்கள் வைஷ்ணவ சாம்பிரதாயமாய் செய்யப்பட்டன. 21

ராமமந்திரங் கூறல்

கதாவு பஞ்சபாதகங்களைத்துரந்த மந்திரம்
இதாமிதாமி தல்லவென்று வைத்துழலு மேழைகாள்
சதாவிடாம லோதுவார் தமக்குநல்ல மந்திரம்
இதாமிதாமி ராமராம ராமவென்னும் நாமமே.

(பொ - ரை) செய்தவர்களை கடுமையாய் தண்டிக்கின்ற பஞ்சமா பாதகங்களை அறவே யோட்டிவிடுகின்ற மந்திரம் இதுவேயாகும் இதுவல்லவென்று மனத்திற் கொண்டு வீணே திரிகின்ற அறிவீனர்களே! நீங்கள் இடைவிடாமல் துதி செய்வோர்களுக்கு முக்கிய பிரயோசனத்தைக் கொடுத்து வருகின்ற இந்த ராமநாம மந்திரத்தையே மெய்யாக நம்பி அதையே ஸ்மரிப்பீரானால் மேற்சொன்ன பஞ்சமா பாதகங்கள் நீங்கி நல்ல பதவியைப் பெறுவீர் எ - று.

இது இவர் வைஷ்ணவ ஆராய்ச்சிலிருந்த காலத்தில் பாடப்பட்டது. 22

## இதுவுமது

நானதேது நீயதேது நடுவினின்ற தேதடா
கோனதேது குருவதேது கூறிடுங் குலாமரே
ஆனதேது வழிவதேது வப்புறத்தி லப்புறம்
ஈனதேது ராமராம ராமவென்ற நாமமே.

(பொ - ரை) எல்லாவற்றையும் முதற்பொருள்களாகக் கொண்டு நான், நீ, நடு, கோன், குரு, என்று சுட்டிச்சுட்டி அறிவீனத்தால் உளறுகின்ற இழிந்தமாந்தர்களே நீங்கள் சொல்லிய ஷை சுட்டுக்கள் அப்பொருளைச் சேர்வனவோ? சேரா. அது ஷை பொருள்களாக ஆனதும் பிறகு அழிவதும் உண்டா? இல்லை. ஆனால், அது எல்லாவற்றையும் கடந்த பொருளாகும். அப்பொருள் ராமநாம ஸ்மரணையிலேயே அறிந்துகொள்ளக் கூடியதாகும் எ - று.

ஆகையால், நீங்களெல்லோரும் ராமநாம பஜனை செய்யவேண்டுவது அவசியம் (என்பது கருத்து.)

இதுவும் வைஷ்ணவ ஆராய்ச்சிகாலத்தில் அருளிச் செய்யப்பட்டது.

23

## கிரியைநிலை

வீடெடுத்து வேள்விசெய்து மெய்யினோடு பொய்யுமாய்
மாடுமக்கள் பெண்டிர்சுற்ற மென்றிருக்கு மாந்தர்காள்
நாடுபெற்ற நடுவர்கையி லோலைவந் தழைத்திடில்
ஓடுபெற்ற வவ்விலை பெறுதுகாணிவ் வுடலமே.

(பொ - ரை) செய்வதற்குவேண்டிய நிலத்தைக் கோரியெடுத்து யாகஞ்செய்து (அன்றிக், கலியாணஞ் செய்து) மெய்யும் பொய்யும் விரவிய * மாடு மக்கள் பெண்டிர் சாதியார் ஆகிய இவர்களை உண்மை

* மாடு = பொன்னெனினுமாம்,

யாக நம்பியிருக்கும் மனிதர்களே நீங்கள் நிலையுள்ளதாக நம்பியிருக்கும் அந்தத் தேகமானது எமனுடைய ஓலைவந்து உங்களை யழைத்தால் ஓடு பெற்ற விலையையும் பெறுதல்லவா? எ - று.

அப்படிப்பட்ட நிலையில்லாததாய் விளங்கும் தேகத்தை நிலை யுள்ளதாக நினைந்து அதினால் பெண்டிர் சுற்றங்களை நம்பி சிவபெரு மானுடைய திருவடிகளை மறந்தீர் அங்ஙனமாய் நீங்கள் எமனுடைய ஓலைக்கு என்ன செய்யப் போகிறீர் என்பது கருத்து. இங்ஙனமே ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளும்,

"தாளையேதாமறிகிலா தெமக்கெளிதரு
சிவப் பிரகாசற்
காளியா மெனத்திரிந்த வன்பணிபுரிந்
தரிய வீடடைகில்லாய்
கேளையோமனையாதிய வளற்றினிற்
கிடந்துழைக்கின்றனை நெஞ்சே
நாளையோலையுந் துதரும் வரினிவர்
துணைகொலோ நவில்வாயே."

என்று திருவாய்மலர்ந் திருக்கின்றனர். 24

### யோகநிலை

ஓடமுள்ள போதலோ வோடியே யுலாவலாம்
ஓடமுள்ள போதலோ வுறுதிபண்ணிக் கொள்ளலாம்
ஓடமு முடைந்தபோதி லொப்பிலாத வெளியிலே
ஆடுமில்லை கோலுமில்லை யாருமில்லை யானதே.

(பொ - ரை) ஓடம் போன்ற இத்தேகமானது இறந்துபடாத முன்னர் அல்லவோ? நம்மால் ஓடவும், உலாவவுங் கூடும்; அன்றி, இதை விழவொட்டாமல் தடுப்பதும் அப்பொழுதே யன்றோ? ஆம்

(இப்பொழுதென்ன? மறுதேகத்திற் பார்த்துக்கொள்ளலாமே யென்றி ருந்தால்) இது இறந்து பட்டபிறகு சூனியமென்கிற இடத்தில் யாவர் இருக்கின்றனர்? ஒருவரு மில்லை. (ஆகையால்) இந்தத் தேகம் விழாத முன்னரே யோகஞ்செய்து தேகத்தை நிலைநிறுத்திச் சிவசாம்ராஜ் யத்தை யடையவேண்டும் எ - று.

தேகம் ஓடம் போலக் கவிழுவ தென்பார், 'ஓடமுள்ள போதலோ வோடியே யுலாவலாம்' எனவும், இஃது உள்ளபோதே காயசித்தி செய்துகொள்ள வேண்டு மென்பார், 'ஓடமுள்ள போதலோ வுறுதி பண்ணிக்கொள்ளலாம்' எனவும், தேகம் விழுந்துவிட்டால் எந்தக் காரி யத்தையும் செய்ய இயலாதென்பார், 'ஓடமுடைந்தபோதி லொப் பிலாத வெளியிலே—ஆடுமில்லை கோலுமில்லை யாருமில்லை யானதே' எனவுங் கூறினர் இவ்வாறே;

> "யாக்கையையாப்புடைத்தாப் பெற்றவர்தாம்பெற்ற
> யாக்கையாலாய பயன்கொள்வர்—யாக்கை
> மலையாடுமஞ்சுபோற் றோன்றிமற்றாங்கே
> நிலையாது நீத்துவிடும்''

என்று நாலடிநானூற்றிற் கூறியவாற்று ணறிக. 25

## உற்பத்தி நிலை

அண்ணலே யநாதியே யநாதிமுன் னநாதியே
பெண்ணுமாணு மொன்றலோ பிறப்பதற்கு முன்னெலாம்
கண்ணிலாநீர்ச் சுக்கிலங் கருதியோங்கு நாளிலே
மண்ணுளோரும் விண்ணுளோரும் வந்தவாற தெங்ஙனே.

(பொ - ரை) யாவர்க்குந் தலைவனே! அநாதிப் பொருளே! அநாதிக்கும் அதீதப்பட்ட வஸ்துவே! பெண்களும், ஆண்களும் பிறப் பதற்குமுன் கருக்குழியின்கண் சுக்கிலமானது தங்கி வளர்கின்ற

ளில் பெண்களும், ஆண்களும் ஒன்றேயல்லவா? இங்ஙன மிருத்த லால் உலகர்கள், தேவர்கள் என்கிற இருபகுப்பு அக்காலத்தில் இல்லை எ - று.

கருக்குழியின்கண் வசிக்கும் நாளில் பெண்ணென்பதும், ஆண் என்பதும் கிடையாது. அதுபோலவே, பூலோக வாசிகள் தேவர்கள் என்பதும் கிடையாது என்பது கருத்து

26

ஞானநிலை

பண்டுநான் பறித்தெறிந்த பன்மலர்க ளெத்தனை
பாழிலே செபித்துவிட்ட மந்திரங்க ளெத்தனை
மிண்டனாய்த் திரிந்தபோ திறைத்தநீர்க ளெத்தனை
மீளவுஞ் சிவாலயங்கள் சுற்றிவந்த தெத்தனை
அண்டர்கோ னிருப்பிட மறிந்துணர்ந்த ஞானிகள்
கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்ப தில்லையே.

(பொ - ரை) பூர்வ ஜெந்மத்தில் நான் பூஜாவிதிக் கிரமப்படி அறுத்துத் தரித்த நல்ல மலர்களுக்கும் வீணாகச் செபஞ் செய்து விட்டுவிட்ட மந்திரங்களுக்கும், பூவலமாய்த் திரிந்தபோது அபிஷே கித்த ஜலத்திற்கும், மீண்டும் பிரதக்ஷணஞ்செய்த சிவக்ஷேத்திரங் களுக்கும், அளவுண்டோ? இல்லை. ஆனால், தேவர்களுக்குத் தலைவ னாகிய சிவபெருமானுடைய இருப்பிடம் இன்னதென் றாராய்ந் துணர்ந்த உண்மை ஞானிகள் ஆங்காங்கு நியமித்துள்ள ஆலயங்களில் பிரதிஷ்டை செய்திருக்கும் மூர்த்தங்களைக் கண்டு நமஸ்காரம் செய் யுஞ் சுபாவமில்லை எ - று.

சரியை மார்க்கத்தில் செய்யவேண்டியவை பூசை வந்தனை வழி பாடு சிவாலய பிரதட்சணங்களாகையால் நானும் அங்ஙனமே செய்தே னென்பார்கள். 'பண்டுநான் பறித்தெறிந்த பன்மலர்க ளெத்தனை,

மிண்டனுய்த் திரிந்தபோ திரைத்தநீர்க ளெத்தனை, மீளவுஞ் சிவாலயங்கள் சூழவந்த தெத்தனை' எனவும், கிரியை மார்க்கச் செய்கையையுஞ் செய்தே னென்பார், 'பாழிலே செபித்துவிட்ட மந்திரங்க ளெத்தனை' எனவும், இவ்வளவும் ஞானிகள் செய்வதில்லை யென்பார். அண்டர்கோ னிருப்பிட மறிந்துணர்ந்த ஞானிகள்—கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்பதில்லையே' எனவுங் கூறினர்.

ஞானிகள் சிவபெருமானுடைய இருப்பிடத்தைத் தம் மகத்தின் கண்ணே கண்டறிந்தவர்களாகையால், அவர்கள் சிலர் ரூபத்தை வணங்கார் என்பது கருத்து.

ஆயினும், சர்வ வியாபகத்தை நோக்கி வணங்குதலுங் கூடும் என்பது எம்முடைய மதச்சம்மதம் 27

## யோகநிலை

நெருப்பைமூட்டி நெய்யைவிட்டு நித்தநித்த நீரிலே
விருப்பமோடு நீர்குளிக்கும் வேதவாக்யங் கேளுமின்
நெருப்புநீரு மும்முளே நினைந்துகூற வல்லிரேல்
சுருக்கமற்ற சோதியைத் தொடர்ந்துகூட லாகுமே.

(பொ - ரை) சாஸ்திரங்களிற் சொல்லியபடியே யாககுண்டம் அமைத்து, அதற்கு உச்சரிக்கவேண்டிய மந்திரத்தை உச்சரித்துத் தீமூட்டி நெய்யைவிட்டுச் செய்து முடிக்கும் யாகத்தின் பொருட்டு நல்ல அறிவோடு மிக்க ஆவல்கொண்டு நின்ந்தோறும் நீரில் ஸ்நானஞ் செய்கின்ற வேதவசனத்தையுடைய பிராமணர்களே! நீங்களே நான் சொல்வதைக் கேட்பீராக. அது என்னவென்றால், அந்த நெருப்பையும், நீரையும் உங்களுக்குள்ளாகவே கண்டறிந்து அவைகளின் மயனுயிருக்கின்ற சிவபெருமானைத் துதிசெய்வீரானல் சுருங்குதலில்லாத சோதியைச் சேர்ந்து அத்துடன் ஏகமாய்க்கலந்து வாழக்கூடும் எ - று.

சர்வஜீவதயாபரனுன சிவபெருமான் எண்வகையாய்க் கலந்திருக்கின்ருனென்பார், 'நெருப்புநீரு மும்முளே நினைந்து கூறவல்லிரேல்' எனவும், அவனுக்குச் சர்வவியாபகம் உண்டென்பார், 'சுருக்கமற்ற சோதியை' எனவும், அப்படிப்பட்ட சோதியையே நாமும் அடைய வேண்டுமென்பார், 'தொடர்ந்து கூடலாகும்' எனவுங் கூறினுர், எண் வகையாய்க் கலந்திருக்கின்ருன் என்பதை,

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனுயமைந்தனேடெண் வகையாப்புணர்ந்துநின்ருன்
உலகேழெனத்திசைபத்தெனத் தானெருவனுமே
பலவாகி நின்றவாதோ ணேக்கமாடாமோ"

என்னும் ஸ்ரீமந் மாணிக்கவாசகர் திருவாக்கானும்;

சுருக்கமற்றதை என்பதை;

"பார்க்குமிட மெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணுனந்தமே" எனவும்,

"அங்கிங்கெனுதபடி யெங்கும்பிரகாசமாய்" எனவும்,

'பூரணனெனும் பெயர்விரிக்கி லுரைவேறு முளதோ' எனவுங் கூறிய ஸ்ரீ தாயுமான சுவாமிகள் திருவாக்கானும்.

சோதிசொரூபன் என்பதை;

"கொண்டல் வண்ணக் குழகனு நான்முகப்
புண்டரீகப் புலவனு நாடொணு
மண்டுதீப்பிழம் பாகிவயங்கினுன்
அண்டர்சூழிளங் காட்டுறையண்ணலே"

என்னும் ஸ்ரீ சிவஞான முனிவர் திருவாக்கானுமறிக. 28

## அபேதத் துண்மை

பாட்டிலாத பரமனைப் பரமலோக நாதனை
நாட்டிலாத நாதனை நாரிபங்கர் பாகனை
கூட்டிமெள்ள வாய்புதைத்து குணுகுணுத்த மந்திரம்
வேட்டகாரர் குசுகுசுப்பை கூப்பிடா முடிந்ததே.

(பொ-ரை) எந்தக் கஷ்டத்தையும் அநுபவியாதவனும், மேலான சிவலோகத்திற்குத் தலைவனும், யாவராலும் இப்படிப்பட்டவனுவா னென்று எடுத்துச் சொல்லக்கூடாதவனும், உமாதேவியை இடது பாகத்தில் வைத்திருப்பவனுமாகிய சிவபெருமானை, தன்னுடைய இதயாகாயத்தின்கண் சேர்த்துவைத்திருக்கின்ற நமக்குக் காரண மாய்ச் சமைந்துள்ள சூட்சும மந்திரமானது வேட்டைக்காரர்களுடைய சுறுக்குப்பையைப்போல் முடிந்தது எ - று.

சிவபெருமான் யாதொருசங்கடமு மில்லாதவன் என்பார், 'பாட் டிலாத பரமனை' எனவும், சர்வதேவர்களுக்குந் தலைவன் இவனே யென்பார், 'பரலோகநாதனை' எனவும், இறைவன் இலட்சணங்களை எடுத்துணரமுடியாதென்பார், 'நாட்டிலாத நாதனை எனவும், உமா தேவியை இடதுபாகத்தில் வைத்தவன் என்பார், 'நாரிபங்கர் பாகனை' எனவும், அவனை யறிவதற்குச் சமைந்தது மௌன மந்திரமென்பார், 'கூட்டிமெள்ள வாய்புதைத்துக் குணுகுணுத்த மந்திரம்' எனவும், அது வும் வேட்டைக்காரர் செய்கைபோல் முடிந்ததென்பார், 'வேட்டைக் காரர் குசுகுசுப்பை கூப்பிடா முடிந்ததே' எனவுங் கூறினார்.

வேட்டைக்காரர் தாங்கள் பிடிக்க முயன்று வீசிய வலையில் யாதா மொரு மிருகம் சிக்கிக்கொண்டால் தாங்கள் மௌனமாயிருந்து அந்த வலைக்குச் சுருக்கிடுஞ் சுபாவம் போன்ற என்பார், அங்ஙனங் கூறி னார்.

29

## தரிசனம்

செய்யதெங்கி லேயிளநீர் சேர்ந்தகார ணங்கள்போல்
ஐயன்வந்து என்னுளம் புகுந்துகோயில் கொண்டனன்
ஐயன்வந்து என்னுளம் புகுந்துகோயில் கொண்டபின்
வையகத்தில் மாந்தர்முன்னம் வாய்திறப்ப தில்லையே.

(பொ - ரை) உயர்ந்த தென்னமரத்தின் கண்ணுள்ள தேங்காயில் இளநீரானது ஒருவருக்குந் தெரியாதபடி வந்து சேர்ந்ததுபோல, சிவபெருமானானவன் என்னால் அறியப்படாதபடி என் மனத்தைக் கோயிலாகக் கொண்டான் அங்ஙனம் அவர்கள் வலியவந்து என் மனத்திற் குடிகொண்டபின் நான் உலகத்தின் கண்ணுள்ள மனிதர்களிடத்தில் ஒன்றும் பேசுகிறதில்லை எ - று.

தேங்காயிற் சலம்வந்து சேருவதைக் காணாதவாறுபோல் இறைவனும், நான் தன்னைக் காணாதபடி என் மனத்திற் குடிகொண்டானென்பார், 'செய்யதெங்கிலே யிளநீர் சேர்ந்த காரணங்கள்போல், ஐயன்வந்து என்னுளம் புகுந்து கோயில்கொண்டனன்' எனவும், அவன் புகுந்தபிறகு, நான் மௌனஞானத்தை யடைந்தேனென்பார், 'ஐயன்வந்து என்னுளம்புகுந்து கோயில் கொண்டபின், வையகத்து மாந்தர்முன்னம் வாய்திறப்பதில்லையே' எனவும் கூறினார். 30

## சரியை நிலை

மாறுபட்டு மணிதுலக்கி வண்டினெச்சில் கொண்டுபோய்
ஊறுபட்ட கல்லின்மீதே யூற்றுகின்ற மூடரே
மாறுபட்ட தேவரு மறிந்துநோக்கு மென்னையும்
கூறுபட்டு தீர்க்கவோ குருக்கள்பாதம் வைத்ததே.

(பொ - ரை) தன்னுடைய சுபாவரூபத்தினின்றும் வேறுபட்டிருக்கின்ற மணி முதலிய பூசைச் சாமான்களைத் துலக்கிப் பின்னர்

வண்டினுடைய எச்சிலாகிய தேனைக் கொண்டுபோய்க் கல்லின் மேல் ஊற்றி அபிஷேகிக்கின்ற மூடர்களே! அங்ஙனம் ரூபம் வேறுபட்ட தேவர்கள் முகாந்தரமாக, நீங்கள் முன் செநநத்திற் செய்திருக்கின்ற வினையைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டுத் தானோ? குருக்கள் பாதத்தில் தட்சிணை வைத்தது? எ - று.

மணிமுதலிய சாமான்கள் முன்னிருந்த சுபாவ ரூபத்தினின்றும் நீங்கியவை யாகையால், மாறுபட்ட மணிதுலக்கி என்றார். 31

## யோக நிலை

கோயிலாவ தேதடா குளங்களாவ தேதடா
கோயிலுங் குளங்களுங் கும்பிடுங் குலாமரே
கோயிலு மனத்துளே குளங்களு மனத்துளே
ஆவது மழிவது மில்லையில்லை யில்லையே.

(பொ - ரை) உலகத்தின்கண் கிருமித்திருக்கும் கோவில்களையும் குளங்களையும் நமஸ்கரிக்கின்ற அறிவீனர்களே! அங்ஙனம் உலகத்தின்கண் கட்டிவைத்திருக்கும் கோயில்களாலும், குளங்களாலும் பிரயோசனம் என்ன இருக்கின்றது? ஒன்றுமில்லை ஆகையால், கோயிலென்பதும், குளமென்பதும் உங்களுடைய மனத்தின்கண்ணேயாம் இங்ஙனமிருத்தலால், அகத்திற்கு அந்நியமாக இவ்வுலகத்தின்கண் சிருஷ்டியென்பதும், சம்ஹாரமென்பதும் வேறே உண்டாக வேண்டிய அவசியமில்லை எ - று.

கோயில், குளமுதலிய யாவும் மனத்தின்கண்ணே யிருக்க வெளியிடத்தி லுள்ளனவென்று அவைகளுக்குச் சென்றும், தீர்த்தமாடியும் என்ன லாபத்தை யடைந்தீர். இனி, அங்ஙனஞ் செய்வதைவிட்டு மானதமார்க்கத்தினின்று யோகத்தைச் சாதித்து முத்திநிலையைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்பது கருத்து. 32

## இதுவ்மது

செங்கலுங் கருங்கலுஞ் செவந்தசாதி லிங்கமும்
செம்பிலுந் தராவிலுஞ் சிவனிருப்ப னென்கிறீர்
உம்பத மறிந்துநீ ரும்மைநீ ரறிந்தபின்
அம்பல நிறைந்தநாத ராடல்பாட லாகுமே.

**(பொ - ரை) உலகமாக்களே! நீங்கள் செங்கல்லிலும், கருங்கல்லிலும், சாதிலிங்கத்திலும், செம்பிலும், தராவிலுஞ் செய்து வைத்திருக்கின்ற சிலா ரூபங்களில் சர்வவியாபகனை சிவபெருமான் எழுந்தருளி யிருக்கின்றாரென்று சொல்லுகின்றீர். அங்ஙனம் நீர் சொல்வது உண்மையென்றும், பொய்யென்றும் உங்களுடைய நிலை இப்படிப்பட்டதென்று, நீங்கள் இப்படிப்பட்டவர்கள் என்றும் தெரிந்த பின்பு சிற்றம்பலத்தில் சர்வ வியாபியாய் எழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமானுடைய திருவிளையாட்டும், அவருடைய திருவருளைப் பெற நிமித்தம் அடியார்கள் பாடுகின்ற பாடல்களும் வெளிப்படும் எ - று.**

**இங்ஙனம் உங்களுடைய உள்ளத்தின்கண்ணே சிவபெருமான் வெளிப்படுவதை நன்றாய் நோக்கிப் பார்க்கும் பட்சத்தில் முன் சொன்ன செங்கல் முதலியவற்றில் இருப்பதும் இராததும் வெளிப்படும் என்கிற முகத்தானே யோக நிலையைச் சாதித்தவாறாயிற்று.** 33

## கிரியை விலக்கல்

பூசைபூசை யென்றுநீர் பூசைசெய்யும் பேதைகாள்
பூசையுன்ன தன்னிலே பூசைகொண்ட தெவ்விடம்
ஆதிபூசை கொண்டதோ வனாதிபூசை கொண்டதோ
ஏதுபூசை கொண்டதோ வின்னதென் றியம்புமே.

(பொ - ரை) இதுவே பூசை இதுவே பூசை யென்று நல்ல மனத்தோடு பூசை செய்கின்ற அறிவீனர்களே! நீர் செய்யும் பூசை உங்களுடைய மனத்தின்கண்ணே யிருக்குமே யொழிய, அப் பூசையின் பயன் சென்றிருப்பது எவ்விடத்திலோ. அன்றி, நீர் செய்த பூசையை ஆதிபொருள் கொண்டதோ, அநாதிபொருள் கொண்டதோ, வேறு எந்தப்பொருள் கொண்டதோ தெரியவில்லை. ஆகையால், நீங்கள் செய்த பூசையைக் கொண்ட பொருள் எதுவோ அந்தப் பொருளைத் தெரிவிக்க வேண்டும் எ - று.

இது கிரியா மார்க்கத்தில் பூசை செய்கிறவர்களை நோக்கி, அப் பூசையை நிவர்த்தி செய்யக் கூறப்பட்டது.

ஏனென்றால், அகத்துப் பூசையே பூசை யென்றும், புறத்துப் பூசை பூசையல்ல வென்றும் ஞானிகள் சொல்லுகின்ற சுபாவமாகையால் என்பதாம். 34

## ஞானநிலை

இருக்குநாலு வேதமு மெழுத்தையற வோதிலும்
பெருக்கநீறு பூசிலும் பிதற்றலும் பிரானிரான்
உருக்கிநெஞ்சை யுட்கலந்த உண்மைகூற வல்லிரேல்
சுருக்கமற்ற சோதியைத் தொடர்ந்துகூட லாகுமே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நான்குவேதங்களையும் பிழைபாடாகிய சந்தச்சிதை வில்லாமல் நன்றாய் செய்யும் அத்தியயனத்திலும், நன்றாய்ப் பூசுந் திருநீற்றிலும், அவனை வழுத்துகின்ற பாடலிலுமோ எம்பெருமானாகிய சிவன் இருப்பான்? ஒருக்காலும் அவற்றிலெல்லாம் இருக்கமாட்டான். ஆகையால், நீங்கள் உங்களுடைய மனத்தை நெருப்பிட்ட மெழுகுபோல் இளகச் செய்து உங்களிடத்திலே உங்களுக்குத் தெரியாமலே கலந்திருக்கின்ற உண்மையைத்

தெரிந்து கொள்ள வல்லமையுடையவர்களாவீரானல் எங்கும் வியாபகமாயிருக்கின்ற தேஜோமயப் பொருளினிடத்தில் கலந்து அத்துவித நிலையின் உண்மையை யடையக்கூடும் எ - று.

இங்ஙனம் எழுதியதை, நான்கு வேதங்களையும் கிரமமாகப் பாராயணஞ் செய்தாலும், திருநீற்றைக் கிரமப்படி அணிந்தாலும், பலகாலும் உள்ளன்பில்லாமல் துதித்தாலும், உங்களிடத்தில் சிவபெருமான் வெளிவருவானே? எனவும் எழுதுவது ஒருவகை.

பாஞானத்தின் வாயிலாகவே சிவபெருமானை யறியலாமேயொழிய, ஏனைய கலைஞானத்தா லாகாதென்பது கருத்து. ஆயினும், கலைஞானமே பாஞானத்திற் காதாரமாகுமென முன்னோர்கள் சொல்லியிருக்கின்றனர்.

35

## மாயையின் ஒடுக்கமுணர்த்தல்

கலத்தின்வார்த்து வைத்தநீர் கடுத்ததீ முடுக்கினல்
கலத்திலே கரந்ததோ கடுத்ததீ குடித்ததோ
நிலத்திலே கரந்ததோ நீள்விசும்பு கொண்டதோ
மனத்தின்மாயை நீக்கிலே மனத்துளே கரந்ததே.

(பொ - ரை) ஒரு மண் பாத்திரத்தில் கொஞ்சம் சலம்விட்டு அடுப்பேற்றி எரித்தால், அந்தச் சலம் வரவாக் குறைந்து கடைசியில் கொஞ்சமும் இல்லாமற் போய்விடுமல்லவா? ஆம்; அங்ஙனம் அந்தச் சலம் அந்தப் பாத்திரத்திலே மறைந்ததோ? அன்றி அதை அந்தத் தீ குடித்துவிட்டதோ? பூமியில் ஒளித்துக்கொண்டதோ? ஆகாயத்தில் மறைந்ததோ? (என்று அதை நன்றாய்ப் பார்த்தறிந்து கொண்டது போல,) மனத்தின்கண் உண்டாகின்ற மாயையானது பக்குவ ஆன்மாவினிடத்திலிருந்து நீங்குங்கால், அது வேருக நீங்காது மனத்தின் கண்ணே ஒடுங்கியிருக்கும் எ - று.

பாத்திரத்தில் விட்ட சலம் தீயின் பிரோகத்தால் பாத்திரத்தின்கண்ணே மறைந்துவிட்டதுபோல பக்குவ ஆன்மாக்களின் மனங்களிலிருந்து நீங்கவிருக்கின்ற மாயை அவ்வவ் வான்மாக்களின் பிரோகத்தால் தனது வலியடங்கி அவ்வம் மனங்களிலே ஒடுங்கியிருக்குமென்பது கருத்து. 36

## சரியை விலக்கல்

பறைச்சியாவ தேதடா பணத்தியாவ தேதடா
இறைச்சிதோ லெலும்பினு மிலக்கமிட் டிருக்குதோ
பறைச்சிபோகம் வேறதோ பணத்திபோகம் வேறதோ
பறைச்சியும் பணத்தியும் பகுந்துபாரு மும்முளே.

(பொ - ரை) பறைச்சியென்றும், பாப்பாத்தி யென்றும் வேறு பிரிவிருக்கின்றதோ? இல்லை. மாமிசம், தோல், எலும்பு முதலியவைகளில் பறைச்சிக்கு வேறு விதமாகவும்; பாப்பாத்திக்கு வேறு விதமாகவும் இருக்கின்றதோ? இல்லை. அன்றி, பறைச்சியினிடத்தில் செய்யும் போகத்திற்கும், பாப்பாத்தியினிடத்தில் செய்யும் போகத்திற்கும், வித்தியாசமுண்டோ? இல்லை. ஆகையால், பறைச்சிக்கும், பாப்பாத்திக்குமுள்ள வித்தியாசத்தை நீயேபார்த் துணர்ந்துகொள்ள வேண்டும் எ - று.

இங்ஙனம் சரியாமார்க்கத்தில் உள்ள சாதி யாசாரத்தால் பயனென்னை? ஒன்றுமில்லை. ஆகையால், அவ்வாசாரத்தை நீக்கி யோகத்தைச் சாதிக்கவேண்டும் என்பது கருத்து. 37

## இதுவுமது

வாயிலே குடித்தநீரை யெச்சிலென்று சொல்லுறீர்
வாயிலே குதப்புவேதம் மெனப்படக் கடவதோ
வாயிலெச்சில் போகவென்று நீர்தனைக் குடிப்பீர்காள்
வாயிலெச்சில் போனவண்ணம் வந்திருந்து சொல்லுமே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நீங்கள் வாயாற் குடித்தஜலத்தை எச்சிலென்று சொல்லுகிறீர் இப்படியிருப்பதால் வாயால் அநேகர்கூடியும் பலமுறையும் பாராயணஞ் செய்கின்ற வேதத்தை என்னவென்று சொல்லுவீர், அந்த வாயிலுள்ள எச்சிலைப் போக்குவதற்காக சலத்தைக் குடிக்கின்றீர்களன்றோ, அப்பொழுது அந்த எச்சில் போய் விட்டதையும், அன்றி போகாமலிருப்பதையும் நீங்கள் எனக்குச் சொல்லவேண்டும் எ - று.

வாயிலுள்ள சலத்தை எச்சிலென்று சொன்னால், எப்பொழுதும் வாயினாலே பாராயணஞ் செய்து கொண்டிருக்கின்ற வேதத்தை என்னவென்று சொல்லுவீரோ? என்பது ஐயவினா. 38

## இ து வு ம து

ஓதுகின்ற வேதமெச்சி லுள்ளமந்திரங்க ளெச்சில்
போதகங்க ளானதெச்சில் பூதலங்க ளேழுமெச்சில்
மாதிருந்த விந்துவெச்சில் மதியுமெச்சி லொலியுமெச்சில்
ஏதிலெச்சி லில்லதில்லை யில்லையில்லை யில்லையே.

(பொ - ரை) (நீங்கள் இங்ஙனம் வாயில் குடிக்குஞ் சலத்தை யெச்சிலென்று சொன்னால்,) அப்பொழுது மற்றமுள்ள, நான்கு வேதங்கள், மந்திரங்கள், ஞானங்கள், சத்தலோகங்கள், விந்து, மதி, சத்தம் ஆகிய இவைகளெல்லாம் எச்சிலே யாகுமல்லவா? ஆம். அப்பொழுது எச்சிலில்லாதது எது? எதுவுமில்லை. எ - று. 39

## உ ற் ப த் தி வி னா

பிறப்பதற்கு முன்னெலா மிருக்குமாற தெங்ஙனே
பிறந்துமண் ணிறந்துபோ யிருக்குமாற தெங்ஙனே
குறித்துநீர் சொலாவிடிற் குறிப்பில்லாத மாந்தரே
அறுப்பனே செவியிரண்டு மஞ்செழுத்து வாளினால்.

(பொ - ரை) ஜீவன் இந்தத் தேகத்தில்வந்து சேராத முன்னரே எந்த விடத்திலிருந்து, மீண்டும் இவ்விடத்திலிருந்து இந்தத் தேகத்தைவிட்டு இறந்து போகும்போது எவ்விடத்தில் போய்ச் சேருவது? இங்ஙனம் நான் கேட்கின்ற இரண்டு கேள்விகளுக்கும் உத்தாமளிக்காமற் போவீராஞல், நீர் அறிவில்லாத மனிதரே யாவீர் அங்ஙனம் சொல்லாத உங்களுடைய இரண்டு காதுகளையும் பஞ்சாட்சரமென்கிறவாளிஞல் அறுப்பேன் எ - று.

பிறப்பிறப்புக்களின் நிலையை யுணராத நீர் அஞ்ஞானிகளே யாவீர் என்பது கருத்து. 40

## ஞானம்

அம்பரத்தை யம்புகொண் டசங்கென்று லசங்குமோ
கம்பமற்ற பாற்கடல் கலங்கென்றுல் கலங்குமோ
இன்பமற்ற யோகியை யிருளும்வந் தணுகுமோ
செம்பொனம் பலத்துளே தெளிந்ததே சிவாயமே.

(பொ - ரை) ஆகாயத்தில் அம்பிஞல் அசையும்படி செய்யவும் கலங்குங் குணமில்லாத சத்தசாகரங்களையும் கலங்கச் செய்யவும் கூடாமைபோல சிற்றின்பத்திற் சிறிதும் விருப்பமில்லாத யோகியை அஞ்ஞானம் வந்து சேர்ந்து மயக்குதற்குக்கூடாது இதுவே செவந்த பொன்போலும் தகராகாயத்தின்கண் சிவாயமயமா யமர்ந்திருந்து நான் அறிந்ததாகும் எ - று.

ஆகாயம் சமுத்திரம் இவைகளை அசைக்கவும் கலக்கவும் கூடாவாறுபோல யோகியை மயக்க அஞ்ஞானத்தாலாகாது என்பது கருத்து. 41

## கடவுள் நிலை

சித்தமேது சிந்தையேது சீவனேது சித்தரே
சத்தியேது சம்புவேது சாதிபேத மற்றது

முத்தியேது மூலமேது மூலமந்தி ரங்களேது
வித்திலாத வித்திலே யின்னதென் றியம்புமே.

(பொ - ரை) ஓ சித்தர்களே! எம்முடைய பரதெய்வத்திற்குச் சித்தம், மனம், மூச்சு, சத்தியென்கிற நாமம், சம்புவென்கிறநாமம், சாதிவித்தியாசம், மோக்ஷஸ்தானம், ஆதாரஸ்தானம், மூலமந்திரங்கள், முதலியவைகளில் ஒன்றுமில்லை. ஆகையால், இந்தத் தெய்வத்தை ஆதாரவிதையாயிராத விதையில் உதயமானதென்று நீங்கள் சொல்லுங்கள் எ - று.

எம்மிறைவன் ஷை விகாரங்களையெல்லாம் அடையாமல் என்றும் சுபாவமாயிருப்பவன் என்பது கருத்து. 43

## ஒடுக்கநிலை

சித்தமற்று சிந்தையற்று சீவனற்று நின்றிடம்
சத்தியற்று சம்புவற்று சாதிபேத மற்றுநன்
முத்தியற்று மூலமற்று மூலமந்தி ரங்களும்
வித்தையித்தை யீன்றவித்தில் விளைந்ததே சிவாயமே.

(பொ - ரை) சித்தம், மனம், பிராணன், சத்தி, சிவம், சாதிபேதம், மோக்ஷம், மூலம், மூலமந்திரங்கள், கல்வி ஆகிய இவைகள் நீங்கிநின்ற விதையின்கண்ணே சிவாயநம என்கிற சூக்ஷம பஞ்சாட்சரமாகிய முளை வெளிவந்தது எ - று.

பஞ்சாட்சர தியானம் செய்யப்புகின் அப் பஞ்சாட்சரம் வெளிவரும்போது சித்த முதலியவை இறக்கின்றனவாகையாலும், அத்தகைய சித்தமுதலியவை இப்பீஜாட்சரத்தை அறியா வாகையாலும் அங்ஙனம் துதிசெய்வதும் சூக்குமைவாக்கினாலே யாகையாலும் இச்செய்யுளின் கருத்து இங்ஙனம் கூறப்பட்டது.

ஈதறியாத சிலர் பஞ்சாட்சர தியானத்தில் மனமிறக்க வில்லை யென்பர், அவர் தியானவிதியை அறியாதவர் எனக்கொள்க.

அங்ஙனமிருப்பின், ஸ்ரீ அப்பர் சுவாமிகள் தாம் திருவாய்மலர்ந் தருளிய தமிழ் வேதமாகிய தேவாரத்தில்,

"நான் மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே"

எனக் கூறுவானேன்? 42

## கிரியைவிலக்கிச் சாதி யொன்றேனல்

சாதியாவ தேதடா சலந்திரண்ட நீரலோ
பூதவாச லொன்றலோ பூதமைந்து மொன்றலோ
காதில்வாளி காரைகம்பி பாடகம்பொ னொன்றலோ
சாதிபேத மோதுகின்ற தன்மையென்ன தன்மையே.

(பொ - ரை) அடா! உலகத்தின்கண் மாணுக்கத்தன்மை பூண் டுள்ளவனே! பலவகையாக ஏரி, குளம், கிணறு, ஆறு என்கிற நாமங் களைப் பெற்றனவாகவிருந்தாலும், நீர் ஒன்றேயாவது போலவும், ஐம் பூதங்களென்கிற பகுப்பிருந்தாலும் பூதங்களென்கிற பேர் ஒன்றே யாவது போலவும், மேற்படி ஐம்பூதங்கள் வாழ்வதற்கு வெவ்வேறிட மிருந்தாலும், பூதவாசலென்கிற பேர் ஒன்றேயாவது போலவும், காதிலே யணிவதற்குரிய ஆபரணங்களாகிய வாளி, காரை, கம்பிபாட கம் என்கிறபேர் வெவ்வேறாயிருந்தாலும் இவைகளுக்கெல்லாம் பொன் ஒன்றேயாவது போலவும், எல்லாச் சாதிகளும் ஒன்றேயாகும். ஆகை யால், எங்கள் சாதி உயர்ந்தது, உங்கள் சாதி தாழ்ந்தது என்று சாதி வித்தியாசஞ் சொல்லுகின்ற தன்மை என்னதன்மை? எ - று.

இங்ஙனம் கூறினமையால் சாதிபேதங்கொள்வது கிரியாமார்க்க மெனவும், அப்பேதங் கொள்ளப்படாதெனப் பிரமாணரூபத்தால் அம் மார்க்கத்தை விலக்கிச் சாதியொன்றே யாகுமெனவுங் கூறியதாக எற் படுகின்றது. 44

## ஞானிகள்நிலை

கறந்தபால் முலைப்புகா கடைந்தவெண்ணெய் மோர்புகா
துடைந்துபோன சங்கினோசை யுயிர்களு முடற்புகா
விரிந்தபூ வுதிர்ந்தகாயு மீண்டுபோய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லை யில்லையில்லை யில்லையே.

(பொ - ரை) முலையின்கண்ணிருந்து கறந்த பாலானது மறுபடி யும்போய் முலையில் நுழைந்துகொள்ளாமை போலவும், மோரிலிருந்து கடைந்தெடுத்த வெண்ணெயானது மறுபடியும் அந்த மோரிற்போய் நுழைந்து கொள்ளாமை போலவும், சங்கிலிருந்து வெளிப்பட்ட சங்கத்தொனியானது மறுபடியும் அச்சங்கிற்போய் நுழைந்து கொள் ளாமை போலவும், மரத்திலிருந்து உதிர்ந்த பூவும், காயும் மறுபடியும் அம்மரத்திற்போய்ச் சேர்ந்து கொள்ளாமை போலவும், மனத்தை யிறக்கப்பெற்ற ஞானிகள் தமது சூட்சும தேகத்தோடு கூடியிருப்பார் களே யல்லாமல் மறுபடியும் தூலதேகத்தில் வந்து பிறக்கமாட்டார்கள் இது ஒருக்கால் சொல்லுவதன்று; முக்காலும் பிறப்பதில்லை எ - று.

உடலை விட்டுப் பிரிந்த வுயிர் மறுபடியும் அவ்வுடலில் வந்து சேராமைபோலவும், கறந்த பால் முதலியவை மறுபடியும் தங்களுக் குக் காரணமாக விருந்த பொருள்களிடத்திலே சேராதவாறுபோல் மனமிறக்கப்பெற்ற ஞானிகள் தமக்கு முன்னிருந்த தூலதேகத்திற் சேரார். இது முக்காலும் சத்தியம்; என்பது கருத்து.

இங்ஙனங் கூறினமையால் ஞானிகளுக்குப் பிறப்பில்லை யென்று இச்செய்யுளால் தீர்மானிக்கப்பட்டது. 45

## பிறவிநிலை

தறையினிற் கிடந்தபோ தன்றுதூமை யென்கிறீர்
துறையறிந்து நீர்குளித்த வன்றுதூமை யென்கிறீர்

பறையறைந்து நீர்பிறந்த வன்று தூமை யென்கிறீர்
புறையிலாத வீசரோடு பொருதுமாற தெங்ஙனே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! பூமியின்கண் புருஷனும், ஸ்திரீயும் சம்போகிக்கும் அந்நாளும்; வயதுக்கு வருகின்ற அந்நாளும், மங்கள கோஷங்கள் ஆரவாரிக்கக் குழந்தை பிறக்கின்ற அந்நாளும், தூமையான நாளென்று சொல்லிச் சிவனை ஆராதிக்குந் தொழிலினின்றும் நீங்கினீர். ஆகையால், நீங்கள் சிவனோடு ஐக்கியமாகும் பதத்தை எப்படி யடைவீர்கள்? அடையமாட்டீர்கள் எ - று.

சதா சிவ தியானஞ் செய்தாலே சிவ சாரூப்பியத்தை யடையக் கூடுமன்றோ? ஆம். அங்ஙனமிருக்க, மேலே சொன்ன சில நாட்களை உங்களுடைய பிறவி நாட்களாகக்கொண்டு அந்நாட்கள் கெடுதியை யடைந்த நாட்களென்று அந்நாட்களில் சிவதியானஞ் செய்யாமையால் நீங்கள் அப்பேற்றை யடையமாட்டீர்கள் என்பது கருத்து.

இங்ஙனம் கொண்டமையால் இச்செய்யுள் பிறவி நிலையை யுணர்த்திற்று. 46

## இதுவுமது

தூமைதூமை யென்றுளே துவண்டலையு மேழைகாள்
தூமையான பெண்ணிருக்க தூமைபோன தெவ்விடம்
ஆமைபோல மூழ்கிவந் தநேகவேத மோதுநீர்
தூமையுந் திரண்டுருண்டு சொற்குருக்க ளானதே.

(பொ - ரை) இன்றைக்குத் தூமையான நாளென்று தூமையை மேலிட்டுப் பேசுகின்ற அறிவீனர்களே! நீங்கள், ஆமையானது சலத்தில் மூழ்குவதுபோல் சலத்தில் மூழ்கிவந்து நான்கு வேதங்களையும் பாராயணஞ் செய்கின்றீர். அப்படி தூமையென்றும் வஸ்து விலக்கப் பட்டதாக விருந்தால், அந்தத் தூமையைத் தன்னிடத்தி லுடைத்தா

யிருக்கின்ற பெண்ணும் விலக்கப்பட்டனவளாவா ளன்றோ? ஆம். அங்ஙனம் விலக்குகின்றது சுபாவமாகவே யிருக்கின்றது. அப்படி சுபாவமாக விலக்குவதும் மூன்றுநாளைக்கே யன்றோ? ஆம். அங்ஙனம் மூன்றுநாளான பிறகு அந்தப் பெண்ணிடத்தில் தூமையில்லையோ? இருக்கின்றது. இப்படி யிருப்பதால், தூமையை யடைந்த பெண்ணிருக்கத் தூமை போகாது ஆயின் இங்ஙனம் உங்களால் இகழ்ந்து விலக்கப்பட்டு வருகின்றது தூமையேயன்றோ திரண்டு சொல்லப்பட்ட குருக்கள் ஆசாரியர்முதலான ரூபங்களோடு வெளி வந்தது எ - று.

தூமையே நம்முடைய ரூபசிருஷ்டிக்குக் காரணமாக விருக் கின்றது. ஆகையால், பெண்கள் ரஜசாகு மூன்று நாளைக்கும் தூமை யென்று சொல்லுவதும், அந்தத் தூமையையடைந்த பெண் அவ ளது மரணபரியந்தம் உலகத்திலிருக்க மூன்றுநாள் சென்றபின் தூமை போய்விட்டதென்பதும் அசங்கதமே யாமென்று கூறவந்தார் இங்ஙனங் கூறினர்.

இங்ஙனம் தூமையே பிறப்பதற்குக் காரணமென்று விளங்குகின் றமையால் இது பிறவினிலையை யுணர்த்தியதென்னப்பட்டது. 47

## இதுவுமது

சொற்குருக்க ளானதுஞ் சோதிமேனி யாவதும்
மெய்க்குருக்க ளானதும் வேணபூசை செய்வதும்
சற்குருக்க ளானதுஞ் சாத்திரங்கள் சொல்வதும்
செய்க்குருக்க ளானதுந் திரண்டுருண்ட தூமையே.

(பொ - ரை) உலகத்திலுள்ள மானிடர்களே! போதகாசிரியர்க ளானதும், தேஜோமயத்தைப் பெறுவதும், மெய்க்குருக்களானதும், கிரியாமார்கப் பூசையைச் செய்வதும், ஞானத்தை உயிர்களுக் குப

தேசிக்குங் குருக்களானதும், சாத்திரவாராய்ச்சி செய்வோர்க்கு வெளிப்படுவதும், நல்ல சத்துவகுண குருக்களானதும், சம்போக காலத்தில் திரண்டு உருண்ட ரூபத்தைப்பெற்றுக் கருப்பக்குழியிற் புகுந்த தூமையே யாகும் எ - று.

தூமையே சகலவகை அறிவோடுகூடிய குருக்களா யுதிப்பதென்பார், 'சொற்குருக்களானது மெய்க்குருக்களானதுஞ், சற்குருக்களானதுஞ் செய்குருக்களானது' மெனவும், அங்ஙனமுதித்த குருக்கள் தங்கள் தங்கள் அறிவுக்கும், பரிபாகத்திற்குந் தக்கவாறு தேஜோரூபத்தைப் பெறுவதும், கிரியாபூஜையைச் செய்வதும், சாத்திர வாராய்ச்சி செய்வதுமாக விருக்கச்செய்வதும் அத்தூமையின்றி யமையாதென்பார், 'சோதி மேனியாவதும், வேணபூசைசெய்வதும், சாத்திரங்கள் சொல்வதும்' எனவுங் கூறினர்.

இதுவும் மேலே சொல்லப்பட்ட விஷயங்களால் பிறவி நிலையை உணர்த்திய தென்க. 48

## கிரியை விலக்கி யோகநிலை கூறல்

கைவடங்கள் கொண்டுநீர் கண்சிமிட்டி நிற்கிறீர்
எவ்விடங்கள் கண்டுநீ ரெண்ணி யெண்ணிப் பார்க்கிறீர்
பொய்யிறந்த சிந்தையைப் பொருந்திநோக்க வல்லிரேல்
மெய்கடந்த தும்முளே விரைந்துகூட லாகுமே.

(பொ - ரை) ஓ கிரியாபூசைசெய்யும் உலகர்களே! நீங்கள் கையினிடமாக ருத்திராட்சவடமாகிய செபமாலையை வைத்துக்கொண்டு கண்களைச் சிமிட்டுந்தொழிலி லிருக்கிறீரன்றோ? ஆம்; அப்படியிருந்து எந்தவிடத்தை யெண்ணியெண்ணிப் பார்க்கிறீர்? நீங்கள் அங்ஙனம் பார்ப்பதால் சிவபெருமான் உம்மிடத்தில் கலக்குமாறு வெளிப்படுவனோ? வெளிப்படான். ஆகையால், இனியேனும் நீங்கள்

அங்ஙனஞ் செபஞ்செய்து வருந்துவதைவிட்டு உங்கள் மனத்தில் யாதொரு பொய், வஞ்சகம் முதலியவை யிருந்தால் அவைகளை யறவே விட்டொழித்து அங்ஙனம் ஒழியப்பெற்ற மனத்தை உங்கள் வயப் படுத்திக்கொண்டு அதைத் துணைக்கருவியாகப்பெற்று நிறுத்தவேண் டிய இடத்தின்கண் ணிறுத்தி யுற்று உற்றுப்பார்க்க வல்லமையுடையீ ராஞல், உங்களுடைய தேகப்பிரபஞ்ச முழுமைக்கும் விழுங்கி யிருக் கின்ற சர்வ வியாபகப் பொருளானது உங்களுடைய மனத்தின்கண் சீக்கிரமே வந்து கூடும் எ - று.

கிரியாமார்க்கத்தில் செய்யப்படுவன யந்திரபூசை, ஜெப முதலி யன வென்பார், 'கைவடங்கள் கொண்டுநீர்' எனவும், அங்ஙனஞ் செபிக்குங்கால் கண்களை ஓரிடத்தில் நிறுத்தவேண்டியதா யிருக்க அங்ஙன நிறுத்தாமல் கண்களைச் சிமிட்டிக்கொண்டே யிருக்கின்ருர்க ளென்பார், 'கண்சிமிட்டி நிற்கிறீர்' எனவும், அங்ஙனங் கண்களை நிறுத்தி எந்த விடத்தைப் பார்க்கின்றீ ரென்பார், 'எவ்விடங்கள் கண்டுநீ ரெண்ணி யெண்ணிப்பார்க்கிறீர், எனவும் கூறினர். இதுவே கிரியை விலக்கல். ஏனெனில், அதில் பயனில்லை யென்ருராகலின்.

யோக மார்க்கத்திலுள்ளார் தமது மனத்தை சுழிமுனை ஸ்தானத் தில் யாதொரு விகற்பமு மில்லாதபடி நிறுத்தவேண்டியது சுபாவ மென்பார், 'பொய்யிறந்த சிந்தையைப் பொருந்தி நோக்கவல்லிரேல்' எனவும், அங்ஙனம் நோக்கியகாலத்தில் துரியப்பொருள் வெளிப்படு மென்பார், 'மெய்கடந்த தும்முளே விரைந்து கூடலாகுமே' எனவுங் கூறினர்.

இது யோகநிலை கூறியதென வறிக. 49

## குருபதேசஞ் செய்தருளெனல்

ஆடுகாட்டி வேங்கையை யகப்படுத்து மாறுபோல்
மாடுகாட்டி யென்னைநீ மதிமயக்க லாகுமோ

கோடுகாட்டி யானையைக் கொன்றுரித்த கொற்றவா
வீடுகாட்டி யென்னைநீ வெளிப்படுத்த வேணுமே.

(பொ - ரை) ஒருவரம்பை யேற்படுத்தி, அவ்வரம்பினைக் கடந்து வருகின்றவர்களைக் கொல்லுவதாகச் சொல்லியுள்ள உனது ஆஞ்ஞா பனையைக் கடந்து வந்த கயாசுரனைக் கொன்று அந்தத் தோலைப் போர்வையிட்ட ஞானாசிரியனாகிய சிவபெருமானே! ஒரு புலியைப் பிடிக்க விரும்பிய வேடுவன் தன்னிடத்தில் பழக்கி வைத்திருக்கின்ற ஒரு ஆட்டை, அதைப்பிடிக்க நியமித்த ஓரிடத்தில் கட்டுவித்துக் காட் டிடங் கூட்டங் கூடிச் சென்று வெடிதீர்த்து அங்ஙனம் புதருக்குள் ளிருந்த புலியை வெளிப்படுத்தி முன் ஆட்டைக் கட்டி யிருந்த மார்க் கத்தை நோக்கிப் புலியை வரும்படி செய்து பின்னர் வெடியை நிறுத்த அப்புலியானது தனது பயநீங்கி ஆட்டைக்கண்டு தனக்கு நல்ல இறை கிடைத்ததென்று அவ்வாட்டின்மீது பாயுங்கால் அதைப் பிடிக்கவென்றே ஏற்படுத்தியிருந்த சில காரியங்களைச் செய்து அதை மயக்கிப் பிடிப்பதுபோல, எனக்கு இவ்வுலகத்தில் யாவருங் கண்டு விருப்பங் கொள்ளுகின்ற பொன்னைக் காட்டி அதினிடத்தி லோரா சையை யுண்டாக்கி அவ்வாசையின் வழியே வருகின்ற உலக வாழ்க் கையில் அகப்படுத்தி என்னுடைய அறிவை இங்ஙனம் மயக்குவது உனது திருவருளுக் கழகாகுமோ? ஆகாது. ஆகையால், இனியேனும் உன்னுடைய திருவருட் சத்தியைக் கொண்டு எனக்கு மோட்ச வீட்டை இப்படிப்பட்டதாகு மென்றுணர்வித்து உன்னடியை யடைந்து நான் வேண்டியவீட்டில் குடி யிருக்கின்றவர்களாகிய பெரி யோர்களிடத்தில் உங்களைப்போல் இவனும் நமக்கொரு அன்பனாவா னென்று சொல்லி என்னுடைய ஞானநுபவ குணத்தை அவர்க ளிடத்திலும் வெளிப்படுத்தும்படி வேண்டிக் கொள்ளுகின்றேன் எ-று.

இறைவனே, 'ஆட்டைக்காட்டி வேங்கையைப் பிடிப்பதுபோல்' பொன்னாசை முதலியவற்றைக் காட்டி இவ்வுலகமாய்கையிற் பிடித்து

வைத்திருக்கின்ற என்னை வீடுகாட்டி யாண்டருள்வது உனது கடமை யாகும் என்பது கருத்து.

'கோடுகாட்டி யானையைக் கொன்றுரித்த கொற்றவா' என்பதை, விநாயகரைக் கூறியதாகக் கொண்டு, தமது கொம்பினால் கஜமுகாசுர னைக் கொன்றவனே எனப்பொருள் கொள்ளலுமாம். 50

## விராட் சோரூபம்

இடதுகண்கள் சந்திரன் வலதுகண்கள் சூரியன்
இடக்கைசங்கு சக்கரம் வலக்கைசூல மான்மழு
எடுத்தபாத நீண்முடி யெண்டிசைக்கு மப்புறம்
உடல்கலந்து நின்றமாயம் யாவர்காண வல்லரோ.

(பொ - ரை) இடதுபக்கத்திலிருக்குங் கண் சந்திரனும், வலது பக்கத்திலிருக்கும் கண் சூரியனும், இடதுகையில் சங்குசக்கரங்களும், வலதுகையில் சூலம், மான்மழுக்களும், தூக்கிய பாதமும், நீண்டமுடியு மாக அஷ்டதிக்குகளுக்கும் அப்புறப்பட்ட அந்தப் பரம்பொருள் சர்வ ஜீவர்களுடைய உடலிலும் கலந்து நின்ற மாய்கையை தெரிந்து கொள்ள வலிமையுடையவர் யாரோ? அதை நான் அறிந்திலேன் எ-று.

இங்ஙனம் இறைவன் அஷ்டதிக்குகளிலும், அவைகட் கப்புறத் திலுந் தனது திருமேனியைக் காட்டுகின்றவனென்று வெளிவந்தமை யால் இது விராட்சொரூபத்தை விளக்கியதென வறிக. 51

## தெய்வம் ஒன்றெனல்

நாழியுப்பு நாழியுப்பு நாழியான வாறுபோல்
ஆழியோனு மீசனு மமர்ந்துவாழ்ந் திருந்திடம்
எருதிலேறு மீசனு மியங்குசக்ர தானையும்
வேறுவேறு பேசுவார் வீழ்வர்வீ ணரகிலே.

(பொ - ரை) ஒருபடி உப்பில் ஒருபடி சலத்தைவிட்டால் அவ்வுப்பு சலத்துடன் சேர்ந்து கரைந்தபின் ஒருபடியினளவே யானது போல், விஷ்ணு மூர்த்தியும், ருத்திரனும் நாமபேதத்தால் வேருயிருந்தாலும் உள்ளபடியே விசாரிக்குங்கால் ஒருவராகவே யிருப்பார்கள். இங்ஙனமறியாமல் மேற்படி ருத்திரன் வேறு, விஷ்ணுமூர்த்தி வேறு என்று பேதஞ்சொல்லுகின்றவர்கள் வீணே நரகக்குழியில் விழுந்து அழுவார்கள் எ - று.

ஒருபடி யுப்பு, ஒருபடி ஜலம் ஆக இரண்டுபடியும் ஒன்ருகச் சேரும் அவசரத்தில் இரண்டுபடி யென்பதில்லாமல் ஒரேபடியாயினமைபோல நாமபேதத்தால் விஷ்ணுவென்றும், ருத்திரனென்றும் இரண்டு பேராகத்தெரிந்தாலும் முடிவில் ஒருவனே யாவானென்றறிக எ - று.

இங்ஙனம் இச்செய்யுள் இலவணோதக நியாயத்தால் தெய்வம் ஒன்றேயென்று விளக்கினமை யறிக. 52

## இதுவுமது

தில்லைநாய கனவன் திருவரங் கனுமவன்
எல்லையான புவனமு மேகமுத் தியுமவன்
பல்லுநாவு முள்ளபேர் பகுந்துகூறி மகிழுவார்
வல்லபங்கள் பேசுவார் வாய்புழுத்து மாய்வரே.

(பொ - ரை) சிதம்பரத்திற்குத் தலைவனும், திருவரங்கத்திலெழுந்தருளியவனும், எல்லையாயிருக்கின்ற இருநூற்றிருபத்து நான்கு புவனங்களும், சிவஜீவைக்கிய முத்தியுமா யிருப்போன் ஒருவனே யாவானென் றுணராதபல்லையும், நாவினையும் பலமாகப் பெற்றிருக்கின்ற சில பேதைகள் வேறுவேறு பிரித்துத் தங்களுடைய சொல் சாமர்த்தியத்தால் கூறி மகிழ்ச்சி யடைவார்கள். ஆனல், அங்ஙனம்

வலிமையாகப்பேசுகின்ற தர்க்கஞ்செய்யும் வீண்வாதிகளெல்லாம் தங்கள் தங்களுடைய வாயினின்றும் புழுவெளிப்பட்டு கெடுதலாகிய கொடியபாவத்தை யநுபவித்துக் கடைசியில் மரணமாவார்கள் எ - று.

"பகர்வரியதில்லை மன்றுட்பார்த்தபோதங்
கென்மார்க்க மிருக்குதெல்லாம் வெளியேயென்ன
வெச்சமயத்தவர்களும் வந்திறைஞ்சாநிற்பர்"

என்று ஸ்ரீ தாயுமானசுவாமிகள் கூறியவாறே சிதம்பரத்தின் சர்வ தேவர்களுமாவான் இறைவனொருவனே என்று விளக்குமாறு 'தில்லை' யென எடுத்துக் கூறினர்.

உலகத்தின்கண் கல்விசாதுரிய முடையோரிருவர் கூடித் தர்க்கஞ் செய்யப்புகின் அவரவர் கல்விசாமர்த்தியத்தால் உயர்ந்ததைத் தாழ்ந்ததாகவும்; தாழ்ந்ததை உயர்ந்ததாகவும்; ஒன்றை இரண்டாகவும்; அநேகமாகவும்; இரண்டையும், அநேகத்தையும் ஒன்றாகவும்; சொல்லிச் சாதிக்கக் கூடுமென்பார், 'பல்லுநாவு முள்ளபேர் பகுந்துகூறி மகிழுவார்' எனவும், அங்ஙன முண்மையைச் செவ்வனே விசாரித்தறியாமல் கல்வி சாதுரியத்தால் சாதிக்கின்ற அவர்களது மரண காலத்தில் வாயில் புழுத்தள்ளியே மரணமாவார்க ளென்பார், 'வல்லபங்கள் பேசுவார் வாய்புழுத்து மாய்வரே' எனவுங் கூறினர்.

இச்செய்யுளும் எல்லாத் தெய்வங்களுமாவான் ஒருவனே யென்று விளக்கியதென மேல் விஷயங்களா லறிந்து கொள்க. 53

## ஞானநிலை

எத்திசைக்கு மெவ்வுயிர்க்கு மெங்களப்ப னெம்பிரான்
சத்தியான வித்துளே முளைத்தெழுந்த வச்சுடர்
சித்தமுந் தெளிந்துவேத கோயிலுந் திறந்தபின்
அத்தனுடல் கண்டபின் னடங்கலாடல் காணுமே.

(பொ - ரை) சர்வ திக்குகளுக்கும், சர்வ பிராணிகளுக்கும் தலைவனான எம்பெருமானும், மோட்சம் என்கிற விதையிலிருந்து தனது சங்கற்பமாத்திரத்தானே தானே வெளிவந் தருளிய தேஜோ ரூபமானவனும், எமது அத்தனுமாகிய சிவபெருமானது ஆநந்தத் திருத் தாண்டவத்தை ஒவ்வொரு ஜீவான்மாவுங் காணவேண்டின், தங்கள் தங்களுடைய சித்தமானது வேறோர் விகற்பத்தை யடையா மல் தெளிவடைந்தும் வேதமென்று சொல்லப்படுகின்ற திருக்கோயி லும், தான் பக்குவ ஆன்மாக்களி னிமித்தம் மறைத்து வைத்திருக் கின்ற கதவாகிய உண்மைப்பொருளை வெளிவிட்ட பின்னும் மேற் சொல்லப்பட்ட ஆடலைக் காணுதலாகும். அங்ஙனம் காணப்பெற்றால் சர்வ பொருள்களி னியக்கங்களும் வெளிப்படையாகக் காணும் எ-று.

இறைவன் யானைமுதல் எறும்பீறாய பிராணிகளுக் கெல்லாம் தகப்பனுவா னென்பார், 'எத்திசைக்கு மெவ்வுயிர்க்கு மெங்களப்ப னெம்பிரான்' எனவும், அவன் என்றுஞ் சுபாவமாகவே யிருந்து மோக்ஷசாம்ராஜ்யத்தைக் கொடுப்பவ னென்பார், 'முத்தியான வித் தனே முளைத்தெழுந்த வச்சுடர்' எனவும், அவனை நிர்விகற்ப ஞானத்தை யடைந்தே காணக்கூடு மென்பர், 'சித்தமுந் தெளிந்து' எனவும், அங்ஙனம் நிர்விகற்ப ஞானத்தையடைய வேதங்களிற் பழகி அவற்றி னுண்மையை யுணரவேண்டு மென்பார், 'வேதகோயிலுந் திறந்தபின்' எனவும், இவற்றை யெல்லாம் முறையே வரப்பெற்ற பின்னரே அவனுடைய திருநடனத்தைத் தரிசிக்கக் கூடுமென்பார், 'அத்தனுடல்கண்ட' எனவும், அவனுடைய திருவருளைக் கண்ட மாத்திரத்திற்றானே சர்வ தொழில்களும் வெளிவருவன வென்பார், 'பின்னடங்க லாடல்காணுமே' எனவுங் கூறினர்.

இச்செய்யுள் நிர்விகற்ப ஞானத்திற்றானே சிவனை யறியக்கூடு மென்று உணர்த்தியதால் இது ஞான நிலையை யுணர்த்தியதென வறிக. 54

## இதுவுமது

உற்றநூல்க ளும்முளே யுணர்ந்துணர்ந்து பாடுவீர்
பற்றறுத்து நின்றுநீர் பராபரங்க ளெய்திலீர்
செற்றமாவை யுள்ளரைச் செருக்கறுத் திருத்திடில்
சுற்றமாக வும்முளே சோதியென்றும் வாழுமே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நீங்கள் சில நூற்பொருள்களைக் கற்றுங் கேட்டு முணர்ந்துகொண்டு சிவபெருமானைக் குறித்துக் கண்டோரால் சிறப்படையவும், அவர்கள் பிரமிக்கவும் பாடுகின்றீர். நீர் அங்ஙனம் பாடி அதினால் சில சிறப்புகளடைவதையே பெரும் பயனாகக் கருதி உம்முடைய பந்தங்களை யறவேயொழித்து மேலான பொருளாயுள்ள இறைவனை யடைந்தீரில்லை. (ஆகையால், உங்களுக்கு கதியில்லை) ஆயினும், இனியேனும் கொடிய குரோதத்தை விளைத்துக்கொண்டு உம்மிடத்திலிருக்கின்ற ஐந்து மிருகங்கள் போன்ற ஐம்பொறிகளின் கர்வத்தை யடக்கி ஒடுக்கி நிறுத்தி விடுவீரானால் பரஞ்சோதியாகிய பொருள் உங்களுடைய மனத்தின்கண்ணே உண்மையான சாதியார்போலக் கூடிக்கலந்து உங்களைவிட்டு பிரியாமல் சதா வாழ்ந்துகொண் டிருக்கும் எ - று.

உலகத்தின்கண் அநேகர் பெருமை யடைதற்கென்றே திருக்கோயிலிற்சென்று பாடுகின்றார்களென்பார், 'உற்றநூல்க ளும்முளே யுணர்ந்துணர்ந்து பாடுவீர்' எனவும், அவர்களெல்லாம் சிவசாம்ராஜ்யத்தை யடையார்களென்பார், 'பற்றறுத்து நின்றுநீர் பராபரங்க ளெய்திலீர்' எனவும், யாரொருவர் பொறிகளின் சேட்டைகளை யடக்கி மனமொடுங்கி நிற்கின்றாரோ அவர்களிடமே உண்மைச் சாதியார்கள்போல் சிவன் கலந்து வாழ்வா னென்பார், 'செற்றமாவை யுள்ளரைச் செருக்கறுத் திருந்திடில், சுற்றமாகவும்முளே சோதியென்றும் வாழுமே' எனவுங் கூறினார்.

உண்மைச்சாதியார்க ளிவர் என்றதை:

“அற்றகுளத்தி லறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவா ருறவு” என்பதினு லறிக.

இச் செய்யுள் மனோபந்தங்களை நீக்கி உள்ளபடியே சிவனை யுணர்ந்தாலே அவன் உயிர்களிற் கலந்து வாழ்வானென்று கூறினமையின் இதுவும் ஞானநிலையை யுணர்த்தியதென வறிக. 55

அக்ஷர நிலை

இது இவர் வைஷ்ணவ தேவாராய்ச்சியி லிருந்த பொழுது பாடியது.

போதடா வெழுந்ததும் புனலதாகி வந்ததும்
தாதடா புகுந்ததும் தானடா விளைந்ததும்
ஓதடா வஞ்சுமூன்று மொன்றதான வக்கரம்
ஓதடா விராமராம ராமவென்னு நாமமே.

(பொ - ரை) அஞ்சும், மூன்றும் ஒன்ருகச் சேர்ப்பதாலுண்டாகிய எட்டு என்னும் தொகையைப் பெற்றிருக்கின்ற ஸ்ரீராமபிரானுடைய திருநாமமாகிய அஷ்டாட்சரமே மலராயெழுந்ததும், அப்புவாக வந்ததும், சாடராக்கினியா யிருந்ததுமாகும். ஆகையால், மாணுக்கத்தன்மை பூண்டுள்ளவனே! நீ அந்த அஷ்டாட்சரத்தையே தியானஞ் செய்யக்கடவை எ - று.

விஷ்ணுமூர்த்திக்கு முக்கிய பீஜமாகிய அஷ்டாட்சரமே சர்வ பொருள்களுமானதென்பார், ‘போததா யெழுந்ததும், புனலதாகி வந்ததும், தாததாப்புகுந்ததுந் தணலதாகவிளைந்ததும்’ எனவும், அதையே

சிந்திக்கவேண்டு மென்பார், 'எதடா விராமராம ராமவென்னு நாமமே' எனவும் கூறினர்.

அஷ்டாட்சரமாவது: ஓம், நமோ, நாராயண என்பதாம், சிலர் ஹரி, ஓம், நமோ, நாராயண என்பார்.

இச்செய்யுள் ஸ்ரீராமருடைய பீசாட்சரங்களை விளக்கிய தாகலின் அட்சரநிலையை உணர்த்தியதென் றறிக. 56

## இதுவுமது

அகாரமென்ற வக்கரத்து ளவ்வுவந் துதித்ததோ
உகாரமென்ற வக்கரத்தி லுவ்வுவந் துதித்ததோ
அகாரமும் உகாரமுஞ் சிகாரமன்றி நின்றதோ
விகாரமற்ற யோகிகாள் விரித்துரைக்க வேணுமே.

(பொ - ரை) எக்காலத்தும் மனோவிகாரத்தை யடையாமல் ஒரே தன்மையா யிருக்கின்ற யோகிகளே! அகாரம் என்று சொல்லப்படுகின்ற அக்ஷரத்தில் அவ்வென்னும் பீஜம் வேருக ஒன்றுவந்து உண்டாயதோ? அன்றி, உகாரம் என்று சொல்லப்படுகின்ற அக்ஷரத்தில் உவ்வென்னும் பீஜம் வேருக ஒன்று வந்து உண்டாயதோ? அன்றி, மேலே சொல்லப்பட்டிருக்கின்ற அகாரமும், உகாரமும், சிகாரம் என்கிற பீஜத்தை தங்களுக்குத் துணையா யுடைத்தா யிராமல் தனித் தனியே நின்றனவோ? என்னும் இம்மூன்று சந்தேகங்களுக்கும் நன்ருய் விரித்து மறுமொழி சொல்லவேண்டும் எ - று.

அகார மென்னும் அக்ஷரமும், உகார மென்னும் அக்ஷரமும், யோகஞ் செய்வோர்க்கு முக்கியமானவையாகலானும், அவற்றை யுச்சரிக்குங்கால் அவைகளுடன் வேறொரு மெய்யைச் சேர்த்து உச்சரிக்க வேண்டுமாகலானும், அந்த அகாரத்துடனும், உகாரத்துடனும் வகர மெய்யைச் சேர்த்துச் சிலரும், ஙகரமெய்யைச் சேர்த்துச் சிலரும்

உச்சரிப்பது சுபாவமாகலானும், அகாரமே அவ்வானதும், உகாரமே உவ்வானது மென்பார், 'அகாரமென்ற வக்கரத்து ளவ்வுவந் துதித்ததோ, உகாரமென்ற வக்கரத்து ளுவ்வுவந் துதித்ததோ' எனவும், மேலே சொல்லப்பட்ட பீஜங்களோடு கூடி சிகாரமானது சிம் என்று நிற்குமென்பார், 'அகாரமும் உகாரமுஞ் சிகார மின்றிநின்றதோ' எனவும், இவைகளை யெல்லாம் யோக சாதனமுடையாரே அறிவாரென்பார், 'விகாரமற்ற யோகிகாள் விரித்துரைக்க வேண்டுமே' எனவுங் கூறினர்.

இதுவும் பீஜாட்சரங்களின் உண்மையைக் கூறியபடியால் அக்ஷர நிலையை யுணர்த்தியதென வறிக. 57

சர்வம் சிவமெனல்

அறத்திறங்க ளுக்கும்நீ யகண்டமெண் டிசைக்கும்நீ
திறத்திறங்க ளுக்குநீ தேடுவார்கள் சிந்தைநீ
உறக்கம்நீ யுணர்வுநீ யுட்கலந்த சோதிநீ
மறக்கொணாத நின்கழல் மறப்பினுங் குடிகொளே.

(பொ - ரை) சிவபெருமானே! நீயே முப்பத்திரண்டு தருமங்களுக்கும், சர்வவிடங்களுக்கும், வேறுபலவகையான காரியங்களுக்கும், உன்னை யாராய்வோர்களுடைய மனத்திற்கும், தலைவனாகவும், அவைகளே யாகவும் இருக்கின்றாய். ஆகையால், உறக்கமும், உணர்ச்சியும், சர்வ உயிர்களுக்குள்ளுங் கலந்திருக்கின்ற தேஜோமயனும் நீயேயாவாய் ஆகையால், அப்படிப்பட்ட உன்னுடைய திருவடிகளை நான் சதா சிந்திக்கவேண்டுமே யொழிய மறக்கக்கூடாது. ஒருகால் என்னுடைய பூர்வ கர்மவசத்தால் மறந்துவிட்டாலும் நீரே வந்து என்னுடைய மனத்தின்கண் நிற்கவேண்டும் எ - று.

இறைவன் தரும சொரூப னென்பார், 'அறத்திறங்களுக்கு நீ' எனவும், சாயுச்சிய னென்பார், 'அகண்ட மெண்டிசைக்குநீ' எனவும்,

சர்வ பொருள்களையும் இயக்குவோன் இவனே யாவானென்பார், 'திறத்திறங்களுக்கு நீ' எனவும், பத்திரமாய் நினைப்போர் சித்தத்தி லினிப்போனென்பார், 'தேடுவார்கள் சிந்தை நீ' எனவும், மற்றைய விடயாதிகளாவானும், உயிர்க்குயிராய்க் கலப்பானு மிவனே யாவா னென்பார், 'உறக்கநீ யுணர்வுநீ யுட்கலந்த சோதிநீ' எனவும், அங் ஙனமாய வுன்னை நான் என்னுடைய பூர்வகர்ம வாசனையால் மறந்து விடுகிறேனென்பார், 'மறக்கொணாத நின்கழல் மறப்பினும்' எனவும், நீ தாய்போலுந் தண்ணருள் செய்யவேண்டியவ னாகையால் நீயே வந்து என் முன்னிற்கவேண்டு மென்பார், 'குடிகொளே' எனவுங் கூறினார்.

சிவபெருமா னின்றி யாதும் அசையாதென்பதை;

"அவனசைந்திடிலொருவனு வசைந்திடும்
அவனசையாவிடி லொருவனுவசைந்திடா
சிவன்சத்தியோடுன் செகம்விரிந்திடும்
சிவன்தனித்திடில் விரிஜெக மொடுங்குமால்" என்பதினாலறிக.

இச்செய்யுள் எல்லாம் சிவன்செயலே யென்று விளக்குதலின் சர்வம் சிவம் என்னப்பட்டது. 58

### இதுவுமது

அண்டநீ யகண்டநீ யாதிமூல மானநீ
கண்டநீ கருத்துநீ காவியங்க ளானநீ
புண்டரீக மற்றுளே புணருகின்ற புண்ணியர்
கொண்டகோல மானநேர்மை கூர்மையென்ன கூர்மையே.

(பொ - ரை) சர்வ வண்டங்களும், கண்டிக்கப்படாதவனும், முதற்காரணமானவனும், கண்டிக்கப்படுவோனும், சர்வஜீவர்களுடைய எண்ணங்களாயிருப்பவனும், சர்வசாஸ்திரங்களா யிருப்போனும் நீயே

யானாய். அப்படிப்பட்ட உன்னை இதயாகாயமாகிய சிற்சபையின்கண் சதா கண்டு உன்னுடன் கலக்கின்ற அன்பர்கள் கொண்டிருக்கின்ற கோலம் எத்தன்மையதோ? எ - று.

உலகத்தின் கண்ணுள்ள ஒவ்வொரு பொருள்களிலும் இறைவன் கலந்தே நிற்கின்றானென்பார், 'அண்டநீ யகண்டநீ யாதிமூலமானனீ, கண்டநீ கருத்துநீ காவியங்களானனீ' எனவும், அங்ஙனமாய இவன் கலப்பை அன்பர்களே உணர்ந்தவர்களென்பார், 'புண்டரீகமற்றுளே புணருகின்ற புண்ணியர்' எனவும்; இவனே சர்வ பொருள்களிலும் வியாபித்திருக்குங்கால் இவனை யன்பின் வழிப்பட்டு அடைந்தவர்கள் இவனிலும் மிக்க பேராற்றலுடையவராகையால் அவர்களும் இங்ஙனம் கலக்கக்கூடாதோ? என்பார், 'கொண்டகோலமானநேர்மை கூர்மையென்னகூர்மையே' எனவுங் கூறினர்.

இதுவும் அங்ஙனமே விளக்குதலின் சர்வம் சிவம் என்னப்பட்டது.

59

## உலகர்க்குப் புத்தி கூறல்

மையடர்ந்த கண்ணினார் மயக்கிடும் மயக்கிலே
ஐயிறந்து கொண்டுநீங்க ளல்லலற் றிருப்பிர்காள்
மெய்யறிந்த சிந்தையாய் விளங்குஞான மெய்தினால்
உய்யறிந்து கொண்டுநீங்க ளூழிகாலம் வாழ்விரே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நீங்கள் வாழ்ந்துகொண்டிருக்கின்ற இந்த உலகத்தின் கண்ணுள்ள பெண்கள் தங்களது மைதீட்டிய கண்களைக்கொண்டு உங்களை மயங்கச்செய்கின்ற அந்த மயக்கத்திலே நீங்கள் சேஷ்மத்திற்பட்ட ஈயைப்போல் வருந்தி இறந்து இறந்து (பிறந்து பிறந்து) மிகவும் துன்பங்களை யநுபவித்துக்கொண் டிருக்கிறீரல்லவா? ஆம். அங்ஙனம் வருந்துவதைவிட்டு உள்ளபடியே உண்மையை விசாரித்தறிந்து உங்கள் மனத்தை வேறு வழியிற் செல்ல

விடாமல் அம்மனத்தைக்கொண்டு பரஞானங் கைகூடப் பெறுவீ ராஞல் நீங்கள் பிழைக்கும் வழியைத் தெரிந்துகொண்டவர்களாவீர் கள். பிறகு, இவ்வுலகத்தின்கண் உலகவாஞ்சனை யென்பதில்லாமலே அநேக கோடிகாலம் வாழ்ந்திருக்கலாம் எ - று.

உலகத்திற் பெண்கள் தங்கள் கண்களுக்கு மைதீட்டுவதும் அங் ஙனம் தீட்டப்பட்ட கண்களால் ஆடவர்களை மயக்குவதுஞ் சுபாவ மென்பார், 'மையடர்ந்த கண்ணிஞர் மயக்கிடும்' எனவும், அங்ஙனமே ஆடவர்கள் மயக்கத்தை யடைவதுஞ் சுபாவமேயென்பார், 'மயக்கிலே ஐ' எனவும், அங்ஙனம் மயங்கியதாலடைந்த லாபம் இறந்திறந்து பிறப்பதே யென்பார், 'இறந்துகொண்டு' எனவும், அங்ஙனம் இறந் திறந்து பிறக்குந்தோறும் அடையுந் துன்பத்திற்களவில்லை யென் பார், 'நீங்க ளல்லலுற்றிருப்பீர்காள்' எனவும், இங்ஙனம் வருந்துவதை விட்டுச் சிவஞானத்தை யடைவதே நன்மையென்பார், 'மெய்யறிந்த சிந்தையால் விளங்குஞான மெய்தினல்' எனவும், அங்ஙனம் சிவ ஞானங் கைகூடப்பெற்ருல் பிழைக்கும்வழி ஏற்படுமென்பார், 'உய் யறிந்து கொண்டு' எனவும், அங்ஙனம் பிழைக்கும் வழியிலே சீவன் முத்தஞகக் கூடுமென்பார், 'நீங்களூழிகாலம் வாழ்விரே' எனவுங் கூறிஞர்.

"காதிலோலையை வரைந்து மேற்குமிழியையுங்கருவிவேள்கருநீலப்
போதுபோன்றிடுங் கண்ணியர்மயக்கினி லெப்போது மேசிக்காமல்
மாதுகாதலி பங்கனையபங்கனை மாடமாளிகை சூழுஞ்
சேதுமேவிய ராமநாயகன்றனைச் சிந்தைசெய் மடநெஞ்சே"

என்பதினு லறிக.

உலகர்களே! நீங்கள் பெண்கள் மயக்கத்தினின்றும் நீங்கிச் சிவ ஞானத்தை யடையப் பெறுவீராஞல், சீவன் முத்தராய் வாழ்வீர் என்பது கருத்து.

இங்ஙனம் உலகமாக்களைச் சிவஞானத்தை யடையும்படி வற்புறுத்தலால் இது உலகர்க்குப் புத்தி கூறல் என்னப்பட்டது. 60

## குருபதேசப் பெருமை

கருவிருந்த வாசலாற் கலங்குகின்ற வூமைகாள்
குருவிருந்து சொன்னவார்த்தை குறித்துநோக்க வல்லிரேல்
உருவிலங்கு மேனியாகி யும்பராகி நின்றநீர்
திருவிலங்கு மேனியாகச் சென்றுகூட லாகுமே.

(பொ - ரை) அநேகமுறை பிறந்து பிறந்து அக்கருவாசலால் மிகவும் வருத்தத்தை யடைந்திருக்கின்ற அறிவீனர்களே! நீங்கள் கிருபையோடு ஞானசிரியனாய் எழுந்தருளி வந்து உபதேசித்த உங்களுடைய குருமொழியைச் சிறிது யோசித்துநோக்கிப் பார்க்கச் சக்தியுடையீரானால், இதுவரைக்கும் இறந்திறந்து விலங்காகவும், தேவர்களாகவும், மற்றுமுள்ள ஜெந்துக்களாகவும், பிறந்து பிறந்து வருந்திவந்த நீங்கள் மிக்க ரூபலாவண்ணியம் விளங்கும் தேஜோமேனியை யடைந்து சிவபெருமானுடைய தேஜோமயத்தை யடையக் கூடும் எ - று.

உயிர்கள் தங்கள் ஜென்மாந்தரங்களில்பட்ட துன்பங்களுக்கு அளவில்லை யென்பார், 'கருவிருந்த வாசலாற் கலங்குகின்ற வூமைகாள்' எனவும், இங்ஙன மிருந்தும் குருவாக்கினையின்படி நடப்பதில்லை யென்பார், 'குருவிருந்து சொன்னவார்த்தை குறித்துநோக்க வல்லிரேல்' எனவும், அங்ஙனம் குருமொழியின்படியே நிற்பீரானால் இதற்கு முன்னெடுத்துள்ள ஜென்மங்களை இனி எடுக்காதபடி தேஜோரூபத்தைப் பெற்று இறைவனுடன் இரண்டறக் கலப்பீரென்பார், 'உருவிலங்கு மேனியாகி யும்பராகி நின்றநீர், திருவிலங்கு மேனியாகச் சென்றுகூட லாகுமே' எனவுங் கூறினார்.

உயிர் அநேக ஜென்மங்களெடுத்தமையை:

"புல்லாகிப்பூடாய்ப் புழுவாய்மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப்பாம்பாகிக்
கல்லாய்மனிதராய்ப் பேயாய்க்கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த்தேவராய்ச்
செல்லாநின்ற வித்தாவரசங்கமத்து
ளெல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்"

என்பதினு லறிக.

இது குருபதேசப்படி நின்றால் இன்ன குணத்தைப் பெறுவீ ரென்று விளக்குதலின் குருபதேசப்பெருமை என்னப்பட்டது. 61

## ஞான நிலை

தீர்த்தமாட வேண்டுமென்று தேடுகின்ற தீனர்காள்
தீர்த்தமாட லெவ்விடந் தெளிந்துநீ ரியம்பிலீர்
தீர்த்தமாக வும்முளே தெளிந்துநீ ரிருந்தபின்
தீர்த்தமாக வுள்ளதுஞ் சிவாயவஞ் செழுத்துமே.

(பொ - ரை) தீர்த்தஸ்நானஞ் செய்யவேண்டுமென்கிற மிக்க ஆவலோடு அத்தீர்த்தத்தைத் தேடிப்போகின்ற அறிவீனர்களே! அங்ஙனம் தீர்த்தஸ்நானஞ் செய்யவேண்டியது எந்தவிடத்தி லென்று நன்றாயாராய்ந்து பார்த்துச் சொல்லமாட்டீர். ஆகையால், நீங்கள் அங்ஙனந் தீர்த்தமாடும் ஸ்தானத்தை உங்களுக்குள்ளாகவே தெரிந்து கொண்டு அவ்விடத்தில் தீர்த்தமாடி யிருப்பீர்களானால் அங்ஙனம் தீர்த்த ரூபமாயுள்ளதும் பஞ்சாட்சரமே யாகும் எ - று.

உலகத்தில் அநேகர் தீர்த்த ஸ்நானத்திற்குச் செல்லுகின்றனர் என்பார், 'தீர்த்தமாடவேண்டுமென்று தேடுகின்றதீனர்காள்' எனவும், அங்ஙனம் கங்கை, காவிரி, துங்கபத்திரை முதலிய தீர்த்தங்களி

லாடுவதிற் பயனில்லை யென்பார், 'தீர்த்தமாட லெவ்விடந்தெளிந்து நீரியம்பிலீர்' எனவும், இவையெல்லாம்விட்டு உமது இதயத்தின்கண்ணிருக்கின்ற சிவபெருமானாகிய தீர்த்தத்தை உள்ளபடி விசாரித்தறிந்து உய்யுங்கள் என்பார், 'தீர்த்தமாகவும்முளே தெளிந்து நீரிருந்தபின், தீர்த்தமாகவுள்ளதுஞ் சிவாயவஞ்செழுத்துமே' எனவுங் கூறினார்.

இது தீர்த்தமகிமையை விலக்கி ஞானத்தை விளக்குதலின் ஞானநிலை என்னப்பட்டது. 62

## யோக மறுத்தல்

கழுத்தையு நிமிர்த்திநல்ல கண்ணையும் விழித்துநீர்
பழுத்துவாய் விழுந்துபோன பாவமென்ன பாவமே
அழுத்தமான வித்திலே யனாதியா யிருப்பதோர்
எழுத்திலோ வெழுத்திலே யிருக்கலா மிருத்துமே.

(பொ - ரை) யோகிகளே! நீங்கள் உங்களுடைய கழுத்தை நன்றாக நிமிர்த்தியும், கண்களை அடையாளம் வைத்திருக்கின்ற இடத்தை நன்றாய் விழித்துப் பார்த்தும் பழகியதால் வாயிலிருக்கும் நீர் வற்றி வாய் வறண்டுபோன பாவம் என்ன பாவம்? ஆகையால், அவ்வளவு வருத்தமான செய்கையாகிய அவ்யோகம் புரிவதைவிட்டு நல்ல தேர்ந்த விதையாகிய அநாதியென்று சொல்லப்பட்டிருக்கும் ஒரு எழுத்தாம் பிரணவத்தில் அமர்ந்திருப்பீரானால் அவ் வெழுத்தானது உங்களைச் சிவஞானச் செல்வராய் இவ்வுலகத்தின்கண் அமர்ந்திருக்கச் செய்யும் எ - று.

யோகஞ் செய்வோர்க்குக் கழுத்தை நிமிர்த்துவதும், கண்களை விழிப்பதும் ஒரு சாதனமென்பார், 'கழுத்தையு நிமிர்த்தி நல்ல கண்ணையும் விழித்து' எனவும், அங்ஙனம் யோகம் பயிலுங்கால் வாய்நீர்

வறண்டு மௌனத்தை யடைகின்றன ரென்பார், 'பழுத்துவாய் விழு ந்துபோன பாவமென்ன பாவம்' எனவும், அதைவிட்டு அட்சா ரூபி யான சிவபெருமானை அவ் வட்சரத்தைக்கொண்டே சிந்தித்துச் சிந் தித்தல் ஞானத்தால் சிவசாரூப்பியத்தை யடைவது மேன்மையுடைய தென்பார், 'அழுத்தமானவித்திலே யநாதியாயிருப்பதோர் எழுத் திலோ வெழுத்திலே யிருக்கலாமிருத்துமே' எனவுங் கூறினர்.

இதுயோகங் கொடியதென்றும், சிந்தித்தல் ஞானமே பெரிய தென்றும் கூறினமையின் யோகமறுத்தல் என்னப்பட்டது. 63

## இதுவுமது

கண்டுநின்ற மாயையுங் கலந்துநின்ற பூதமும்
உண்டுறங்கு மாறுநீ ருணர்ந்திருக்க வல்லிரேல்
பண்டையாறு மொன்றுமாய்ப் பயந்தவேத சுத்தராய்
அண்டமுத்தி யாகிநின்ற வாதிமூல மாவிரே.

(பொ - ரை) உலகர்களே! நீங்கள் சதா கண்டுகொண்டே யிருக் கின்ற மாயையும், உங்களைக் கலந்து வாழ்கின்ற பூதங்களும் சேட்டை களினின்றும் நீங்கி யுணங்கும்படி யாதாமொரு வழியை யுணர்ந்து அவ்வழியின்கண்ணே சதா நடப்பீரானல், அநாதிகாலந்தொட்டு ஆறுதாரங்களையுங் கடந்து மேலாதாரத்திற் சென்று அங்கே நிர் மலத்தை யடைந்து சர்வமுத்திகளும் தாமேயாய் விளங்குகின்ற முதற்பொருளாகிய சிவசாரூப்பியத்தை யடைவீர்கள் எ - று.

மாயையானது தான் குடியிருந்து வாழ்வதற்குத்தக்க ஜீவர்களைப் பார்த்துக்கொண்டே யிருக்கின்றதென்பார், 'கண்டுநின்ற மாயையும்' எனவும், அங்ஙனம் கண்டு கொண்டிருக்கின்ற மாயையுடன் பூதங் களுங் கலக்கின்றன வென்பார், 'கலந்து நின்ற பூதமும்' எனவும், இவ்விரண்டையும் ஒழிப்பதே சிவாநந்தப்பேற்றிற்குச் சிறந்த தென்

பார், 'உண்டுறங்குமாறு நீருணர்ந்திருக்கவல்லிரேல்' எனவும், அங்ஙன முணரப் பெற்ருல் ஆருதாரத்தைக்கடந்து சிவஞானச் செல்வர்க ளாவீர்களென்பார், 'பண்டையாறு மொன்று மாய்ப்பயந்த வேதசுத்த ராய் அண்டமுத்தியாகி நின்றவாதி மூலமாவிரே' எனவுங் கூறினர்.

இதுவும் ஆருதாரமார்க்கத்தை மறுத்துக் கூறியதாகலின், யோக மறுத்தல் என்னப்பட்டது. 64

## மாயை விலக்கல்

ஈன்றவாசலுக் கிரங்கி யெண்ணிறந்து போவீர்காள்
கான்றவாழை மொட்டலர்ந்த காரண மறிகிலீர்
நான்றவாச லைத்திறந்து நாடிநோக்க வல்லிரேல்
தோன்றுமாயை விட்டொழிந்து சோதிவந்து தோன்றுமே.

(பொ-ரை) வாழைமரமானது தன்னிடத்தில் பூவைமலர்த்திக் காயைவிடுமாணுல் அக்காய் முற்றியபின் தான் வெட்டுப்படுவதுபோல், உலகமாக்களே! நீங்கள் உங்களைப் பெற்றெடுத்த வழியாகிய யோனித் துவாரத்திற்கு ஆசைப்பட்டு அவ்வாசையால் அநேகமாக இறந்து படுவீர்கள். அங்ஙனம் இறந்து படுவதை நீக்கும்பொருட்டு, அங்ஙனம் அவாவைக்கொடுத்த மாய்கையை விட்டு நீங்கி, மேலே யடையவேண் டிய கபாடமிட்டிருக்கிற வாசலைத்திறந்து, அவ்வாசல் வழியாக அவ் விடத்தெழுந்தருளி யிருக்கின்ற இறைவனை நன்ருய் நோக்கிப் பார்ப்பீராளுல் தேஜோமயனுகிய இறைவன் வந்து கூடியசீக்கிரத்தில் உங்களுக்கு வெளிப்படுவான் எ - று.

"பிறந்தவிடந்தேடுதே பேதைமடநெஞ்சங்
கறந்தவிட நாடுதே கண்"

என்றவாறே, உலகத்தில் அவரவர்கள் வந்தவழியாகிய யோனிக்கே ஆசைவைப்பது சுபாவமென்பார், 'ஈன்றவாசலுக்கிரங்கி' எனவும், அங்

ஙனம் அவ்வாசலிற் படுங்கால் இறப்பதே நிச்சயமென்பார், 'எண்ணிறந்து போவீர்காள்' எனவும், இங்ஙனமாவது கனியை விரும்பிய மரம் வெட்டுப்படுவது போலாமென்பார், 'கான்றவாழை மொட்டலர்ந்த காரணமறிகிலீர்' எனவும், இங்ஙனம் ஆசைப்படுவதை விட்டுச் சிவபெருமானை நோக்குவீராஞல் உங்களுடைய மாய்கையை ஒழித்துச் சிவம் வெளிப்படுமென்பார், 'நான்றவாசலைத் திறந்து நாடிநோக்க வல்லிரேல் தோன்றுமாயை விட்டொழிந்து சோதிவந்துதோன்றுமே' எனவுங் கூறிஞர்.

இது மாயையை நீக்கவேண்டுமெனக் கூறியதாகலின் மாயை விலக்கல் என்னப்பட்டது. 65

இதுவுமது

உழலும்வாச லுக்கிரங்கி யூசலாடு மூமைகாள்
உழலும்வாச லைத்துறந்து வுண்மைசேர வெண்ணிலீர்
உழலும்வாச லைத்துறந்து வுண்மைநீ ருணர்ந்தபின்
உழலும்வாச லுள்ளிருந்த வுண்மைதானு மாவிரே.

(பொ - ரை) வருத்தத்தைக் கொடுக்கின்ற பெற்ற வாசலுக்கு ஆசைப்பட்டு அவ்வாசையால் ஊசல்படும் பாட்டைப்படுகின்ற அறிவீனர்களே! அங்ஙனம் அவ்வாசையை விட்டு உண்மைப்பொருள் உமது மனத்தின்கண் சேரும்படி தியானிக்கமாட்டீர்கள். அங்ஙனம் அதைவிட்டு உண்மைப்பொருளை உணர்ந்தபின் அங்ஙனம் திரிகோணஸ்தானமாகிய மூலதார காரணமாக எழுந்தருளி யிருக்கின்ற அவ்வுண்மைப் பொருளாகவே யாவீர்கள் எ - று.

இது யோனியாசையை நீக்கவேண்டுமென்று கூறுதலின் மாயை விலக்கல் என்னப்பட்டது. 66

### யோக நிலை

மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை
நாலுநாழி யும்முளே நாடியே யிருந்தபின்
பாலனாகி வாழலாம் பரப்பிரம மாகலாம்
ஆலமுண்ட கண்டராணை யம்மையாணை யுண்மையே.

(பொ - ரை) ஓ உலகர்களே! நீங்கள் மூலாதாரத்தின்கண் திரிகோண ரூபமாயிருக்கும் திருக்கோயிலின் கண்ணிருந்து கிளம்பிச் சிரசளவு முட்டியிராநின்ற தேஜோமயப்பொருளை யுணர்ந்து அப்பொருளை இரேசக, பூரக, கும்பக மார்க்கங்களால் நிறுத்தி நான்கு நாழிகை பரியந்தம் உம்முடைய இருதயத்தின்கண் ஸ்மரித்து அப்பொருளையே நாடி அசைவற்றிருக்குஞ் சாதகமுடையீரானால், நீங்கள் சதா பாலர்களாகவே யிருந்து வாழக்கூடும். அன்றி, பரவஸ்து (அதாவது பிரமம்) என்று சொல்லும்படியாகவு மாகக்கூடும். இது பொய்யன்று. ஆலகால விஷத்தை யுண்டு திருக்கண்ட ஸ்தானத்தில் அறிகுறியாக நிறுத்தி யிருக்கின்ற ஸ்ரீ சிவபெருமான் மேலும் அவனது இடப்பாகத்தை விட்டுப் பிரியா நங்கையாகிய பார்ப்பதாதேவியின் மேலும் சத்தியமாகச் சொன்னேன் எ - று.

சோதிமயமா யமர்ந்திருக்கின்ற குண்டலிப் பாம்பானது மூலாதாரத்தின்கண்ணே தோன்றுவது சுபாவமென்பார், 'மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை' எனவும், அங்ஙனம் தோன்றிய அது சிரசளவு முட்டுங்கால் நாசியின் வழியே வெளிப்படுவதாகிய சுபாவத்தை யுள்ளடக்கிக்கொண்டு அப்பொருளையே ஸ்மரிக்கவேண்டுமென்பார், 'நாலுநாழி யும்முளே நாடியே யிருந்தபின்' எனவும், அங்ஙனமிருந்ததாலே சர்வ சித்திகளையு மடையக்கூடு மென்பார், 'பாலனாகி வாழலாம் பரப்பிரம மாகலாம்' எனவும், இது சத்தியமே யாகு மென்பரர், 'ஆலமுண்ட கண்டராணை யம்மையாணை' யுண்மையே எனவுங் கூறினார்.

மூலாதாரத்தில் குண்டலிதோன்று மென்பதை:

"மூலநிலத்திலதோமுகமாய் மூகிழ்ந்துவிழியின் பொடுதுயிலு
மூரிப்பாம்பைக்காலனலை மூட்டியெழுப்பி"

எனக்கூறியிருப்பதா லறிக.

இது மூலாதார சாதனங் கூறியபடியால் யோகநிலை என்னப் பட்டது. 67

## பஞ்சாட்சர மகிமை

இருக்கவேண்டு மென்றபோ திருத்தலா யிருக்குமோ
மரிக்கவேண்டு மென்றலோ மண்ணுளே படைத்தனர்
சுருக்கமற்ற தம்பிரான் சொன்னவஞ் செழுத்தையும்
மரிக்குமுன் வணங்கிடீர் மருந்தெனப் பதங்கெடீர்.

(பொ - ரை) உலகர்களே! நீங்கள் இன்னுஞ் சிலகாலம் இவ்வுலகத்தின்கண்ணிருந்து உலக வாழ்க்கையை யடையலாமென்று எண்ணுகின்றீர். அப்படி இருப்பதற்குக் கூடுமோ? கூடாது. நாம் ஈஸ்வர சிருஷ்டியில் கணக்கா யேற்பட்டுவந்த அன்றே அவர் நமக்கு இறப்பையும் கூடவே வைத்தல்லவா படைத்திருக்கின்றனர். ஆகையால், நீங்கள் இறவாமுன்னரே சர்வ வியாபகனாகிய எம்பிரானது முக்கிய பீஜமாகிய பஞ்சாட்சரத்தை நல்லாசிரியனை யடுத்துணர்ந்து மருந்தினிடத்தில் வைத்திருக்கின்ற பயம்போன்ற பயத்தை அதினிடத்தில் வைத்துச் சிந்தித்து அந்தப் பஞ்சாட்சரரூபனு மிறைவனையும் நமஸ்காரஞ் செய்யுங்கள். அங்ஙனஞ் செய்யாமல் விட்டுவிடுவீரானால் நீங்கள் அடையவிருக்கின்ற சிவபதத்தை யிழந்தவராவீர்கள் எ - று.

ஆன்மாக்கள் உலகத்தின்கண் பிறந்தமை இதற்கென்றுணராது உலக வாஞ்சையின் கண்ணே நிற்கின்றன வென்பார், 'இருக்கவேண்டுமென்றபோ திருத்தலா யிருக்குமோ' எனவும், அங்ஙனம்

ஆன்மாக்கள் தேகங்களோடு கூடியபொழுதே அத் தேகங்களுக்கு மரணமும் கூடவே யிருக்கின்றதென்பார், 'மரிக்கவேண்டுமென்றலோ மண்ணுளே படைத்தனர்' எனவும், இங்ஙனமிருப்பதால் பிறவியின் பயனைக் கூடிய சீக்கிரத்தில் அடையவேண்டு மென்பார், 'சுருக்கமற்ற தம்பிரான் சொன்ன வஞ்செழுத்தையும் மரிக்குமுன் வணங்கிடீர் மருந்தெனப்பதங்கெடீர்' எனவுங் கூறினர்.

தேகம் உதிக்கும்போதே மரணமு முண்டென்பதை:

"தெரிவாகவூர்வன நடப்பனபறப்பன
செயற்கொண்டிருப்பனமுதல்
தேகங்களத்தனையு மோகங்கொள்பௌதிகம்
சென்மித்தவாங்கிறக்கும்
விரிவாயபூதங்க ளொன்றேடொன்ருயழியு
மேற்கண்டசேடமிதுவே"

என ஸ்ரீ தாயுமானவர் திருவாக்கானும்;

பிறவியின் பயன் இன்னதென்பதை;

"உடம்பினுலாய பயனுவதெல்லாம்
திடம்பெற வீசனைத்தேடு"

என ஔவையார் திருவாக்கானு முணர்க.

இது பஞ்சாட்சரமுகாந்தரத்தால் இறைவனை வணங்கவேண்டு மென்றதால் பஞ்சாட்சரமகிமை என்னப்பட்டது. 68

இதுவுமது

அம்பத்தொன்றெ னக்கர மடக்கமோ ரெழுத்துளோ
விண்பரந்த மந்திரம் வேதநான்கு மொன்றலோ
விண்பரந்த மூலவஞ் செழுத்துளே முளைத்ததே
அங்கலிங்க பீடமா யமர்ந்ததே சிவாயமே.

(பொ - ரை) வடகலையின் எழுத்துக்களாகிய ஐம்பத்தொன்றும் அடங்கியிருப்பது ஒரு எழுத்தின்கண்ணே? தேவலோகத்தாரும் விரும்புகின்ற மந்திரங்களும், நான்கு வேதங்களும் ஒன்றேயன்றோ? ஆம்; அங்ஙனமிருப்பதால் சிவாய என்னும் சூட்சும பஞ்சாட்சரத்திற்குத் தலையாய் இம் மூன்றுமே மனோலிங்கமா யமர்ந்ததென்னலாம் ஏ - று.

அன்றி, சூட்சுமபஞ்சாட்சரங்களே மனோ லிங்கமாகும் எனவுரைத்தலு மொன்று.

ஐம்பத்தோ ரெழுத்துக்களும் பிரணவத்தி லடங்குவது சுபாவமென்பார், 'அம்பத்தொன்றெனக்கர மடக்கமோரெழுத்துளோ' எனவும், எழுகோடிமந்திரங்களும் அப்பீஜத்திலே யடங்குமென்பார், 'விண்பரந்தமந்திரம்' எனவும், நான்குவேதங்களும் இருக்குவேதத்தின் கண்ணே யொடுங்குமென்பார், 'வேதநான்கு மொன்றலோ' எனவும், இறைவனும் அப்பீஜதியான முடையார்க்கே வெளிவருவானென்பார், 'விண்பரந்தமூலவஞ் செழுத்துளே முளைத்ததே அங்கலிங்கபீடமா யமர்ந்ததே சிவாயமே' எனவுங் கூறினர்.

இதுவும் பீஜாட்சரக் கிரமத்தை விலக்கிய தாகலின் பஞ்சாட்சர மகிமை என்னப்பட்டது. 69

## இதுவுமது

சிவாயவென்ற வக்ஷரஞ் சிவனிருக்கு மக்ஷரம்
உபாயமென்று நம்புதற்கு உண்மையான வக்ஷரம்
கபாடமுற்ற வாசலைக் கடந்துபோன வாயுவை
உபாயமிட் டழைக்குமே சிவாயவஞ் செழுத்துமே.

(பொ - ரை) சிவயவசி என்கிற காரண பஞ்சாட்சரமே சிவபெருமானனவன் எழுந்தருளி யிருக்கின்ற அட்சரமாகும் ஆகையால், அதுவே சிவபெருமானை யடைவதற்கு உபாயமா யிருப்பதென்று

நம்புவதற்கு உண்மையான அட்சரமாகும். அதுவே ஆருதாரம் என்கிற கதவுகளையுடைய வாசல்களைக் கடந்து போயிருக்கின்ற பிராண வாயுவை மிகவும் உபாயமாக அழைத்து நிவேதனஞ் செய்வதற்குரிய அட்சரமுமாகும் எ - று.

பஞ்சாட்சரமே சர்வ தொழில்களுக்கும் முக்கிய மந்திரமென்பார் இங்ஙனங் கூறினர்.

இதுவும் அட்சாகிரமத்தைக் கூறியதாகலின் பஞ்சாட்சரமகிமை என்னப்பட்டது. 70

## தெய்வ சோரூபம்

உருவுமல்ல வெளியுமல்ல வொன்றைமேவி நின்றதல்ல
மருவுமல்ல காதமல்ல மற்றதல்ல வற்றதல்ல
பெரியதல்ல சிறியதல்ல பேசுமாவி தானுமல்ல
அரியதாகி நின்றநேர்மை யாவர்காண வல்லரே.

(பொ - ரை) சிவம் என்னும் பொருளை விசாரித்தறியுங்கால், அது ரூபமுள்ளதும், ரூபமில்லதும், ஒரு பொருளைத் துணையாகப் பெற்றுள்ளதும், சமீபமானதும், தூரமானதும், வேருனதும், பற்றில்லாததும், பற்றுள்ளதும், பெரியதும், சிறியதும், நாக்கின் வாயிலாகப் பேசுகின்ற உயிராயுள்ளதும் அன்று. ஆகையால், இங்ஙனம் அஞ்ஞானிகளால் அறிவதற் கருமையானதா யிருக்கின்ற அப்பொருளின் குணத்தைக் கண்டறிய வல்லார் யாவ ரிருக்கின்றனர்? ஒருவரு மில்லை.

உயிரிலக்கணத்தை:

"ஓசையைச் செவியாலோர்ந்து முருவினைக் கண்ணலுற்றும்
நாசியாற் கந்தங்கொண்டு நாவினி லிரதந்துய்த்தும்
பூசிய தோலினலே புலப்படப் பரிசமுற்றும்
ஆசறவுடலினிற்கு மாவிகாணுன்மாத் தானே" என்பதா லறிக.

இது இங்ஙன மாயதன்மையோடு கூடிய உயிரிற் சம்பந்தியாத படி சம்பந்தித்திருக்கின்ற இறைவன்மேற் கூறிப்போந்த இலட்சணங்களோடு கூடியவனுவானென்று அறிவுறுத்தலின் தெய்வ சொரூபம் என்னப்பட்டது.

71

## உலகர்க்குப் புத்தி கூறல்

அறிவிலே பிறந்திருந் தாகமங்க ளோதுறீர்
நெறியிலே மயங்குகின்ற நேர்மையொன் றறிகிலீர்
உறியிலே தயிரிருக்க வூர்புகுந்து வெண்ணெய்தேடு
மறிவிலாத மாந்தரோ டணுகுமாற தெங்ஙனே.

(பொ - ரை) உலகர்களே! நீங்கள் நல்ல அறிவுடன்கூடி இவ்வுலகத்தின்கண் பிறந்திருந்து ஆகமங்களாகிய சாஸ்திரங்களை ஓதுகின்றீர்கள். அங்ஙனம் ஓதுகின்ற உங்களுடைய சாக்கிரதையிலேயே நீங்கள் மயக்கத்தை யடைந்திருக்கின்ற தன்மையை நீங்களே யறியீர். ஆகையால், நீங்கள் உரியில் தயிரானதிருக்க அதை யெடுத்துப் பாகப் படுத்தி வெண்ணெ யெடுத்துக்கொள்ளும் வழியை யுணராது ஊரிற் புகுந்து வெண்ணெ யுண்டோ இடையீர்? என்று கேட்டுத் திரிபவர் போல் அறிவில்லாதவர்களானீர்கள். ஆதலின், அப்படிப்பட்ட உங்களுடன் நல்லோர் எப்படி சேருவார்கள்? எ - று.

உலகமாக்களில் அநேகர் சாஸ்திர வாராய்ச்சி செய்யப் பழகினர்களேயன்றி அவ்வாராய்ச்சியின்படி அப்பொருளைக் கைப்பற்ற அறிந்தாரில்லை யென்பார், 'அறிவிலே பிறந்திருந் தாகமங்க ளோதுறீர் நெறியிலே மயங்குகின்ற நேர்மையொன் றறிகிலீர்' எனவும், இவர் ஆட்டைமேலிட்டு ஆடு காணேமென்று திகைத்தவன் போன்றாரென்பார், 'உரியிலே தயிரிருக்க வூர்புகுந்து வெண்ணெய் தேடு மறிவிலாத மாந்தரோடு' எனவும், இவர்களிடம் நல்லோரணுகாரென்பார், 'அணுகுமாற தெங்ஙனே' எனவுங் கூறினர்.

ஆராய்ச்சியின்படி நடக்கவேண்டுமென்பதை:

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக"

எனத் தெய்வத் தமிழ்ப் புலமைத் திருவள்ளுவ நாயனார் திருவாக்கா னறிக.

இது அஞ்ஞானத்தை நீக்கும்படி சொல்லியதாகலின் உலகர்க்குப் புத்திகூறல் என்னப்பட்டது. 72

## அன்பு நிலை

இருவரங்க மும்பொருந்தி யென்புருகி நோக்கிலீர்
உருவரங்க மாகிநின்ற வுண்மையொன்றை யோர்கிலீர்
கருவரங்க மாகிநின்ற கற்பனை கடந்துபின்
திரு*வரங்க மென்றுநீர் தெளிந்திருக்க வல்லிரே.

(பொ - ரை) ஓ இல்லறத்தார்களே! நீங்கள் புருஷன் பெண் சாதியாகிய இரண்டுபேரும் ஏகோபித்து ஒரே மனதாகி எலும்புக ளெல்லாம் கரையும்படியான அன்போடு சிவபெருமானைத் தரிசித்தீரில்லை. ஆகையால், நீங்கள் உண்மைப்பொருளை யறியாதவர்களானீர்கள் இனியேனும் நீங்கள் ஒன்றுபட்ட மனத்துடன் அன்பு பாராட்டுவீரானல் பிறப்பதற்குக் காரணமா யிருக்கின்ற கற்பனையைக் கடந்து பின் சிவபெருமானனவன் கிர்த்தஞ்செய்கின்ற இடம் இதுவேயாமென்று அவ்விடத்திலே யமர்ந்திருக்க வல்லவர்களாவீர்கள் எ - று.

இருவர் மனமும் ஒன்றுபடாம லிருந்தால் இல்லறம் செவ்வனே நடவா தென்பது கருத்து.

---

* அரங்கம் = நடிக்குமிடம்.

இருவர் மனமும் ஒன்றுபட வேண்டு மென்பதை:

"மருவியகாதன் மனையாளுந்தானு
மிருவராய்ப் பூண்டீர்ப்பினல்லால்—ஒருவரால்
இல்வாழ்க்கையென்னு மியல்புடையான்வான்சகடம்
செல்லாதுதெற்றிற்று கின்று" என்பதினு லறிக.

இது இல்லற தர்மத்தைக் கூறியதாகலின் அன்புநிலை என்னப் பட்டது. 73

## தன்னைத்தா னறியவேண்டு மெனல்

கருக்குழியி லாசையாய்க் காதலுற்று நிற்கிறீர்
குருக்கிடுக்கு மேழைகாள் குலாவுகின்ற பாவிகாள்
திருத்துருத்தி மெய்யினுற் சிவந்தவஞ் செழுத்தையும்
உருக்கழிக்கு மும்மையு முணர்ந்துணர்ந்து கொள்ளுமே.

(பொ - ரை) உலகத்தார்களே! நீங்கள் பெண்களிடத்தி லிருக்கின்ற உங்கள் பிறவிக் கேதுவாகிய கர்ப்பக்குழியென்னும் யோனி வாயினிடம் ஆசைவைத்து சதா அதுவே எண்ணமாக விருக்கின்றீர். ஆகையால், நீங்கள் அந்தச் சிறிய வழியில் நெருங்கி வருந்துவதையே மகிழ்ந்திருக்கின்றீரென விளங்குதலின் அறிவீனர்களாகிய பாவிகளே யாவீர்கள் இங்ஙனமிருத்தலால், நீங்கள் அதினிடத்தில் வைத்திருக்கின்ற ஆசையை யறவே யொழித்து உங்களுக்குத் துணைக் காரணமாக ஈஸ்வரன் மிகவும் கிருபையோடு கொடுத்திருக்கின்ற சோற்றுத் துருத்தியாகிய தேகத்தை மூலமாகக்கொண்டு அதின் கண் சோபான மார்க்கமாகப் பஞ்சாட்சரத்தையும் அடிக்கடி சகல தேகங்களிலும் புகுகின்ற உங்களுடைய உண்மை நிலையையும் உணர்ந்து கொள்ளக் கடவீர் எ - று.

உலகவாசிகள் கருக்குழிக் காசைப்பட்டு அதில் நெருக்குண்டு வருந்துகின்றூர்க ளென்பார், 'கருக்குழியிலாசையாய்க் காதலுற்று நிற்

கிறீர் குருக்கிடுக்கு மேழைகாள் குலாவுகின்ற பாவிகாள்' எனவும், தநுவாதிநான்கைக் கொண்டே சிவனஞ் செழுத்தையும் தன்னையு மறியவேண்டு மென்பார், 'திருத்தருத்தி மெய்பிறைற் சிவந்த வஞ் செழுத்தையும், உருக்கழிக்கு மும்மையு முணர்ந் துணர்ந்து கொள் ளுமே' எனவுங் கூறினர்.

தேகம் சோற்றுத் துருத்தி என்றதை:

"காகமோடுகழுகலகை நாய்நரிகள்சுற்று சோறிடுதுருத்தியைக்
காலிரண்டு நவவாசல்பெற்று வளர்காமவேணடனசாலையை
மோகவாசைமுறியிட்டபெட்டியை முமலமிகுத்தொழுகுகேணியை
மொய்த்துவெங்கிருமிதத்துரும்பியை முடங்கலார்கிடைசாக்கினை
மாகவிந்த்ரதநுமின்னையொத்திலக வேதமோதியகுலாலனார்
வனையவெய்யதடிகாரனை யமன்வந்தடிக்குமொருமட்கலத்
தேகமானபொயை மெய்யெனக்கருதியையவையமிசைவாடவோ
தெரிவதற்கரியபிரமமேயமல சிற்சுகோதயவிலாசமே"

என்பதினு லறிக.

தநுவாதி நான்கு என்றது = தநு, காணம், புவனம், போகம் என் பவற்றை.

இது பஞ்சாட்சர ரூபகாரணமாக சிவனை அறியவேண்டுமென்று கூறுதலின் தன்னைத்தா னறியவேண்டுமெனல் என்னப்பட்டது.

## சமயவாதிகள் செய்கை கூறல்

மண்ணிலே பிறக்கவும் வழக்கலா துரைக்கவும்
எண்ணிலாத கோடிதேவ ரென்னதுன்ன தென்னவும்
கண்ணிலே மணியிருக்கக் கண்மறைந்த வாறுபோல்
எண்ணில்கோடி தேவரு மிதின்கணுரி முப்பதே.

(பொ - ரை) சமயவாதிகளானோர் கண்களில் கண்மணியானவை யிருக்கவும் கண்கள் மறைந்த குருடர்களைப்போல உலகத்தின்கண் பிறக்கவும், நியாயமில்லாதவைகளை நியாயமென்று பேசவும், சிறந்த பதவியிலிருக்கின்ற தேவர்களை எங்கள் தேவர், உங்கள் தேவரென்று சொல்லி வழக்கிடவுமே துணிந்து தங்கள் கல்விசாதுரியத்தை வெளி விடுகின்றனர். அங்ஙனஞ் செய்கின்ற தர்க்கவாதிகளால் சேற்றிற் சேர்ந்த மலரும் சேருயவாறுபோல் இவர்களுடைய தர்க்கவாசகத் திற்குட்பட்ட தேவர்களுந் தங்கள் தங்கள் சிறப்பை யிறந்தவர்க ளாவார்கள் எ - று.

உலகத்தில் சமயவாதிகள் தங்கள் கல்விச்செருக்கால் பலபட சமயவாதஞ் செய்கின்றனர் என்பார், 'மண்ணிலேபிறக்கவும் வழக்கலா துரைக்கவும், எண்ணிலாத கோடிதேவ ரென்னதுன்ன தென்னவும், கண்ணிலே மணியிருக்கக் கண்மறைந்த வாறுபோல்' எனவும், இவர்கள் செய்யுந் தர்க்கத்தால் தேவர்களுந் தாழ்ச்சியடைய வேண்டியிருக் கின்றதென்பார், 'எண்ணில் கோடிதேவரு மிதின்கணூரிழப்பரே' எனவுங் கூறினர்.

சமயவாதிகள் தங்கள் தங்கள் தெய்வம் என்று வழக்கிடுவதை:

"சமயகோடிகளெலாந் தந்தெய்வமெந்தெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது" எனவும்.

"சமயவாதிகள் தத்தமதத்தையே
அமைவதாகவரற்றி மலைந்தனர்"

எனவும் கூறியிருப்பவற்று னறிக.

இது தர்க்கவாதிகளைப்பற்றிக் கூறுகின்றதாகலின் **சமயவாதி கள் செய்கைகூறல்** என்னப்பட்டது.

## தேகநிலை கூறல்

மண்கலங் கவிழ்ந்தபோது வைத்துவைத் தடுக்குவார்
வெங்கலங் கவிழ்ந்தபோது வேணுமென்று பேணுவார்
நங்கலங் கவிழ்ந்தபோது நாறுமென்று போடுவார்
எண்கலந்து நின்றமாய மென்னமாய மீசனே.

(பொ - ரை) உலகத்தில் வாழ்வோர் தாங்கள் சமைப்பதற் கென்றே வாங்கிவைத்திருக்கின்ற மட்கலமானது கவிழ்ந்து ஒட்டை யாயின் அது வேறெதற்காயினு முதவுமென்று ஓரிடத்தி லடுக்கிவைப் பார்கள்; வெங்கல முடையுமானல் அதை வெளியிடத்தில் வைக்கா மல் இது வேண்டியதாகுமென்றெண்ணி மறைவிடத்தில் பத்திரப் படுத்திவைப்பார்கள். ஆனல், நம்முடைய தேகம் இறந்துபட்டாலோ அது முடைநாற்றம் வீசுமென்று வெளியிடத்தில் கொண்டுபோய் போட்டு விடுவார்கள். அந்தோ! இவர்களுடைய சிந்தனை இம் முத் திறப் பொருள்களிலும் கலந்திருந்த விதத்தைப் பார்த்தீரோ எ - று.

உலகத்தில் மண்கல வெண்கலங்களுக்கிருக்கின்ற சிறப்பும் இத் தேகத்திற் கில்லையென்பார், 'மண்கலங் கவிழ்ந்தபோது வைத்துவைத் தடுக்குவார், வெண்கலங் கவிழ்ந்தபோது வேணுமென்று பேணு வார், நங்கலங் கவிழ்ந்தபோது நாறுமென்று போடுவார்' எனவும், இங் ஙனமாய தேக நிலையாமையை நோக்கிச் சிவபெருமானைச் சிந்திக்க வேண்டு மென்பார், 'எண்கலந்து நின்றமாய மென்னமாய மீசனே' எனவுங் கூறினர்.

தேக நிலையாதென்பதை:

"யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம்பெற்ற
யாக்கையா லாயபயன் கொள்க—யாக்கை
மலையாடு மஞ்சுபோற் றோன்றி மற்றாங்கே
நிலையாது நீத்து விடும்" என்பதினு லறிக.

இது தேகத்தினது அநித்தியத்தைக் கூறியதாகலின் தேகநிலை கூறல் என்னப்பட்டது.

76

## செல்வ முதலிய பற்றறுத்தல்

### வேறு

மிக்கசெல்வ நீ படைத்த விறகுமேவிப் பாவிகாள்
விறகுடன் கொளுத்திமேனி வெந்துபோவ தறிகிலீர்
மக்கள்பெண்டிர் சுற்றமென்று மாயைகாணு மிவையெலாம்
மறலிவந் தழைத்தபோது வந்துகூட லாகுமோ
ஒக்கவந்து மாதுடன் செறிந்திடத்தி லழகியே
ஒருவராகி யிருவராகி யிளமைபெற்ற வூரிலே
அக்கணிந்து கொன்றைசூடு மம்பலத்தி லாடுவார்
அஞ்செழுத்தை யோதிடி லனேகபாவ மகலுமே.

(பொ - ரை) மிகுந்த செல்வப்பொருளைப்பெற்று அதினால் கர்வித்திருக்கின்ற பாவிகளே! உங்களுடைய தேகம் இறந்துபட்டபின் அதைக் கட்டையுடன் சேர்த்துக் கொளுத்தி விடுவதை அறியீரோ? அங்ஙனமாவதை யறிந்திருந்தும் இவன் என் குமாரன், இவள் என் குமாரத்தி, இவள் என்மனைவி, இவர் என்னுடைய சுற்றத்தார் என்று சொல்லி அவர்கள்மீது ஆசை வைத்துத் திரிகின்றீர். இவை யாவும் மாய்கையே யாகும். இங்ஙன மிருக்கும் உங்களை எமபடார் வந்தழைத்துச் செல்லுவார்களானல், நீங்கள் அவர்களிடத்தில் சிறிது காலமானலும் விடை பெற்றுக்கொண்டு திரும்பிவந்து முன்னர் ஆசை வைத்திருந்த பிள்ளை முதலானோரிடத்தில் ஒரு வார்த்தையாடிப் போவதற்காகுமோ? ஆகாது. உங்களுடைய செல்வத்தினிலைமை இப்படி யிருப்பதால் இனி, அவ்வர்சையைவிட்டு இடது பாகத்தின்கண் பார்ப்பதா தேவியைவைத்து பரிபாகிகளுக்கு சிவமூர்த்தமொன்றேயாயும், அப்

பரிபாகமில்லார்க்குப் பார்வதி சமேதனுயுந் தரிசனந்தந்தாளுகின்ற ஞானபூமியிலே யிருந்துகொண்டு உருத்திராக்க மாலையையும், கொன்றைமாலையையும் தரித்துச் சிற்றம்பலத்தின்கண் ஆநந்தத் தாண்டவஞ் செய்தருள்பவருடைய பஞ்சாட்சரத்தைத் திரிகரண சுத்தியாய் தியானிப்பீரானல் உங்களுடைய ஆகந்துகமாகிய பாவங் கள் உங்களைவிட்டு நீங்கிவிடும் எ - று.

உலகமாக்களே! நீங்கள் செல்வத்தையும், பெண்டு பிள்ளைகளை யுமே பொருளாகக் கருதி சிவதியானத்தைக் கைவிட்டீர். ஆகையால், உங்களுடைய செல்வத்தாலும், பெண்டு பிள்ளைகளாலும, எமனு டைய கட்டளையை மறுப்பதற்காகுமோ? ஆகாது என்பது கருத்து.

செல்வத்தால் எமனேலே மறுக்கப்படாதென்பதை:

"கோடிபொன் னளிப்பனின்றே கோடிலோர் மாத்திரைக்குளென்
னூடியகிளைக்கோர் வார்த்தை யுரைத்தடைகுவ லென்றாலுந்
தேடியகாலதூதர் சிமிழ்த்தல்விட் டகல்வரோ கொல்
வாடியமருங்குனக்காய் மாண்பொருள் பயன்கண்டாயே" எனவும்.

பெண்டுபிள்ளைகள் சதமாகார் என்பதை:

"நவிலினிம்மனை மக்களுக்கொருதுணை
நாமலதிலை யென்றே
கவலையுற்றரன்றான் மறந்தனையுனைக்
காலனுர் கொடுபோயிற்
குவலயத்தடைந்திவரை நாடொறும்
புரந்திடுவையோ குறிக்குங்கால்
சவலைநெஞ்சமேசிவனலா துயிர்க்குயிர்
தானுமோர் துணையாமோ"

எனவும் கூறியிருப்பவற்று னறிக.

இது மேற்கூறிப்போந்த விஷயங்களால் செல்வ முதலிய பற்றறுத்தல் என்னப்பட்டது. 77

## இதுவுமது

மாடுகன்று செல்வமு மனைவிமைந்தர் மகிழவே
மாடமாளி கைப்புறத்தில் வாழுகின்ற நாளிலே
ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே
உடல்கிடந்த துயிர்கழன்ற வுண்மைகண்டு முணர்கிலீர்
பாடுகின்ற வும்பருக்கு ளாடுபாத முன்னியே
பழுதிலாத கர்மகூட்ட மிட்டவெங்கள் பரமனே
நீடுசெம்பொ னம்பலத்து ளாடுகொண்ட வப்பனே
நீலகண்ட காளகண்ட நித்யகல்வி யாணனே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நீங்கள், மாடு, கன்று, செல்வம், மனைவி, பிள்ளைகள் முதலிய பதார்த்தங்களால் மகிழ்ச்சி யடையப்பட்டு மாடமாளிகை, உப்பரிகைகளிருந்து வாழ்ந்து கொண்டிருக்கிற நாளிலே, எமதூதர்கள் விரைந்து வந்து தங்கள் கதாயுதத்தினல் திடீரென்று மோத, உடனே உடம்புகிடக்க உயிர்போயினமையை கண்டிருந்தும் உண்மையை விசாரித் தறிந்தீரில்லை. ஆகையால், நீங்கள், இனி அவ்வாசையை விட்டுச் சதா பாமாலை சூடுகின்ற தேவர்க ளுள்ளத்தின்கண் நடிக்கின்ற திருவடியை யுன்னி, எங்களுக்குக் கர்மங்களை யூட்டுவிக்கின்ற தலைவனே! எனவும், சிற்றம்பலத்தில் நடிக்கின்ற எங்களுக்குத் தந்தையே! எனவும், திருநீலகண்டனே! எனவும், நித்திய கலியாணனே! எனவும், துதி செய்வீராஞல் நீங்கள் பரம சாம்ராஜ்யத்தை யடைவீர் எ - று.

உலகத்தில் ஆன்மகோடிகள் மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை இம்மூன்றும் பெரும்பாலும் உண்டென்பார், 'மாடு கன்று

செல்வமு மனைவி மைந்தர் மகிழவே மாடமாளிகைப் புறத்தில் வாழு கின்ற நாளிலே' எனவும், அங்ஙனமவா மேலீட்டாலிருக்கின்ற இவர் எமனுக் கென்செய்வா ரென்பார். 'ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே உடல்கிடந் துயிர்கழன்ற வுண்மைகண்டு முணர்கிலீர்' என வும், அங்ஙனமா யவாவைவிட்டு இறைவனை உள்ளன்போடு துதி செய்யவேண்டு மென்பார், 'பாடுகின்ற வும்பருக்கு ளாடுபாத முன் னியே பழுதிலாத கர்மகூட்ட மிட்டவெங்கள் பரமனே, நீடுசெம்பொ னம்பலத்து ளாடுகொண்ட வப்பனே நீலகண்ட காளகண்ட நித்திய கலியாணனே' எனவுங் கூறினர்.

"தண்டமிழலங்கல் தொடுப்பவரைச் சோதியாதது பாஞ்சோதி"

எனக் கூறியபடியே இறைவன் உள்ளன்போடு தமிழ்ப்பாமாலை சூட்டு கின்றவர்களைச் சோதிக்காமலே திருவருள் கொடுக்கின்று ஞகையால் தேவர்களும் அங்ஙனமே செய்வோர் என்பார், 'பாடுகின்ற வும்பருக்கு ளாடு பாதமுன்னி' எனக் கூறினர்.

இதுவும் மேற்கூறிய விஷயத்தால் செல்வமுதலிய பற்றறுத் தல் என்னப்பட்டது. 78

## யோக நிலை

கானமற்ற காட்டகத்தில் வெந்தெழுந்த நீறுபோல்
ஞானமுற்ற நெஞ்சகத்தில் வல்லதேது மில்லையே
ஊனமற்ற சோதியோ டுணர்வுசேர்ந் தடக்கினால்
தேனகத்தி னூறல்போல் தெளிந்ததே சிவாயமே.

(பொ - ரை) மரங்கள், செடிகளில்லா திருக்கின்ற காட்டின்கண் திடீரென்று சாம்பலுண்டாகும்படி வெந்தெழுந்ததுபோல் ஞானமார்க் கத்தைச் செவ்வனே யுணர்ந்த ஞானிகளது மனத்தின் ஒருபொரு ளும் நிலைத்திராது. ஆகையால், அங்ஙனமாய் ஞானமார்க்கத்தை

விரும்பினல் சதாகெடுதியென்பது நேரிடாதிருக்கின்ற சோதியுடன் உங்களுடைய உணர்ச்சியைச் சேர்த்து அடக்குவீராஞல் தேனின் ஊறல்போல் அந்த ஞானமானது தெளிந்து காணும் எ - று.

மரஞ் செடிகளில்லாத காட்டில் தீயெழாவாறுபோல், ஞானிகள் மனத்தில் ஒரு தீங்கும் வையார் என்பார், ‘கானமற்ற காட்டகத்தில் வெந்தெழுந்த நீறுபோல், ஞானமுற்ற நெஞ்சகத்தில் வல்லதேது மில்லையே’ எனவும், அங்ஙனமே யாவதற்கு விரும்புவோர் மூலாதாரசோதியில் தம்முணர்ச்சியை யடக்கினல் யோகத்தினந்தமாகிய ஞானத்தையடையக் கூடுமென்பார், ‘ஊனமற்ற சோதியோடுணர்வு சேர்த்தடக்கினல், தேனகத்தினூறல்போல் தெளிந்ததேசிவாயமே’ எனவுங் கூறினர்.

இது தேஜஸில் கலக்கின்ற மூலயோகத்தைக் கூறியதாகலின் யோகநிலை என்னப்பட்டது. 79

## இதுவுமது

பருகியோடி யும்முளே பறந்துவந்த வெளிதனை
நிரவியே நினைந்துபார்க்கில் நின்மலம தாகுமே
உருகியோடி யெங்குமாய மாயசோதி தன்னுளே
கருதடா வுனக்குநல்ல காரணம தாகுமே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நீங்கள் உம்முடைய இருதயத்தின்கண் எங்கு நிரைந்து வந்திருக்கின்ற ஆகாயத்தை வெளிவிட்டிடாமல் உள்ளிடத்தின் கண்ணே நிறுத்தி அந்தந்த இடத்தினின்று தரிசிப்பீராஞல் நீங்கள் சுத்தசோதி சொரூபத்தை யடைவீர். அங்ஙனம் சிரசளவுமுருகி யோடாநின்ற தேஜோரூபத்தைச் சிந்தனை செய்வீராஞல் உயர்ந்தகாரண சொரூபத்தை யடைவீர் எ - று.

இறைவன் சர்வஜீவர்களிலுங் கலந்திருக்கின்ருனென்பார், ‘பருகியோடி யும்முளே பரந்துவந்த வெளிதனை’ எனவும், அங்ங

னம் கலந்திருக்கு மிறை வீணே விட்டு விடப்படாதென்பார், 'திறு வியே நினைந்துபார்க்கி னின்மலமதாகுமே' எனவும், அங்ஙனமடக் கிச் சிந்திப்பீரானல் காரணரூபத்தை யடைவீரென்பார், 'உருகியோடி யெங்குமா யோடுசோதி தன்னுளே, கருதிடீ ருமக்குநல்ல காரணம தாகுமே' எனவுங் கூறினர்.

இது ஆறுதாரதரிசனங் கூறியதாகையால் யோகநிலை என்னப் பட்டது. 80

## இதுவுமது

சோதிபாதி யாகிநின்று சுத்தமும் பலித்துவந்து
போதியாத போதகத்தை யோதுகின்ற பூரண
வீதியாகவோடிவந்து விண்ணடியி னூடுபோய்
ஆதிநாத னாதனென் றனந்தகால முள்ளதே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நீங்கள் யோகமார்க்கத்திற் பழ கிக்கொண்டு வருவீரானல், அவ் யோகத்தின்கண் தேஜோமயமானது உள்ளிடத்தில் மூன்று ஸ்தானங்களுக்கு மட்டுமே வெளிப்படை யாய்த் தோன்றி யாவராலும் போதிக்கக்கூடாத மெய்ஞ்ஞான உப தேசத்தை உபதேசிக்கக்கூடிய பூரணவீதியாக விரைந்துவந்து ஆகா யத்தினடியே ஊடுருவிப்போய் நானே ஆதிநாயகனென்று யாவரும் உணர்ந்துகொள்ளும்படி சொல்லி அநேககால மிருப்பது மாகும்.

இறைவன் ஒருபாகத்தின்கண் தனது சத்தியை யுடைத்தா யிருக்கின்றனென்பார், 'சோதிபாதி யாகிநின்று' எனவும், அவனே பூரணவீதியாக வெளிவந்து உபதேசிப்பானென்பார், 'சுத்தமும் அநந்தகால முள்ளதே' எனவுங் கூறினர்.

இதுவும் யோகசோபானத்தையே கூறுதலின் யோகநிலை என் னப்பட்டது. 81

## தத்துவம்

இறைவனு லெடுத்தமாடத் தில்லையம் பலத்திலே
அறிவின லடுத்தகாய மஞ்சின லமைந்ததே
கருவுநாத முண்டுபோய் கழன்றவாச லொன்பதும்
ஒருவரா யொருவர்கோடி யுள்ளுளே யமர்ந்ததே.

(பொ - ரை) யாவருக்குந் தலைவனான சிவபெருமானால் உண்டாக்கப்பட்ட தில்லையென்னும் சிதம்பரத்தின்கண் தாய் தகப்பன்மாருடைய அறிவினாலுண்டான இந்த உடம்பானது பஞ்சபூதங்களால் உண்டானதேயாகும். மேலே சொன்னபடி உண்டானது போலவே விந்துவும், சுக்கிலமும் கருப்பையிற் புகுந்து தேகதத்துவங்களெல்லாம் நிரம்பி ரூபத்தோடு வெளிப்பட்டுப் பின் நவத்துவாரங்களும் ஒவ்வொன்றாக ஒடுங்கியவைகளே யாகும் எ - று.

தாய்தகப்பன்மார் அறிவு சிதறுண்டதே நாம் பிறந்ததற்குக் காரணமென்பார், 'அறிவின லடுத்தகாய மஞ்சின லமைந்ததே' எனக் கூறினர்.

இது தத்துவங்களின் தோற்றநாசங் கூறியதாகலின் தத்துவம் என்னப்பட்டது.
82

## யோக நிலை

நெஞ்சிலே யிருந்திருந்து நெருங்கியோடும் வாயுவை
அன்பின விருந்துநீ ரருகிருத்த வல்லிரேல்
அன்பர்கோயில் காணலா மகலுமெண் டிசைக்குளே
தும்பியோடி யோடியே சொல்லடா சுவாமியே.

(பொ - ரை) மூலாதாரத்தின்கண்ணுதித்து இருதயஸ்தானவழியாக சுழிமுனையாக முட்டியிருந்து கீழும் மேலும் வேறு தத்துவங்க

ளால் நெருக்குண்டு ஓடிக்கொண்டே யிருக்கின்ற பிராணவாயுவை அதை லயப்படுத்தவேண்டிய வழியாகிய அன்பு என்று சொல்லப்படு கின்ற ஒரு வழியிலிருந்துகொண்டு அதை ஓரிடத்தில் இங்கு மங்கும் ஓடாதபடி நிறுத்த வல்லமை யுடையீரானல் அடியார்களால் கண்டு தொழப்படுகின்ற சிவக்ஷேத்திரத்தை அகன்ற உள் ளஷ்டதிக்குகளி லும் ஓடியோடிப்போய் கண்டு தரிசிப்பதற்காகும். இது ஆகும், ஆகாது என்று ஓ கடவுளே! நீயே சொல்லவேண்டும். அங்ஙனம் நீயே சொன்னல் உலகத்தார் நம்புவார்கள் எ - று.

இருதய ஸ்தானமாகிய அநாகதத்திலிருந்தே வாயுத்தாரணை செய்யவேண்டுமென்பார், 'நெஞ்சிலே யிருந்திருந்து நெருங்கியோடும் வாயுவை, அன்பினு லிருந்துநீ ரருகிருத்த வல்லிரேல்' எனவும், அடி யார்களால் சூழப்பட்டிருக்கின்ற கோயிலைக் கண்டு தரிசிப்பதற்கு அதுவே தக்கவழி யென்பார், 'அன்பர்கோயில் காணலா மகலுமெண் டிசைக்குளே, தம்பியோடி யோடியே சொல்லடா சுவாமியே' என வுங் கூறினர்.

இது பிராணயாமவிதியைக் கூறியதாகலின் யோகநிலை என்னப் பட்டது.

83

## இதுவுமது

தில்லையை வணங்கிநின்ற தெண்டனிட்ட வாயுவே
எல்லையைக் கடந்துநின்ற ஏகபோக மாய்கையே
எல்லையைக் கடந்துநின்ற சொர்க்கலோக வெளியிலே
வெள்ளையுஞ் சிவப்புமாகி மெய்கலந்து நின்றதே.

(பொ - ரை) மூலாதாரத்திலிருந்து உண்டாய் மேலாதாரத்தை யடைந்து சுழிமுனை ஸ்தானமாகிய தில்லை யென்னும் பதியைப் பிர தக்ஷணஞ்செய்து நமஸ்கரித்த பிராணவாயுவே அளவைக்கடந்தும்

காரியப்படுகின்ற மாயையாகவும், சொர்க்கலோக மென்னும் மணி பூரகமாக வெளியில் வெள்ளையுஞ் சிவப்புங் கலந்ததாய் ஒளிவடிவைக் காட்டிச் சதா தேகத்தில் கலந்திருப்பதுமாகும் எ - று.

அவ்வாயுவைப் பதனம் பண்ணிச் செய்து முடிப்பதே யோக மாகும் என்பது கருத்து.

இதுவும் மேல் பிராணவாயுவின் செய்கையைக் கூறியதாகை யால் யோகநிலை என்னப்பட்டது. 84

## பிறவி நிலை

உடம்புயி ரெடுத்ததோ வுயிருடம் பெடுத்ததோ
உடம்புயி ரெடுத்தபோ துருவமேது செப்புவீர்
உடம்புயி ரெடுத்தபோ துயிரிறப்ப தில்லையே
உடம்புமெய் மறந்துகண் டுணர்ந்துஞான மோதுமே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நீங்கள் நான் கேட்கின்ற கேள்விகளுக்கு நன்றாயோசித்து விடை தரல்வேண்டும். அவையாவன:— உங்கள் உடம்பே தன்னைக் காரியப்படுத்துதற்கு ஒரு உயிரைத்தேடிப் பெற்றுக்கொண்டதோ? அன்றி, உயிரே தன்னுடைய பூர்வமலத்தை நீக்கிக் கொள்ளுதற்குத் தானிருந்து வாழும்படி ஒரு உடம்பைத் தேடிக்கொண்டதோ? என்கிற இரண்டு கேள்விகளே ஒருக்கால் உடம்பே உயிரைத் தன்னிடத்தில் பெற்றுக்கொண்டதென்று சொன்னால் உடம்புக்கு ரூபமில்லாம லிருக்கவேண்டும். ஏனெனில், ரூபத்தோடு கூடிய பொருள் ரூபமில்லாத பொருளினுள் நுழைவ தெங்ஙனம்? அன்றி, உடம்பு இறந்துபடுவதாகவும், உயிர் அவ்விறத்தலில்லாததாகவு மிருக்கின்ற தாகையால், இவற்றின் விரிவை நீங்கள் எப்படி மறந்து ஒரேநிலையில் நின்று ஞானமார்க்கத்தைக்கொண் டுணர்ந்து சொல்லுவீரா எ - று.

உடம்போ உயிரை எடுத்ததென்னில்: உயிர் உடம்புக்குள் வியாபித்து நிற்பதுபோல் உடம்பு உயிருக்குள் நிற்கவேண்டும். அங்ஙனமில்லாமையால் அது பொருந்தாது.

உயிரே உடம்பை எடுத்ததென்னில்: உடம்பு தாயின் கர்ப்பாசயத்தில் அமைந்திராதபோது அவ்வுயிர் உடம்பை எடுப்பதற்காவதெங்ஙனம்? ஆகையால், இதுவும் பொருந்தாது.

**இனி, உடம்பு உயிரையும்; உயிர் உடம்பையும் எடுத்ததென்றது:** உடம்பானது தனக்கு ஒரு உயிரை வேண்டித் தாயின் கர்ப்பத்திலமைந்து ஆறுமாத நிறைந்த ரூபத்தோடிருக்குங்கால் உயிரும் தனக்கொரு உடம்பைவேண்டி ஆராய்ந்து பார்த்துக்கொண்டு வருங்காலத்தில் உடம்பைக் கண்டு அதினுழைந்து தன்னுடைய வினைக்குத் தக்க ஆண், பெண் ரூபத்தை யடைகின்றதென்பது.

இனி, சிலர் உயிரே உடம்பை எடுக்கின்றதேயொழிய இரண்டுக்குஞ் சம்பந்தம் வேண்டியதில்லை எனக் கூறுகின்றனர். அங்ஙனமாயின் உடம்புகளெல்லாம் ஒவ்வொரு தாயினிடமாக ஒவ்வொன்றாக வெளிப்பட்டு உயிரையடையாம லிருக்க ஏதோ ஒரு காலத்தில் ஒவ்வொரு உயிராக ஒவ்வொரு உடம்பை எடுத்துக்கொள்ள மற்றைய உடம்புகளெல்லாம் வீணாகவே இருக்கவேண்டிவரும். ஆகையால், இது பொருந்தாது.

இங்ஙனங் கூறுவானேன்? உயிரே உடம்பின் ஆரம்பத்திலேயே தாயின் கர்ப்பாசயத்திலிருந்து அவ்வுடம்பைத் தனக்காக உண்டு பண்ணிக் கொள்ளுகின்றதென்றாலோ வெனின் தாயின் கர்ப்பத்திலிருக்கும் உடம்பு தன்னுடைய ஏழாவது மாசத்திலேயே உயிரை யடைகின்றதேயொழிய முதல் மாதத்தினின்றும் அடையவில்லை. அன்றி, வேறொரு தேகத்திலிருந்து வெளிப்பட்ட இவ்வுயிர் தாயின் கர்ப்பத்தில் பத்துமாதமு மிருந்தே ஒரு தேகத்தை உண்டாக்கிக்

கொள்ளவேண்டு மென்னும் நியதி யுண்டோ? இல்லை. ஆகையால், அதுவும் பொருந்ாது இங்ஙனமிருத்தலால் உடம்பு உயிரையும், உயிர் உடம்பையும் எடுத்த தென்பதே சாதிக்கப்பட்டது இது இங்ஙனங் கூறிய விஷயங்களால் பிறவியில்லை என்னப்பட்டது. 85

### அக்ஷர நிலை

அவ்வெனு மெழுத்தினு லகண்டமேழு மாகினுய்
உவ்வெனு மெழுத்தினு லுருத்தரித்து நின்றனை
மவ்வெனு மெழுத்தினல் மயங்கினுர்கள் வையகம்
அவ்வுமுவ்வு மவ்வுமா யமர்ந்ததே சிவாயமே.

(பொ - ரை) அகாரமென்று சொல்லப்படுகின்ற ஒரு பீஜத்தினுலே எழு லோகங்களு மாயினை; உகாரமென்று சொல்லப்படுகின்ற ஒரு பீஜத்தினுலே சகல நிஷ்கள ரூபந்தாங்கினை; மகாரமென்று சொல்லப்படுகின்ற ஒரு பீஜத்தினுல் வையகத்திலுள்ள ஜனங்களை மயக்கினை. ஆகையால், சிவயவசி என்னும் பஞ்சாட்சரப் பொருளானது பிரணவத்தின்கண்ணே யமர்ந்திருக்கின்றது எ- று.

அகாரம், உகாரம், மகாரம் ஆகிய இம்மூன்றன் சேர்க்கையே பிரணவமாதலால் பஞ்சாட்சரப்பொருள் பிரணவத்தின் கண்ணே யமர்ந்திருக்கின்றதென்றது எழுதப்பட்டது. இதினை:

"பகவதி கரவணை மிசைதுயில் பயிலு
மிகலறு குமரனை யினிதருள் புரிக
அகாரமு முகாரமு மகாரமு மாகித்
திகழுறு பிரணவ மெழுசிறு களிறே" என்பதினு லறிக.

இது பீஜங்களை விளக்கிக் காட்டியதாகையால் அக்ஷரநிலை என்னப்பட்டது 86

## கடவுள் நிலை

என்னவென்று சொல்லுவே னிலக்கண மிலாததை
பன்னுகின்ற செந்தமிழ்ப் பதங்கடந்த பண்பென
மின்னகத்தில் மின்னொடுங்கி மின்னதான வாறுபோல்
என்னகத்து வீசனும் யானுமல்ல தில்லையே.

(பொ - ரை) உலகத்தின்கண் கவிவாணர்களால் சொல்லப்படுகின்ற இயற்றமிழிலுள்ள பிரயோகப் பதங்களுக்குக் கூறுவதுபோன்ற இலக்கணம் தன்னைக்குறித்துக் கூறப்படாததும் ஆகாயத்தி லுண்டாகின்ற மின்னலானது தன்னிடத்திலே தாளொடுங்கி மீண்டும் மின்னலாய் வெளிப்படுவதுபோல என்னுடைய இருதயத்தின் கண்ணும் இறைவன் வந்துசேர்ந்து எனக்கு வெளிப்பட்டு மீண்டும் அவ்விடத்தின்கண்ணே மறைந்திருக்கின்றான். அங்ஙனம் அவன் கலந்ததன் பின் என்னிருதயத்தில் அவனும், நானும் அமர்ந்திருந்த ஒரு ஐக்கிய தன்மையை நான் என்னவென்று எடுத்துச் சொல்லுவேன் எ - று.

இறைவனுக்கு ஒரு கற்பனையுஞ் சொல்லுதற் கிடமில்லை யென்பார், 'இலக்கண மிலாததை' எனவும் செந்தமிழ்க் கிலக்கணங் கூறுவதுபோல் இறைவர்க்கில்லை யென்பார், 'பன்னுகின்ற செந்தமிழ்ப் பதங்கடந்த பண்பென' எனவும், மின்னலில் மின்னல் ஒடுங்குவது போல் இருதயத்தில் இறைவன் கலக்கின்றா னென்பார், 'மின்னகத்தில் மின்னொடுங்கி மின்னதான வாறுபோல், என்னகத்து வீசனும் யானுமல்ல தில்லையே' எனவுங் கூறினார்.

ஈசனும் யானுமல்லதில்லையென்பது:—சிவசீவ ஐக்கியபதத்தில் மனமுதலிய அந்தக்கரணங்கள் இறந்துபட்டன வென்பதை.

இது சிவசீவ கலப்பைச் சொல்லிய தாகையால் கடவுள் நிலை என்னப்பட்டது.

87

## சீவனிலை

ஆலவித்தி லாலொடுங்கி யாலமான வாறுபோல்
வேறுவித்து மின்றியே விளைந்துபோக மெய்திடீர்
ஆறுவித்தை யோர்கிலீ ரறிவிலாத மாந்தரே
பாருமித்தை யும்முளே பரப்பிரம மாவிரே.

(பொ - ரை) ஆலமரத்தின் விதையின்கண்ணே மரமானது ஒடுங்கி மீண்டும் ஆலமரமானவாறுபோல வேறுவித மில்லாமல் அந்தச் சிவ போகத்திலேயே யிருந்து அதை அநுபவிக்கமாட்டீர்; அன்றி நல்லவழியையும் உணரமாட்டீர். ஆகையால், நீங்கள் அறிவில்லாதவர்களே யாவீர்கள்; இனியேனும் நீங்கள் மாயையில் வந்து மீண்டும் மாயையிலேயே ஒடுங்கிவருவீர் என்பதை உங்களுக்குள்ளே ஆராய்ந்து பார்ப்பீராஞல் நீங்களும் அந்த மாயையி னின்று நீங்கிப் பரப்பிரம மாவீர்கள் எ - று.

ஆல விதையிலேயே யொடுங்கிய மரம் மீண்டும் ஆலமரமானது போலவே மாயையி லொடுங்கிய நீங்கள் மீண்டும் மாயையிலேயே பிறக்க வேண்டுமென்பது கருத்து.

இது சீவநிலையைக் கூறிய தாகலின் அப்பே ரிடப்பட்டது. 88

## பிரணவ உண்மை

அவ்வுதித்த மந்திர மகாரமாய் உகாரமாய்
எவ்வெழுத் தறிந்தவர்க் கெழுபிறப்ப திங்கிலை
சவ்வுதித்த மந்திரத்தைத் தற்பரத் திருத்திஞல்
அவ்வுமுவ்வு மவ்வுமா யமர்ந்ததே சிவாயமே.

(பொ - ரை) அகார பீஜமானது உண்டானதற்கேதுவான பிரணவமானது அகாரம் தனியே வெளிப்பட்டபோது மகாரமாகவும்,

உகாரமாகவும் நின்றது. அங்ஙனமாய தன்மையையுணர்ந்த பெரியோர் களுக்கு இவ்வுலகின்கண் சொல்லப்பட்டு வருகின்ற எழு பிறவிக ளில்லை. சகாரமானது உதிப்பதற் கேதுவான அகார பீஜத்தை சுழி முனை ஸ்தானத்தில் நிறுத்தினால் அவர்கள் பிரணவ தேகத்தைப் பெற் றுச்சிவாயவென் றமர்ந்திருப்பார்கள் எ - று.

இது பிரணவ உண்மையை விரித்ததாகலின் **பிரணவ உண்மை** என்னப்பட்டது. 89

## ஆறுதாரம்

நவ்விரண்டு காலதாய் நவின்றமவ் வயிறதாய்
சிவ்விரண்டு தோளதாய் சிறந்தவவ்வு வாயதாய்
யவ்விரண்டு கண்ணதா யமர்ந்துநின்ற நேர்மையிற்
செவ்வையொத்து நின்றதே சிவாயமஞ் செழுத்துமே.

(பொ - ரை) உலகமாக்களே! சிவவம்சமாய் பஞ்சாட்சரங்களும் ஆறுதாரமாய் நிற்கின்ற மார்க்கத்தைச் சொல்லுகின்றேன் கேட்பீ ராக. நகாரமானது இரண்டு கால்களின் முடிவில் இலிங்கஸ்தானத்திற் கும் கொப்பூழுக்கு மத்தியி லுள்ளதாகவும், மகாரமானது கொப் பூழ்ஸ்தனமாகிய வயிற்றி லுள்ளதாகவும், சிகாரமானது இரண்டுதோள் களுக்கும் மத்தியிலுள்ளதாகிய இருதயத்தி லுள்ளதாகவும், வகார மானது வாயினந்தமாகிய கண்டஸ்தானத்தி லுள்ளதாகவும், யகார மானது இரண்டு கண்களுக்கும் மத்தியிலுள்ள சுழிமுனை ஸ்தானத்தி லுள்ளதாகவும் இருந்துகொண் டிருக்கின்ற செம்மையை நீ ரறியீர் எ - று.

ஆறுதாரம் என்று சொல்லி ஐந்தையே வெளிப்படுத்தி ஒன்றை வெளிப்படுத்தாமையானது மூலாதாரத்தைத் தனியே சொல்லுதற் கென வறிக.

இவற்றின் விரிவை:—

**மூலாதாரம்:**—இலிங்கஸ்தானத்திற்கும், மலத்துவாரத்திற்கும் நடுவே முக்கோண வடிவாகவும்; சுற்றிலும் நான்கிதழ்களும்; இதழ்களில் எழுத்துமுடையதாகவும், மத்தியில் பிரணவம் நிற்பதாகவும், கணேசர், வல்லபை அமர்ந்திருக்கும் வீடாகவு மிருக்கும்

**சுவாதிஷ்டானம்:**—இலிங்கஸ்தானத்திற்கும், உந்திஸ்தானத்திற்கும் மத்தியில் நாற்கோண வடிவாயும், ஆறிதழ்களும்; இதழ்களிலாறெழுத்து முடையதாய் பீஜம் நகாரமாயும், பிரமனும், சரஸ்வதியும் வாழும் வீடாயு மிருக்கும்.

**மணிபூரகம்:**—உந்திஸ்தானத்தில் பிறைக்கோணமாயும், பத்திதழ்களும், இதழ்களில் எழுத்துமுடையதாயும், பீஜம் மகாரமாயும், விஷ்ணுவும், இலட்சுமியும் வாழுமிடமாயு மிருக்கும்.

**அநாகதம்:**—இருதயஸ்தானத்தில் முக்கோணமாயும், பன்னிரண் டிதழ்களும்; இதழ்களில் எழுத்துமுடையதாயும், பீஜம் சிகாரமாயும், உருத்திரன், உருத்திரி வாழுமிடமாயு மிருக்கும்.

**விசுத்தி:**—கண்டஸ்தானத்தில் அறுகோணமாயும், பதினாறிதழ்களும்; இதழ்களில் எழுத்துமுடையதாயும், பீஜம் வகாரமாயும், மகேசன், மகேஸ்வரி வாழுமிடமாயு மிருக்கும்.

**ஆஞ்ஞை:**—சுழிமுனை ஸ்தானத்தில் வளைக்கோணமாயும், மூன்றிதழ்களும்; இதழ்களில் எழுத்துமுடையதாயும், பீஜம் யகாரமாயும், சதாசிவன், மனோன்மணி வாழுமிடமாயு மிருக்கும்.

இவற்றை நன்கு குரு முகாந்தரத்தால் விசாரித்தறிந்து இம்முறைப்படி யோகஞ் செய்வோர்க்குக் காயம்வலுத்து ஞான முதிர்ச்சியுண்டாய் மகா யோகஞானபரர்களாகச் செய்யக்கூடியது இவ்வாறுதாரமுறையென வறிக.

இது இங்ஙனம் ஆறு வீடுகளையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கியதாகலின் ஆறாதாரம் என்னப்பட்டது. 90

## நாதநிலை

இரண்டுமொன்று மூலமா யியங்குசக்க ரத்துளே
சுருண்டுமூன்று வளையமாய் சுணங்குபோற் கிடந்ததீ
முரண்டெழுந்த சங்கிஞைசை மூலநாடி யூடுபோய்
அரங்கன்பட்ட ணத்திலே யமர்ந்ததே சிவாயமே.

(பொ - ரை) முக்கோணரூபமாக மூலாதாரத்தின்கண் விளங்கிக்கொண் டிருக்கின்ற ஒரு சக்கரத்தில் மூன்று வளையம்போற் சுருண்டு கிடந்த மூலாக்கினியிலுண்டான சங்கத்தொனியானது வீணா தண்டின்வழியாக (அன்று சாவழியாகப்) போய் நடராஜன் பட்டணமாகிய சுழிமுனை ஸ்தானத்தில் அவனடிநிழலி லமர்ந்தது எ - று.

நாத தத்துவமானது சிவ தத்துவத்தின் கீழ்ப்பட்டதென்பார், 'முரண்டெழுந்த சங்கிஞைசை மூலநாடி யூடுபோய், அரங்கன்பட்டணத்திலே யமர்ந்ததே சிவாயமே' எனக் கூறினர்.

நாத தத்துவத்தி னொடுக்கத்தை கூறியதாகையால் நாத நிலை என்னப்பட்டது. 91

## கடவுளின் வியாபகம்

கடலிலே திரியுமாமை கரையிலேறி முட்டையிட்டுக்
கடலிலே திரிந்தபோது ரூபமான வாறுபோல்
மடலுளே யிருக்குமெங்கள் மணியரங்க சோதியை
உடலுளே நினைத்துநல்ல வுண்மையான துண்மையே.

(பொ - ரை) கடலுக்குள் ஆகாரத்தின்பொருட்டு அங்கு மிங்குந் திரிந்துகொண் டிருக்கின்ற ஆமையானது சூல் கொண்டபின் கரையிலேறி முட்டையிட்டு மீண்டும் முன்போலவே கடலினிடந்திரிந்த போது முன்னிட்ட முட்டையின்கண் குஞ்சுண்டானதுபோல் சர்வவிடங்களிலும் வியாபித்திருக்கின்ற எங்கள் நடராஜக் கடவுளை இருதயத்தின்கண் நினைந்து சுத்தமான அநாதிரூபத்தைப் பெற்றுக் கொண்ட தன்மையே யாகும் எ - று.

ஆமை கரையிலேறி முட்டையிட்டுக் கடலில்திரிந்து தனது சங்கற்ப மாத்திரத்தால் முட்டையினின்றும் குஞ்சுண்டாக்கியது போல, இறைவனும் அவனை நினைந்திருந்த என்னைத் தனது சங்கற்ப மாத்திரத்தால் சிவரூபமாக்கினான் என்பது கருத்து.

சிவனுக்கு அநாதியாயிருந்தது சிவரூபம் என்றவை:

"அநாதி சிவரூப மாகிய வான்மா
தனாதி மலத்தால் தடைப்பட்டு நின்றது
தனாதி மலமுந் தடையற்ற போதே
அநாதி சிவரூப மாகிய வாறே." ।என்பதினா லறிக.

இது சேணிடை வியாபகமாயிருக்கின்ற இறைவன் உள்ளத்தில் நினைத்த எனக்கும் அருள்செய்தானன்றோ எனக் கூறியதாகலின் கடவுளின் வியாபகம் என்னப்பட்டது. 92

## பிரணவம்

மூன்றுமண் டலத்தினு முட்டிநின்ற தூணிலும்
நான்றபாம்பின் வாயிலும் நவின்றெழுந்த வட்சரம்
ஈன்றதாயு மப்பனு மெடுத்துரைத்த மந்திரம்
தோன்றுமோ ரெழுத்துளே சொல்லவெங்கு மில்லையே.

(பொ - ரை) சோம, சூரியாக்கினி மண்டலங்களிலும், நடுவே உண்டாகின்ற கம்பத்திலும், குண்டலிப் பாம்பின் வாயிலுமாக சொல்லப்பட்டு யோகிகளுக்கே வெளிப்பட்ட அவ்வட்சரமானது நம்மையெல்லாம் பெற்றெடுத்த தாயுந் தந்தையுமாகிய சதாசிவனும், மனோன்மணியுமே ஒருமித்துச் சொல்லப்பட்ட மந்திரமாகும். ஆனால், அம்மந்திரமானது பிரணவமாகிய ஒரு எழுத்திலுண்டானதே யாகும். ஆயின், அவ்வெழுத்தை யெடுத்து வாய்விட்டு வசனிப்பதற்கு யாவராலும் முடியாது எ - று.

மூலாதாரத்தின் பிரணவத்தினின்றும் உண்டான அவ் வட்சரம் மேலே சொல்லப்பட்ட இடங்களிலெல்லாம் பேசக்கூடியதென்பார், 'மூன்றுமண்ட லத்தினு முட்டிநின்ற தூணிலும், நான்றபாம்பின் வாயிலும் நவின்றெழுந்த வட்சரம்' எனவும், அதை சிவனுஞ் சத்தியுமே திருவருள் செய்தார்களென்பார், 'ஈன்ற தாயுமப்பனுமெடுத்துரைத்த மந்திரம்' எனவும், இதுமௌனிகளாலே யறியப்படுவதும், மௌனாட்சரமுமாகு மென்பார், 'தோன்றுமோ ரெழுத்துளே சொல்லவெங்கு மில்லையே' எனவுங் கூறினர்.

இது மௌனாட்சரத்தின் தாயகஸ்தானத்தைக் கூறியதாகையால் **பிரணவம்** என்னப் பட்டது.

93

## இதுவுமது

மூன்றுமூன்று மூன்றுமே மூவர்தேவர் தேடிடு
மூன்றுமஞ் செழுத்துமாய் முழங்குமவ் வெழுத்துளே
ஈன்றதாயு மப்பனு மியங்குகின்ற நாதமும்
தோன்று மண்டலத்திலே சொல்லவெங்கு மில்லையே.

(பொ - ரை) மூன்று பீஜங்களும் ஒன்றாய்ச்சேர்ந்து ஒரே பீஜமாய் மகா சிறந்ததாயிருப்பதும், திரிமூர்த்திகளாலும் தேடப்பட்டதும்,

பஞ்சாட்சரங்கள் தோன்றுவதற்குத் தாயகமானதும், சிவசத்திக ளும், நாததத்துவமும் உண்டாவதற் கிடமானதுமாகிய (பிரணவமே உயர்ந்த பீஜமாகும்) ஆனல், அதின் மார்க்கத்தை யெடுத்துச் சொல் லுவோர் ஒருவருமில்லை எ - று.

இதுவும் மேல்விஷயமே யாசையால் இதற்கும் அப்பேரிடப் பட்டது. 94

## யோகம்

சோருகின்ற பூதம்போற் சுணங்குபோற் கிடந்தநீர்
நாறுகின்ற கும்பியி னயங்கெழுந்த மூடரே
சீறுகின்ற வைவரைச் சிணுக்கறுக்க வல்லிரேல்
ஆறுகோடி வேணியா ராறிலொன்றி லாவிரே.

(பொ - ரை) சோர்வடையும் பூதபரிணமம்போலவும், படுத்துறங் கும் நாயைப்போலவும், நாற்றம் வீசாநின்ற தேகத்தின்கண் ணிருந்து வெளிப்பட்டுவந்த மூடர்களே! நீங்கள் உங்களைப் பலவகையாலும் கெடுதிசெய்து வருத்துகின்ற பஞ்சபூதங்களின் சேட்டைகளை யோக மார்க்கத்திற் பழகிப் பிராணயமார்க்கமாக அடக்குவீர்களானல் கங்கை யைச் சடாபாரத்தின்கண் தரித்துக்கொண்டிருக்கின்ற சிவபெரு மானது அம்சத்தில் ஆறிலொருபங்கு அம்சத்தை யடைவீர்கள் எ - று.

உலகர்களே! நீங்கள் பஞ்சபூதங்களுஞ் செய்யும் சேட்டைகளி னின்றும் நீங்கினுலே சிவத்தன்மையை யடைவீர் என்பது கருத்து.

இது பஞ்சபூதச் சேட்டைகளையடக்க வேண்டுமெனக் கூறிய தாகலின் யோகம் என்னப்பட்டது. 95

## அம்பலம்

வட்டமென்று வும்முளே மயக்கிவிட்ட திவ்வெளி
அட்டாக் கரத்துளே யடக்கமு மொடுக்கமும்

எட்டுமெட்டு மெட்டுமா யியங்குசக் கரத்துளே
எட்டலாமு தித்ததெம்பி ரானைநா மறிந்தபின்.

(பொ - ரை) உலகத்தார்களே! உங்களுக்குள் வட்டமாயிருக்கிறது இந்த ஆகாயமேயென்று மயங்கி அந்த வெளிக்குத் தாயகமாகிய அட்சரநிலையின்கண்ணே அடங்குதலும், ஒடுங்குதலுமாகும். இங்ஙனம் இருபத்துநான்கு கோணமாயிருக்கின்ற சக்கரத்திற்குள் நாம் ஐக்கியம் பெறலாம். !ஆனால், அக்கு ணத்தைப்பெற சிவபெருமானை நாம் முன்னரே அறிந்திருத்தல் வேண்டும் எ - று.

இது மாயாவெளியைக் கூறியதாதலின் அம்பலம் என்னப் பட்டது.

96

மௌன நிலை

பேசுவானு மீசனே பிரமஞான மும்முளே
ஆசையான வைவரு மலைத்தலைகள் செய்கிறார்
ஆசையான வைவரை யடக்கியோ ரெழுத்திலே
பேசிடா திருப்பிரேல் நாதன்வந்து பேசுமே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நீங்கள் பலவகையிலும் கெட்டலையும்படி உங்களுக்கு அவாவைக் கொடுத்தெழுப்புகின்ற ஐம்பூதங்களும் அநேகமாய் உங்களை அலைக்கின்றன. ஆகையால், நீங்கள் அவ்வாசையை யெழுப்புகின்ற அப்பூதங்களின் சேஷ்டைகளை யெல்லாம் ஒருங்கே ஓரெழுத்தாகிய பிரணவபீஜத்தாலொடுக்கிச் சதா பேசாமல் மௌனத்தை யடைந்திருப்பீரானால் ஈஸ்வரனானவன் உம்முடைய இதயதாமரைக் கோவிலின்கண் எழுந்தருளிவந்து தன்னைப் பெற்றுக் கொள்ளவேண்டிய பதிஞானத்தை அந்தர்முகமாக உங்களுக்கு உபதேசிப்பான் எ - று.

ஆகையால், நீங்கள் அவ்வாசையை விட்டுவிடவேண்டும் என்பது கருத்து.

எவனொருவன் மௌன ஞானத்தை யடைகின்றானோ அவனிடத்தில் ஈஸ்வரன் குடியிருப்பதற்குத் தடையில்லை யென்பார், 'பேசிடாதிருப்பீரேல் நாதன்வந்து பேசுமே' எனக் கூறினார்.

ஆசையாலுண்டாங் கெடுதிகளை:

"ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவுமன
தலையுங்கால
மோசம்வருமிதனாலே கற்றதுங்கேட்டதுந் தூர்ந்து
முத்திக்கான
நேசமுநல் வாசமும்போய் புலைநாயிற் கொடுமைபற்றி
கிற்பரந்தோ
தேசுபழுத்தருள்பழுத்த பராபரமே நிராசையின்றேற்
றெய்வமுண்டோ" எனவும்.

"அவாவென்ப தெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந்
தவாப்பிறப் பீனும் வித்து" எனவும் கூறியவற்றா லுணர்க.

இது பேசாதிருக்குந் தன்மையைக் கூறியதாகலின் **மௌன** நிலை என்னப்பட்டது. 97

## பஞ்சாட்சர மகிமை

நமசிவாய வஞ்செழுத்தும் நல்குமே னிலைகளும்
நமசிவாய வஞ்சிலஞ்சும் புராணமான மாயையும்
நமசிவாய வஞ்செழுத்து நம்முளே யிருக்கவே
நமசிவாய வுண்மையை நற்குரைசெய் நாதனே.

(பொ - ரை) நமசிவாய என்னும் பஞ்சாட்சரமே தன்னைத் துதிசெய்கின்றவர்களுக்கு உயர்ந்த பதவிகளைக் கொடுக்கும். அப் பஞ்சாட்சரத்தைக் கண்டமாத்திரத்திலேயே நெடுநாளாயிருக்கின்ற மாயையும் பயப்படும். ஏனெனில், அப்பாட்சரங்கள் நம்முடைய இரு

தய ஸ்தானத்திலேயே சதா குடிகொண் டிருக்கின்றபடியால். ஆகையால், இங்ஙனமிருக்கும் பஞ்சாட்சரத்தின் உண்மை மார்க்கத்தை சுவாமீ! நீயே எனக்குத் திருவருள் செய்யவேண்டும் எ - று.

பஞ்சாட்சரதியானமே மாயையை நீக்கிச் சர்வ பதவிகளையும் கொடுப்பதாகும் என்பது கருத்து.

இது அஞ்செழுத்தின் சிறப்பைக் கூறியதாகலின் **பஞ்சாட்சர மகிமை** என்னப்பட்டது. 98

## குருபதேசம்

பரமுனக் கெனக்குவேறு பயமிலை பராபரா
கரமெடுத்து நித்தலுங் குவித்திடக் கடவதும்
சிரமுருகி யார்த்தலுஞ் சிவபிரானே யென்னலும்
உரமெனக்கு நீயளித்த ஓம்நமசி வாயவே.

(பொ - ரை) எனது ஆசாரிய சுவாமிகளே! பரம், அரம் என்னும் ஞானங்களையே இயல்பாகக் கொண்டிருக்கின்ற காரணத்தால் யாவராலுந் துதி செய்யப்பட்டு வருகின்ற பராபரன் என்னுந் திருநாமத்தையுடையானே! தங்களுக்குப் பரத்துவம் இருக்கின்றபடியால், தங்களுக்கு அடிமைப்பட்டிருக்கின்ற எனக்கோ யாதொரு பயமுங் கிடையாது. ஆனல், நான் தங்களுக்குச் செய்யவேண்டிய வேலைகளாவன: தினந்தோறும் தங்களது ஆலயத்தின்கண் வந்து பிரதக்ஷணஞ்செய்து எதிரேநின்று உள்ளன்போடு கைகுவிப்பதும், தலையிலிருந்து பாதம் வரைக்கும் (மனதாகக்கொண்டு அனலிற்பட்ட மெழுக்கைப்போல்) உருகி, சிவபெருமானேயென்று துதி செய்தலுமாகும். ஆனல், நான் அங்ஙனஞ்செய்யு மார்க்கத்தினின்றுந் தவறாதபடி தாங்கள் எனக்கு நல்ல பலமாகப் பஞ்சாட்சர உபதேசஞ் செய்திருக்கின்றீர். ஆகையால், நானும் அதைக்கொண்டே இங்ஙனம் நிகழ்த்துகின்றேன் எ - று.

ஈஸ்வரனுக்கே சர்வ நியாயங்களாலும் பரத்துவ முண்டென்பார், 'பாமுனக்கு' எனவும், அங்ஙனமாய ஈஸ்வரனுக் கடிமைப்பட்டவர் களை எமவாதை யணுகா தென்பார், 'எனக்கு வேறு பயமில்லை' எனவும்; ஆனால், அவனடியார்கள் ஆலயப் பிரதக்ஷணம் முதலிய திருத் தொண்டினிற் பாரென்பார், 'காமெடுத்து நித்தலுங் குவித்திடக் கடவதும், சிரமுருகி யார்த்தலும் சிவபிரானே யென்னலும்' எனவும், இங்ஙனங் குரூபதேசத்தால் செய்யவேண்டியதே யன்றி ஏனைய மார்க்கங்களாற் செய்யப்படா தென்பார், 'உரமெனக்கு நீயளித்த தோம்நமசி வாயவே' எனவுங் கூறினர்.

அடியார்களுக்கு எமவாதை யுண்டாகமாட்டா தென்பதை:

"மார்க்கண்டே யருக்காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கிலன்பர்க் கென்னபயங்காண் பராபரமே"

எனக் கூறியதினாலும்.

தலைமுதற் பாதம்வரைக்கு மனமாகக் கொள்ளவேண்டுமென்பதை:

"வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்டநெஞ்சாய்ப்
பள்ளந்தாழுறு புனலிற் கீழ்மேலாகப்
பதைத்துருகு மவர்நிற்க வென்னை யாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவுநெஞ்சா
யுருகாதா லுடம்பெல்லாங் கண்ணாயண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
கண்ணிணையு மரமாந்தீ வினையினேற்கே"

எனக் கூறியதினாலு மறிக.

இது தனக்குக் குருபதேசஞ்செய்த விசேஷத்தால் தான்பெற்ற பேற்றைச் சிறப்பித்துச் சொன்னமையின் **குருப தேசம்** என்னப் பட்டது.

### பர சிருஷ்டி

பச்சைமண் பதுப்பிலே புழுப்பதிந்த வேட்டுவன்
நிச்சலு நினைந்திட நினைந்தவண்ண மாயிடும்
பச்சைமண் ணிடிந்துபோய் பறந்ததும்பி யாயிடும்
பித்தர்கா ளறிந்துகொள் பிரானியற்று கோலமே.

(பொ - ரை) யாதொரு வேடுவனானவன் பச்சையாக மண்ணெடுத்து ஓரிடத்தில் உள் வெளியா வமைத்து அதினிடத்தின்கண் ஒரு புழுவை வைத்துத் தினந்தோறுஞ் சிந்திக்க இவன் நினைந்த ரூபமான தும்பியாக அந்தப் புழுவானது வெளிப்பட்டுப் பறந்து போய்விடும் இதினால் ஈஸ்வரனுடைய சிருஷ்டியின் மகிமையைப் பித்தர்களே! நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள் எ - று.

வேட்டுவன் செய்த காரியங்களிலும், அவன் நினைத்த எண்ணத்திலும் சர்வேசுரன் கலந்திருந்தே இங்ஙனஞ் செய்தானென்பது இதின் கருத்தாகையால் இது பரசிருஷ்டி என்னப்பட்டது. இதினை:

"வேட்டுவனா மப்புழுப்போல் வேண்டுருவைத் தான் கொடுத்து
கூட்டானே மண்போற் குளிர்ந்து" என்பதினா லறிக. 100

### தாரக உபதேசம்

ஒளியதான காசிமீது வந்துதங்கு வோர்க்கெலாம்
வெளியதான சோதிமேனி விஸ்வநாத னானவன்
தெளியுமங்கை யுடனிருந்து செப்புகின்ற தாரகம்
வெளியதோரி ராமராம ராமவிந்த நாமமே.

(பொ - ரை) சதா தேஜஸை விளக்கிக்கொண்டே யிருக்கின்ற காசி யென்னும் மானத மார்க்கத்தாரா லறியப்படும் க்ஷேத்திரத்தின் கண் மனோ உற்சாகத்துடன் விரும்பி வந்து சேர்கின்றவர்களுக் கெல்

லாம் அத்தலத்தி லெழுந்தருளியுள்ள ஒரு காலத்தில் சிவபெருமானுடைய அநுக்கிரகத்தால் விஸ்வரூபங் கொண்ட காரணத்தால் விஸ்வநாத னென்னுந் திருநாமத்தைப் பெற்றவனாகிய திருமால் அலர்மேல் மங்கையென்னும் இலட்சுமியுடன் கூடியிருந்து உபதேசிக்கின்ற தாரக மந்திரமானது மேலாம் பதவியை யடைதற்குக் கூடிய ராம, ராம என்று சொல்லப்படுகின்ற மந்திரமே யாகும் எ - று.

ஈண்டு, ஒளியதான காசி யென்றது=மணிபூரக ஸ்தானத்தை, காசி தீர்த்தஸ்தான மாகையாலும், இம்மணிபூரகமும் அங்ஙனமே யானதாகையாலும் அதையே காசி என்றனம்

அன்றி காசி க்ஷேத்திர வாசிகள் பெரும்பாலும் சீதாராம் என்று சொல்லிக்கொண்டு போவது சகஜமாகையால் அதை விஸ்வநாதன் உபதேசித்ததாக இந்நூலாசிரியர் கூறினர். இங்ஙனம் இவர் கூறியது அக்காலத்தி லிவரிருந்த வைஷ்ணவ மதத்தைச் சிறப்பித்தற் கென்க.

ஆயினும், இதினுண்மையை விசாரிக்கப் புகுங்கால் காசியாத்திரை செய்வோர் இராமேஸ்வரத்திற்குச் செல்லவேண்டிய அவசியமுண்டு. அங்ஙனஞ் செல்லுதற்கு முன்னமே அவ்யாத்திரை செய்வோர்க்குச் சீதாராமனால் பிரதிஷ்டை செய்யப்பட்டு வழிபட்ட இலிங்கம் இராமேஸ்வரத்தில் ஒன்றிருக்கின்றது அதை நீங்கள் வழிபட்டாலே உய்வீரென்று ஸ்ரீ விஸ்வநாதனால் சீதாராம் என்று அறிகுறியாக ஒருகாலத்தில் சொல்லப்பட்டதே யொழிய அம்மந்திரத்தைக் கொண்டு நீங்கள் பிழையுங்கள் என்று சொல்லப் பட்டதன்று இதினை இவர் வைஷ்ணவ மதத்தி லிருந்தபோது அம்மதத்தின் சார்பைக் கொண்டு மேலே சொன்னவண்ணஞ் சிறப்பித்தன ரென்றறிக.

இது இராமதாரக உபதேசமாகையால் தாரக உபதேசம் என்னப் பட்டது.

## ஞானிகள் உண்மை

விழியிலோடு புனல்விளைந்த வில்லவல்லி யோனியும்
வெளியிலே பிதற்றலாம் விளைவுநின்ற தில்லையே
வெளிபரந்த தேசமும் வெளிக்குள் மூலவித்தையும்
தெளியும்வல்ல ஞானிகள் தெளிந்திருத்தல் திண்ணமே.

(பொ - ரை) வீட்டிலிருப்பாராகிய பெண்களின் சிற்றின்பவிய வகாரங்களை உலகமாக்களாகிய நாம் வெளியிலே பலபடப் பிதற்றுதற்காமேயொழிய, கண்களில் ஆநந்த பாஷ்பம்பொழிய அன்பு நிலையால் ஒருநாளும் நிற்பதற்கானதில்லை. ஆகையால், உண்மை ஞானிகளோ, இதயாகாசத்தின்கண் விளங்கும் புவனங்களையும், அவ் வாகாயத்தின் கண் விளங்குகின்ற காரணமூர்த்தத்தையும் அன்பினால் தெரிசித்து மனந் தேர்ந்திருப்பது உண்மையே யாகும் எ - று.

அங்ஙனமாய உண்மையை யடையாத உலகமாக்கள் எங்ஙனமுய்வார்? என்பது வினாக் கருத்து.

இது ஞானிகளின் தேர்ச்சியைக் கூறியதாகலின் **ஞானிகள் உண்மை** என்னப் பட்டது. 102

## பஞ்சாட்சர மகிமை

ஓம்நமசி வாயமே யுணர்ந்துமெய் யுணர்ந்தபின்
ஓம்நமசி வாயமே யுணர்ந்துமெய் தெளிந்தபின்
ஓம்நமசி வாயமே யுணர்ந்துமெய் யுணர்ந்தபின்
ஓம்நமசி வாயமே யுட்கலந்து நிற்குமே.

(பொ - ரை) ஓம், நமசிவாய என்கிற ஸ்தூல பஞ்சாட் சரத்தினது உண்மையை முதற்கண் ஆராய்ந்தறிந்து, பின்னர், அப்பஞ்சாட் சரத்தின் உண்மையினின்று, பின்னர், சூட்சும பஞ்சாட் சரத்தின்

உண்மையை தீட்சாகுரு முகாந்தரத்தா லறிந்தறிந்து, பின்னர் காரண பஞ்சாட்சரத்தையும் ஞானாசிரியன் மூலமாக உபதேசமார்க்கத்தா லுணர்ந்து அவ்வழியே நிலத்திருந்தால் அப் பஞ்சாட்சரமானது ஆத்மாவின் கலப்பாய்ப்பரவி, ஆத்மலாபத்தைக் கொடுக்கும்படி நிற்கும் எ - று.

இது ஸ்தூல, சூக்கும, காரண பஞ்சாட்சரங்களைச் கூறியதாகையால் பஞ்சாட்சர மகிமை என்னப் பட்டது.

இம்மூன்று பஞ்சாட் சரங்களின் முறைகள் குருமுகாந் தரத்தா னறியப்படுவன. 103

## ஜீவன்முத்தர் நிலை

அல்லல்வாச லொன்பது மறுத்தடைந்த வாசலும்
சொல்லும்வாச லோரைந்துஞ் சொம்மிவிம்மி நின்றது
நல்லவா சலைத்திறந்து ஞானவாச லூடுபோய்
எல்லைவாசல் கண்டவ ரினிப்பிறப்ப தில்லையே.

(பொ - ரை) இத் தூலதேகத்தின்கண் பொருந்தியிருக்கின்ற நவத்துவாரங்களையு மடைத்து வேறு வெளிவாசலை யடைந்து அவ்விடத்தில் சேட்டை செய்துகொண்டு திரியும் பஞ்சபூத வழியையுங் கடந்து மேலே ஞானவாசலைத் திறந்து அதின் வழியேபோய் சிதாகாசமாகிய வாசலைக்கண்டவர்களே ஜீவன் முத்தராவார்கள் எ - று.

ஜீவன்முத்தரென்பார் ஞானிகளே யாவார்கள் என்பது கருத்து.

இது இப்படிப்பட்ட நிலையை யுடையோரே இனிப் பிறவாதாரென் றுணர்த்தினமையால் ஜீவன்முத்தர் நிலை என்னப்பட்டது. 104

## கடவுளின் பூரணத்துவமும், ஜீவ னுண்மையும்

ஆதியான தொன்றுமே யநேகநேக ரூபமாய்
சாதிபேத மாயெழுந்து சர்வஜீவ னானது

ஆதியோ டிருந்துமீண் டெழுந்துஜெந்ம மானபின்
சோதியான ஞானியாகிச் சுத்தமா யிருப்பனே.

(பொ - ரை) ஆதிகாரணமாயுள்ள பரம்பொருள் ஒன்றுமே தன்னுடைய சங்கற்பமாத்திரந்தான் அடியார் வேண்டியவாறே அநேக ரூபங்களோடுகூடியதாயும், அவ்வச் சமயத்தார்களுக்குத் தக்க தெய்வங்களாயும், சர்வ ஜீவகோடிகளிலும் அவ்வச் சீவர்களுணரா வண்ணமே கலந்திருப்பதாயு முள்ளதாகும். அப்படிப்பட்ட ஆதிபொருளாகிய சிவபெருமானுடன் எக்காலத்தும் ஒரேதன்மையாய் ஒரே அதிகாரமுடையதா யிருந்த இந்தச் சீவனென்னவன் தன்னுடைய ஆணவத்தால் அச் சிவபெருமானைவிட்டுப் புறப்பட்டு வெளிவந்து அச் சிவபெருமானது காருண்ணியத்தால் தநு, கரண, புவன, போகங்களைப் பெற்று அநேக ஜென்மங்களிற் புகுந்து ஒவ்வொரு ஜெந்மவாயிலாக சிறிது சிறிதாக முன் தான் கொண்டிருந்த அகங்காரத்தை நீங்கப்பெற்றுப் பிறகு தேஜோமயத்தை யடைந்து ஞானியென்னும் பேருடையவனாகிப் பிறகு முன்னிருந்த சிவலட்சணத்தை யடைவான் எ - று.

சிவபெருமானே அவரவர் வேண்டியவாறு ரூபங்கொள்வோன் என்றதை:

"யாதொருதெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகியெங்கள்
மாதொருபாகனார்தாம் வருவர்மற்றைத்தெய்வங்கள்
வேதனைப்படும்பிறக்கு மிறக்குமேல்வினையுஞ்செய்யும்
ஆதலாலிவையிலாதா னறிந்தருள்செய்வனன்றே" என்பதினாலும்.

அநாதிசீவன் சிவரூபமென்பதை:

"அநாதிசிவரூப மாகியவான்மா
தனாதிமலத்தால் தடைப்பட்டுநின்றது
தனாதிமலமும் தடையற்றபோதே
அநாதிசிவரூப மாகியவாறே" என்பதினானு மறிக.

இது கடவுளின் சர்வ வியாபகத்திறத்தையும், சீவனது மயக்கத்தையும் உணர்த்தினமையால், கடவுளின் பூரணத்துவமும்; சீவனுண்மையும் என்னப்பட்டது.

105

## மாயையின் சிறப்புரைத்தல்

மலர்ந்ததாது மூலமாய் வையக மலர்ந்ததும்
மலர்ந்தபூ மயக்கம்வந் தடுத்ததும் விடுத்ததும்
புலன்களைந்தும் பொறிகலங்கி பூமிமேல் விழுந்ததும்
இலங்கலங்கி நின்றமாய மென்னமாய மீசனே.

(பொ - ரை) ஈஸ்வரனே! தாயின் கருப்பாசயத்தின்கண் தந்தையின் விந்துவும், ஷை தாயின் சுரோணிதமும் கலந்தமர்ந்த காரணத்தானே உலகம் விர்த்தியடைந்ததும், அங்ஙனம் விர்த்தியடைவதன் நிமித்தம் வெளிப்பட்ட உயிர்களுக்கு உலக மாய்கையானது திடீரென்று வந்து மூடியதும், சில அறிவாளர்களுக்குத் தங்களுடைய ஞான முயற்சியால் மீண்டும் அம்மாயை தங்களைவிட்டு நீங்கியதும், சில லௌகீகர்களுக்கு அது ஐம்புலன், ஐம்பொறிகளின் வாயிலாக மிகவும் மயக்கத்தைக் கொடுத்து அதினுல் சிற்றின்பாதி வியவகாரங்களில் தலையிட்டுத் தவித்து அதினுல் இறந்து பட்டதும், அங்ஙனம் இறந்துபட்டதைக் கண்ட மனைவி முதலியோர் மனங்கலங்கி நின்றதுமாய இவைகளை விளைவிக்கும் அம்மாயையானது எவ்வளவு பலமுடையதோ? நான் அறியேன் எ - று.

தாயின் கருப்பத்தின் மூலமாகவே உலகத்தில் ஜனங்கள் விர்த்தியடைவதென்பார், 'மலர்ந்ததாது மூலமாய் வையக மலர்ந்ததும்' எனவும், அம்மார்க்கமே வெளிப்பட்ட ஆன்மாக்கள் தங்களுடைய சகசமலத்தை நீக்கிக் கொள்ளும் பொருட்டு வந்திருக்க அவ்வான்மாக்களை உலகமாயையானது இடையே மயக்குகின்றதென்பார், 'மலர்ந்தபூ

மயக்கம்வந் தடுத்ததும்' எனவும், அம்மாயையோ அங்ஙன மயக்கும் போது ஞானிகளைவிட்டு அஞ்ஞானிகளையே மயக்குவதென்பார், 'விடுத்ததும் புலன்களைந்தும் பொறிகலங்கி பூமிமேல், விழுந்ததும் இலங்கலங்கி நின்றமாய மென்னமாய மீசனே' எனவுங் கூறினர்.

இது மாயையின் செய்கையைக் கூறியதாகையால் **மாயையின் சிறப்புரைத்தல்** என்னப்பட்டது. 106

## ஞானியாவான் இவனேனல்

பாரடங்க வுள்ளதும் பரந்தவான முள்ளதும்
ஓரிடமு மின்றியே யொன்றிநின்ற வொண்சுடர்
ஆரிடமு மின்றியே யகத்துளும் புறத்துளும்
சீரிடங்கள் கண்டவன் சிவன்தெரிந்த ஞானியே.

(பொ - ரை) சர்வேசுரனானவன் உலகத்தின்கண்ணும், தேவ லோகத்தின் கண்ணும், அன்றி இந்த இடந்தான் அவன் இருக்கக் கூடிய இடம். இது அவனிருப்பதற்குத் தகுதியான இடமென்று என்றுஞ் சொல்லக்கூடாதபடி எவ்விடத்திலும் கலந்திருக்கின்றவண் ணமே தன்னுடைய அகத்திலும், புறத்திலுங் கலந்திருந்து தன்னை இயக்குகின்றா னென்றுணர்ந்து அவனிருக்குமிடத்தை உண்மையாக அறிந்துகொண்டவனே சிவஞானியாவான் எ - று.

சிவபெருமானுக்கும் சர்வ வியாபக மிருக்கின்றபடியால் அவன் எங்குங் கலந்திருப்பவனே யாவானென்பார், 'பாரடங்க உள்ளதும் பரந்தவான முள்ளதும், ஓரிடமு மின்றியே யொன்றிநின்ற வொண் சுடர்' எனவும், அவனை உள்ளபடியே யறிந்துணர்ந்தவனே ஞானி யாவானென்பார், 'ஆரிடமு மின்றியே யகத்துளும் புறத்துளும், சீரிடங்கள் கண்டவன் சிவன்தெரிந்த ஞானியே' எனவுங் கூறினர்.

இறைவன் எங்குமுள்ளவன் என்றதை:

"அங்கிங் கெனுதபடி யெங்கும்ப்ர காசமா
யாநந்த பூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாம னின்றதெது சமயகோடிக ளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகியின்பமா
யென்றைக்கு முள்ளதெதுமேற்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்த ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவும்
கருதியஞ்சலி செய்குவாம்" என்பதினு லறிக.

இது இறைவனை யறிந்தவனைக் கூறியதாகையால் ஞானியா வான் இவனேனல் என்னப்பட்டது. 107

## தலயாத்திரை நீக்கல்

மண்கிடார மேசுமந்து மலைபுளேறி மறுகுறீர்
எண்படாத காரியங்க ளியலுமென்று கூறுநீர்
தம்பிரானை நாள்கடோறுந் தரையிலே தலைபடக்
கும்பிடாத மாந்தரோடு கூடிவாழ்வ தெங்ஙனே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நீங்கள் மண்ணுற் செய்யப்பட் டுஞ் சுட்டிராத கிடாரம்போன்ற இந்தத் தேகத்தைச் சுமந்துகொ

ண்டு காடு, மலை, நாடு முதலியவற்றில் சென்று தலயாத்திரையின் நிமித்தம் நல்ல ஆகார முதலியவை கிடைக்காமல் வருந்துகின்றீர். அன்றி செய்தற்குக் கூடாதகாரியங்களை யெல்லாஞ் செய்து முடிக்கக் கூடுமென்றுஞ் சொல்லுகின்றீர். ஆனால், நீங்கள் மேலேசொன்ன தலயாத்திரையினால் ஏதாவது ஒரு பலனையேனும் அநுபவித்தீரோ? இல்லை. ஏதாவதொரு அருமையான காரியத்தை முடித்தீரோ? இல்லை. ஆகையால், நீங்களெல்லோரும் எம்முடைய தலைவரான சிவபெருமானை அன்போடு அஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்யாதவர்களே யாவீர்கள். அங்ஙனமாய் உங்களுடன் நாங்களெல்லாரும் எங்ஙனம் சிநேகிப்போம்? எ - று.

தேகமோ சுடாத மண்பாண்ட மென்பார், 'மண்கிடாரமோ சுமந்து' எனவும், அதை நம்பி காடு, மலை, நாடு முதலியவைகளிற் செல்ல வேண்டாமென்பார், 'மலையுளேறி மறுகிறீர்' எனவும், கேவலம் குயவனா லமைக்கப்பட்டு வருகின்ற பாண்டத்தைச் சுட்டாலே வலிவடைகின்றது. அங்ஙனம் இதைச் சுடுவோமானால் ரூபமே யில்லாமற் போகின்றது அப்படிப்பட்ட தேகத்தோடு கூடி அந்தத் தேகச் சார்பினால் முடியாக் காரியங்களையும் முடிக்கலா மென்பா ரென்பார், 'எண்படாத காரியங்க ளியலுமென்று கூறுநீர்' எனவும், இங்ஙனமாய தன்மைகளை நீக்கிச் சிவ பெருமானையும் வழி படமாட்டாரென்பார், 'தம்பிரானை நாள்கடோறுந் தரையிலே தலைபடக் கும்பிடாத' எனவும், அவர்களோடு நாங்கள் சிநேகிப்பதேயில்லை யென்பார், 'மாந்தரோடு கூடிவாழ்வ தெங்ஙனே' எனவுங் கூறினர்.

தலயாத்திரை முதலியவற்றூற் பயனின்றென்றதை:

"பத்திநெறி நிலைநின்று நலகண்ட பூமிப்
பரப்பைவல மாகவந்தும்
பரவையிடை மூழ்கியும் நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றியெழுநா

மத்தியிடை நின்றூறுதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசிதனக் கடைத்து
மௌனத் திருந்துமுயர் மலைநுழைவு புக்கியும்
மன்னுதச நாடிமுற்றுஞ்
சுத்திசெய் தும்மூல ப்ராணனோ டங்கியைச்
சோமவட்டத் தடைத்துஞ்
சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல் கற்பங்க
டோறுமிலை நிற்கவீறு
சித்திசெய் துஞ்ஞான மலதுகதி கூடுமோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா நந்தகுருவே'' என்பதினாலும்.

சிவபெருமானை வணங்காரை கண் டஞ்சவேண்டு மென்றதை:

''எழுபவப் புணரியஞ்சே னிதமடமாத ரஞ்சேன்
முழுதுமாய் நின்றசோதி முதல்வனஞ் சங்காரியன்
கழன்மலர் முடிகொளாது கதியுள தயலென்றேங்கி
அழிகுவா ரவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே''

என்பதினாலு மறிக.

இது உலக பிரதக்ஷிணஞ் செய்வதாற் பயனின்றென்று கூறிய தாகையால் தலயாத்திரை நீக்கல் என்னப்பட்டது. 108

## சீவனேடுக்க முணர்தல்

நாவினா லழிந்ததும் நலங்குல மழிந்ததும்
மேவுதே ரழிந்ததும் விசாரமுங் குறைந்ததும்
பாவிகாளி தென்னமாயம் வாமநாடு பூசலாய்
ஆவியா ரடங்குநாளி லைவரு மடங்குவார்.

(பொ - ரை) பாவிகளே! எமலோகமானது மிகவும் விரோத முடையதாகி உயிர் இறந்து படுந்தருவாயில் பஞ்சபூத சிரேஷ்டர்களும் ஒடுங்குவார். ஆகையால், அப்பொழுது நாவினுல் சொல்லப்பட்டு வந்தவைகளான நூல்களும், நன்மைகளும், குலாசாரங்களும், வாகனங்களும், விசாரமும் அழிந்தவைகளே யாகுமன்றோ? ஆம். இப்படி யாவது என்னமாயம் பார்த்தீரா? எ - று.

நம்முடைய தேகநிலை இப்படியிருத்தலால் அதைநம்பி யாதொரு வீண்காரியத்திலும் நுழைந்து வீணே கெட்டுப் பாதவியாமல் சர்வ ஜீவதயாபரனுகிய சிவபெருமானைச் சதா சிந்தைசெய்ய வேண்டும் என்பது கருத்து.

இது ஜீவன திறத்தலைக் கூறியதாகையால் ஜீவனுடேக்க முணர்த்தல் என்னப்பட்டது. 109

## கடவுளின் உண்மை கூறல்

இல்லையில்லை யென்றுநீ ரியம்புகின்ற வேழைகாள்
இல்லையென்று நின்றதொன்றை யில்லை யென்னலாகுமோ
இல்லையல்ல வொன்றுமல்ல விரண்டுமொன்றி நின்றதை
எல்லைகண்டு கொண்டபே ரினிப்பிறப்ப தில்லையே.

(பொ - ரை) சர்வ வியாபகப் பொருளாகிய கடவுள் இல்லை; இல்லையென்று அக் கடவுளின் தன்மையை உணர்ந்தார்போன்றும், அங்ஙன முணர்ந்தகாலத்தில் யாதுமில்லையென் றறிந்தமைபோல் சொல்லி வழக்கிடுகின்ற அறிவீனர்களாகிய நாத்திகர்களே! இல்லை யென்று சொல்லுஞ் சொல்லின்பயனுக உண்டு என்பதொன்றுஞ் சொல்லிருக்கின்றமையின் இல்லையென்று சொல்லப்பட்டதாய் நிற்கின்ற அக்கடவுளை இல்லையென்று சொல்லலாகுமோ? ஆகாது. அப்பொருளின் உண்மையை விசாரிக்கப் புகுங்கால் இல்லாத பொரு

ளென்றென்றும், இருந்தாலும், ஒன்றென்றும், இரண்டென்னுஞ் சொல்லாதபடி கலந்திருக்கின்ற பொருளென்றும் வெளிப்படும். அப் படிப்பட்ட பொருளின் உண்மையை உள்ளபடியே ஆராய்ந்துணர்ந்து கொண்டாரான ஞானிகள் இனி உலகத்தின்கண் வந்துபிறவார் எ-று.

இல்லை யென்கிற சொல்லுள்ள போழ்து அதற்கு நேரிருக்கின்ற உண்டென்னுஞ் சொல்லுக்குப் பயன் வேண்டியதாகையாலும், அப் பயனாகிய உண்டென்னுஞ் சொல்லினையுடைய ஆத்திகரை எதிர் மறுக்கப் புகுவான் தொடங்கும் நாத்திகர் இல்லை யென்று சொல்லு கின்றது சுபாவமாகையாலும், அங்ஙனம் அவர்களால் சொல்லப்படும் இல்லையென்னுஞ் சொல்லை மறுத்தெழுந்து வாராநின்ற எது இல்லை? யென்னுங் கேள்விக்கு ஒரு பொருள் இல்லையென்று சொல்லப்பட வேண்டியதாகையாலும், அங்ஙனஞ் சொல்லுங்கால் இருக்கும் பொருளையே சில நியாயங்களால் இல்லையென்று சொல்லி மறுக்கக் கூடுமே யொழிய இல்லாதபொருளை இல்லையென்று சொல்லி மறுக்க நாவெழா வாகையாலும், நாத்திகரால் இல்லை யென்று சொல்லப்பட்டு வருகின்ற சொல்லின் மாபிலேயே ஒரு பொருள் உண்டென்று வெளிப்படுகின்ற தென்பார், 'இல்லையில்லை யென்றுநீ ரியம்புகின்ற வேழைகாள், இல்லையென்று நின்றதொன்றை யில்லையென்ன லாகு மோ இல்லையல்ல' எனவும், அங்ஙனம் இல்லையென்று சொல்லப் பட்டு இருக்கின்ற பொருள் அத்துவிதத்தது என்பார், 'ஒன்றுமல்ல விரண்டுமொன்றி நின்றதை' எனவும், அங்ஙனமாய பொருளை உள்ள படியே விசாரித்தறிந்த ஞானிகள் பிறவிக்கடலை நீந்தியவர்களே யாவார்கள் என்பார், 'எல்லைக்கண்டு கொண்டபே ரினிப்பிறப்ப தில் லையே' எனவுங் கூறினர்.

இல்லையில்லை என்று சொல்லப்பட்டு இருப்பதால் ஒரு பொருள் வெளிப்படுவதால் இது கடவுளினுண்மை என்னப்பட்டது.

இல்லையென்று சொல்லும்படி நின்றபொருள் என்பதை:

"இல்லையில்லையென்னி லொன்றுமில்லாதல்ல
வியல்பாகியென்றுமுள்ள வியற்கையாகிச்
சொல்லரியதன்மையதா யான்றாமென்னத்
தோன்றாதெல்லாம்விழுங்குஞ் சொரூபமாகி
அல்லையுண்டபகல்போல வவித்தையெல்லா
மடையவுண்டுதடையறவுன் னறிவைத்தானே
வெல்லவுண்டிங்குன்னையுந்தா னாகக்கொண்டு
வேதகமாய்ப்பேசாமை விளக்குந்தானே"

என்பதினு லறிக. 110

## இராமநாம மகிமை

காரகார காரகார காவலூழி காவலன்
போரபோர போரபோர போரினின்ற புண்ணியன்
மாரமார மாரமார மரங்களேழு மெய்தஸ்ரீ
ராமராம ராமராம ராமவென்னு நாமமே.

(பொ - ரை) மிகவும் புஜபல பராக்கிரமத்துடன் காரகார என்கிற அடுக்குச்சத்தம் பெரும்பாலும் விளங்கிக்கொண்டிருக்கின்ற யுத்தகளத்தில் ஆயுதபாணியாய் நின்ற புண்ணியமூர்த்தியும், மகா வெற்றியுடனடிப்பதற்கு மராமரங்களாகிய ஏழு வட விருக்ஷங்களையும் தொளைத்துச் சுக்கிரீவனுக்கு நல்ல ஜயத்தை கொடுத்தவனுமான விஷ்ணுமூர்த்தியின் ஸ்ரீராம ஸ்ரீராம என்னும் நாமமே எங்களையாண்டடிமைகொள்ள விருக்கின்றது. ஆகையால், அப்படிப்பட்ட நாமத்தை நாங்கள் எக்காலத்திலும் மறவாதிருப்போம் எ - று.

காரகார, போரபோர, மாரமார, என்பவை போரின் விசேடத்தைக் குறிப்பிப்பவை.

இராமன் தனது மனைவியை இராவணன் கொண்டுபோக அவளைத் தேடுநிமித்தம் போகும் வழியில் சுக்கிரீவ சேனைகளாகிய அநுமான் என்னும் குரங்கையும், சாம்புவந்தன் என்னும் கிழக்குரங்கையுங் கண்டு அவர்கள் மூகாந்தரமாகச் சுக்கிரீவனைச் சிநேகங்கொண்டு அவனது சகோதரனுகியும், புஜபல பராக்கிரமத்தில் அவனுக்கெதிர் ஒருவரும் இருக்கப் பெருதவனுகியும், அந்தக்காலத்தில் தனக்குப் பகையனுகியுமிருந்த வாலி யென்பவனை அச்சுக்கிரீவனது வேண்டுகோளால் எழு மாமரத்தின்பின் மறைந்திருந்து பாணப்பிரயோகஞ் செய்தவனென்பார, 'மார மார மார மார மரங்களேழு மெய்தஸ்ரீராம' என்ருர்.

ஆயின், வைஷ்ணவர்களில் பெரும்பாலோர் இராமனைச் சிந்திக்கச் சொல்லுமிடத்தில் அவனது தமோகுண காலமாகிய யுத்தகோலத்தையே யெடுத்துச்சொல்வது பெரும்பாலும் வழக்கமா யிருக்கின்றமையால் இவரும் அம்மதத்தர்களை யநுசரித்தே சொல்லி யிருக்கின்றனர் என்னலாம். இதினை:

"நாடியபொருள்கைகூடும் ஞானமும்புகழுமுண்டாம்
வீடியர்வழியதாகும் வேரியங்கமலைநோக்கும்
நீடியவரக்கர்சேனை நீறுபட்டழியவாகை
சூடியசிலையிராமன் தோள்வலிகூறுவோர்க்கே"

என்று ஸ்ரீ கம்பநாட்டாழ்வார் கூறியிருப்பதினு லறிக.

இராமனது ராமநாமத்தையே மாரவென்று மாற்றிப்பஜித்த வனவேடனுக்கும் நன்மார்க்கத்தைக் கொடுத்ததாகையாலும், அதையே இச்செய்யுள் விளக்குவதாலும் இது இராமநாம மகிமை என்னப்பட்டது. 111

## இதுவுமது

நீடுபாரி லேபிறந்து நேயமான காயந்தான்
வீடுவேறி தென்றபோது வேண்டியின்பம் வேண்டுமோ

பாடிநாலு வேதமும் பாரிலே படர்ந்ததோ
நாடுராம ராமராம ராமவென்னு நாமமே.

(பொ - ரை) எக்காலத்தும் உள்ளதுபோலக் காண்போர்களுக்குக் காணப்பட்டு வருகின்ற இந்த வுலகத்தின்கண் பிறந்து அவ்வுலகத்தினிடத்திலே மிகவும் பிரீதி வைத்திருக்கின்ற ஆன்மாவானது இந்தக்காயம் அநித்தியமாகும். இது நமக்குத் துணையாயிருப்பதென்று இதனை நம்பி வீண் வியவகாரங்களிற் பிரவேசிப்பது பிறகு நமக்குப் பெருந்துன்பத்தை விளைப்பதேயாகும் என்றுணர்ந்து அந்தத் தேகத்தின்மேல் தான் வைத்திருந்த பற்றினின்றும் நீங்கித் தனக்குத் துணையாயிருக்கப்பட்ட சூட்சும தேகத்தைப்பெற்று பிறகு அடையக் கட்டிய சுகானந்தத்தை அடையுமோ? வேதங்கள் நான்கும் ஒருவனால் பாடப்பட்டு உலகத்தில் வெளிப்பட்டனவோ? அன்று. எல்லாம் சர்வஜீவர்களாலும் நாடப்பட்டு வருகின்ற ராமமந்திரமாகிய பீஜத்தினாலேயே நடக்கின்றன வாகும் எ - று.

உலகம் நெடுங்காலம் உள்ளதுபோலவே காணப்படுவ தாகையால் 'நீடுபாரிலே' எனவும், ஒவ்வொரு ஆன்மாவும் தங்களது மாய்கையை நீக்கிக் கொள்வதன் பொருட்டு அதின்கண்ணே வந்து ஜநிக்க வேண்டுமென்பார்' 'பிறந்து' எனவும், அங்ஙனம் பிறந்தபோது வந்த வேலையைமறந்து தேகம் நிலையுள்ளதென்று நினைத்து அதினிடத்து மிகுந்த ஆசையைவைத்து விட்டதென்பார், 'நேயமான காயந்தான்' எனவும், அதுவும் நிலையற்றதே யென்றுணர்ந்து வேருகவொரு சூக்கும தேகத்தைத் தேடிக்கொண்டு அதிலிருந்து சுகாநந்தத்தை விரும்பவேண்டு மென்பார், 'வீடுவேறி தென்றபோது வேண்டியின்பம் வேண்டுமோ' எனவும், வேதங்களும் அங்ஙனமே வெளிவந்து முறையிடுகின்றன வென்பார், 'பாடி நாலுவேதமும் பாரிலே படர்ந்ததோ' எனவும், அதுவே ராமமந்திரத்தா லுணரக் கூடிய தாகுமென்பார், 'நாடுராம ராமராம ராமவென்னு நாமமே' எனவுங் கூறினார்.

இதுவும் மேற்படி ராமமந்திரத்தின் வன்மையையே கூறுகின்ற தாகையால் இராமநாம மகிமை என்னப்பட்டது.

இவ்விரண்டு செய்யுட்களும் வைஷ்ணவ மதவாராய்ச்சியி லிருந்தகாலத்தில் சொல்லப் பட்டன. 112

## உயிரின் தன்மை

உயிருநன்மை யாலுட லெடுத்துவந் திருந்திடும்
உயிருடம் பொழிந்தபோது ரூபரூப மாயிடும்
உயிர்சிவத்தின் மாயையாகி யொன்றையொன்று கொன்றிடும்
உயிருஞ்சத்தி மாயையாகி யொன்றையொன்று தின்னுமே.

(பொ - ரை) சர்வ தேகங்களிலும் கலந்திருக்கின்ற உயிரானது பூர்வஜென்மத்தில் தான் செய்த நல்வினையின் முதிர்ச்சியால் மற்றைய கீழ்த்தரமான தேகங்களையெல்லாம் எடுக்காமல் விட்டுவிட்டு இந்த வுலகத்திற் பெரியோர்களால் அருமையாகக் கொண்டாடப்படும் மானிடதேகத்தைப் பெற்று இவ்விடம் வந்திருக்கும். அங்ஙனம் வருகின்ற உயிரும் தான் குடிகொண்டிருக்கின்ற தேகத்தைவிட்டு நீங்கியபொழுது தனக்கு ரூபம் அரூபமேயாயிருக்கும் அப்படிப்பட்ட அதுவே சிவபெருமானது மாயாசத்தியின் வயப்பட்டு ஒவ்வொரு உயிரைக் கொல்லுந் தொழிலில் மேற்பட்டுசெய்தி நடத்தும். அதுவே சிவபெருமானது சத்தியின் மாயாசம்பந்தப்பட்டு ஒருபொருளை யொருபொருள் தின்றுகொண் டிருக்கும் எ - று.

உலகத்தின்கண் ஆன்மகோடிகளுக்கு மானிடப்பிறவி வருதல் மகா அருமையான செய்கைகளாதலா மென்பார், 'உயிரு நன்மையாலுட லெடுத்து வருந்திடும்' எனவும், அங்ஙனங் கிடைக்கப்பெறும் உடம்பினின்றும் ஜீவன் வெளிப்பட்ட காலத்தில் அரூபமே தனது சொரூபமென்பார், 'உயிருடம் பொழிந்தபோது ரூபரூப மாயிருக்

கும்' எனவும், அங்ஙனம் அநேகமாக உயிர்கள் செய்யுங் காரியங்க ளெல்லாம் சிவசத்திமயமே யாகுமென்பார், 'உயிர் சிவத்தின் மாயை யாகி யொன்றை யொன்று கொன்றிடும், உயிருஞ் சத்தி மாயையாகி யொன்றையொன்று தின்னுமே' எனவுங் கூறினர்.

இச் செய்யுள் உயிர் இத் தேகத்தைவிட்டு நீங்குமாயின் இன்ன லட்சணத்தோடு கூடியிருக்குமென்று கூறியதால் உயிரின் தன்மை என்னப்பட்டது. 113

## சிவபெருமான் சிறப்பு

நெட்டெழுத்து வட்டமோ நிறைந்தபல்வி யோனியும் [லேன்
நெட்டெழுத்தில் வட்டமொன்று நின்றதொன்றுங் கண்டி
குற்றெழுத்தி லுற்றதென்று கொம்புகால் குறித்திடில்
நெட்டெழுத்தின் வட்டமொன்றில் நேர்படானம் மீசனே.

(பொ - ரை) யாதொரு உயிரெழுத்து பன்னிரண்டுள்ளும் இருக் கும் நெட்டெழுத்து எழின்வட்டமாக உலகத்தின்கண் ணிருக்கும் பல வகைப்பட்ட யோனிகளுமாவனவோ? ஆகா. ஏனென்றால், நெட் டெழுத்து எழனுள்ளும் ஒரு வட்டமிருந்தது. ஆனல், அதை நான் கண்டேனில்லை. ஆகையால், இது நேராக பார்க்குமிடத்தில் குற் றெழுத்தினின்றும் இங்ஙனம் உண்டானதென்று அக் குற்றெழுத்துக் களுக்குக் கொம்பு கால் முதலியவற்றைக் குறித்தால் வெளிப்படும். ஆகையால், அப்படிப்பட்ட குற்றெழுத்தின் விகாரமாகிய நெட் டெழுத்து ஒன்றினலேயே நம்முடைய சர்வேஸ்வரனுனவன் வெளிப் படமாட்டான் எ - று.

நெட்டெழுத்தானது குற்றெழுத்தினின்றும் விகாரப்பட்ட தென்றும், அவ் விகாரமானவிடத்தில் ஈஸ்வரன் வெளிவரமாட்டா னென்றும் சகலரும் அறிந்திருப்பாரன்றோ? ஆம். அதுபோலவே

சர்வேஸ்வரனாகிய சிவபெருமானானவன் நெட்டெழுத்தில் வெளி வர மாட்டான் என்பது கருத்து.

ஆனால், மந்திர பீஜாட்சரங்களாகிய குற்றெழுத்துக்களிலும், அடியார்கள் இருதயத்திலுமே சிவபெருமான் எழுந்தருளி யிருப்பான் என்னலாம்.

இச் செய்யுள் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் சிறப்பு ஸ்தானத்தைக் கூறியதாகையால் சிவபெருமான் சிறப்பு என்னப் பட்டது. 114

## அத்துவிதம்

விண்ணிலுள்ள தேவர்க ளறியொணாத மெய்ப்பொருள்
கண்ணிலாணி யாகவே கலந்துநின்ற தெம்பிரான்
மண்ணிலாம் பிறப்பறுத்து மலரடிகள் வைத்தபின்
அண்ணலாரு மெம்முளே யமர்ந்துவாழ்வ துண்மையே.

(பொ - ரை) சொர்க்கலோகத்தின்கண் வாழ்ந்துகொண் டிருப்பவர்களாகிய தேவர்களாலும் அறிந்துகொள்ளக் கூடுமானதா யிராத உண்மைப்பொருளானது என்னிடத்தில் கண்ணிற்பார்வை போல் மிக்க உயர்வாசக் கலந்து நின்றது. ஆனால், அப்படிப்பட்ட பொருளாயுள்ள எம்பெருமானானவன் எனக்கு நான் செய்துள்ள வினையளவுக்குத் தக்கபடியே இவ் வுலகத்தில் வருவதாயுள்ள ஜென்மங்களை யொழித்து அவனுடைய திருவடிகளை எனது முடிக்கு அணியாக்கிப் பின்னரே அப்படிப்பட்ட சர்வேஸ்வரனும் எனது இருதயாகாசத்தின்கண் கலந்து வாழ்வானென்பது உண்மையாகும் எ - று.

சர்வேஸ்வரனை தேவர்களறியார்களென்பார், 'விண்ணிலுள்ள தேவர்க ளறியொணாத மெய்ப்பொருள்' எனவும், கண்ணிற் கருமணி போல் தன்னிடத்தில் இறைவன் கலந்திருக்கின்றானென்பார்,

'கண்ணிலாணி யாகவே கலந்து நின்றது' எனவும், ஆனால் அவனே ஜீவர்களுடைய பிறவியை யொழித்து ரக்ஷிப்பவ னென்பார், 'மண்ணிலாம் பிறப்பறுத்து மலரடிகள் வைத்தபின்' எனவும், அங்ஙனம் அவனது பிரேரேபணையால் பிறவி நீங்கும் அவசரத்தில் அந்தந்தச் சீவர்களது மனத்தின்கண் அவன் கலந்து வாழ்வா னென்பார், 'அண்ணலாகு மெம்முளே யமர்ந்துவாழ்வ துண்மையே' எனவுங் கூறினர்.

இச்செய்யுள் சிவபெருமான் உயிர்களின் கலக்கும் விதத்தை விளக்குகின்ற தாகையால் அத்துவிதம் என்னப்பட்டது. 115

## இதுவுமது

விண்கடந்து நின்றசோதி மேலைவாச லைத்திறந்து
கண்களிக்க வுள்ளுளே கலந்துபுக் கிருந்தபின்
மண்பிறந்த மாயமும் மயக்கமு மறந்துபோய்
எண்கலந்த வீசனோ டிசைந்திருப்ப துண்மையே.

(பொ - ரை) யாதொரு அத்தவிதமாய சுழிமுனைஸ்தானமென்னும் ஆகாயஸ்தானத்தில் முட்டி அதையுந் தாண்டி அப்பாலுக்கப்பால்சென்று பரவியிருக்கின்ற தேஜோமயத்தைக் காணும் பொருட்டு மேல்வாசலைத் திறந்து அதின்கண்ணும் வியாபித்திருக்கின்றதைக் கண்கள் களிக்கும்படியாக உள்ளுக்குள்ளே கலந்தநுபவித்து அந்த மேலைவாசலின் கண்ணே யிருந்த பின்னரே நாம் உலகத்தின்கண் வந்து பிறந்திருக்கின்ற பூர்வஜென்மத் தொடர்ச்சியாலான மாயையும், இச்சென்மத்தில் ஆகந்துகவசமாய் மயக்குகின்ற மாயையும் அறவே மறந்து இப்படிப்பட்டவனென்று எண்ணிப் பார்த்து யாவராலும் சொல்லுதற்குக் கூடாமையானவனா யிருக்கின்ற ஜெகதீஸ்வரனோடு கலந்து அத்துவிதமயமா யமர்ந்திருப்பது உண்மையேயாகும் எ - று.

மூலாதாரத்தின்கண் முகிழ்த்த சூரியனைக்கண்டு பக்குவப்பட்டு மலருந் தாமரைபோல் வாசியைக்கண்டு மலர்ந்து சுழிமுனை ஸ்தானத்

தைமுட்டி அதற்கப்பாலும் பாய்வது குண்டலியேயென்பார், 'விண் கடந்து நின்றசோதி மேலைவாசலைத் திறந்து' எனவும், அங்ஙனம் கிளம்பிய அதை அகக்கண்ணாற்கண்டு அநுபவிக்க வேண்டுமென்பார், 'கண்களிக்க வுள்ளுளே கலந்து' எனவும், அங்ஙனம் கண்ட அதை விட்டுப் பிரியாமல் அத்துடன் கலந்தே யிருக்கவேண்டு மென்பார், 'புக்கிருந்தபின்' எனவும், இங்ஙனம் நடத்துவோர்க்கே பூர்வ ஜென்ம தொடர்ச்சியும், இச்சென்ம ஆகந்துகமும் நீங்குமென்பார், 'மண்பிறந்த மாயமும் மயக்கமும் மறந்துபோய், எனவும், இங்ஙனம் மாயையை யொழியப் பெற்றால் சிவபெருமான்வந்து அத்துவிதமாய்க் கலப்பா னென்பார், 'எண்கலந்த வீசனோ டிசைந்திருப்ப துண்மையே' எனவுங் கூறினர்.

இச் செய்யுள் மாயாநீக்கம் பெற்றோரிடத்தில் வந்து கலப்பா னென்று கூறுகின்ற தாகையால் அத்துவிதம் என்னப்பட்டது. 116

## யோகம்

இருக்கலா மிருக்கலா மவனியி லிருக்கலாம்
அரிக்குமால் பிரமனு மகண்டமே மூகற்றலாம்
கருக்கொளாத குழியிலே காலிலாத கண்ணிலே
நெருப்பறை திறந்தபின்பு நீயும்நானு மீசனே.

(பொ - ரை) எக்காலத்தும் கருப்பமென்பதில் தரிக்காதபடியா யிருக்கின்ற யாதொரு கருப்பக் குழியும், காற்றுப் பரவுதலில்லாத கண்ணும் ரகுமென்று சொல்லப்பட்டு வருகின்ற நெருப்பறை யானது திறந்துவிடுமாயின், அதின்பின்னர் நீயும் நானும் ஈசனாகவே யமர்ந்திருக்கக்கூடும். அக் காலத்தில் மேலுலகத்தில் நெடுநாளிருந்து வாழலாம். அன்றி விண்டுவாலும், பிரமனாலும் தேடிக் கண்டு பிடிக் கப்படாதனவா யிருந்த அண்டங்களையெல்லாம் தாண்டி அப்பாற் செல்லுதலுமாகும் எ - று.

நெருப்பறையென்னும் அநாகதஸ்தானமானது ஒருவன் செய்யு முயற்சியின் வழிப்பட்டுத் திறந்துவிடுமாயின் அந்த ஸ்தானத்தின் மேல் வீற்றிருக்கின்ற ஈஸ்வரனாக ஆகக்கூடுமென்பார், ‘கருக்கொளாத குழியிலே காலிலாத கண்ணிலே, நெருப்பறை திறந்தபின்பு நீயும் நானு மீசனே’ எனவும், அங்ஙனம் சிவத்தின் தன்மையை யடைந் தார்க்கு எல்லாச் சக்திகளுமுண்டா மென்பார், ‘இருக்கலா மிருக்கலா மவனியி லிருக்கலாம், ‘அரிக்குமால் பிரமனு மகண்டமே ழகற்றலாம்’ எனவுங் கூறினர்.

இச் செய்யுள் அநாகதஸ்தானத்தைத் திறந்துகொண்டே மற் றைய இரண்டு ஸ்தானங்களுக்கும் போகவேண்டுமென்பதை வெளி விட்டதாகலின் **யோகம்** என்னப்பட்டது. 117

## அத்துவிதம்

ஏகபோக மாகியே யிருவரு மொருவராய்
போகமும் புணர்ச்சியும் பொருந்துமாற தெங்ஙனே
ஆகிலு மழிகிலு மதன்கணேய மானபின்
சாகிலும் பிறக்கிலு மில்லையில்லை யில்லையே.

(பொ - ரை) உலகத்தின்கண்ணுள்ள ஆன்மகோடிகள் சர்வேஸ் வரதியானரூபமாய் இரண்டறக்கலத்தலாய அத்துவித மார்க்கத்தின் கண் விருப்பம்வைத்து விடுவாராயின் பின்னர் ஆவதா யிருந்தாலும், அழிவதாயிருந்தாலும், ஆடவர் பெண்கள் என்னும் இருவரும் ஒன் ருய்ச் சேர்ந்து போகத்தையும், புணர்ச்சியையும் செய்துவரக் கை கூடுவ தெங்ஙனம்? அப்படி கைகூடுவது செத்தாலும், பிறந்தாலும் இல்லை. இது உண்மை! இது உண்மை!!

சர்வேஸ்வரனிடத்தில் ஒவ்வோருயிரும் அத்துவிதமாய்க் கலந்து விடும் பட்சத்தில், முன்னிருந்த செய்கைகளில் பிரதான செய்கையா

யிருந்த பெண்போகம் என்பது கிடையாதென்பர், 'ஏகபோகமாகியே யிருவரு மொருவராய், போகமும் புணர்ச்சியும் பொருந்துமாற தெங் ஙனே, ஆகிலுமழிகிலு மதன்கணேய மானபின், சாகிலும் பிறக்கிலு மில்லையில்லை யில்லையே' என்ருர்.

இருவருமொருவராய் என்றது:—ஸ்திரீயும், புருஷனும் போகஞ் செய்யுங்காலத்தில் கலந்திருக்கும் ஒருவகையான மனச் செய்கை.

இச் செய்யுள் ஈஸ்வரனிடம்வைத்த அத்தியந்த பிரீதியை யுணர்த்துவதால் அத்துவிதம் என்னப்பட்டது. 118

## மனோ பூஜை

வேதநாலு பூதமாய் விரவுமங்கி நீரதாய்
பாதமே யிலிங்கமாய்ப் பரிந்துபூசை பண்ணிஞல்
காதினின்று கடைதிறந்து கட்டறுத்த ஞானிகள்
ஆதியந்த முங்கடந் தரியவீ டடைவரே.

(பொ - ரை) விசுத்தி ஸ்தானத்தின் சம்பந்த ஸ்தானமாகியதும் இடைபிங்கலைகளின் சுழலுதல் ஸ்தானமாகியதுமான காதினிடத் திருந்து மேலான கடைவாசற்படியைத் திறந்து தங்களது பந்தங்களை யறவே யொழித்த ஞானிகளெல்லாம், நான்கு வேதங்களில் சொல்லி யுள்ளபடியே பூதமாய் நிற்கும் தேயுவே நீராகக்கொண்டு மூலத்தா னத்தையே இலிங்கமாகக்கொண்டு அந்த இலிங்கத்திற்கு அபிஷே காராதனை முதலியவைசெய்து மனோபீஷ்டப்படி செவ்வனே அகத் துப் பூஜை செய்துவந்தால் அவர்கள் முதலென்றும், கடையென்றும், சொல்லப்படாததும், மிக்க அருமையுடன் கிடைக்கக் கூடியதுமான மோட்சவீட்டை அடைவார் எ - று.

வேதமார்க்கத்தை யநுசரித்தே மனோபூசை செய்யவேண்டு மென்பார், 'வேதநாலு பூதமாய் விரவுமங்கி நீரதாய், பாதமே யிலிங்க

மாய்ப் பரிந்துபூசை பண்ணினல்' எனவும், அங்ஙனஞ் செய்வதும் விசுத்திஸ்தானத்தி லிருந்தேயாகு மென்பார், 'காதினின்ற கடைத் திறந்து' எனவும், அங்ஙனம் செய்வோரும் ஞானிகளே யாவாரென் பார், 'கட்டறுத்த ஞானிகள்' எனவும், அவர்களே மோட்சசாதனத்தை யடையக் கூடியவர்க ளென்பார், 'ஆதியந்த முங்கடந் தரியவீ டடை வரே' எனவுங் கூறினர்.

இச்செய்யுள் ஞானிகளால் செய்யப்படும் பூஜாமார்க்கத்தைச் சொல்லுகின்ற தாகையால் மனேபூஜை என்னப்பட்டது. 119

## யோக வழி

பருத்திநூல் முறுக்கிவிட்டுப் பஞ்சியோது மாந்தரே
துருத்திநூல் முறுக்கிவிட்டுத் துன்பநீங்க வல்லிரேல்
கருத்தினூல் கலைபடுங் காலனூல் கழிந்திடும்
திருத்திநூல் கவலறுஞ் சிவாயவஞ் செழுத்துமே.

(பொ - ரை) பருத்தியினின்றும் முறுக்கி நூலுண்டாக்கிய பின்னரும் பஞ்சியென்றே சொல்லுகின்ற மனிதர்களே! நீங்கள் இந்தச் சடலத்தின்கண் வாசியாகிய நூல் முறுக்கிவிட்டு அதனல் உங்களுடைய துன்பங்களினின்றும் நீங்க வல்லமையுடையீரானல் உங்களது மனத்தின்கண் சாஸ்திரபேதங்களா லுண்டான துன்பங்க ளெல்லாம் நீங்கும்; எமனுடைய பாசக் கயிறுனது நீங்கிவிடும். சமுசார வாழ்க்கையிற் சிக்கிக் கவலைபடுவதும் அறவே யொழிந்திடும். (அங்ஙன மொழிந்தபின் பஞ்சாட்சரரூபியே வெளிவந்து அவனது சூட்சும பஞ்சாட்சரத்தை யுணர்த்த) அதின் வழியே யமர்ந்திருக்கக் கூடும் எ - று.

உலகத்தின்கண் ஆன்மகோடிகளுக்கு இவ்வருமையான மானிட தேகம் வந்து கைகூடியபோதே இந்தத் தேகத்தை வலுப்படுத்தி

யோக சாதனைசெய்து ஆயுளை வளர்வித்துக்கொண்டு அதினால் உங்களுக்கு வருவனவாக விருக்கும் துன்பங்களையும், எமனுலையையும் வராதபடி தடுத்துக்கொள்ளவேண்டு மென்பார், 'பருத்திநூல் முறுக்கி விட்டுப் பஞ்சியேது மாந்தரே, திருத்திநூல் முறுக்கிவிட்டுத் துன்ப நீங்க வல்லிரேல், கருத்தினால் கலைபடுங் காவனால் கழிந்திடும், திருத்திநூல் கவலறும்' எனவும், அங்ஙனமானபின் சிவ சம்பந்தப்பட்டிருக்கக் கூடுமென்பார், 'சிவாயவஞ் செழுத்துமே' எனவுங் கூறினர்.

இச்செய்யுள் வாசிமார்க்கத்தைக் கூறுகின்ற தாகையால் யோக வழி என்னப்பட்டது. 120

## அத்துவிதம்

சாவதான தத்துவச் சடங்குசெய்யு மூமைகாள்
தேவர்கல்லு மாவரோ சிரிப்பதன்றி யென்செய்வேன்
மூவராலு மறியொணாத முக்கணன் முதற்கொழுந்து
காவலாக வும்முளே கலந்திருப்பன் காணுமே.

(பொ - ரை) தத்துவங்களையே ஒரு மார்க்கமாகக்கொண்டு அவ்வழியேநின்று அதையே ஆராய்ந்து பலவகையா யலைகின்ற தத்துவ ஞானிகளே! நீங்கள் ஆலயங்களுக்குச்சென்று ஆங்காங்குள்ள சிலாரூபங்களைத் தெரிசித்து எங்கள் தெய்வமாகுமென்று கைகூப்பி ஓ சங்கரா! சம்பூ! சாமகீத பிரியா! என்று பலவகையாய்த் துதிக்கின்றீர். அந்தோ! தேவர்களும் கல்லாயிருப்பார்களோ? இரார். ஆகையால், நீங்கள் செய்யும் காரியங்கள் எங்களுக்குச் சிரிப்பை விளைவிக்கின்றதே இதற்கு நான் என்னசெய்வேன்? ஆகலான் நீங்கள் பிரம, விஷ்ணு, ருத்திராதிகளாலு மறியப்படாத திரிநேத்திரதாரியும், சித்தாந்த மதத்திற்கு சிவக்கொழுந்தும், உங்களது உயிருக்குக் காவலுமாய்க் கலந்திருக்கின்ற சிவபெருமானை இனியேனுங் கண்டு ஆநந்திப்பீராக எ - று.

உலகத்தில் தத்துவ வாராய்ச்சியின்கண் காலம்போக்கும் தத்துவ ஞானிகள் பெரும்பாலோரா யிருக்கின்றனர் என்பார், 'சார்வதான தத்துவச் சடங்குசெய்யு மூமைகாள்' எனவும், உலகத்தாரால் ஸ்தாபிக்கப்பட்டனவாயுள்ள சிலாரூபங்கள் தேவர்களாகா வென்பார், 'தேவர்கல்லுமாவரோ' எனவும், அங்ஙனம் உலகர்களால் செய்யப் படும் இக்காரியம் பெரும்பாலும் நகைக்கத் தக்கதே யென்பார், 'சிரிப் பதன்றி யென்செய்வேன்' எனவும், நமது சிவமென்னும் பொருள் துரியபதத்ததாகலின் எந்தத் தேவராலு மறியப்படாததே யாகுமென் பார், 'மூவராலு மறியொணாத முக்கணமுதற் கொழுந்து' எனவும், இறைவன் ஒவ்வோருயிர்களிற் காவலாய்க் கலந்திருப்பா னென்பார், 'காவலாக வும்முளே கலந்திருப்பன்' எனவும். அவனையே ஆன்மாக்க ளெல்லாம் அடைய வேண்டுமென்பார், 'காணுமே' எனவுங் கூறினார்.

இச்செய்யுள் ஈஸ்வரன் சீவனிடத்தில் கலந்திருப்பதைக் கூறு கின்றதாகையால் அத்துவிதம் என்னப் பட்டது. 121

## சரியை விலக்கல்

காலைமாலை நீரிலே முழுகுமந்த மூடர்காள்
காலைமாலை நீரிலே கிடந்ததேரை யென்பெறும்
காலமே யெழுந்திருந்து கண்கண்மூன்றி லொன்றினால்
மூலமே நினைப்பிராகில் முத்திசித்தி யாகுமே.

(பொ - ரை) சரியாமார்க்கத்திற் கூறியபடி நியமவிதியாகச் சுத்த தீர்த்தத்தைத் தேடிப்போய்க் காலையிலும், மாலையிலும் ஸ்நானஞ் செய்கின்ற மந்தபுத்தியினால் மூடர் என்னும் பேர்படைத்தவர்களே! (நீங்கள்தாம் அந்தந்த வேளைகளில்போய் ஸ்நானஞ்செய்கின்றீர் கள்.) காலமெல்லாம் நீரிலேயே கிடக்கின்றதேரை அங்ஙன மிருத் தலால் அடைந்த பிரயோசனம் என்ன விருக்கின்றது? ஒன்று மில் லையே. ஆகையால், நீங்கள் அங்ஙனஞ்செய்து சலதோஷ ரோகத்தை

வருவித்துக் கொள்ளாவண்ணம் அதைவிட்டு, விடியற் காலையி லெழுந்து அகக்கண், புறக்கண்களாம் மூன்று கண்களில் ஒன்றேயா யிருக்கும் அகக்கண்ணைக்கொண்டு (அதாவது அறிவைக் கொண்டு) மூலாதாரத்தில் எழுந்தருளியுள்ள சர்வேஸ்வரனை ஸ்மரிப்பீராஞல் மோட்சமானது கைவல்லியமாகும் எ - று.

தின மிருவேளையுந் தீர்த்தமாடுவதில் தேவாசிரியனைக் காணக் கூடுமோ வென்பார், 'காலைமாலை நீரிலே முழுகுமந்த மூடர்காள்' எனவும், அங்ஙனம் சதாசலத்திலிருக்கின்ற தேரையும் இறைவனைக் கண்டதில்லையே யென்பார், 'காலைமாலைநீரிலே கிடந்ததேரை யென் பெறும்' எனவும், அகக்கண்மார்க்கமாக ஈஸ்வரனைச் சிந்தித்தாலே பயன்பெறலா மென்பார், 'காலமே யெழுந்திருந்து கண் கண் மூன்றி லொன்றிஞல், மூலமே நினைப்பிராகில் முத்தி சித்தி யாகுமே' எனவுங் கூறிஞர்.

இது சரியா மார்க்கமாகிய நியமத்தை நீக்கிப் பத்தியைச் சாதித்த படியால் சரியை விலக்கல் என்னப் பட்டது. 122

## மதவாத மறுத்தல்

எங்கள்தேவ ருங்கள்தேவ ரென்றிரண்டு தேவரோ
இங்குமங்கு மாயிரண்டு தேவரே யிருப்பரோ
அங்குமிங்கு மாகிநின்ற வாதிமூர்த்தி யொன்றலோ
வங்கவாரஞ் சொன்னபேர்கள் வாய்புழுத்து மாள்வரே.

(பொ - ரை) எங்கள்தெய்வம் ஒன்ருகவும், உங்கள்தெய்வம் ஒன் ருகவும், ஆக இரண்டுதெய்வங்கள் இருக்குமோ. அங்ஙன மிருக்கு மாயின் இங்கொரு தெய்வமாகவும், அங்கொரு தெய்வமாகவு மல் லவோ யிருத்தல் வேண்டும்? அங்ஙனமில்லையே. ஆகையால், அவ்வி டத்திலும் இவ்விடத்திலும், எவ்விடத்திலும் நிறைந்திருக்கின்ற தெய்

வம் ஒன்றேயாகும். அதுவே ஆதி சொரூபமானதாகும். இங்ஙனங் கொள்ளாமல் தங்கள் தங்கள் வாய்க்கு வந்தபடி உளரித் திரிகின்ற வீணர்கள் தங்களது வாயில் புழுநெளிய வருந்தி எமபுரத்தை யடைவார்கள் எ - று.

எங்கும் நிறைந்த கடவுள் ஒருவனே யாவனென்பார், இங்ஙனங் கூறினர்.

கடவுள் ஒருவனே எங்குநிறைந்தவன் என்றதை:

"அங்கிங்கெனாதபடி யெங்கும் பிரகாசமா
யாநந்த பூர்த்தியாகி" என்பதினு லறிக.

இது கடவுள் ஒருவனே யென்று சாதித்தலின் மதவாதமறுத்தல் என்னப்பட்டது. 123

## தூமை விலக்கல்

அறையறை யிடைக்கிட வன்றுதூமை யென்கிறீர்
முறையறிந்து பிறந்தபோது மன்றுதூமை யென்கிறீர்
துறையறிந்து நீர்குளித்தா லன்றுதூமை யென்கிறீர்
பொறையிலாத நீசரோடும் பொருந்துமாற தெங்ஙனே.

(பொ - ரை) சொல்லப்படும் அரையின்கண் வயது வந்திருக்கும் போதும் பிரசவமான காலத்திலும், நீர் குளிக்கிற காலத்திலும் தீட்டு தீட்டு என்று சொல்லுகின்றீர். அப்படிப்பட்ட (விசாரணையால்வரும்) பொறுமையில்லாத நீசர்களாகிய உங்களுடன் எப்படி சிநேகிக்கக் கூடும்? எ - று.

உலகத்தின்கண் வீட்டுத்தூரமாகிற மூன்று நாட்களையும் குளி குளித்திருக்கின்ற பத்துநாட்களையும் புஷ்பவதியாகின்ற நாட்களையும் தீட்டு நாட்களென்று சொல்லுவது வழக்கமாக விருக்கிறபடியால் இங்ஙனங் கூறினர். 124

## மெய்ப்போத விளைவு

சுத்தம்வந்த வெளியிலே சலமிருந்து வந்ததும்
மத்தமாகி நீரிலே துவண்டுமூழ்கு மூடரே
சுத்தமேது கட்டதேது தூய்மைகண்டு நின்றதேது
பித்தர்காய முற்றதேது பேதமேது போதமே.

(பொ - ள்) மதப்பேய் பிடித்தவர்களாய் நீரில் துவண்டு மூழ்கு கின்ற மூடரே! சத்தமுண்டான வெளியிலிருந்தல்லவோ சலமுண்டாயது? அப்படி யிருக்க அந்தச் சலத்தில் மூழ்கும் உங்களுக்குச் சுத்தம் எங்கிருந் துண்டாயது? முத்திரைகள் என்? அந்தச் சுத்தம் இப்படிப்பட்டதென்று உணர்ந்ததும் எது? ஆகையால், பித்தர்களே! இவைகளில் பேதங் கொள்ளாதீர்கள், போதத்தைக் கொள்ளுங்கள் எ - று.

## பிறவி வந்தவிதம்

மாதமாதந் தூமைதான் மறந்துபோன தூமைதான்
மாதமற்று நின்றலோ வளர்ந்துரூப மானது
நாதமேது வேதமேது நற்குலங்க ளேதடா
வேதமோதும் வேதியா விளைந்தவாறும் பேசடா.

(பொ - ரை) நான்கு வேதங்களையும் ஓதுகின்ற பிராமணா! மாதத்திற் கொருமுறை வெளிப்பட்டுக் கொண்டிருக்கிற தூமையானது (சோரியானது) மாதமாதம் வெளிப்படாமல் நின்றுதானே குழந்தை ரூபமாய் தாய் கர்ப்பத்தில் வளர்ந்தது. அப்படி யிருக்கும்போது நாதமென்றும், வேதமென்றும், உயர்ந்த சாதி யென்றுஞ் சொல்லுவது எதடா? அதற்கு வேறு நியாயமிருந்தால் சொல் எ - று.

சோரிதடைப்பட்டு என்று இவர் ஒன்றைமட்டுஞ் சொன்னாலும் இனம்பற்றி இரண்டையுமே கொள்ளவேண்டும். இரண்டு என்றால்,

விந்துவையும் சோணிதத்தையும் என்பது பொருள், விந்துசேர்ந்த விடத்திலேயே சோணிதம் தடைப்படுமாதலான். 126

தூமையற்று நின்றலோ சுதீபமுற்று நின்றது
ஆண்மையற்று நின்றலோ வழக்கமற்று நின்றது
தாண்மையற்று ஆண்மையற்று சஞ்சலங்க ளற்றுநின்ற
தூமைதூமை யற்றகாலஞ் சொல்லுமற்று நின்றதே.

(பொ - ரை) வீட்டுக்கு வெளிப்புறத்தில் ஒதுங்கி யிருக்கத்தக்க தூமையானது (உதிரமானது) மாத மாதம் வாராமல் நின்றபோதே சுத்ததீபோதயமானது? ஆண்மை ஒழிந்தவிடத்தி லல்லவா வழக்கமொழிந்தது? தாண்மை, ஆண்மை என்கிற இரண்டும் அவைகளுடன் சஞ்சலங்களும் அற்ற தூமையால் வந்தால் அந்தத் தூமையும் ஒழிந்த காலத்தினன்றோ சொல்லிறந்த மௌனஞானத்தை யடையக் கூடும். ஆகையால், நம்போலியர் தூமையாகிய கிர்த்தியங்களை நீக்கவேண்டுமென்பதும், அங்ஙனம் நீக்கினதினால் மௌன ஞானத்தை யடையலாம் என்பதும் அறியவேண்டும். 127

## தூமையின் பிரிவு

ஊறிநின்ற தூமையை யுறைந்துநின்ற சீவனை
வேறுபேசி மூடரே விளைந்தவாற தேதடா
நாறுகின்ற தூமையல்லோ நற்குலங்க ளாவன
சீறுகின்ற மூடனேயத் தூமைநின்ற கோலமே.

(பொ - ரை) தேகத்தின்கண் ஊறியிருந்த சோணிதத்தை யொட்டிநின்ற சீவனை, அது வேறு இது வேறு என்று பிரித்துப் பேசினதினால் உண்டான லாபம் என்னவிருக்கிறது? மூடா! அப்படிப் பட்ட கொடியநாற்றம் வீசுகின்ற தூமையல்லவோ உயர்ந்த சாதிகளாயினவை? இங்ஙனமாவதை யறியாது கோபிக்கின்ற அறிவில்லாத

வனே! எல்லாம் அந்தத் தூமையாலுண்டான கோலமென்றே தெரிந்துக் கொள் எ - று.

சோணிதமானது விந்துவின் சம்பந்தத்தை யடைந்து கருப்பத்தில் சீவனுடன்கூடி வளருகிறது சகசமாகையால், 'ஊறுகின்ற தூமையை யுணர்ந்துநின்ற சீவனே' எனவும், அத் தூமை திரண்டமையாலுண்டான தேகங்களே உலகத்திலுள்ள பிறவிகளெல்லா மாகையால், 'நாறுகின்ற தூமையல்லோ கற்குலங்க ளாயின' எனவும், கூறினர். 128

## இதுவுமது

தூமைகண்டு நின்றபெண்ணின் தூமைதானு மூறியே
சீமையெங்கு மாணும்பெண்ணும் சேர்ந்துலகங் கண்டதே
தூமைதானு மாசையாய் துறந்திருந்த சீவனே
தூமையற்று கொண்டிருந்த தேசமேது தேசமே.

(பொ - ரை) சோணிதம் வெளிப்பட்டுப் பின்னர் தடைப்பட்டிருந்த அது கருப்பத்தில் ஊறி உலகமான இதில் மீண்டு மீண்டும் ஆணும், பெண்ணும் சேர்ந்து உலகமாயிற்று. அந்தத் தூமையின்மேல் ஆசைப்பட்டு விலகியிருந்த சீவனே, தூமை நின்றபின் சேர்ந்து பிறந்திருக்கின்ற தேசம் எது? எதுவுமில்லை எ - று.

தூமையான மாதவிடாய் நின்றபின் சையோகித்துப் பிள்ளை பெற்றவர்கள் இல்லை என்பது கருத்து. 129

## அவாவை ஒழித்தல்

வேணும்வேணு மென்றுநீர் வீணுழன்று தேடுவீர்
வேணுமென்று தேடினாலு முள்ளதல்ல தில்லையே
வேணுமென்று தேடுகின்ற வேட்கையைத் திறந்தபின்
வேணுமென்ற வப்பொருள் விரைந்துகாண லாகுமே.

(பொ - ரை) சகல சம்பத்துகளும் வேண்டுமென்று வீணாகத் தேடி வருந்துவீர். நீங்கள் எவ்வளவு பிரயாசைப்பட்டுத் தேடினாலும் உள்ளதே கைகூடுமே யொழிய அதிகமாக நினைத்தது கைகூடாது. ஆகையால், அப்படி வைத்திருக்கும் ஆசையை ஒழிப்பீரானால் சகலரும் விரும்பும் அப் பொருளைத் தரிசிக்கலாம் எ - று.

அவாவை ஒழித்தால் இறைவனுடைய திருவருளைப் பெறலாம் என்பது கருத்து. 130

### ஞானத்தின் பின்விளைவு

சிட்டரோது வேதமுஞ் சிறந்தவாக மங்களும்
நட்டகார ணங்களும் நவின்றமெய்மை நூல்களும்
கட்டிவைத்த போதகங் கதைக்குகந்த பித்தெலாம்
பொட்டதாய் முடிந்ததே பிரானையா னறிந்தபின்.

(பொ - ரை) நான் யாவர்க்கும் பரம்பொருளாகிய சிவபெருமானைக் கண்டபின்னர் முன்னோரிற் பெரியோர் படித்துவைத்த வேதங்களும், ஆகமங்களும், நாட்டப்பட்ட காரணங்களும், உண்மையாகச் சொல்லப்பட்ட சாத்திரங்களும், கட்டிவைத்த கதைகளும், அவற்றில் பிடித்திருந்த பித்தங்களும் ஆகிய இவையெல்லாம் ஒன்றுமில்லாமற்போயின எ - று.

சிவபெருமான் திருவருள் கிடைத்த பின்னர் முன் கற்ற நூற்கள் யாவும் பயன்படாமற் போயின என்பது கருத்து. 131

### கற்பம் விலக்கல்

நூறுகோடி யாகமங்கள் நூறுகோடி மந்திரம்
நூறுகோடி நாளிருந்து மோதினால தென்பயன்
ஆறுமாறு மாறுமா யகத்திலோ ரெழுத்துமாய்
ஏறுசி ரெழுத்தையோத வீசன்வந்து பேசுமே.

(பொ - ரை) நூறு கோடி என்னும் அளவு சொல்லப்படாத ஆகமங்களையும், அளவு சொல்லப்படாத மந்திரங்களையும், அநேக வருஷங்கள் உயிருடனிருந்து பாராயணஞ் செய்துவந்தாலும் என்ன பயனுண்டாகும். ஆறு ஆறு முப்பத்தாறும் மனத்தின்கண் ஒன்றாயும் விளங்குகின்ற அட்சரத்தை உள்ளன்போடு துதித்தால் ஈஸ்வரன் வந்து உங்களிடத்தில் வந்து பேசுவான் எ - று.

சாஸ்திரங்களையும் மந்திரங்களையும் பாராயணஞ் செய்தற் பொருட்டு காயகற்பஞ் செய்துகொள்வது சகசமாகையால் அதை நீக்கி ஈஸ்வர தியானஞ் செய்யும்படி அறிவுறுத்தியதென்க. 132

## மோன நிலை

காலைமாலை தம்மிலே கலந்துநின்ற காலனார்
மாலைகாலை யாச்சிவந்த மாயமேது செப்பிடீர்
காலைமாலை யற்றுநீர் கருத்திலே யொடுங்கினால்
காலைமாலை யாகிநின்ற காலனில்லை யில்லையே.

(பொ - ரை) காலையிலும் மாலையிலும் தங்கள் தங்கள் உள்ளத்தின்கண் கலந்திருக்கின்ற காலனானவன் உள்ளவனாகவிருக்கவும், மாலையானது காலையாகச் செவந்துவிடுகின்ற மாய்கை இன்னதென்று தெரியவில்லை. ஆகையால், அதை உலகத்தவர்களே! நீங்கள் கண்டு பிடித்துச் செல்லுங்கள். இங்ஙன மிருப்பதை உணரக்கூடாமற் போனால் அந்தக் காலை யென்பதும், மாலை யென்பது மற்று தங்கள் தங்கள் மனத்தையே சாட்சியாகக்கொண்டு ஒடுங்கினால் காலையும் மாலையும் உங்களில் கலந்தே யிருக்கின்ற காலன் இல்லையாய் விடுவன் எ - று.

எமனுக்கு இதுதான் வேளையென்று ஒன்றில்லாமையால், 'காலை மாலை தம்மிலே கலந்துநின்ற காலனார்' எனவும், அப்படி யிருந்தும்

மோனநிலை யுள்ளவர்களிடத்தில் அது செல்லவில்லை யென்பார்; 'மாலைகாலை யாய்ச்சிவந்த மாயமேது' எனவும், இதை உலகத்தார்கள் உணரவேண்டியது அவசியமாகலின், 'செப்பிடீர்' எனவும், நீங்கள் மௌனசாதனஞ் செய்தால் அந்த எமன் நாடமாட்டானென்பார், 'காலைமாலை யற்றநீர் கருத்திலே யொடுங்கினல், காலைமாலை யாகிநின்ற காலனில்லை யில்லையே' எனவுங் கூறினர்.

இது எமனை மௌன ஞானத்தால் வெல்லலாம் என்று சொல்லியதாகலின், மோன நிலை என்னப்பட்டது. 133

## மும்மண்டலச் சிறப்பு

எட்டுமண்ட லத்துளே யிரண்டுமண்ட லம்வளைத்து
இட்டமண்ட லத்துளே யெண்ணியாறு மண்டலம்
தொட்டமண்ட லத்திலே தோன்றி மூன்றுமண்டலம்
நட்டமண்ட பத்துளே நாதனுடி நின்றதே.

(பொ - ரை) சூரியசந்திரர்கள் மண்டல முதலிய எண் வகையான மண்டலங்களுள் சூரிய மண்டலத்தையும், சந்திரமண்டலத்தையும் வளைத்து இடப்பட்ட மண்டலத்துள் ஆறுதாரங்களாகிய மண்டலங்களில் மூன்று மண்டலங்களாகிய சோம, சூரிய, அக்கினி மண்டலங்கள் தோன்றும். ஆகையால், அந்த மண்டபத்திலேயே சர்வேச்சுரன் நடித்து நின்றான் எ - று.

இது மும்மண்டலங்களின் விசேடத்தையே சொல்லுகின்றதாகலின் மும்மண்டலச் சிறப்பு என்னப்பட்டது. 134

## இதுவுமது

நாவிரண்டு மண்டலத்துள் நாதனின்ற தெவ்விடம்
காவிரண்டு மூலநாடி கண்டதங் குருத்திரன்

சேரிரண்டு கண்கலந்து திசைகளெட்டு மூடியே
மேலிரண்டு தான்கலந்து வீசியாடி நின்றதே.

(பொ - ரை) உலகத்தில் சர்வசாஸ்திரங்களிலுஞ் சொல்லப்பட்டு வரும் எட்டு மண்டலங்களுள் சர்வேஸ்வரனவ னிருப்பது எந்த விடம்? இரண்டு வாசிகளும் நடுமூல மென்னும் அநாகதத்தின்கண் தாரணை மார்க்கத்தால் ருத்திரனைத் தரிசித்ததாகும், சேர்த்த இரண்டு கண்களும் கலந்து அஷ்ட திசைகளையும் மூடி மேலே விசுத்தி, ஆஞ்ஞை என்கிற இரண்டிலுங் கலந்து வீசி ஆடி நின்றது எ - று.

மூலநாடியின்கண்ணே ருத்திரதரிசனஞ் செய்யவேண்டு மென்பது கருத்து. 135

## இரண்டறக் கலத்தல்

அம்மையப்ப னப்புநீ ரறிந்ததே யறிகிலீர்
அம்மையப்ப னப்புநீ ரரியய னரனுமாய்
அம்மையப்ப னப்புநீ ராதியாதி யானபின்
அம்மையப்ப னன்னையன்றி யாருமில்லை யானதே.

(பொ - ரை) அம்மையப்பன், அப்புபூதம், நீர் இவைகளை நீர் பிரத்தியட்சமாகக் கண்டிருந்தும், அவற்றிலுண்மையை அறியமாட்டீர், அவைகளே, பிரம, விஷ்ணு, ருத்திரர்களா யிருப்பனவாகும். ஆகையால், இவைகளே யானபின் அம்மையப்பனு யுள்ளவன் உன்னை யன்றி ஒருவருமில்லை எ- று.

எல்லாஞ் சிவமயமே யாகையால் இரண்டறக் கலத்தல் என்னப்பட்டது. 136

## இரகசியம்

உருத்தரிப்ப தற்குமுன் னுடல்கலந்த தெங்ஙனே
கருத்தரிப்ப தற்குமுன் காரணங்க ளெங்ஙனே

பொருந்திவைத்த போதமும் பொருந்துமாற தெங்ஙனே
குருத்திருத்தி வைத்தசொல் குறித்துணர்ந்து கொள்ளுமே.

(பொ - ரை) இந்தச் சீவனானவன் வேறொரு உடலை யெடுப்ப தற்கு முன் எந்த உடலிற் கலந்திருந்தது? தாயின் கர்ப்பத்தில் கருவா யமையாதமுன்னர் என்ன காரணமா யிருந்தது? அப்போது உபதே சஞ் செய்துவைத்த உண்மை ஞானமானது பொருந்தும் விதம் எப்ப டியோ? குருவானவர் உபதேசித்த சொல்லைக் கொண்டு நன்ரு யாராய்ந் தறிந்துகொள்ளும் எ - று.

சீவன் தேகத்தை யெடுப்பதற்குமுன் எவ்விட மிருந்ததோ தெரி யாதென்பார், 'உருத் தரிப்பதற்குமுன் னுடல்கலந்த தெங்ஙனே' எனவும், இது தாயின் கர்ப்பத்தி லமையா முன்னர், எங்கிருந்ததோ வென்பார், 'கருத்தரிப்ப தற்குமுன் காரணங்க ளெங்ஙனே' எனவும், இங்ஙனமிருப்பதால் உபதேசித்த உபதேசம் எவ்விடத்திலிருந்து பெற்றது என்பார், பொருத்திவைத்த போதமும் பொருந்துமாற தெங்ஙனே' எனவும், இவையனைத்தும் ஆசாரியனால் தெரிந்து கொள்ளவேண்டிய தென்பார், 'குருத்திருத்தி வைத்தசொல் குறித் துணர்ந்து கொள்ளுமே, எனவுங் கூறினர். 137

## முடிவின் விளைவு

ஆதியுண்டு வந்தமில்லை யன்றுநாலு வேதமில்லை
சோதியுண்டு சொல்லுமில்லை சொல்லிறந்த தேதுமில்லை
ஆதியான மூவரி லமர்ந்திருந்த வாயுவும்
ஆதியன்று தன்னையும் மாரறிவ தண்ணலே.

(பொ - ரை) முதற்பொரு ளிருக்கின்றது, கடைப்பொருளில்லை, அன்றி நான்கு வேதங்களுமில்லை, தேஜோமயமுண்டு, வாக்கில்லை, சொல்லிறந்த வஸ்துக்கள் எதுவுமில்லை முதன்மையான மூவர்களில்

சம்பந்தப் பட்டிருந்த வாயுவானது ஆதிப்பொருளா யறியாதபோது வேறயாவர் அறிய வல்லவர் எ - று.

ஆதிப்பொருளுக்கு ஆதியென்கிற ஒருபொருள் உண்டு என்கிற சொல்வழக்க முண்டாகலின், 'ஆதியுண்டு' எனவும், அந்தப் பொருளுக்கு அந்தமில்லையென்பார், 'அந்தமில்லை' எனவும், இவ்விஷயம் வேதங்களிலுங் கிடையாதென்பார், 'நாலுவேதமில்லை' எனவும், ஈஸ்வரன் தேஜோமயனென்பார், 'சோதியுண்டு' எனவும், அவனை யடைந்தவர்களுக்கு சொல்லிறச்குந் தன்மையுண்டென்பார், 'சொல்லுமில்லை' எனவும், அதுபோன்ற சொல்லிறந்த வஸ்துக்கள் வேறில்லையென்பார், 'சொல்லிறந்த தேதுமில்லை' எனவுங் கூறினர். 138

## கடவுளுக்கு முக்கிய இடம்

புலால்புலால் புலாலதென்று பேதமைகள் பேசுநீர்
புலாலைவிட்டு மெம்பிரான் பிரிந்திருந்த தெங்ஙனே
புலாலுமாய்ப் பிதற்றுமாய் பேருலாவுந் தானுமாய்
புலாலிலே முளைத்தெழுந்த பித்தர்காணு மத்தனே.

(பொ - ரை) இது புலால் இது புலால் என்று அவமதித்துப் பேசும் அறிவீனர்களே! சர்வேச்சுரனனவன் புலாலைவிட்டுப் பிரிந்திருந்த நாளுமிருக்கின்றதோ! இல்லை. ஆகையால், நீங்கள் சொல்லும் அந்தப் புலாலாகவும் பிதற்றுதலாகவும், பேர்பெற்றதாகவு மிருந்து பின்னர் அந்தப் புலாலின்கண்ணே முளைத்தெழுந்தவன் எம்முடைய தலைவனுவான் எ - று.

புலாலென்று நீங்கள் அவமதிக்கின்ற இந்தத் தேகத்தின் கண்ணேயே இறைவனும் வசிக்கின்றான் என்பது கருத்து. 139

## சைவ நீக்கல்

உதிரமான பால்குடித் தொக்கநீர் வளர்ந்ததும்
இதரமா யிருந்ததொன்றி ரண்டுபட்ட தென்னலாம்

மதிரமாக விட்டதேது மாமிசம்புலாலதென்று
சதிரமாய் வளர்ந்ததேது சைவரான மூடரே.

(பொ - ரை) இரத்தப் பசுமையைப் பெற்றுள்ள பாலைகுடித்து நீங்கள் வளர்ந்ததும், அதை மறந்து அந்த இரத்தத்தை வேருகவும் பாலை வேருகவும் கொள்ளுகிறீர், அங்ஙனங்கொள்வது சரியா யில்லாமையாலும் பாலை இன்னுங்குடித்து வருவதாலும் மாமிசத்தைப் பாலென்று விட்டதேது? அதைவிட்டு வளர்ந்ததேது? சைவரென்னும் மூடர்களே! எ - று.

இரத்தத்தின் சார்பாகிய பாலைச்குடிப்பதால் மாமிசபட்சணஞ் செய்வதை விட்டும் என்ன பயனுண்டாகும், என்பது கருத்து.

சைவர்களே இங்ஙனஞ் செய்கின்றவர்களாகையால், 'சைவரான மூடரே' என அவர்களை விளித்தும், பால் இரத்தத்தின் ஒரு சார் பென்பார், 'உதிரமான பால்குடித் தொக்கநீர் வளர்ந்ததும்' எனவும், இங்ஙன மிருப்பதால் புலால் விடப்படவில்லை யென்பார், 'மதிரமாக விட்டதேது மாமிசம் புலாலதென்று' எனவுங் கூறினர். 140

## மதாசாரம் விலக்கல்

உண்டகல்லை யெச்சிலென் றுள்ளெறிந்து போடுறீர்
கண்டவெச்சில் கையல்லோ பரமனுக்கு மேறுமோ
கண்டவெச்சில் கேளடா கலந்தபாணி யப்பிலே
கொண்டசுத்த மேதடா குறிப்பிலாத மூடரே.

(பொ - ரை) சாப்பிட்ட கலத்தை எச்சிலென்று சொல்லி எறிந்து விடுகின்றீர்கள். அப்போது அதிலிருந்து எடுத்துச் சாப்பிட்ட உங்கள் கை எச்சிலல்லவோ? அந்தக் கை மாத்திரம் கடவுளுக்கு அருக்கமாமோ? ஆகையால், இன்னும் நாம் கண்ட எச்சிலைக் கேளுங்கள். அதாவது, கலத்தில் நீங்கள் எச்சிலென்று சொல்லுகின்ற பொருள்

கள் எவையுள்ளனவோ அவைகளெல்லாங் கலந்திருக்க அதை மாத்திரம் எச்சிலென்று சொல்லாமல் கொண்ட சுத்தமென்ன. ஆகையால், நீங்கள் அறிவில்லாத மூடர்களாவீர்கள் எ - று.

எச்சிலென்று சொல்லும்பொருள் ஒன்றும் இல்லை என்பது கருத்து. 141

## எல்லாம் போய் எனல்

ஓதிவைத்த நூல்களு முணர்ந்துகற்ற கல்வியும்
மாதுமக்கள் சுற்றமு மறக்கவந்த நித்திரை
ஏதுபுக் கொளித்ததோ வெங்குமாகி நின்றதோ
சோதிபுக் கொளித்தமாயஞ் சொல்லடா சுவாமியே.

(பொ - ரை) முன்னோர்களால் சொல்லி வைக்கப்பட்ட சாஸ்திரங்களும், ஆசாரியன்பாலுணர்ந்த கல்வியும், பெண்கள், பிள்ளைகள், சுற்றத்தார் இவர்களெல்லாம் நித்திரையில் மறந்தபொருள்கள் போலாம். ஆகையால், இப் பொருள்களெல்லாம் சீவனொடுக்குங் காலத்தில் எவ்விடத்தில் போய் மறைந்ததோ? அன்றி, எங்குமே பரவியிருந்ததோ? அன்றி, தேஜோமயத்தில் கலந்ததோ? தெரியவில்லை. ஆகையால், அந்த மாயத்தை ஓ சுவாமீ! எனக்குத் தெரிவிக்கவேண்டும் எ று.

நாம் கற்றுணர்ந்த சர்வசாஸ்திரங்களும் அவற்றின் பயனும் சீவனொடுங்குங்காலத்தில் பயன்படாம லொழியு மென்பார், 'ஓதி வைத்த நூல்களு முணர்ந்துகற்ற கல்வியும், மாதுமக்கள் சுற்றமும் மறக்கவந்த நித்திரை' எனவும், அங்ஙனம் இறந்து பட்டபின் இவை எவ்விடத்தில் செல்லுகின்றனவோ வென்பார், 'ஏதுபுக் கொளித்ததோ சொல்லடா சுவாமியே' எனவுங் கூறினர். 142

## உலகர் பத்தி போய்யெனல்

ஈனொருமை யின்கழுத்தி விட்டபொட்ட ணங்கள்போல்
மூணுநாலு சீலையில் முடிந்தவிழ்க்கு மூடர்காள்

மூணுநாலு லோகமு முடிவிலாத மூர்த்தியை
ஊணியூணி நீர்முடிந்த வுண்மையென்ன வுண்மையே.

(பொ - ரை) சூல் ஈனும் எருமையின் கழுத்தில் பலவகையாக முடிகளிடுவதுபோல் மூன்று நான்கு சீலைகளில் முடிந்து முடிந்து அவிழ்க்கும் மூடர்களே! எழு லோகங்களிலும் முடிவு சொல்லப்படாத சர்வேஸ்வரனை நன்றாக ஊன்றிப் பார்த்து நீங்கள் உங்கள் மனத்தில் கட்டி வைத்தது உண்மைதானோ எ - று.

ஈனும் எருமையின் கழுத்தில் பொட்டணங்கட்டுவது சுபாவ மாகையால், 'ஈனெருமை யின்கழுத்தி லிட்டபொட்ட ணங்கள்போல்' எனவும், மூடர்களும் அவ்வாறே முடிந்து வைப்பது சுபாவமென் பார், 'மூணுநாலு சீலையில் முடிந்தவிழ்க்கு மூடர்காள்' எனவும், இறைவன் எவ்வுலகத்தும் முடிவிறந்தா னென்பார், 'மூணுநாலு லோகமு முடிவிலாத மூர்த்தியை' எனவும், அவனை எல்லாரும் உண்மையாகவே நம்பவேண்டுமென்பார், 'ஊணியூணி நீர்முடிந்த வுண்மையென்ன வுண்மையே' எனவுங் கூறினார். 143

## சரீர நிலையாமை

சாவல்நாலு குஞ்சதஞ்சு தாயதான வாறுபோல்
காயமான கூட்டிலே கலந்துசண்டை கொள்ளுதே
கூவமான கிழநரிக் கூட்டிலே புகுந்தபின்
சாவல்நாலு குஞ்சதஞ்சுந் தானிறந்து போனவே.

(பொ - ரை) நான்கு சாவல்களும், ஐந்து குஞ்சுகளும் ஆகிய இவைகளுக்கு தாயானவிதம்போல் இவைகளைக் காயமான இந்தக் கூண்டிலே கலந்து சண்டை செய்கின்றது. ஆகையால், அந்தக் கூண் டில் ஒரு கிழநரியானது புகுந்தால் நான்கு சாவல்களும், ஐந்து குஞ்சு களும் இறந்துபட்டனவே யாகும் எ - று.

அந்தக் காரணங்களே கெடுதியை விளைவிக்கின்றன வென்பார், 'சாவல்நாலு' எனவும், ஐம்பூதங்களும் அவற்றின் ஒரு சார்பே யென்பார், 'குஞ்சதஞ்சு' எனவும், இவற்றிற் கெல்லாம் முக்கியமானது சீவனென்பார், 'தாயதான வாறுபோல்' எனவும், இவைகளெல்லாம் இந்தத் தேகத்திலேயே சண்டையிடுவ தென்பார், 'காயமான கூட்டிலே கலந்துசண்டை செய்யுதே' எனவும், அங்ஙனஞ் சண்டையிட்டிருக்கும்போது எமனெனவன் வந்து கொல்லுவானென்பார், 'கூவமான கிழநரிக் கூட்டிலே புகுந்தபின், சாவல்நாலு குஞ்சதஞ்சுந் தானிறந்து போனவே' எனவுங் கூறினர். 144

## ஈஸ்வர பக்தி

மூலமாங் குளத்திலே முளைத்தெழுந்த கோரையை
காலமே யெழுந்திருந்து நாலுகட் டறுப்பிரேல்
பாலனாகி வாழலாம் பரப்பிரம மாகலாம்
ஆலமுண்ட கண்டர்பாத மம்மைபாத முண்மையே.

(பொ - ரை) மூலாதாரமென்னுங் குளத்தில் முளைத்துண்டான கோறையைக் காலையில் எழுந்திருந்து நான்குகட்டு அறுப்பீர்களானல் பாலனாக வாழலாம். பரப்பிரமமு மாகலாம். இது ஆலகால விஷத்தையுண்ட சர்வேஸ்வரனுடைய பாதத்தின்மேல் சத்தியமாக உண்மையேயாகும் எ - று.

மூலாதாரத்தின்கண் உண்டாகும் சரங்களைத் தன்வயப்படுத்திக் கொள்ளவேண்டு மென்பார், 'மூலமாங் குளத்திலே முளைத்தெழுந்த கோரையை, காலமே யெழுந்திருந்து நாலுகட் டறுப்பிரேல்' எனவும், அங்ஙனம் செய்வதால், இளமை மாறாமல் சிவசொரூபத்தை யடையலாம் என்பார், 'பாலனாகி வாழலாம் பரப்பிரம மாகலாம்' எனவும், இவ்வளவும் உண்மையே யென்பார், 'ஆலமுண்ட கண்டர்பாத மம்மைபாத முண்மையே, எனவுங் கூறினர். 145

## இதுவுமது

செம்பினிற் களிம்புவந்த சீதரங்கள் போலவே
சீவனுக் கழிவுவந்த சேதியேது செப்பிடீர்
அம்பினி லெழுதொணாத வணியரங்க சோதியை
வெம்பிவெம்பி வெம்பியே மெலிந்துமேல் கலந்திட
செம்பினிற் களிம்புவிட்ட சேதியேது காணுமே.

(பொ - ரை) உலகத்தில் ரசவாதிகளால் அநேகமாக நீக்குதற்குப் பிரயாசைப்படுகின்ற செம்பின் களிம்பானது அறாதவாறேபோல் சீவனுக்கும் அழிவுவந்ததில்லை. அப்படி ஏதாவது அழிவு வந்திருந்தால் சொல்லுங்கள் சித்திரக் கோலால் எழுதுதற்காகாத அழகிய சிற்றம்பலத்தில் விளங்குஞ் சோதியை, வெம்பிவெம்பி மெலிந்து அழுது கலத்தற்கு செம்பினிற் களிம்பு அற்ற சேதியாயின் முடியும் எ - று.

செம்பிலுள்ள களிம்பு அறாததுபோல் சீவனுக்கு அழிவில்லையென்பார், 'செம்பினிற் களிம்புவந்த சீதரங்கள் போலவே, சீவனுக் கழிவுவந்த சேதியேது செப்பிடீர்' எனவும், சர்வேஸ்வரனுடைய ரூபம் எழுதுதற் காகாததென்பார், 'அம்பினி லெழுதொணாத வணியரங்க சோதியை' எனவும், அதை அடையவேண்டுமானல் பாசம் ஒழியவேண்டுமென்பார், 'வெம்பிவெம்பி வெம்பியே மெலிந்துமேல் கலந்திட, செம்பினிற் களிம்புவிட்ட சேதியேது காணுமே' எனவுங் கூறினர். 146

## அக தரிசனம்

நாடிநாடி யும்முளே நயந்துகாண வல்லிரேல்
ஓடியோடி மீளுவா ரும்முளே யடங்கிடும்
தேடிவந்த காலனும் திகைத்திருந்து போய்விடும்
கோடிகால மும்முகந் திருந்தவாற தெங்ஙனே,

(பொ - ரை) சர்வேஸ்வரனை உம்முடைய மனத்தின்கண்ணே நாடிப் பலமுறையும் சிந்தித்துப்பார்க்க வல்லமையுடையீரானால் சர்வ லோகங்களிலுமுள்ள அடியார்களிடங்களில் சென்று அவர்களுக் கருளிச்செய்து வருகின்ற சர்வேஸ்வரனானவர் உமக்குள்ளேயே யடங்கியிருப்பார். அப்போது உங்களைத்தேடிவந்த காலனும் திகைத்திருந்து போய்விடுவான். இங்ஙன நிகழ்வதால் அநேககாலம் உயிருடன் ஜீவித்திருப்பார்கள் எ - று.

சர்வேஸ்வரன் சகல ஜீவர்களுடைய உள்ளத்திலு மிருப்பானென்பார், 'நாடிநாடி யும்முளே நயந்துகாண வல்லிரேல்' எனவும், அங்ஙனம் நீங்கள் சர்வேஸ்வரனைத் தேடுவீரானால் அவன் உம்முள்ளத்திலேயே கலந்திருப்பானென்பார், 'ஓடியோடி மீளுவாரும்முளே யடங்கிடும்' எனவும், அப்போது எமன் வருவதற்கு அஞ்சுவானென்பார், 'தேடிவந்த காலனும் திகைத்திருந்து போய்விடும்' எனவும், இங்ஙனம் செய்து இறைவனை யடைபவர்கள் காயசித்தியடைந்து அநேக காலம் உயிர்பெற்றிருப்பார்கள் என்பார், 'கோடிகோடி காலமுங் குறைவிலா திருப்பரே' எனவுங் கூறினர். 147

## இருவினை நீக்கம்

பிணங்குகின்ற தேதடா பிறங்ஞை கெட்டமூடரே
பிணங்கிலாத பேரொளி பிராணனை யறிகிலீர்
பிணங்குமோ ரிருவினைப் பிணக்கறுக்க வல்லிரேல்
பிணங்கிலாத பெரியவின்பம் பெற்றிருக்கலாகுமே.

(பொ - ரை) அறிவுகெட்ட மூடர்களே! கோபித்துக் கொள்வது ஏன்? அங்ஙனம் சுபாவ மனத்திற்கு கோபத்தை யுண்டாக்கியதினால் அக்கோபஞ் சிறிதுமில்லாத சர்வேஸ்வரனை நீங்க ளறிய மாட்டீர்கள். ஆகையால், இனி கோபிக்கின்ற நல்வினை தீவினையென்னும் இரு

வினை யென்னும் இரு வினைகளின் சேஷ்டைகளை யெல்லாம் ஒழிக்க வல்லமையுடையீரானல் பேரின்பத்தை யடைந்திருக்கலாகும் எ - று.

மூடர்களுக்குக் கோபஞ் சுபாவ மென்பார், 'பிணங்குகின்ற தேதையா பிரஞ்ஞைகெட்ட மூடரே' எனவும், அம்மூடர்கள் சர்வேஸ்வரனை யறியார் என்பார், 'பிணங்கிலாத பேரொளிப் பிராணனை யறிகிலீர்' எனவும், அங்ஙனம் அறிவதற்கு இருவினைகளையும் ஒழிக்க வேண்டு மென்பார், 'பிணங்குமோ ரிருவினைப் பிணக்கறுக்க வல்லிரேல்' எனவும், அவ்வினையை ஒழியப்பெறுவோர்க்கே பேரின்பங் கிடைக்கு மென்பார், 'பிணங்கிலாத பெரியவின்பம் பெற்றிருக்க லாகுமே' எனவுங் கூறினர். 148

## பிராமணர்கள் நிலை

மீனிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்
மீனிருக்கு நீரல்லோ மூழ்வதுங் குடிப்பதும்
மானிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்
மானுரித்த தோலலோ மார்பினூ லணிவதும்.

(பொ - ரை) பிராமணர்கள் பூர்வகாலந்தொட்டு இதுவரைக்கும் மீன் தின்றதில்லை. ஆனாலும், மீனிருக்கும் நீரல்லவோ அவர்கள் குளிப்பதும் குடிப்பதுமாக வாகின்றது: அன்றி, அதுபோலவே பிராமணர்கள் ஆதிகாலந்தொட்டு இதுவரைக்கும் மானிறைச்சியையுந் தின்கிறதில்லை. ஆனல், அவர்களுடைய மார்பில் பூணும் நூலுடன் சேர்த்து அணிவது அந்த மானின்தோலல்லவா? (ஆகையால் அவர்கள் மாமிச பட்சணஞ் செய்யாவிட்டாலும் அவர்களுடைய செய்கையால் தின்றவிதமே யாயிற்று எ - று.

மீன் மான் முதலியவைகளைத் தின்னவிட்டாலும் அவைகளுடைய சம்பந்த மிருப்பதால் தின்றவிதமே யாயிற்று என்பது கருத்து. 149

## இதுவுமது

ஆட்டிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்
ஆட்டிறைச்சி யல்லவோ யாகநீங்க ளாற்றலே
மாட்டிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர்
மாட்டிறைச்சி யல்லவோ மரக்கறிக் கிடுவது.

(பொ - ரை) பிராமணர்கள் பூர்வகாலந்தொட்டு இதுவரைக்கும் ஆட்டுமாமிசம் தின்கிறதில்லை. ஆனால், பிராமணர்களாகிய நீங்கள் ஆட்டைக்கொன்றல்லவோ யாகங்கள் செய்கின்றீர்கள்; அதுபோலவே வேதியர்கள் பூர்வகாலந் தொட்டு இதுவரைக்கும் மாட்டு மாமிசந் தின்றதில்லை. ஆனாலும், மரக்கறிகளுக்கெல்லாம் மாட்டிறைச்சியை யல்லவா எருவாக விடுவது? எ - று.

பிராமணர்கள் ஆட்டிறைச்சியையும், மாட்டிறைச்சியையுந் தின்னாவிட்டாலும் ஆட்டினால் யாகத்தையும், மாட்டிறைச்சியினால் மரக்கறி வளர்ச்சியையுங் கொண்டிருந்ததினால் அவைகளைத் தின்றவாறே யாயிற்று என்பது கருத்து. 150

## உடலில் உயிர் வந்தவழி

அக்கிடீ ரனைத்துயிர்க்கு மாதியாகி நிற்பது
முக்கிடீ ருமைப்பிடித்து முத்தரித்து விட்டது
மைக்கிடிற் பிறந்திறந்து மாண்டுமாண்டு போவது
மொக்கிடி லுமக்குநா னுணர்த்துவித்த துண்மையே.

(பொ - ரை) சகல உயிர்களுக்கும் முதன்மையாய் நிற்பதும், உங்களைப் பிடித்து தீட்சை செய்துவிட்டதும், பிறந்து பிறந்து இறந்திறந்து போவதும் உண்மையாகும். ஆகையால், அதை நான் உனக்கு அறிவித்தேன் எ - று.

சர்வ ஆன்மகோடிகளும் தாங்கள் எடுத்துள்ள தேகங்களை அடிக்கடி விட்டுவிட்டு வெவ்வேறு தேகங்களையெடுக்கும் என்பது கருத்து. ()

## யோகிகள் வரலாறு

நவ்வுமவ்வை யுங்கடந்து நாடொணாத சியின்மேல்
வவ்வுயவ்வு ளுஞ்சிறந்த வண்மைஞான போதகம்
ஒவ்வுசுத்தி யுண்ணிறைந் துச்சியூ டுருவியே
இவ்வகை யறிந்தபேர்க ளீசனாணை யீசனே.

(பொ - ரை) நகாரம், மகாரம, சிகாரம், வகாரம், யகாரம் என்னும் பஞ்சபூதங்களுடைய ஸ்தானங்களையெல்லாங் கடந்த இடத்தி லறியக்கூடாத உண்மை ஞானபோதகம், சுத்தியாகிய மனநிறைந்த உச்சியில் ஊடுருவிச் செல்லும் மார்க்கத்தை யறிந்தபேர்கள் சர்வேஸ்வரன்மே லாணைப்படி சர்வேஸ்வரனே யாவார் எ - று.

நகாரம் முதலிய பஞ்சாட்சரங்களும் பஞ்சபூதஸ்தான எழுத்துக்களென்பார், 'நவ்வுமவ்வை யுங்கடந்து நாடொணாத சியின்மேல், வவ்வு யவ்வுளுஞ் சிறந்த' எனவும், அவைகளைத் தாண்டி செல்லுமெய்ப்போதத்தை யடைவாரென்பார், 'வண்மைஞான போதகம்' எனவும், பிரமரந்திர வழியாகப் போகவரப் பழகியுள்ள பெரியவர்களை ஈஸ்வர சொரூபத்தை யடைந்தவர்களென்பார், 'ஒவ்வுசுத்தி யுண்ணிறைந் துச்சியூ டுருவியே, இவ்வகை யறிந்தபேர்க ளீசனாணை யீசனே' எனவுங் கூறினர். 152

## வினாவுதல்

அக்கர மனாதியோ வாத்தும மனாதியோ
புக்கிருந்த பூதமும் புலன்களு மனாதியோ
தர்க்கமிக்க நூல்களுஞ் சாத்திர மனாதியோ
தற்பரத்தை யூடறுத்த சற்குரு வனாதியோ.

(பொ - ரை) எழுத்துக்கள் அநாதியாக வுள்ளனவோ? ஆன்மா அனாதியாகவுள்ளதோ? தர்க்கஞ் செய்தற் கமைந்த தர்க்க நூல்களும் சாஸ்திரங்களும் அநாதியாக வுள்ளனவோ? இவைகளல்லாமல் சிவ சொரூபத்தை மனனாதிகளால் சிந்தித்த ஞானாசிரியனே அநாதியா யுள்ளவனோ? எ - று.

இவற்றில் எது அநாதிபொருளோ தெரியவில்லை என்பது கருத்து. 153

## யோக நிலை

பார்த்ததேது பார்த்திடில் பார்வையூ டழிந்திடும்
கூத்ததா யிருப்பிரேல் குறிப்பிலச் சிவமதாம்
பார்த்தபார்த்த போதெலாம் பார்வையு மிகந்துநீர்
பூத்தபூத்த காயுமாய் பொருந்துவீர் பிறப்பிலே.

(பொ - ரை) சர்வேஸ்வரனைத் தரிசித்தது எது? அங்ஙனந் தரிசித்திருந்தால் பார்வையானது ஊடழிந்திடும், அவனுடைய கூற்றாகவே யிருப்பீரானால் குறித்துப் பார்க்கும்போது அச்சிவமேயாகும். அங்ஙனந் தரிசித்த காலங்களிலெல்லாம் பார்வையை முழுதும் நீங்கி நீங்கள் பூவுங்காயுமாகப் பிறவிகளி லழுந்துவீர்கள் எ - று.

சர்வேஸ்வரனை யாவருந் தரிசித்ததில்லை யென்பார், 'பார்த்த தேது' எனவும், அங்ஙனம் தரிசித்தால் பார்வை அவன் வயப்பட்டு நிதர்சனமாகு மென்பார், 'பார்த்திடில் பார்வையூ டழிந்திடும்' எனவும், அங்ஙன முணர்வதற்கு அவனுடைய மதத்திலிருந்தால் அவனே யாகலா மென்பார், 'கூத்ததா யிருப்பரேல் குறிப்பிலச் சிவமதாம்' எனவும், அங்ஙனமில்லையானால் பிறவி யெடுக்க வருமென்பார், 'பார்த்த பார்த்த போதெலாம் பார்வையு மிகந்துநீர், பூத்தபூவுங் காயுமாய் பொருந்துவீர் பிறப்பிலே' எனவுங் கூறினர். 154

## சிவ தரிசனம்

நெற்றிபற்றி யுழலுகின்ற நீலமா விளக்கினைப்
பத்தியொத்தி நின்றுநின்று பற்றறுத்த தென்பலன்
உற்றிருந்து பாரடா வுள்ளொளிக்கு மேலொளி
அத்தனு ரமர்ந்திட மறிந்தவன்ன னாதியே.

(பொ - ரை) ஆஞ்ஞையின் விளங்குகின்ற நீலநிறத்தையுடைய விளக்கும் இதயாகாயத்தில் வாழும் தேஜோமயனுமாகிய இறைவனை ஆராய்ந்தறிந்து பாருங்கள்; அவர் பக்தி செலுத்துவோரைப் பின் தொடருபவர், அன்றி மேலான தன்மையை யுடையவர். ஆகையால், அவ்விடத்திலிருந்தவர்கள் யாவருக்குந் தலைவராவார்கள் எனக்கும் நாயகராவார்கள் எ - று.

சதாசிவன் என்னுங் கடவுள் நெற்றியிலுள்ளதாகிய ஆஞ்ஞையில் விளங்குகின்றா னென்பார், 'நெற்றியில் விளங்குகின்ற நீலமாம் விளக்கினை' எனவும், அதை நன்றாயாராய்ந்து பார்ப்பவர்களே தேஜோ சொரூப தரிசனங் காண்பாரென்பார், 'உய்த்துணர்ந்து பாரடா வுள்ளிருந்த சோதியை' எனவும், பக்திவலையிற் சிக்குவோ னென்பார், 'பத்தியிற் றொடர்ந்தவர்' எனவும், ஞானசொரூப னென்பார், 'பரமயம தானவர்' எனவும், சிவலோகத்திருப்பவர்க ளெல்லோரும் யாவருக்குந் தலைவர்களென்பார், 'அத்தலத் திருந்தபேர்க ளவரெனக்கு நாதரே' எனவுங் கூறினர். 155

## அர்க்கியம் விலக்கல்

நீரையள்ளி நீரில்விட்டு நீநினைந்த காரியம்
ஆரையுன்னி நீரெலா மவத்திலே யிறைக்கிறீர்
வேரையுன்னி வித்தையுன்னி வித்திலே முளைத்தெழுந்த
சீரையுன்ன வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம்.

(பொ - ரை) சலத்தையள்ளி மீண்டுஞ் சலத்தில்விட்டு நீர் நினைந்து செய்யுங் காரியமானது (ஒன்றுஞ் சரியானதன்று.) ஏனெனில், யாரை நினைந்துகொண்டு சலங்களையெல்லாம் வீணே இறைக்கிறீரோ? அது தெரியவில்லை யாகையால். ஆகவே இனி நீங்கள் வேரை நினைந்து பின்னர் அதற்குக் காரணமாகிய விதையை எண்ணி அவ் விதையினின்றும் முளைத்தெழுந்த சிறப்புப்பொருளை உள்ளன்போடு நினைக்க வல்லமையை யுடையீரானுல் சிவபெருமானுடைய திருவடிகளில் சேரலாம் எ - று.

நித்திய கன்மஞ் செய்யுங்காலத்தில் அருக்கியபாத்தியமும், மூக்குடிநீரும் இறைக்கவேண்டிய வழக்கம் உளதாகலின், 'நீரையள்ளி நீரில்விட்டு நீநினைந்த காரியம், ஆரையுன்னி நீரெலா மவத்திலே யிறைக்கிறீர்' எனவும், அங்ஙனம் செய்வதைவிட்டு முதற் பொருளைக் கண்டு பிடித்தால் சிவபெருமானுக் கடியவனுகலா மென்பார், 'வேரையுன்னி வித்தையுன்னி வித்திலே முளைத்தெழுந்த, சீரையுன்ன வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம்' எனவுங் கூறினர். 156

விஞ

கருத்தரிக்கு முன்னெலாங் காயம்நின்ற தெவ்விடம்
உருத்தரிக்கு முன்னெலா முயிர்ப்புநின்ற தெவ்விடம்
அருட்டரிக்கு முன்னெலா மாசைநின்ற தெவ்விடம்
திருக்கறுத்துக் கொண்டதே சிவாயமென்று கூறுவீர்.

(பொ - ரை) தாயின் வயிற்றில் விந்துவும் நாதமுங்கூடிக் கருவாகா முன்னர் இந்தக் காயமானது எந்தவிடத்தி லிருந்தது? ரூபமுண்டாவதற்குமுன் சீவன் எந்தவிடத்தி லிருந்தது? சிவபெருமானுடைய திருவருளுண்டாவதற்கு முன் ஆசை எந்தவிடத்திலிருந்தது? இவையனைத்துந் தெரியாமையால் இவைகளின் சந்தேகங்களை யெல்லாம் நீக்கிக்கொண்டு சிவாய நமவென்று சொல்லுங்கள் எ - று.

சரீரமானது கருவமையாமுன் இல்லையென்பார், 'கருத்தரிக்கு முன்னெலாங் காயநின்ற தெவ்விடம்' எனவும், காயம் உருவாகாமுன் சீவனில்லை யென்பார், 'உருத்தரிக்கு முன்னெலா முயிர்ப்பு நின்ற தெவ்விடம்' எனவும், சிவபெருமானுடைய திருவருள் கிடைக்கா முன்னர் ஆசையறுவதில்லை யென்பார், 'அருட்டரிக்கு முன்னெலா மாசைநின்ற தெவ்விடம்' எனவும், இவைகளெல்லாம் மாயை யொழிந்தாலே விளங்குமென்பார், 'திருக்கறுத்துக் கொண்டலோ' எனவும், அப்பொழுதே சிவபஜனைசெய்ய முடியுமென்பார், 'சிவாய மென்று கூறுவீர்' எனவுங் கூறினர். 157

விடை

கருத்தரிக்கு முன்னெலாங் காயம்நின்ற தேயுவில்
உருத்தரிக்கு முன்னெலா முயிர்ப்புநின்ற தப்புவில்
அருட்டரிக்கு முன்னெலா மாசைநின்ற வாயுவில்
திருக்கறுத்துக் கொண்டதே சிவாயமென்று கூறுவீர்.

(பொ - ரை) மாதா வயிற்றில் கருவானது தரிப்பதற்குமுன் சரீரமானது தேயுபூதத்தில் நின்றது. ரூபமுண்டாவதற்குமுன் சீவனானது அப் பூதத்தில் நின்றது. திருவருள் பதிவதற்குமுன் ஆசையானது வாயுபூதத்தில் நின்றது. ஆகையால், இது தெரியாமலிருந்த மாய்கையை ஒழித்துவிட்டபடியாகும். ஆகவே, இனி சிவாயநம வென்று சொல்லுங்கள் எ - று.

இதன் கருத்து ஆசாரியரிடத்தில் தெரிந்துகொள்ள வேண்டியது. 158

பாதகம் வரும்வழி

தாதரான தாதருந் தலத்திலுள்ள சைவரும்
கூதரைப் பறைச்சிமக்கள் கூடிசெய்த காரியம்

வீதிபோகு ஞானியை விரைந்துகல் லெறிந்ததும்
பாதகங்க ளாகவே பலித்ததே சிவாயமே.

(பொ - ரை) மகா சிரேஷ்டர்களான வைஷ்ணவர்களும், பாடல் பெற்ற தலத்திலுள்ள சைவர்களுமாகிய இந்தப் பறைச்சி மக்கள் சேர்ந்து செய்தகாரிய மொன்றுண்டு. அதாவது, தெருவழியே போய்க் கொண்டிருந்த ஒரு ஞானியை விரைந்து கல்லாலெறிந்ததும் அவர்களுக்குப் பாவமாகவே சம்பவித்தது எ - று.

வைஷ்ணவர்களும் சைவர்களும் மதவாதிகளாகையால் அம்மதச் செருக்கினால் ஞானிகளின் நிலைமையை யறியாமல் தீங்கிழைத்தாரென்பார், 'தாதரான தாதருந் தலத்திலுள்ள சைவருங், கூதரைப் பறைச்சிமக்கள் கூடிசெய்த காரியம், வீதிபோகு ஞானியை விரைந்து கல் லெறிந்ததும்' எனவும், ஆனால், அது பெரும்பாவ மென்பார், 'பாதகங்க ளாகவே பலித்தவே சிவாயமே' எனவுங் கூறினர். 159

## மாயையின் விளைவு

ஓடியோடி பாவிழைத் துள்ளங்கால் வெளுத்ததும்
பாவியானபூனைவந்து பாவிலே குதித்ததும்
பணிக்கன்வந்து பார்த்ததும் பாரமில்லை யென்றதும்
இழையறுந்து போனதும் என்னமாய மீசனே.

(பொ - ரை) உயிர்கள் பல காலமாக ஓடியோடிப் பாவுசெய்ததும் அங்ஙனஞ் செய்து உள்ளங்கால் வெளுத்ததும், பாவியான பூனை வந்து பாவிலே குதித்ததும், பணிக்கனானவன் வந்து அதைப் பார்த்ததும், பளுவில்லை யென்று சொன்னதும், முன் செய்த பாவில் இழையறுந்துபோனதும், ஈசனே! என்ன மாயமோ? எ - று.

தாயின் கருவில் உருவாகித் தங்கியதென்பார், 'ஓடியோடி பாவிழைத் துள்ளங்கால் வெளுத்ததும்' எனவும், இயமன் அவனுக்கு வயது

முடிந்ததென்று தேடிக்கொண் டிருக்கின்றா னென்பார், 'பாவியான பூனைவந்து பாலிலே குதித்ததும்' எனவுங் கூறினர், மற்றவை வெளிப்படை. 160

## நாத விளைவு

சதுரம்நாலு மறையுமிட்டு தானதங்கி மூன்றுமே
எதிரதான வாயுவாறு எண்ணும்வட்ட மேவியே
உதிரந்தான் வரைகளெட்டு மெண்ணுமென் சிரசின்மேல்
கதிரதான காயகத்தில் கலந்தெழுந்த நாதமே.

(பொ - ரை) நான்கு வேதங்கள், மூன்று மண்டலங்கள், ஆறு வாயுக்கள், ஆகிய இவைகளை இருக்கும் இடத்தை எண்ணும் இடத்தைப் பொருந்தி இரத்த சம்பந்தமாகிய எட்டு மலைகளாக நினைக்கின்ற என்னுடைய சிரசின்மேல் கதிர்பிரகாசமும் போல் நாதமானது கலந்துண்டானது எ - று.

வேத முதலியவற்றிற் கெட்டாத பொருள் உன்னுடைய சிரசின் மேல் நாதமாக எழுந்தது என்பது கருத்து. 161

## பஞ்சாட்சர வகை

நாலொடாறு பத்துமேல் நாலுமூன்று மிட்டபின்
மேலுபத்து மாறுடனா மேதிரண்ட தொன்றுமே
கோலியஞ் செழுத்துடே குருவிவந்து கூறிடில்
தோலுமேனி நாதமாய்த் தோற்றிநின்ற கோசமே.

(பொ - ரை) நான்கு, ஆறு, பத்து, பன்னிரண்டு, பதினாறு, ஒன்று இவைகளைக் கோலி பஞ்சாட்சரத்துள் குருவானவ ரிருந்து உபதேசித்தால் தோலையுடைய மேனியில் நாதமாய் விளங்குகின்ற கோசமே யாகும் எ - று.

நான்கு, ஆறு, பத்து, பன்னிரண்டு, பதினாறு, ஒன்று என்பவை ஆருதாரங்களின் இதழ்களை. 162

## இதுவுமது

கோசமா யெழுந்ததுங் கூடுருவி நின்றதும்
தேசமாய்ப் பிறந்ததுஞ் சிவாயமஞ் செழுத்துமே
ஈசனா ரிருந்திட மனேகனேக மந்திரம்
ஆசநம் நிறைந்துநின்ற வைம்பத்தோ ரெழுத்துமே.

(பொ - ரை) கோசமாக எழுந்ததும், கூண்டைத் தாண்டிநின்றதும், நல்லதேசங்களில் பிறந்ததும், சிவாயநமவென்னும் பஞ்சாட்சரங்களேயாகும். ஆனல், சர்வேச்சுரன் இருந்தவிடமானது அநேக மந்திரங்களை யுடையதாகும். ஆயினும், அவருக்கு பீடமாயுள்ளது ஐம்பத்தோர் எழுத்துகளுமே யாகும் எ - று.

தாயின் கருப்பத்திற் சோசமே காரணமென்பார், 'கோசமா யெழுந்ததும்' எனவும், அதுவே பிறவியாயிற்றென்பார், 'கூடுருவி நின்றதுந் தேசமாய்ப் பிறந்ததும்' எனவும், இவை யனைத்திற்குங் காரணமாயுள்ளது பஞ்சாட்சரங்களே யென்பார், 'சிவாயமஞ் செழுத்துமே' எனவும், அதன் விவரமாயுள்ள ஐம்பத்தோ ரெழுத்துக்களே இறைவனுக் கிருப்பிடமென்பார், 'ஆசநம் நிறைந்துநின்ற வைம் பத்தோ ரெழுத்துமே' எனவுங் கூறினர். 163

## இதுவுமது

அங்கலிங்க பீடமா யையிரண் டெழுத்திலும்
பொங்குதா மரையினும் பொருந்துவா ரகத்தினும்
பங்குகொண்ட சோதியும் பரந்தவஞ் செழுத்துமே
சிங்கநாத வோசையுஞ் சிவாயமல்ல தில்லையே.

(பொ - ரை) அங்கத்தையே லிங்கமாகக்கொண் டிருக்கும் பீடத்திலும், அசபாமந்திரமாகிய மூன்றட்சரங்களிலும், விளங்குகின்ற இருதய கமலத்திலும், உள்ளன்போடு வழிபடுபவர்கள் மனத்திலும், சிவசாம்ராஜ்யத்தைப் பங்கிட்டுக்கொண்ட யோகிகள் வாழும் மேலான வாசல்கள் ஐந்திலும், உண்டாகின்ற சிங்கநாத ஓசையானது சிவாய நமவென்னும் பஞ்சாட்சரங்களா லுண்டாவதன்றி வேறொன்றி லுண்டாவதில்லை எ - று.

பஞ்சாட்சரங்களே எல்லாவற்றிற்குங் காரணமந்திரம் என்பது கருத்து.

அசபை மூன்றெழுத்து என்றது வாயால் சபிக்கப்படாதது. 164

## ஜீவோற்பத்தி

உவமையில்லாப் பேரொளிக்கு ளுருவமான தெவ்விடம்
உவமையாகி யண்டத்தி லுருவிநின்ற தெவ்விடம்
தவமதான பரமனார் தரித்துநின்ற தெவ்விடம்
தற்பரத்தில் சலம்பிறந்து தாங்கிநின்ற தெவ்விடம்
சுகமதாக வெருதுமூன்று கன்றையீன்ற தெவ்விடம்
சொல்லுகிழு லோகமேழும் நின்றவாற தெவ்விடம்
அவளதான மேருவும் அம்மைதான தெவ்விடம்
அவனுமவளு மாடலா லருஞ்சீவன் பிறந்ததே.

(பொ - ரை) ஒப்பு சொல்லப்படாத மிக்க தேஜோமயத்திற்குள் ரூபமுண்டானது எவ்விடம்? பின்னர், மௌனத்தை யடைந்து அண்டத்தி லுருவிநின்றது எவ்விடம்? தவஞ்செய்தற்குரிய பரமனார் உரிமையாயிருந்தது எவ்விடம்? ஞானமயத்தில் சலமுண்டாக அதைத் தாங்கியிருந்தது எவ்விடம்? சுகமாகவே ஒரு எருதானது மூன்று கன்றுகளை ஈன்றது எவ்விடம்? ஈரேழு பதினான்கு லோகங்களும் நின்

றது எவ்விடம்? அவனுக்குரிய மேருவானது அம்மையதானது எவ்விடம் அவனும் அவளுஞ் செய்த திருவிளையாட்டினாலேயே அருமையாகிய ஜீவன் உண்டானதாகும் எ - று.

சர்வேஸ்வரனுடைய தேஜஸுக்கு வேறெதுவு மிணையாகாதென்பார், 'உவமையில்லாப் பேரொளிக்குள்' எனவும், அதில் உருவமைந்த இடம் தெரியவில்லை யென்பார், 'உருவமான தெவ்விடம்' எனவும், அதுவே மௌனத்தை யடைந்து செல்லுவதென்பார், 'ஊமையாகி யண்டத்தி லுருவிகின்ற தெவ்விடம்' எனவும், பரமேஸ்வரனுடைய உண்மையான வாசஸ்தானந் தெரியவில்லை யென்பார், 'வேதமதான பரமனார் தரித்திருக்கின்ற தெவ்விடம்' எனவும், ஞானதரிசனஞ் செய்யுங்காலத்தில் மதியமிர்த மூண்டான இடம் எதுவோவென்பார், 'தற்பரத்தில் சலம்பிறந்து தாங்கிகின்ற தெவ்விடம்' எனவும், பிரணவமானது மூன்றெழுத்தின் சேர்க்கை யென்பார், 'சுகமதாக வெருதமூன்று கன்றையீன்ற தெவ்விடம்' எனவும், ஈஸ்வரன் சர்வ வியாபகனென்பார், 'சொல்லுகீழு லோகமேழும் நின்றவாற தெவ்விடம்' எனவும், சர்வ ஜீவர்களும் சிவபெருமானுடைய சங்கற்பத்தால் சரீரமெடுக்கின்றார்க ளென்பார், 'அவனதான மேருவும் அம்மைதான தெவ்விடம், அவனுமவளு மாடலா லரியசீவன் பிறந்ததே' எனவுங் கூறினார்.

165

## இரகசியம்

உதிக்குகின்ற தெவ்விட மொடுங்குகின்ற தெவ்விடங்
கதிக்குகின்ற தெவ்விடங் கன்றுறக்க மெவ்விடம்
மதிக்கநின்ற தெவ்விட மதிமயக்க மெவ்விடம்
விதிக்கவல்ல ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே.

(பொ - ரை) தோன்றுமிடம் எது? ஒடுங்குமிடம் எது? வளர்கின்ற இடம் எது? தூங்குகிற இடம் எது? யாவராலும் மதிக்க நின்ற

இடம் எது? புத்தியை மயக்குகின்ற இடம் எது? எல்லாவற்றையுஞ் சிருஷ்டிக்கவல்ல ஞானிகளே! நீங்கள் சீக்கிரமாகச் சொல்லுங்கள் எ-று.

தோன்றுதல் முதலிய இடங்கள் தெரியாமையால் அவைகளை விலக்கவேண்டும் என்று ஞானிகளைக் கேட்டதாய் கூறப்பட்டது.166

## இதுவுமது

திரும்பியாடு வாசலெட்டு திறமுரைத்த வாசலெட்டு
மருங்கிலாத கோலமெட்டு வன்னியாடு வாசலெட்டு
துரும்பிலாத கோலமெட்டு சுற்றிவந்த மருளரே
அரும்பிலாத பூவுமுண் டையனுணே யுண்மையே.

(பொ-ரை) திரும்பித் திரும்பி நடிக்கின்ற வாசல் எட்டும் உண்மை நிலையை யுரைத்த வாசல்கள் எட்டும், சமீபத்திலில்லாத ரூபங்க ளெட்டும், அக்கினி மயமாகிய வாசல்களெட்டும், துரும்பிலாத கோல மெட்டும் ஆகிய இவைகளைச் சுற்றிவந்த மாயாசகிதர்களே! மொக்கில்லாத பூவும் உலகத்திலுண்டு. ஈஸ்வரன்மேல் சத்தியமாக உண்மையாகும் எ-று.

சிவபெருமான் எதிர்முகமாகவே நடிப்பவனென்பார், 'திரும்பி யாடும்' எனவும், அங்ஙனம் நடிப்பதும் எண்வகையான மண்டலத்தி லென்பார், 'வாசலெட்டு' எனவும், அங்ஙனம் நடிப்பதவும் எண்வகை ரூபத்துட னென்பார், 'மருங்கிலாத கோலமெட்டு' எனவும், அவன் அக்கினி வாசல்களி லுள்ளவ னென்பார், 'வன்னியாடு வாசலெட்டு' எனவும், உலகத்தார் வீணாக வுழன்றவர்களென்பார், 'துரும்பிலாத கோலமெட்டு சுற்றிவந்த மருளரே' எனவும், உலகத்தில் அரும்பாமல் பூக்கும் மலருமுண்டென்பார், 'அரும்பிலாத பூவுமுண் டையனுணே யுண்மையே' எனவுங் கூறினர். 167

## யோக நிலை

தானிருந்து மூலவங்கி தணலெழுப்பி வாயுவால்
தேனிருந்து வரை திறந்து தித்தியொன்று வொத்தவே
வானிருந்து மதியமூன்று மண்டலம் புகுந்தபின்
ஊனிருந் தளவுகொண்ட யோகிநல்ல யோகியே.

(பொ - ரை) தான் மூலாதாரத்திலிருந்து அங்குள்ள அக்கினியை எழுப்பி அதினாலுண்டாகும் வாயுவினால் ஆறு அறைகளையுந் திறந்து போய்ப் பார்த்தால் அங்கு நடனமானது ஒத்திருக்கும். ஆகையால், ஆகாயத்தின்கண்ணிருந்த சந்திரமண்டலம், சூரியமண்டலம், அக்கினிமண்டலம் ஆகிய மண்டலங்கள் மூன்றி னுள்ளும் புகுந்தபின். சரீரமிருக்கு மளவுகொண்டவனே நல்ல யோகியாவான் எ - று.

யோகஞ் செய்வோர் மூலாதாரத்தி லிருந்தே செய்யவேண்டு மென்பார், 'தானிருந்து மூலவங்கி' என்வும், அங்ஙனஞ் செய்யும் போது வாயுவால் மூலக்கனலை யெழுப்பவேண்டு மென்பார், 'தணலெழுப்பி வாயுவால்' எனவும், அங்ஙன மெழுப்பும் அக்கினியால் ஆறாதாரங்களின் இதழ்களெல்லாம் விகசிக்கு மென்பார், 'தேனிருந்து அறைதிறந்து' எனவும், பின்னர் ஆநந்தம் அநுபவிக்கவேண்டு மென்பார், 'தித்தியொன்று ஒத்தவே' எனவும், அங்ஙன முண்டானாலும் மூன்று மண்டலத்தையுங் கடந்த யோகியே சிறந்த யோகி யென்பார், 'வானிருந்த மதியமூன்று மண்டலம் புகுந்தபின், ஊனிருந்தளவு கொண்ட யோகி நல்ல யோகியே' எனவுங் கூறினர். 168

## எல்லாம் சிவன்செயல்

முத்தனைய் நினைந்தபோது முடிந்தவண்டத் துச்சிமேல்
பத்தனாரு மம்மையும் பரிந்துவாட லாடினார்
சித்தரான ஞானிகாள் தில்லையாட லென்பிர்காள்
அத்தனாட லுற்றபோ தடங்கலாட லுற்றவே,

(பொ - ரை) நம்மைச் சீவன் முத்தர்களாக கினைந்தபோதில் நமக்கு முடிவாக விளங்கும் ஆகாயத்தின் அந்தத்தில் சர்வேஸ்வரனும் சர்வேஸ்வரியும் மனஞ் சந்தோஷித்து திருநடனஞ் செய்தார்கள். அந்த நடனத்தை ஞானிகளே நீங்கள் தில்லை நடனமென்று சொல்லுவீர்கள். அது தில்லை நடனமானல் சர்வேஸ்வரன் திருநடனஞ் செய்யும்போது எல்லாப்பொருளு மாடுகின்றன வல்லவா? ஆம், அப்பொழுது அவைகளின் ஆட்டுக்களையும் தில்லையாட லென்றே யல்லவா சொல்லவேண்டிவரும்? ஆகையால், தில்லையாடலென்று சொல்லுவது நியாயமன்று எ - று.

யோகிகள் தங்களைச் சீவன் முத்தர்களாக நினைத்துக்கொள்ளக் கூடுமென்பார், முத்தராய் நினைந்தபோது' எனவும், சீவன்முத்தர்கள் சிதாகாச தெரிசனமே செய்வதென்பார், 'முடிந்த வண்டத்துச்சி மேல்' எனவும், சர்வேஸ்வரன் உயிர்களை தொழிற் படுத்தவே நடிக்கின்ரு னென்பார், 'பத்தனுரு மம்மையும் பரிந்துஆட லாடினர், சித்தரான ஞானிகள் தில்லையாட லென்பிர்கான்' எனவும், சர்வேஸ்வரன் நடித்தால் யாவும் நடிக்குமென்பார், 'அத்தனுட லுற்றபோ தடங்கலாட லுற்றவே' எனவுங் கூறினர்.

இறைவன் ஆடினல் யாவும் ஆடுமென்றதை:

"அவனசைந்திடி லொருவனுவசைந்திடும்
அவனசையாவிடி லணுவசைந்திடாது
சிவன்சத்தியோடுறிற் செகம்விரிந்திடும்
சிவன்தனித்திடில் விரிசெகமொடுங்குமால்"

என முன்னோர்கள் சொல்லியிருப்பதினு லறிக. 169

### ஞான நிலை

ஒன்றுமொன்று மொன்றுமே யுலகனைத்து மொன்றுமே
அன்றுமின்று மொன்றுமே யனதியான தொன்றுமே

கன்றல்நின்ற செம்பொனைக் களிம்பறுத்து நாட்டினால்
அன்றுதெய்வ மும்முளே யறிந்ததே சிவாயமே.

(பொ - ரை) உலகத்திலுள்ள சர்வ பிராணிகளும் ஒரு வகையினவே யாகும், அக்காலமும் இக்காலமும் ஒன்றே யாகும், அநாதிக் காலமும் அவ்விதமேயாகும், கன்றுதல்கூடிய செவந்தபொன்னை அதிலுள்ள களிம்பை யறுத்து நாட்டினால் அன்று தெய்வமானது உமக்குள்ளே யறிந்தவிதமே யாகும். ஆகையால், சிவாய எழுத்தி னுண்மையை யுணர்ந்தவர்க ளாவீர்கள் எ - று.

ஞானிகள் எல்லாவற்றையும் ஒன்றாகக் கொள்வார்கள் என்பது கருத்து. 170

## முடிவின் விளைவு

நட்டதா பரங்களு நவின்றசாத் திரங்களும்
இட்டமான ஓமகுண்ட மிசைந்தநாலு வேதமும்
கட்டிவைத்த புத்தகம் கடும்பிதற்றி தற்கெலாம்
பொட்டதாய் முடிந்ததே பிரானையா னறியவே.

(பொ - ரை) நான் எங்குநிறைந்த கடவுளை உள்ளபடியே யுணர்ந்த பின்னர் நாட்டியதாகக் காணப்பட்ட தாவரங்களும், முன்னோர்களால் சொல்லிவைக்கப்பட்ட சாஸ்திரங்களும், இடப்பட்ட உயர்ந்த ஓமகுண்டமும், பொருத்தமான நான்கு வேதங்களும், கட்டி வைக்கப்பட்ட புத்தகங்களும், பிதற்றுஞ் செய்கையாக முடிந்தன எ - று.

சிவபெருமானை யுள்ளபடியே யுணர்ந்தபின் சகலமும் வீணாய் முடிந்தன என்பது கருத்து. 171

## யோக நிலை

வட்டமான கூட்டிலே வளர்ந்தெழுந்த வம்புலி
சட்டமீ படைத்திலே சங்குசக்க ரங்களாய்

விட்டதஞ்சு வாசலில் கதவினு லடைத்தபின்
முட்டையி லெழுந்தசீவன் விட்டவாற தெங்ஙனே.

(பொ - ரை) சக்கராகாரமா யிருக்கின்ற கூண்டிலிருந்து வளர்ந் தெழுந்த அம்புலியானது சங்குசக்கரங்களாகவந்து ஐந்து வாசல்களி லும் குடிகொண்டன. அந்த ஐந்து வாசல்களையுங் கதவுகளைக் கொண்டு அடைத்தபின்னர் அண்டத்திலிருந் தெழுந்த சீவன் விட்டவிதம் எப்படி? எ - று. 172

## ஞானம்

கோயில்பள்ளி யேதடா குறித்துநின்ற தேதடா
வாயினுல் தொழுதுநின்ற மந்திரங்க ளேதடா
ஞானமான பள்ளியில் நன்மையாய் வணங்கினுல்
காயமான பள்ளியிற் காணலா மிறையையே.

(பொ - ரை) சர்வேஸ்வரனுனவன் கோயிலின்கண் பள்ளிகொள் ளுவது எது? அவனை அவ்விடத்தில் குறித்துநின்றதேது? இல்லை. அதுபோலவே அவனைக்குறித்து வாயினுல் சொல்லித் தொழுதுநின்ற மந்திரங்களும் எது? ஞானமானது பதிதற்குரிய இடத்தில் நல்லெண் ணத்துடன் வணங்கினுல் இந்தத் தேகத்திலேயே சர்வேஸ்வரனைக் காணலாம் எ - று.

இறைவன் எங்கும் வியாபகமுடையவ னென்பார், 'கோயில் பள்ளி யேதடா' எனவும், அங்ஙனம் எங்குநிறைந்த கடவுளை கோயிலில் குறிப்பது அடாதென்பார், 'குறித்துநின்றதேதடா' எனவும், அவனை மந்திர வழிபாடு செய்வதால் அடையமுடியா தென்பார், 'வாயினுல் தொழுதுநின்ற மந்திரங்க ளேதடா' எனவும், இவை யனைத்தையும் விட்டு ஞானத்தால் வணங்கவேண்டு மென்பார், 'ஞானமான பள்ளி யில் நன்மையாய் வணங்கினுல்' எனவும், அங்ஙனம் ஞானத்தால்

வணங்குவோர்க்கு இறைவன் வெளிப்படுவா னென்பார், 'காயமான பள்ளியிற் காணலா மிறையையே' எனவுங் கூறினர்.

173

## திரிபு ஞானம்

நல்லவெள்ளி யாறதாய் நயந்தசெம்பு நாலதாய்
கொல்லுநாக மூன்றதாக் குலாவுசெம்பொ னிரண்டதாய்
வில்லினோசை யொன்றுடன் விளங்கவூத வல்லிரேல்
எல்லையொத்த சோதியானை யெட்டுமாற்ற தாகுமே.

(பொ - ரை) சுயமான வெள்ளியென்னும் பிருதிவியின்கண் ஆறு மாத்திரையளவும், செம்பாகிய அப்புவில் நாலுமாத்திரை யளவும், நாகமென்னும் தேயுவில் மூன்றுமாத்திரையளவும், செம்பொன் என்னும் வாயுவில் இரண்டுமாத்திரையளவும், வில்லோசை என்னும் ஆகாசத்தில் ஒரு மாத்திரையளவும் நின்று சாத்தையூத வல்லமை யுடையீரானல் அளவுகடந்த சர்வேஸ்வரனானவன் எட்டு மாற்றுள்ள பொன்னாக வெளிப்படுவான் எ - று.

இதை யறியாத சிலர் வெள்ளி ஆறெடையும், செம்புநாலெடையும், நாகம் மூன்றெடையும், தாய் இரண்டு எடையும், வெங்கலம் ஓரெடையுமாகச் சேர்த்து உருக்கி இரசவாதஞ்செய்து பயன்கிடைக்காமல் வீணே மோசம்போவார்கள். ஆகையால், இது அவர்களையும் மற்றவர்களையும் நீக்கியயோகிகளுக்கே கூறியதென்றறியக் கடவர்.

## மோனத்தோர் செய்கை

மனத்தகத் தழுக்கறாத மவுனஞான யோகிகள்
வனத்தகத் திருக்கினு மனத்தகத் தழுக்கறார்
மனத்தகத் தழுக்கறுத்த மவுனஞான யோகிகள்
முலைத்தடத் திருக்கினும் பிறப்பறுத் திருப்பரே.

(பொ - ரை) மனத்தின்கண் பூர்வஜென்ம வாசனையாகப் படிந்திருக்கின்ற மாயாபாசங்களை அறுத்தொழிக்காத மௌனஞானத்தையுடைய யோகிகள் காட்டிலிருந்தாலும் அந்த மனத்தின்கண் ணுள்ள மாய்கையை அறுத்தொழித்தவராக மாட்டார்கள். அங்ஙனம் அப்பாசத்தை அறுத்து அறவேயொழித்த மௌன ஞானத்தை உண்மையாகவே யுடைத்தாயிருக்கின்ற யோகிகள் பெண்களுடைய மூலையின் மேல் மையலால் இருந்தாலும் ஜென்மத்தை யொழித் திருப்பார்கள்.

பாசமொழியாமல் காட்டை ஆசிரமமாகக் கொண்டால் மட்டும் என்ன பயனென்பார், 'மனத்தகத் தழுக்கறாத மௌன ஞான யோகிகள், வனத்தகத் திருக்கினு மனத்தகத் தழுக்கறார்' எனவும், அதை யொழித்தவர் பெண் போகஞ்செய்யினும் உயர்ந்தவர்களே யாவார்களென்பார், 'மனத்தகத் தழுக்கறுத்த மௌனஞான யோகிகள், மூலைத்தடத் திருப்பினும் பிறப்பறுத் திருப்பரே' எனவுங் கூறினார். 175

கடவுள் நிலை

உருவுமல்ல வொளியுமல்ல வொன்றதாகி நின்றதே
மருவுமல்ல கந்தமல்ல மந்தநாடி யுற்றதல்ல
பெரியதல்ல சிறியதல்ல பேசுமாவி தானுமன்
றரியதாக நின்றநேர்மை யாவர்காண வல்லிரே.

(பொ - ரை) சர்வேஸ்வரனுடைய உண்மைநிலையை யோசித்துப் பார்த்தால் அது ரூபமுள்ளதும் சோதியானதுமல்ல, அன்றி ஒரு பொருளாய்நின்றதும் மருவும், கந்தமும், மந்தநாடியாகிய நடுநாடியை யடைந்தது மல்லவாகும். அன்றி, பரிமாணத்தில் பெரியது மன்று, சிறியதுமன்று, பேசுகின்ற உயிருமன்று. ஆகையால், அது யாவருக்குங் காணுதற் கரியதாகும், இங்ஙனமிருந்த தன்மையை யாவர்காண வல்லமை யுடையவர்க ளாவார்கள்? எ - று.

சர்வேஸ்வரன் இப்படிப்பட்ட லட்சணங்களுடன் கூடியிருந்தால் அவனையாவருமே அறிதற்காகாதென்பார் இவ்வண்ணங் கூறினார். 176

## தியானம்

ஓரெழுத் துலகெலா முதித்தவட் சரத்துளே
ஈரெழுத் தியம்புகின்ற வின்பமே தறிகிலீர்
மூவெழுத்து மூவராய் மூண்டெழுந்த மூர்த்தியை
நாலெழுத்து நாவிலே நவின்றதே சிவாயமே.

(பொ - ரை) ஈரேழு பதினான்கு லோகங்களிலுந் தாயகமாய்த் தோன்றியிருக்கும் ஓரெழுத்தாகிய பிரணவத்தில் உண்டான மந்திர பீஜங்களில் இரண்டு பீஜங்களாலுண்டாகு மின்பத்தை நீங்கள் உணரமாட்டீர்கள். அதில் மூன்றெழுத்துக்களோ திரிமூர்த்திகளா யெழுந்த அதிகாரம் பெற்றவைகளாகும். நான்கு எழுத்துக்களோ நாவினா லுச்சரித்தால் பஞ்சாட்சரங்களை விளக்குவதாகும் எ - று.

பிரணவமே எல்லா மந்திர பீஜங்களுக்குந் தாயகமும் சர்வ தோற்றத்திற்கும் காரணமுமாகும் என்பது கருத்து. 177

## நாத வகை

ஆதியந்த மூலவிந்து நாதமைந்து பூதமாம்
ஆதியந்த மூலவிந்து நாதமைந் தெழுத்துமாய்
ஆதியந்த மூலவிந்து நாதமேவி நின்றதும்
ஆதியந்த மூலவிந்து நாதமே சிவாயமே.

(பொ - ரை) தனக்கு முதன்மையையும், அந்தத்தையும் தன்னிடத்திலேயே வைத்திருக்கின்ற காரணமாகிய விந்துவும் நாதமும் பஞ்ச பூதங்களாய் பரிணமித்தும், மீண்டும் பஞ்சாட்சரங்களாகியும்,

பின்னர் விந்துவானது நாதத்தில் கலந்து நின்றதும், ஒன்றேயாகை யால் இவைகளே சிவயநமவென்று நம்மையிருக்கப்பண்ணும் எ - று.

விந்து நாதங்களே எல்லாவற்றிற்கும் முதன்மை வஸ்துக்கள் என்பது கருத்து. 178

## உலகர் வாழ்த்து

அன்னமிட்ட பேரெலா மனேககோடி வாழவே
சொன்னமிட்ட பேரெலாம் துரைத்தனங்கள் பண்ணலாம்
வின்னமிட்ட பேரெலாம் வீழ்வர்வெங் நரகிலே
கன்னமிட்ட பேரெலாங் கடந்துநின்ற திண்ணமே.

(பொ - ரை) உலகத்தில் பசியால் வருந்தினவர்கள் யாவராக விருந்தாலும் அவர்களுக்கெல்லாம் அன்னமிட்டவர்கள் யாரோ? அவர்க ளெல்லாம் அநேக கோடி காலம் க்ஷேமமாக வாழக்கடவர்கள். சொர்ண தானஞ் செய்தவர்களெல்லாம் ராஜாங்க மாளலாம், இந்தத் தானங் களுக்கெல்லாம் செய்யாதபடி கெடுதியைச் செய்தவர்கள் எக்காலத் தும் நரகத்தில் வீழ்ந்து கிடப்பார்கள். இவைகளுக்குத் திருட்டுத்தனஞ் செய்தவர்களெல்லாம் எதையுமடையாதபடி தவிப்பார்களென்பது கெட்டியாகும் எ - று.

உலகத்தில் தானங்களிற் சிறந்தது அன்னதான மென்பார், 'அன்னமிட்ட பேரெலாம்' எனவும், அவர்கள் அத்தானத்தை நிறை வேற்றுதற்கு அதின்பயனாக அநேக காலம் ஜீவிக்கவேண்டியே வரு மென்பார், 'அநேக கோடி வாழவே' எனவும், அதற்கிரண்டாவதாகச் சொல்லப்படும் சொர்ணதானத்தைச் செய்வோர் அரசாளுவ ரென் பார், 'சொன்னமிட்ட பேரெலாந் துரைத்தனங்கள் பண்ணலாம்' எனவும், இவற்றிற்கு இடையூறு விளைவிக்க வொண்ணா தென்பார், 'வின்னமிட்ட பேரெலாம் வீழ்வர்வெங் நரகிலே, கன்னமிட்ட பேரெ லாங் கடந்துநின்ற திண்ணமே' எனவுங் கூறினர்.

தருமத்தின் விசேடத்தை:

"அறந்தா னியற்று மவனிலுங்கோடி யதிகமில்லந்
துறந்தா னவனிற் சதகோடியுள்ளத் துறவுடையோன்
மறந்தா னறக்கற் றறிவோடிருந் திருவாதனையற்
றிறந்தான் பெருமையை யென்சொல்லுவேன் கச்சியேகம்பனே"

என்று பட்டினத்துப் பிள்ளையார் சொல்லி யிருப்பதினு லறிக. 179

## சோதி நிலை

ஓதொணுமல் நின்றநீ ருறக்கமூணு மற்றநீர்
சாதிபேத மற்றநீர் சங்கையின்றி நின்றநீர்
கோதிலாத வறிவிலே குறிப்புணர்ந்து நின்றநீ
ரேதுமின்றி நின்றநீ ரியங்குமாற தெங்ஙனே.

(பொ - ரை) யாவராலும் இறைவன் இப்படிப்பட்டவனென்று எடுத்துச் சொல்லப்படாமலும், நித்திரையையும், உண்டியும் இல்லாமலும், சாதிபேதமில்லாமலும், எந்த விஷயத்திலும் சங்கையில்லாமலும், உயிர்களுடைய அறிவின் குறிப்பினையுணர்ந்தும், மற்ற விஷயங்களிலெதுவுமில்லாமலு மிருக்கின்ற நீர் வாசஞ் செய்வது எவ்விடத்திலோ? எ - று.

இறைவன் ஒரு அளவாகச் சுட்டிச் சொல்லப்படாதவனென்று பெரியோர்கள் சொல்லிவைத்துள்ள வண்ணம் இயற்கையா லமைந்தவனென்பார், 'ஒதொணுமல் நின்றநீர்' எனவும், அவருக்கு ஊணுறக்கமில்லை யென்பார், 'உறக்கமூணு மற்றநீர்' எனவும், இவன் தாய் தந்தைய ரில்லாதவனுகையால் சாதிபேதமுங் கிடையா தென்பார், சாதிபேத மற்றநீர்' எனவும், இவர் யாதொன்றிலும் பற்றில்லாதவராகையால் அவருக்கு எந்தப்பொருளினிடத்திஞ் சந்தேக விபரீதங்களில்லை யென்பார், 'சங்கையின்றி நின்றநீர்' எனவும், இங்ஙனமாயவர்

எல்லாச் சீவர்களிலுங் கலந்திருந்து அவ் வவர்களுடைய மனோபாவங்களைத் தெரிந்துகொள்ளுகின்றா ரென்பார், 'கோதிலாத வறிவிலே குறிப்புணர்ந்து நின்றநீர்' எனவும், இவர் வசிக்குமிடந் தெரியவில்லை யென்பார், 'ஏதுமின்றி நின்றநீ ரியங்குமாற தெங்ஙனே' எனவுங் கூறினர். 180

## யாவுஞ் சிவன் தந்ததேனல்

பிறந்தபோது கோவண மிலங்குநூல் குடுமியும்
பிறந்துடன் பிறந்ததோ பிறங்குநாற் சடங்கெலா
மறந்தநாலு வேதமும் மனத்துளே யுதித்ததோ
நிலம்பிளந்து வானிடிந்து நின்றதென்ன வல்லிரே.

(பொ - ரை) நாம் உலகத்தின்கண் தாயின் வயிற்றினின்றும் பிறந்தகாலத்தில் கோவணம் பூணுநூல், குடுமி இவைகளும் அந்தந்த நாட்களில் செய்யப்படும் சடங்குகளும் கூடவே பிறந்தனவோ? நான்கு வேதங்களும் மனத்திலேயே தோன்றினவோ? பூமியைப் பிளந்தும் ஆகாயத்தை யிடித்தும் நின்றது என்ன? வல்லமையுடையவர்களே! நீங்கள் சொல்லுங்கள் எ - று.

நாம் பிறந்தபோது நம்முடன் எதுவும் வந்ததில்லை. ஆகையால், எல்லாம் சிவன் செயலென்றே கொள்ளவேண்டும் என்பது கருத்து. ()

## யோகம்

துருத்தியுண்டு கொல்லனுண்டு சொர்ணமான சோதியுண்டு
திருத்தமாய் மனத்திலுன்னித் திகழவூத வல்லிரேல்
பெருத்ததூ ணிலங்கியே பிழம்பதாய் விரிந்திடும்
நிருத்தமான சோதியு நீயுமல்ல தில்லையே.

(பொ - ரை) இவ்வுடலின்கண் துருத்தியிருக்கின்றது. கொல்லனிருக்கின்றான் சொர்ணமயமாகிய தேஜஸு மிருக்கின்றது. ஆகை

யால், அந்தத் திருத்தியை மனத்தில் நினைத்துக் கொண்டு ஊத வல்லமை யுடையீரானல் அங்குள்ள மூலாதாரத் தூணிலிருந்து அக்கினி சொரூபம் விளங்கும், அப்பொழுது நடனஞ் செய்கின்ற தேஜோரூபனும் நீயுமல்லது வேறொருவர் அவ்விடத்தில் காணப்பட மாட்டார்கள் எ - று.

வாசியென்பது இவ்வுடலி லுண்டென்பார், 'திருத்தியுண்டு' எனவும், அதை இரேசக, பூரக, கும்பக மார்க்கங்களால் ஊத வேண்டிய கொல்லன் சீவனென்பார், 'கொல்லனுண்டு' எனவும், அங்ஙன மூதுங்கால் வெளிப்படுவது சோதியென்பார், 'சொர்னமான சோதியுண்டு' எனவும், அங்ஙனம் ஊதுவதும் மனத்திலெண்ணியே யென்பார், 'திருத்தமாய் மனத்திலுன்னித் திகழவூத வல்லிரேல்' எனவும், அதற்குப் பயன் சிவதரிசன மென்பார், 'பெருத்ததூணிலங்கியே பிழம்பதாய் விரிந்திடும்' எனவும், அப்பொழுது சீவன் இறைவனது வியாபகத்தில் மறைந்தும், இறைவன் சீவனைக் கலந்தும் வேறு பொருளைத் தலை காட்டவொண்ணாமல் மறைத்திருப்பது சுபாவமென்பார், 'திருத்தமானசோதியு நீயுமல்லதில்லையே' எனவுங் கூறினர்.

182

## கிரியை விலக்கல்

வேடமிட்டு மணித்துலக்கி மிக்கதூப தீபமாய்
ஆடறுத்து கூறுபோட்ட வவர்கள்போலும் பண்ணுறீர்
தேடிவைத்த செம்பெலாந் திரள்படப் பரப்பியே
போடுகின்ற புட்பபூசை பூசையென்ன பூசையே.

(பொ - ரை) ஆட்டினை யறுத்துப் பங்குபோட்டவர்களைப்போல் வேடமிட்டு தேடிவைத்த செம்புகளை யெல்லாம் வரிசையாகப் பரப்பி அவைகளைத் துலக்கி சுத்தம் பண்ணிவைத்து நீங்கள் செய்கின்ற புஷ்ப பூசையானது என்ன விசேஷமான பூசையோ? எ - று.

பூசை செய்வோர் சிவவேடத்தைப் பொய்யாகத் தரிசிக்கின்ருரென்பார், 'வேடமிட்டு' எனவும், பின்னர் பூசைச் சாமான்களைச் சுத்தி செய்வது சுபாவமென்பார், 'மணிதுலக்கி' எனவும், பின்னர் விக்கிரங்களை யெல்லாம் எடுத்துவைப்பா ரென்பார், 'தேடிவைத்த செம்பெலாந் திரள்படப் பரப்பியே' எனவும், அங்ஙனம் பரப்புவது ஆட்டு மாமிசத்தைக் கூறு போட்டதுபோல் தோன்று மென்பார், 'ஆடறுத்து கூறுபோட்ட வவர்கள்போலும் பண்ணுறீர்' எனவும், இப்படி செய்கின்ற பூசையால் பயனில்லை யென்பார், 'போடுகின்ற புட்பபூசை பூசையென்ன பூசையே' எனவுங் கூறினர். 183

### மோட்ச சாதனம்

முட்டுகண்ட தூமையின் முளைத்தெழுந்த சீவனை
கட்டிக்கொண்டு நின்றிடங் கடந்துநோக்க வல்லிரேல்
முட்டுமற்று கட்டுமற்று முடியினின்ற நாதனை
எட்டுதிக்குங் கையினு லிருந்தவீட தாகுமே.

(பொ - ரை) முட்டென்று சொல்லப்படுந் தூமையானது மாதங்களில் வரத் தடைப்பட்டு அதினுலுண்டான சீவனை இருக்கக் கட்டிவைத்திருக்கின்ற இடத்தைத் தாண்டிப்பார்க்க வல்லமை யுடையீரானுல் முன் சொன்னமுட்டும் கட்டுமற்ற முடிவிடத்திலிருந்த தலைவனை அஷ்டதிக்குகளிலுந் தன்னுடைய அநுபவத்திலிருந்த வீடு கைகூடும் எ - று.

முட்டினுல் பிறந்த ஜீவர்கள் அம்முட்டின் முடிவிலிருக்கும் இறைவனை நாடினுல் மோட்சவீடு கைகூடும் என்பது கருத்து. 184

### யோகநிலை

அருக்கனோடு சோமனு மதுக்குமப் புறத்திலே
நெருக்கியேறு தாரகை நெருங்கிநின்ற நேர்மையை

உருக்கியோ ரெழுத்துளே யொப்பிலாத வெளியிலே
யிருக்கவல்ல பேரலோ யினிப்பிறப்ப தில்லையே.

(பொ - ரை) சூரியசந்திரர்களையும் அவர்களுக்கு அப்புறத்தையும் நெருக்கி ஏறுகின்ற நட்சத்திரக் கூட்டங்கள் நெருங்கியிருந்த தன்மையை ஓரெழுத்தாகிய பிரணவத்தில் சேர்த்து அளவு சொல்லப் படாத வெளியாகிய ஆகாயத்தின்கண் இருக்க வல்லமை யுடையவர்களே இனிபிறவார் எ - று.

யோகத்திற்கு சூரிய சந்திர மண்டலங்களே தாயகமென்பார், 'அருக்கனோடு சோமனும்' எனவும், நட்சத்திரமண்டலம் அதற்கப் புறப்பட்ட தென்பார், 'அதற்கு மப்புறத்திலே நெருக்கியேறு தாரகை நெருங்கிநின்ற நேர்மையை' எனவும், இவைகளுக் கெல்லாம் மூலமாகிய பிரணவமே காரண மென்பார், 'உருக்கியோ ரெழுத்துளே' எனவும், அவனை வேண்டினோர் பிறவியகல்வது சிதாகாசத்தி லிருந் தாலே யென்பார், 'ஒப்பிலாத வெளியிலே யிருக்கவல்ல பேரலோ வினிப்பிறப்ப தில்லையே' எனவுங் கூறினர். 185

ஞா ன நி லை

மூலவட்ட மீதிலே முளைத்தவஞ் செழுத்தின்மேல்
கோலவட்ட மூன்றுமாய் குலைந்தலைந்து நின்றநீர்
ஞானவட்ட மன்றுளே நவின்றஞான மாகிலோ
ஏலவட்ட மாகியே யிருந்ததே சிவாயமே.

(பொ - ரை) மூலாதாரத்தின்மேல் முளைத்திருக்கின்ற பஞ்சாட் சரத்தின்மேல் ரூபத்தோடுகூடிய வட்டங்கள் மூன்றாய் குலைந்தி அலைந்திருந்த நீங்கள் ஞானவட்டமாகிய சிதாகாசத்தின்கண் விளைவதாகச் சொல்லப்பட்ட ஞானத்தை யடைந்தாலோ அவ்விடத்தில் ஏலவட்டமாயிருந்த சிவாயமேயாகும் எ - று.

ஞானிகளுக்கே பஞ்சாட்சர உண்மைவிளங்கும் என்பது கருத்து. 186

## மந்திரக் கிரமம்

சுக்கிலத் திசையுளே சுரோணிதத்தின் வாசலுள்
முச்சதுர மெட்டுளே மூலாதார வரையிலே
அச்சமற்ற சவ்வுளே யரியர னயனுமாய்
உச்சரிக்கு மந்திர முண்மையே சிவாயமே.

(பொ - ரை) சுக்கிலமிருக்குந் திசையினுள்ளும், சுரோணிதத்தின் வாசலுள்ளும், மூன்று சதுரமாயிருக்கின்ற மூலாதாரவரையிலும், அதை விரும்புவோர்க்கு யாதொரு அச்சமுமில்லாத சகாரத்திலும், விஷ்ணு, ருத்திர, பிரமர்களாய் உச்சரிக்கக்கூடிய மந்திரம் உண்மையாக சிவய நமவென்னும் பஞ்சாட்சரங்களே யாகும் எ - று.

மந்திர பீஜங்கள் சுக்கில சுரோணிதங்களிலிருந்து வாழ்கின்ற இடத்திற்கே உரியனவென்பார், 'சுக்கிலத் திசையுள்ளே சுரோணிதத்தின் வாசலுள்' எனவும், இவையனைத்திற்கும் மூலாதாரமே முக்கியஸ்தானமென்பார், 'முச்சதுர மெட்டுளே மூலாதார வரையிலே' எனவும், இவற்றிற்கு தாரகதேவதைகள் திரிமூர்த்திகளேயென்பார், 'அச்சமற்ற சவ்வுளே யரியர னயனுமாய்' எனவும், இவைகளுக்கெல்லாம் சிவயவென்னும் மூன்றட்சரங்களை யுள்ளடக்கிய பஞ்சாட்சரங்களே மூலமந்திரமென்பார், 'உச்சரிக்குமந்திர முண்மையே சிவாயமே' எனவுங் கூறினர். 187

## மானத பூசை

பூவுநீரு மென்மனம் பொருந்துகோயி லென்னுளம்
ஆவியோடி லிங்கமா யகண்டமெங்கு மாகினல்
மேவுகின்ற ஐவரும் விளங்குதூப தீபமாய்
ஆடுகின்ற கூத்தனுக்கோ ரந்திசந்தி யில்லையே.

(பொ - ரை) பூவும், நீரும் என்னுடைய மனமும், பொருந்து கின்றகோயில் என்னுடைய இருதயமும், ஆகி என்னுடைய உயிரு டன் இறைவர் இலிங்கமாகக் கலந்து சர்வ இடங்களிற் சேர்ந்தாலும், பொருந்துகின்ற பஞ்சகர்த்தர்களும் விளங்கும் தூப தீபங்களாய் திருநடனஞ் செய்கின்ற கூத்தனுக்கு அந்திசந்தியென்பது இல்லை யாகும் எ - று.

சர்வ ஆன்மகோடிகளுடைய மனமும் சர்வேஸ்வரனைப் பூசிக்குங் கருவியா மென்பார், 'பூவும்நீரும் என்மனம்' எனவும், அங்ஙனமே கோயிலாவது அவர்களுள்ள மென்பார், பொருந்துகோயி லென்னு ளம்' எனவும், இவ்வண்ணமே சிவஜீவைக்கியம் எங்குமா மென்பார், 'ஆவியோடி லிங்கமா யகண்டமெங்கு மாகினும்' எனவும், பஞ்ச பூதங்களே இறைவனுக்கு தூபதீபமா மென்பார், 'மேவுகின்ற ஐவ ரும் விளங்குதூப தீபமாய்' எனவும், இங்ஙனமே இறைவன் திரு நடனஞ் செய்வதென்பார், 'ஆடுகின்ற கூத்தனுக்கோ ரந்திசந்தி யில் லையே' எனவுங் கூறினர். 188

## சிவ சீவைக்கியம்

உருக்கலந்த பின்னலோ வுன்னைநா னறிந்தது
இருக்கிலென் மறக்கிலென் னினைந்திருந்த போதெலாம்
உருக்கலந்து நின்றபோது நீயுநானு மொன்றலோ
திருக்கலந்த போதலோ தெளிந்ததே சிவாயமே.

(பொ - ரை) நான், நீ என்னுடைய தேகத்தில்வந்து என்னுடன் கலந்த பின்னல்லவோ உன்னை இன்னனென் றுணர்ந்தது? அப்படி யிருப்பதால் சர்வ உயிர்களும் நினைத்திருந்த போதெல்லாம் நான் நினைத்திருந்தா லென்ன? மறந்தா லென்ன? நீ எப்பொழுது என் னுடைய உருவிற் கலந்தனையோ? அப்பொழுதே நானும் நீயும் ஒன்

ரூவோ மல்லவா? அப்படி யிருந்தும், இந்த விஷயத்தை நான் உன்னுடைய திருவருள் கலந்தபோதல்லவோ உணர்ந்தேன் எ - று.

சர்வேஸ்வரன் பரிபாக ஆன்மாக்களிடத்திற் கலந்தாலே அவர்களா லறியப்படுவா னென்பார், 'உருக்கலந்த பின்னல்லோ வுன்னைநா னறிந்தது' எனவும், அடியார்கள் சதா நினைப்பார்க ளென்பார், 'இருக்கிலென் மறக்கிலென் னினைந்திருந்த போதெலாம்' எனவும், சர்வேஸ்வரன் சீவனுடன் கலந்தபோது சிவமும், சீவனுமொன்றென்பார், 'உருக்கலந்து நின்றபோது நீயும்நானு மொன்றலோ' எனவும், இதை அருளுணர்த்த தெளியலா மென்பார், 'திருக்கலந்த போதலோ தெளிந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 189

## பஞ்சாட்சர மகிமை

சிவாயமஞ் செழுத்திலே தெளிந்துதேவ ராகலாம்
சிவாயமஞ் செழுத்திலே தெளிந்துவான மாளலாம்
சிவாயமஞ் செழுத்துளே தெளிந்துகொண்ட வான்பொருள்
சிவாயமஞ் செழுத்துளே தெளிந்துகொள்ளு முண்மையே.

(பொ - ரை) சிவயநம என்னும் பஞ்சாட்சரத்தினால் சர்வ விஷயங்களையுந் தெளிந்து தேவர்பிறப்பை யடையலாம், அவைகளினாலேயே தேவலோகத்தை அரசாளலாம், அந்தப் பஞ்சாட்சரத்துள் தெளிந்துகொண்ட மேலான பொருளானது சிவயநம என்னும் பஞ்சாட்சரத்தினால் எல்லாவற்றையுந் தெரிந்துகொள்ளலாம். இது உண்மையே யாகும் எ - று.

பஞ்சாட்சரமானது எல்லாக் கிரியைகளும் இயற்றுதற்குக் காரணமாகும் என்பது கருத்து. 190

## தேகத்தின் பலன்

பொய்க்குடத்தி லைந்தொதுங்கி போகம்வீசு மாறுபோல்
இச்சடமு மிந்திரியமும் நீருமே லலைந்ததே

அக்குடஞ் சவத்தைமொண் டமர்ந்திருந்த வாறுபோல்
இச்சடஞ் சிவத்தைமொண் டுகந்தமர்ந் திருப்பதே.

(பொ - ரை) நிலையாததாகிய இந்தச் சரீரத்தில் ஐந்து பூதங்களும் பதுங்கி யிருந்து போகத்தை உண்டாக்குவதுபோல், இந்தச் சரீரமும், பஞ்சேந்திரியங்களும் சலத்தின்மேல் அலைந்ததே யாகும். அந்தக் குடமானது நீரை மொண்டு பொருந்தி யிருந்ததுபோல் இந்தச் சரீரமானது சிவத்தைப்பெற்று அமர்ந்திருப்பதாகும் எ - று.

நீர்க்குடமானது சலத்தின்மேல் அமர்ந்திருப்பதுபோல் இச் சரீரமானது சிவத்தைப்பெற்று அமர்ந்திருப்பதாகும் என்பது கருத்து. ()

மன வடக்கம்

பட்டமுங் கயிறுபோல் பறக்கநின்ற சீவனை
பார்வையாலே பார்த்துநீ படுமுடிச்சுப் போடடா
திட்டவும் படாதடா சீவனை விடாதடா
கட்டடாநீ சிக்கெனக் களவறிந்த கள்ளனை.

(பொ - ரை) பட்டத்தையுங் கயிற்றையும்போல பறக்கவிடுகின்ற சீவனை, நீ உன்னுடைய உட்பார்வையால் பார்த்து அவிழ்க்கக் கூடாத படுமுடிச்சுப் போடடா, அங்ஙனம் போடுவதைவிட்டு திட்டப் படாது ஜீவனை விடக்கூடாது. ஆகையால், நீ களவறிந்த திருடனை நீ சிக்கெனக் கட்டிவைப்பாயாக எ - று.

சீவன் சர்வதேகங்களிலு முள்ளவனென்பார், 'பட்டமுங் கயிறுபோல் பறக்கநின்ற சீவனை' எனவும், அவனை யுள்ளபடியே யுணர்ந்து விடாது வைக்கவேண்டுமென்பார், 'பார்வையாலே பார்த்து நீ படுமுடிச்சுப் போடடா' எனவும், அதை விடப்படா தென்பார், 'திட்டவும் படாதடா சீவனை விடாதடா' எனவும், சீவனுடைய லட்சணங்களை உள்ளபடியே உணரவேண்டுமென்பார், 'கட்டடா நீ சிக்கெனக் களவறிந்த கள்ளனை' எனவுங் கூறினர். 192

## மௌனம்

அல்லிருந்து பகலிறந் தகம்பிரம மிறந்துபோய்
அண்டரண்ட முங்கடந் தனேகனேக ரூபமாய்
சொல்லிறந்து மனமிறந்த சுகசொரூப வுண்மையைச்
சொல்லியாற வென்னில்வேறு துணைவரில்லை யானதே.

(பொ - ரை) இரவும் பகல்களையும், அகம்பிரம வாதத்தையுந் தாண்டி அண்டபகிரண்டங்களைக் கடந்து அநேகாநேக ரூபமாய் வாக்கு மனமிறந்த உண்மையான இன்பசொரூபத்தை நான் வாயாரவாழ்த்தி இளைப்பாற என்னைவிட துணையாயுள்ளவர்கள் வேறெவரு மிலர்.

சர்வேஸ்வரன் இராப்பகலற்றவ னென்பார், 'அல்லிறந்து பகலிறந்து' எனவும், அகம்பிரமவாதிகளை நாடாத தென்பார், 'அகம்பிரம மிறந்துபோய்' எனவும், சர்வ அண்டங்களையுங் கடந்தவ னென்பார், 'அண்டரண்ட முங்கடந்து' எனவும், அவ்வவர் பாவனாமூர்த்தி இவனே யென்பார், 'அநேகநேக ரூபமாய்' எனவும், வாக்கு மனமிறந் தவனென்பார், 'சொல்லிறந்த மனமிறந்த சுகசொரூப வுண்மையை' எனவும், அவனை யடைந்தவர்களுக்கு அவனன்றி வேறு துணையில்லை யென்பார், 'சொல்லியாற வென்னில்வேறு துணைவரில்லை யானதே' எனவுங் கூறினர். 193

## பிறவிநிலை

ஐயிரண்டு திங்களா யடங்கிநின்ற தூமைதான்
கையிரண்டு காலிரண்டு கண்ணிரண்டு மாகியே
மெய்திரண்டு சத்தமாய் விளங்கிரச கந்தமும்
துய்யகாய மானதுஞ் சொல்லுகின்ற தூமையே.

(பொ - ரை) பத்துமாதங்களாக அடங்கியிருந்த தூமையானது இரண்டு கைகளும், இரண்டு கால்களும், இரண்டு கண்களும் பொருந்

திய சரீரமாகத் திரண்டு சத்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தங்களாகிய ஐந்து கந்தங்களும் பொருந்தி மேற் சொன்னபடி சுத்த சரீரமாயிற்று.

தூமையானது பத்துமாதங்களும் தடைப்பட்டு நிற்கு மென்பார், 'ஐயிரண்டு திங்களா யடங்கிநின்ற தூமைதான்' எனவும், அது தடைப் பட்டு நின்றாலே ரூபங்க ளமைவதென்பார், 'கையிரண்டு காலிரண்டு கண்ணிரண்டு மாகியே, மெய்திரண்டு சத்தமாய் விளங்கிரச கந்தமும், துய்யகாய மானதுஞ் சொல்லுகின்ற தூமையே' எனவுங் கூறினர். ()

## நாதத்திற்குக் காரணம்

அங்கலிங்க பீடமு மசவைமூன் றெழுத்தினுஞ்
சங்குசக் கரத்திலுஞ் சகலவா னகத்தினும்
பங்குகொண்ட யோகிகள் பரமவாச லஞ்சினும்
சிங்கநாத வோசையுஞ் சிவாயமல்ல தில்லையே.

(பொ - ரை) அங்கலிங்க பீடத்திலும், அசுபாமந்திரமாகிய மூன் றெழுத்திலும், சங்கு சக்கரங்களிலும், சகல ஆகாயங்களிலும், சிவ பூமியைப் பங்குகொண்ட யோகிகளுடைய உயர்ந்த ஐந்து வாசல்களி லும் காணப்படும் சிங்கநாத ஓசையும் சிவயநம என்று சொல்லப்படும் பஞ்சாட்சரங்களின்றி உண்டாவதில்லை யாகும் எ - று.

பஞ்சாட்சரமானது அங்கலிங்கபீட முதலியவற்றிற்கும் காரண பீஜமாகும் என்பது கருத்து 195

## சிவத்தி னுண்மை

அஞ்செழுத்து மூன்றெழுத்து மென்றுரைக்கு மன்பர்கள்
அஞ்செழுத்து மூன்றெழுத்து மல்லகாணு மப்பொருள்
அஞ்செழுத்து நெஞ்சழுத்தி அவ்வெழுத் தறிந்தபின்
அஞ்செழுத்து மவ்வின்வண்ண மானதே சிவாயமே.

(பொ - ரை) சிவயநம என்னும் பஞ்சாட்சரமாகிய அஞ்செழுத்தும், பிரணவமாகிய மூன்றெழுத்தும், ஆகிய இந்த இரண்டுமே அப்பொருளா மென்று சொல்லும் அன்பர்களே! அப் பொருளானது நீங்கள் சொல்லும் அஞ்செழுத்தும் மூன்றெழுத்து மல்லவாம். ஆகையால், பஞ்சாட்சரத்தை மனத்தில் வைத்து அகாரமென்னும் பிரணவ பீஜத்திலொரு பாகத்தை உள்ளபடியே யுணர்ந்தால் பஞ்சாட்சரங்களும் அகாரத்தின் பாங்காக நிற்குமானால் சிவாயமாகிய பஞ்சாட்சரப் பொருளை யறியக்கூடும் எ - று.

சர்வேஸ்வரன் யடைவித்தற்குரிய எழுத்துக்கள் பிரணவமும் பஞ்சாட்சரமு மென்பார், 'அஞ்செழுத்து மூன்றெழுத்து மென்றுரைக்கு மாந்தர்காள்' எனவும், எழுத்துக்களே இறைவனாகா வென்பார், 'அஞ்செழுத்து மூன்றெழுத்து மல்லகாணு மப்பொருள்' எனவும், அவ் வெழுத்துக்களின் மர்மங்களை யுணர்ந்தால் சர்வேஸ்வரனை யடையலா மென்பார், 'அஞ்செழுத்து நெஞ்சழுத்தி அவ்வெழுத்தறிந்தபின், அஞ்செழுத்து மவ்வின்வண்ண மானதே சிவாயமே' எனவுங் கூறினர்.

196

## சர்வம் போய்

ஆதரித்த மந்திர மமைந்தவாக மங்களும்
மாதர்மக்கள் சுற்றமு மயக்கவந்த நித்திரை
ஏதுபுக் கொளித்ததோ வெங்குமாகி நின்றதோ
சோதிபுக் கொளித்திடஞ் சொல்லடா சுவாமியே.

(பொ - ரை) உயிர் இறந்துபடுஞ் சமயத்தில் முன்னர் ஆதாரமாக வைத்திருந்த மந்திரங்களும், அதற்குக் காரணமாகப் பொருந்திய ஆகமங்களும், பெண்டு, பிள்ளைகள், சுற்றத்தார் முதலியோர் ஞானத்தை மயக்கவந்த நித்திரையாகும். ஆகவே, அப்பொழுது மேலே சொல்லப்பட்டவைகளெல்லாம் எந்த இடத்தில்போய் ஒளித்துக்கொண்

டனவோ? அன்றி, எங்கும் பரந்தனவோ? அன்றி, சோதியானது புகுந்து ஒளித்துக்கொண்ட இடத்தை ஓ சுவாமீ! நீ சொல்லுக எ-று.

மந்திரமானது சர்வ காரியங்களுக்கும் ஆதாரமென்பார், 'ஆதரித்த மந்திரம்' எனவும், அந்த மந்திரங்கள் ஆகமத்தில் சொல்லப்படுவதென்பார், 'அமைந்த ஆகமங்களும்' எனவும், பெண்டுபிள்ளைகள் அப்பிரயோசனமே யென்பார், 'மாதர்மக்கள் சுற்றமு மயக்கவந்த நித்திரை' எனவும், இவை பொய்யாங்கால் இறைவனுடைய திருவருள் எங்கதலுமோ வென்பார், 'எதுபுக் கொளித்ததோ வெங்குமாகி நின்றதோ, சோதிபுக் கொளித்திடஞ் சொல்லடா சுவாமியே' எனவுங் கூறினர். ()

## சாஸ்திர விசாரணை

அக்கர மனாதியோ வாத்துமா வனாதியோ
புக்கிருந்த பூதமும் புலன்களு மனாதியோ
தக்கமிக்க நூல்களுஞ் சதாசிவ மனாதியோ
மிக்கவந்த யோகிகாள் விரைந்துரைக்க வேணுமே.

(பொ-ரை) மந்திரபீஜாட்சரங்கள் அநாதியா யுள்ளனவோ? சீவன் அநாதியாயுள்ளதோ? சரீரத்தில் குடியிருந்த பூதங்களும் புலன்களும் அநாதியா யுள்ளனவோ? தகுந்த புராதன நூல்களும் சதாசிவமும் அநாதியா யுள்ளனவோ? எல்லாவற்றிலும் மேம்பா டடைந்த யோகிகளே நீங்கள் இதன் கருத்தை விரைந்து சொல்லுங்கள்.

மந்திர பீஜங்களனாதியா யுள்ளன வென்பார், அக்கரமனாதியோ' எனவும், சீவனும்-சிவனுட னுள்ளதே யாமென்பார், 'ஆத்துமாவனாதியோ' எனவும், இவை யிரண்டும் அநாதியா யுள்ளதுபோல் சரீரத்திற்கு பூதமும் புலன்களுமநாதி யென்பார், 'புக்கிருந்த பூதமும் புலன்களு மநாதியோ' எனவும், ஈஸ்வரனால் அநாதியா யருளிச் செய்யப்பட்டதாகலின், 'தக்கமிக்க நூல்களுஞ் சதாசிவ மநாதியோ' எனவும்,

இந்த விஷயங்களை யுணர்ந்தவர்கள் யோகிகளே யென்பார், 'மிக்க வந்த யோகிகாள் விரைந்துரைக்க வேணுமே' எனவுங் கூறினர். 198

## ராம மந்திரம்

ஒன்பதான வாசருழ் னொழியுநா ளிருக்கையில்
ஒன்பதாம் ராமராம ராமவென்னு நாமமே
வன்மமான பேர்கள்வாக்கில் வந்துநோ யடைப்பராம்
அன்பரான பேர்கள்வாக்கி லாய்ந்தமைந் திருப்பதே.

(பொ - ரை) சர்வ ஜீவர்களுக்கும் ஒன்பதாவது வாசலானது ஒழியுநாளாக யிருக்கையில் நாம் சொல்லப்படும் ஒன்பதாவதாகிய ராம நாம மந்திரமானது உள்ளபடியே உச்சரிக்கின்றவர்களில் வர்மமாக உச்சரிக்கின்றவர்கள் நோயை யடைபவர்களும், அன்பினால் உச்சரிக்கின்றவர்கள் உண்மைப்பொருளை ஆராய்ந் தறிபவர்களுமாக ஆகும்படி செய்யும் எ - று.

சரீரத்திலுள்ள வாசல் ஒன்பதேயா மென்பார், 'ஒன்பதான வாசல்தான்' எனவும், இந்த ஒன்பது வாசல்களும் மூடப்படுவனவென்பார், 'ஒழியுநா ளிருக்கையில்' எனவும், சரமதிசையில் இராமநாம சிந்தனை செய்யவேண்டு மென்பார், 'ஒன்பதாம் ராமராம நாமமென்னு நாமமே' எனவும், ராமநாமமந்திரம் கர்மிகட்கு வினையையும் அன்பர்கட்கு முத்தியையு மளிக்குமென்பார், 'வன்மமான பேர்கள்வாக்கில் வந்துநோ யடைவராம், அன்பரான பேர்சள்வாக்கி லாய்ந்தமைந் திருப்பதே' எனவுங் கூறினர். 199

## குருக்கள் செய்கை

அள்ளிநீரை யிட்டதேத கங்கையிற் குழைத்ததேது
மெள்ளவே பிணபிணென்று விளம்புகிற்கு மூடர்கள்

கள்ளவேட மிட்டதேது கண்ணைமூடி விட்டதேது
மெள்ளவே குருக்களே விளம்பிடீர் விளம்பிடீர்.

(பொ - ரை) மெதுவாக முணமுண வென்று சொல்லி உட்கார்ந் திருக்கும் மூடர்களே! நீங்கள் அள்ளி அள்ளி நீரைவிட்டது எது? உள் ளங் கையாற் குழைத்தது எது? திருட்டுவேஷந் தரித்தது எது? கண்ணை மூடிவிட்டது எது? ஓ ஆசிரியர்களே! இதன் விசேஷத்தை சொல்லுங்கள், சொல்லுங்கள் எ - று.

காலைமாலைகளில் அர்க்கியபாத்தியஞ் செய்வது சுபாவமென்பார், 'அள்ளிநீரை விட்டதேது' எனவும், விபூதியைக் குழைப்பதும் வழக் கமே யென்பார், 'அகங்கையிற் குழைத்ததேது' எனவும், மந்திரம் உச்சரிப்பது மெதுவாகவே யென்பார், 'மெள்ளவே மிணமிணென்று விளம்புகிற்கு மூடர்காள்' எனவும், இங்ஙனம் செய்வோர் கள்ளகுருக்க ளென்பார், 'கள்ளவேட மிட்டதேது' எனவும், அந்த வேஷத்திலும் யாவரும் மதிக்கும்படி கண்களை மூடிக்கொள்வது சுபாவமென்பார் கண்ணை மூடி விட்டதேது' எனவும், இவைகள் அவர்களே சொல் லக்கூடியதென்பார், 'மெள்ளவே குருக்களே விளம்பிடீர் விளம்பி டீர்' எனவுங் கூறினர். 200

## பிறப்பு

அன்னைகர்ப்பத் தூமையி லவதரித்த சுக்கிலம்
முன்னையே தரித்ததும் பனித்துளிபோ லாகுமே
உன்னிதொக்கு எழலுந்தூமை யுள்ளுளே யடங்கிடும்
பின்னையே பிறப்பதுந் தூமைகாணும் பித்தரே.

(பொ - ரை) தாயின் கர்ப்பாசயத்தின்கண் தங்கியிருந்த தூமையே ரூபமாகவிருக்க அதனுடன் சுக்கிலமானது முன்னர் தரித் தும் அதின்பின்னர் பனித்துளிபோல் கலப்பதாகும். ஆனல், தூமை

யானது சரீரத்திற்குள் திரிகின்ற தூமையானது உள்ளுக்குள்ளே யடங்குவதாம், அதன்பின்னர் அந்தத் தூமையே ரூபமாய்ப் பிறப்ப தாகும், ஓ பித்தர்களே! எ - று.

பத்துமாதங்களும் தாயின்கர்ப்பத்தில் தூமைதங்கி யிருப்பது சுபாவமென்பார், 'அன்னைகர்ப்பத் தூமையில்' எனவும், அதில் சுக்கிலம் கலப்பதுஞ் சுபாவமேயென்பார், 'அவதரித்த சுக்கிலம் முன்னையே தரித்ததும் பனித்துளிபோ லாகுமே' எனவும், இவ்விரண்டுங்கூடியே சரீரமெடுப்பதென்பார், 'பின்னையே பிறப்பதுந் தூமைகாணும்' என வும், இதையறியாதவர்கள் பித்தரேயென்பார், 'பித்தரே' எனவுங் கூறினர். 201

யோகம்

அழுக்கறத்தி னங்குறித் தழுக்கறாத மாந்தரே
அழுக்கிருந்த தெவ்விட மழுக்கிலாத தெவ்விடம்
அழுக்கிருந்த தவ்விடத் தழுக்கறுக்க வல்லிரேல்
அழுக்கிலாத சோதியோ டணுகிவாழ லாகுமே.

(பொ - ரை) மாயாபாசமாகிய அழுக்கினின்றும் நீங்காத மனிதர் களே! பாசமிருந்தது எவ்விடம்? பாசமில்லாதது எவ்விடம்? பாசமிருக் கின்ற அவ்விடத்தில் அப்பாசத்தை நீக்கவல்லவர்க ளாவீர்களானல் பாசமென்பது சிறிதுமில்லாத அந்தத்தேஜோமயப் பொருளுடன் சேர்ந்து நன்ருய் வாழக்கூடும் எ - று.

உயிர்கள் மாயையினின்றும் நீங்காதவர்களென்பார், 'அழுக்கறத் தினங்குறித்த தழுக்கருத மாந்தரே' எனவும், பாசமிருக்குமிடம் உயிர்களுக்குத் தெரியாதென்பார், 'அழுக்கிருந்த தெவ்விட மழுக்கி லாத தெவ்விடம்' எனவும், ஒவ்வொரு உயிர்களும் பாசத்தை நீக்க வேண்டுமென்பார், 'அழுக்கிருந்த தவ்விடத் தழுக்கறுக்க வல்லிரேல்'

எனவும், அங்ஙனஞ்செய்வோர் சிவசாரூப்பியத்தை யடைவார்க ளென்பார், 'அழுக்கிலாத சோதியோ டணுகிவாழ லாகுமே' எனவுங் கூறினர். 202

## சீவ னுண்மை

அணுத்திரண்ட கண்டமா யனைத்துபல்லி யோனியாய்
மனுப்பிறந் தோதிவைத்த நூலிலே மயங்குறீர்
சனிப்பதேது சாவதேது தாபரத்தி னூடுபோய்
நினைப்பதேது நிற்பதேது நீர்நினைந்து பாருமே.

(பொ - ரை) ஒரு அணுவளவாகிய சுக்கில சுரோணிதங்கள் திரண்டு அகண்டமாகியும், அநேக யோனிகளிற் பிறந்தவர்களாகியும், மநு முதலியோர்பிறந்து சொல்லிவைத்த நூற்களில் சொல்லப்பட்டிருக்கும் விஷங்களி லகப்பட்டு மயங்குகிறீர்கள். ஆகையால், நீங்கள், பிறப்பதும் இறப்பதும்; இதனுலென் றறியக்கூடவீராகவும். அன்றி, நீங்கள் மேலான பராபரப்பொருளின் சமீபத்திற்போய் அங்கேநினைப்பதும், நிற்பது எது? அதை நீங்களே நினைந்து பாருங்கள் எ - று.

அணுரூபமாகச் சேர்ந்த சுக்கில சுரோணிதங்களே சகல ஜீவர்களாயினவென்பார், 'அணுத்திரண்ட கண்டமா யனைத்துபல்லி யோனியாய்' எனவும் மோட்சநூலைக் கையாடாமல் மாயா நூலிலேயே மயங்குகின்றூர்க ளென்பார், 'மனுப்பிறந் தோதிவைத்த நூலிலே மயங்குறீர்' எனவும், மாயையின் வசத்தினுலேயே பிறப்பதும் இறப்பது மென்பார், 'சனிப்பதேது சாவதேது' எனவும், இங்ஙனம் மயங்குவதால் சிவ சாரூப்பியம் அடைய முடியாதென்பார், 'தற்பாத்தி னூடு போய் நினைப்பதேது நிற்பதேது' எனவும், அவ்விஷயங்களை நீங்களே யாராய்ந்து பாருங்களென்பார், 'நீர்நினைந்து பாருமே' எனவுங் கூறினர். 203

## ஞானிகள் தன்மை

ஆதியாகி யண்டரண்ட மப்புறத்து மப்புறம்
சோதியாகி நின்றிலங்கு சுருதிநாத சோமனை
பேதியாமல் தம்முளே பெற்றுணர்ந்த ஞானிகள்
சாதிபேத மென்பதொன்று சற்றுமில்லை யில்லையே.

(பொ - ரை) உலகத்திற்கு முதற்பொருளாய் அண்டரண்டங்களுக்கும் அப்புறப்பட்ட தேஜோரூபமாயிருந்து விளங்குகின்ற வேதங்களிற் சொல்லப்பட்டிருக்குஞ் சோமநாதனை, யாதொரு விகற்பமுமில்லாமல் தங்களுக்குள்ளே அநுபவித்துணர்ந்த உண்மை ஞானிகளுக்கு சாதிபேத மென்பது கொஞ்சமு மில்லை எ - று.

சர்வேஸ்வரன் எல்லாவற்றிற்கும் முதன்மையானவ னென்பார், 'ஆதியாகி' எனவும், எல்லாவற்றையுங் கடந்தவனென்பார், 'அண்டரண்ட மப்புறத்து மப்புறம்' எனவும், தேஜோமய னென்பார், சோதியாகி' எனவும், அவன் வேதாந்தத்தி லறியப்படுவனென்பார், 'சுருதிநாத சோமனை' எனவும், விகற்ப ஞானத்தால் அறியப்படா னென்பார், 'பேதியாமல்' எனவும், அகஞானத்தால் உணரப்படுவனென்பார், 'தம்முளே பெற்றுணர்ந்த ஞானிகள்' எனவும், அவர்களுக்கு சாதிவித்தியாசமில்லை யென்பார், 'சாதிபேத மென்பதொன்று சற்றுமில்லை யில்லையே' எனவுங் கூறினர். 204

## யோகம்

ஆக்கைமூப்ப தில்லையே யாதிகார ணத்திலே
நாக்கைமூக்கை யுள்மடித்து நாதநாடி யூடுபோய்
ஏக்கறுத்தி ரெட்டையு மிறுக்கமூத்த வல்லிமேல்
பார்க்கபார்க்க திக்கெலாம் பரப்பிரம மாகுமே.

(பொ - ரை) முதற்காரணமாகிய நாக்கை மூக்குஸ்தானத்திற்கு நேர் உள்ளாக மடித்து மூக்கிய நாதுவில் ஊடுறவிச்சென்று எந்த விஷயத்திலுஞ் சிறிதும் எக்கம் வைக்காமல் பனுதிறு என்று சொல்லும் வாசிகளை இறுக்கி வெளியில் ஓடவொட்டாமல் அழுத்திக் கட்ட வல்லமையுடையவர்களானல் சரீரமானது வயோதிகத்தை யடையாததாகும், உற்றுப் பார்க்குமிடமெல்லாம் பரப்பிரமமாகவுங் காணப்படும்.

சரீரம் நாக்குக்கு முதற்காரணமென்பார், 'ஆதிகார ணத்திலே' எனவும், யோகஞ்செய்வார் நாக்கை உள்மடிப்பார்க ளென்பார், 'நாக்கைமூக்கை யுள்மடித்து' எனவும், வாசியில் வீணு தண்டின் வழியே கும்பமார்க்கங்களைச் செய்யவேண்டு மென்பார், 'நாதநாடியூடுபோய்' எனவும், இங்ஙனம் கும்பகஞ் செய்யுங்காலத்தில் இரேசகத்திற்குரிய பதினறு மாத்திரைகளும் சிறிதும் வெளிவிடாமல் இரேசிக்கவேண்டு மென்பார், 'ஏக்கறுத்தி ரெட்டையு மிறுக்கழுத்த வல்லிரேல்' எனவும், இந்த யோகத்தால் நரைதிரை வருவதில்லை யென்பார், 'ஆக்கைமூப்ப தில்லையே' எனவும், இதைச் செய்யுஞ் சித்திவாய்ந்த ஞானிகளுக்கு உலகமெங்கும் பிரமமயமாய் தோன்றுமென்பார், 'பார்க்கப்பார்க்கத் திக்கெலாம் பரப்பிரம மாகுமே' எனவுங் கூறினார்.

ஞானிகளுக்கு எங்கும் பிரமமயமா மென்பதை:

"கண்டனவெலாமோன வுருவெளியதாகவுங்
கருதியஞ்சலி செய்குவாம்" எனவும்,

"பார்த்தவிடமெங்கும் பரமவெளிகாணுதடி"

எனவுங் கூறியிருப்பதினு லறிக. 205

## ஒடுக்கம்

அஞ்சுமஞ்சு மஞ்சுமஞ்சு மல்லல்செய்து நிற்பதும்
அஞ்சுமஞ்சு மஞ்சுமே யமர்ந்துளே யிருப்பதும்

அஞ்சுமஞ்சு மஞ்சுமே யாதரிக்க வல்லிரேல்
அஞ்சுமஞ்சு மும்முளே யமர்ந்ததே சிவாயமே.

(பொ - ரை) பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களும். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து பொறிகளும். வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் என்னுங் கர்மேந்திரியங்கள் ஐந்தும். சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும், இச் சரீரத்தில் கூடி துன்பங்கள் செய்திருப்பதும், பதினைந்து கருவிகளும் இந்தச் சரீரத்தில் பொருந்தியுள்ளே யமர்ந்திருப்பதும். அன்றி, பதினைந்து கருவிகளையுமே ஆதரிக்க வல்லமை யுடையீராஞல் அப்பொழுது பத்து வாயுவுக்களும் உங்களுடைய உள்ளத்தின்கண் அமர்ந்திருப்பனவே யாகும் எ - று.

தச வாயுவுக்கள் முதலிய கருவிகளெல்லாம் தங்கள் வசமாக்கிக் கொண்டவர்களே சிவசாரூப்பியத்தை யடைவார் என்பது கருத்து. ()

பஞ்சாட்சரம்

அஞ்செழுத்தி ஞதியா யமர்ந்துநின்ற தேதடா
நெஞ்சழுத்தி நின்றுகொண்டு நீசெபிப்ப தேதடா
அஞ்செழுத்தின் வாளதா லறுப்பதாவ தேதடா
பிஞ்செழுத்தி னேர்மைதான் பிரித்துரைக்க வேண்டுமே.

(பொ - ரை) பஞ்சாட்சரங்களுக்கும் முதன்மையாய் பொருந்தியிருக்கின்ற மந்திரங்கள் எதடா? அந்தப் பஞ்சாட்சரங்களையும் மனத்தில் ஊர்ஜ்ஜிதமாய் நிறுத்தி வைத்துக்கொண்டு நீ செபஞ் செய்வது எதடா? பஞ்சாட்சரமாகிய வாளால் மற்றைய பாகங்களை அறுப்பது எதடா? ஆகையால், பிஞ்செழுத்தின் குணத்தைப் பகுத்துச் சொல்ல வேண்டும் எ - று.

பஞ்சாட்சரங்களுக்கும் முதன்மையானது பிரணவ மென்பார், 'அஞ்செழுத்தி ஞதியா யமர்ந்தநின்ற தேதடா' எனவும், அதை நன்

ரூய் அதிக்கவேண்டு மென்பார், 'நெஞ்சழுத்தி நின்றுகொண்டு நீ செபிப்ப தேதடா' எனவும், பஞ்சாட்சரங்களே சகல பாசங்களுக்கும் வாளாயுத மென்பார், 'அஞ்செழுத்தின் வாளதா லறுப்பதாவ தேதடா' எனவும், அதுவே பிஞ்செழுத்தென்பார், 'பிஞ்செழுத்தி னேர்மை தான்' எனவும், அவ் வெழுத்தின் இலக்கணத்தை எனக்கு உபதேசிக்க வேண்டுமென்பார், 'பிரித்துரைக்க வேண்டுமே' எனவுங் கூறினர். ()

## உயிரின் விசேடம்

உயிரிருந்த தெவ்விட முடம்பெடுப்ப தின்முனம்
உயிரதாவ தேதடா வுடம்பதாவ தேதடா
உயிரையு முடம்பையு மொன்றுவிப்ப தேதடா
உயிரினு லுடம்பெடுத்த வுண்மைஞானி சொல்லடா.

(பொ - ரை) இந்தச் சரீரத்தை எடுப்பதற்கு முன்னே இந்த உயிரானது எந்தவிடத்தி லிருந்தது? உயிர் என்பதும், உடம்பு என்பதும் எப்படி யுண்டானது? உயிருடன் உடம்பையும், உடம்புடன் உயிரையும் கூட்டுவிப்பது எனே? ஆகையால், இவ் விஷயங்களை உயிரினுல் சரீரத்தை யெடுத்த உண்மையாகிய ஞானியே! நீ சொல்லடா? எ - று.

தாயின் கர்ப்பத்தின்கண் சரீரம் உண்டாவதற்கு முன் அதில் வந்து குடிபுகுந்த உயிரானது எங்கு இருந்ததோ என்பார், 'உயிரிருந்த தெவ்விட முடம்பெடுப்ப தின்முனம்' எனவும், அங்ஙனங் கலக்கத்தக்க உயிரும் உடம்பும் எங்ஙனம் உண்டாயினவோ என்பார், 'உயிரதாவ தேதடா வுடம்பதாவ தேதடா' எனவும், அங்ஙனந் தாயின் கர்ப்பத்தி லிருக்கும் உடம்பில் உயிர் கலப்பது எப்படியோ வென்பார், 'உயிரையு முடம்பையு மொன்றிவிப்ப தேதடா' எனவும், உயிர்வந்தடைந்தாலே உடம்பிற்குப் பயனுண்டென்பார், 'உயிரினு லுடம்பெடுத்த வுண்மைஞானி சொல்லடா' எனவுங் கூறினர். 208

## பிரணவ விளக்கம்

சுழித்தவோ ரெழுத்தையுஞ் சொன்முகத் திருத்தியே
துன்பவின்ப முங்கடந்து சொல்லுமூல நாடிகள்
அழுத்தமான வக்கர மங்கியுள் ளெழுப்பியே
ஆறுபங்க யங்கலந் தப்புறத் தலத்துளே.

(பொ - ரை) சுழித்த ரூபத்தோடு கூடியுள்ளதாகிய ஒரு எழுத்தான ஓம் என்னும் பிரணவத்தை மனத்தில் நினைத்து வாக்கில் துதித்து அதின் விசேடத்தால் துன்பத்தையும் இன்பத்தையுங் கடந்து சொல்லப்பட்ட மூலநாடியின்கண் ரொம்பவும் வண்மை பொருந்திய மந்திர பீஜத்தால் அக்கினியை உள்ளேயே எழுப்பி ஆறு தாரங்களிலுங் கலந்து அவற்றிற்கு அப்புறப்பட்ட இடத்திலிருந்து சிவபெருமானைத் தரிசிக்க வேண்டும் எ - று.

இது ஆறுதார யோகத்தால் கடவுளை யறியுநெறியை உணர்த்தியது ஆகும். 209

## விடை

உருத்தரிப்ப தற்குமுன் னுயிர்புகுந்த நாதமும்
கருத்தரிப்ப தற்குமுன் காயமென்ன சோணிதம்
அருட்டரிப்ப தற்குமுன் னறிவுமூலா தாரமாம்
குறித்தறிந்து கொள்ளுவீர் குணங்கெடுங் குருக்களே.

(பொ - ரை) சரீரம் எடுப்பதற்கு முன் உயிரானது நாதத்தில் புகுந்ததாகும். சரீரமுண்டாவதற்குமுன் இது சோணிதமேயாகும். திருவருளை யடைவதற்குமுன் அறிவானது மூலாதாரத்தி லிருந்ததாகும். அறிவுகெட்ட குருமார்களே! நீங்கள் இதை ஆராய்ந்துணர்ந்து கொள்ளுங்கள் எ - று.

உயிரானது தனக்கொரு சரீரம் எடுத்துக் கொள்ளும் வரைக்கும் நாதமயமா யிருப்பது சுபாவமென்பார், 'உருத்தரிப்ப தற்குமுன் உயிர் புகுந்த நாதமே' எனவும், சரீரம் உதிரக்கூறு மென்பார், 'கருத்தரிப்ப தற்குமுன் காயமென்ன சோணிதம்' எனவும், திருவருளடைவதற்கு முன் உயிர் கீழாலவஸ்தையை யடையுமென்பார், 'அருட்டரிப்ப தற்குமுன் அறிவுமூலா தாரமாம்' எனவும், இதை யறிந்துகொள்ள வேண்டியவர்கள் அறிவில்லாதவர்களே யென்பார், 'குறித்தறிந்து கொள்ளுவீர் குணங்கெடுங் குருக்களே' எனவுங் கூறினர். 210

## சிவ பதிவு

எங்குமுள்ள வீசனு ரெம்முடல் புகுந்தபின்
பங்குகூறு பேசுவார் பாடுசென் றணுகிலார்
எங்கள் தெய்வ முங்கள்தெய்வ மென்றிரண்டு பேதமோ
உங்கள்பேத மன்றியே வுண்மைரண்டு மில்லையே.

(பொ - ரை) சர்வ லோகங்களிலுங் கலந்திருக்கின்ற சர்வேஸ்வரன் என்னுடைய சரீரத்தில் வந்து கலவாமற் கலந்தபின்னர் வெவ்வேறு விதங்களாகப் பாகுபாடுசெய்து வேறுபடுத்திப் பேசுகின்றவர்களிடத்தில் போய்ச் சேரமாட்டார். ஆகையால், இது எங்கள் தெய்வம் இது உங்கள் தெய்வம் என்று வேறுபிரித்துப் பேசுவதுபோல் இரண்டு வகையாமோ? ஆகாது. ஆகையால், இந்த வித்தியாசம் உங்களால் நேரிட்டதேயல்லாமல் வேறல்ல. ஆகையால், உண்மையில் சர்வேஸ்வரனுக்கு இரண்டு மில்லையாம் எ - று.

ஈஸ்வரன் சர்வவியாபகனென்பார், 'எங்குமுள்ள வீசனார்' எனவும், அவர் எம்முள்ளத்தில் கலந்திருக்கின்றா ரென்பார், 'எம்முடல் புகுந்தபின்' எனவும், அநேகர் பலவாறு பேசுகின்றன ரென்பார், 'பங்குகூறு பேசுவார்' எனவும், விகற்பஞானம் பேசுவோரிடம் இறை

வன் கலவானென்பார், 'பாடுசென் றணுகிலார்' எனவும், தெய்வம் ஒன்றே யென்பார், 'எங்கள்தெய்வ முங்கள்தெய்வ மென்றிரண்டு பேதமோ' எனவும், இது அறிவீனர்கள் வைக்கும் பேதமே யென்பார், 'உங்கள்பேத மன்றியே யுண்மைரண்டு மில்லையே' எனவுங் கூறினர்.

211

## சர்வம் சிவம்

அரியுமாகி யயனுமாகி யண்டமெங்கு மொன்றதாய்
பெரியதாகி யுலகுதன்னில் நின்றபாத மொன்றலோ
விரிவதென்று வேறுசெய்த வேடமிட்ட மூடரே
அறிவினோடு பாருமிங்கு மங்குமெங்கு மொன்றதே.

(பொ - ரை) விஷ்ணுமூர்த்தியாகியும், பிரமனாகியும், சர்வ அண்டங்களும் ஒன்றாகியும், பெரிய பொருளாகியும், இவ் வுலகத்தின்கண் இருக்கின்ற திருவடி ஒன்றேயல்லவா? ஆம். இப்படி யிருப்பதை விட்டு பலவேறு விகற்ப ரூபங்களாக இறைவனுக்குக் கற்பித்து பொய் வேடங்கொண்ட மூடர்களே! நீங்கள் நல்ல அறிவினோடு பாருங்கள் இங்கும் அங்கும் ஒன்றேயாகும் எ - று.

சர்வேஸ்வரன் விஷ்ணுரூபத்தை அந்த மதத்திற்குத் தக்கபடி யடைந்தாரென்பார்' 'அரியுமாகி' எனவும், பிரமசமாஜத்தார்க்கு பிரமனாகவும் வெளிப்படுவா னென்பார், 'அயனுமாகி' எனவும், சர்வ அண்டங்களிலும் இவனுடைய வியாபகமே யுள்ளதென்பார், 'அண்டமெங்கு மொன்றதாய்' எனவும், இவன எல்லாத் தேவர்களுக்கும் பெரியவனென்பார், 'பெரியதாகி' எனவும், சர்வேஸ்வரன் ஓரிடத்தில் நின்றாலே எங்குங் காணப்படுவா னென்பார், 'உலகுதன்னில் நின்றபாத மொன்றலோ' எனவும், இங்ஙனமுள்ள இறைவனை மூடர்களெல்லாம் வேறு பிரித்துக் கூறுவாரென்பார், 'விரிவதென்று வேறு செய்த வேடமிட்ட மூடரே' எனவும், இங்ஙனஞ் சொல்லுவதை

விட்டு சரியாய் ஆராய்ந்துபார்த்தால் இறைவன் எங்கும் ஒருவனுகவே காணப்படுவா னென்பார், 'அறிவிஞேடு பாருமிங்கு மங்குமெங்கு மொன்றதே' எனவுங் கூறினர். 212

## போய் வேடம்

வெந்தநீறு மெய்க்கணிந்து வேடமுந் தரிக்கிறீர்
சிந்தையுள் நினைந்துமே தினஞ்செபிக்கு மந்திரம்
முந்தமந்தி ரத்திலோ மூலமந்தி ரத்திலோ
எந்தமந்தி ரத்திலோ வீசன்வந் தியங்குமே.

(பொ - ரை) சைவசமயத்தில் சொல்லப்பட்டுள்ள கிரமப்படியே செய்யப்பட்டு வெந்தெடுத்த திருநீற்றைச் சரீரத்தில் உத்தூளனம் பண்ணி அதற்குத்தக்க சிவவேடத்தைத் தரிக்கிறீர். அப்படிப்பட்ட நீங்கள் உங்கள் மனத்தின்கண் நினைந்துகொண்டு தினமுஞ் செபிக்கும் மந்திரமானது முதன்மையாயுள்ள மந்திரத்தின் பீஜங்களோ? மூலமந்திரத்திலுள்ள பீஜங்களோ? வேறு எதுவோ? ஆனல், உங்களுக்கு சர்வேஸ்வரன் வெளிப்படையாய் காணப்படுவது எந்தப் பீஜத்திலோ? அதை எனக்குச் சொல்லுங்கள் எ - று.

நீங்கள் பொய் வேடதாரிக ளென்பார், 'வெந்நீறு மெய்க்கணிந்து வேடமுந் தரிக்கிறீர்' எனவும். நீங்கள் செபிக்கும் மந்திரங்களால் இறைவனை யடையமாட்டீர் என்பார், 'சிந்தையுள் நினைந்துமே தினஞ் செபிக்கு மந்திரம், முந்தமந்தி ரத்திலோ மூலமந்தி ரத்திலோ, எந்த மந்திரத்திலோ வீசன்வந் தியங்குமே' எனவுங் கூறினர். 213

## எழுத்துக்களின் விளக்கம்

அகாரகா ரணத்திலே யனேகனேக ரூபமாய்
உகாரகா ரணத்திலே யுருத்தரித்து நின்றனன்

மகாரகா ரணத்திலே மயக்குகின்ற வையகம்
சிகாரகா ரணத்திலே தெளிந்ததே சிவாயமே.

(பொ - ரை) அகாரமென்னுங் காரணமாகிய பீஜத்தினால் அநேகாநேக ரூபங்களாயும் உகாரமென்னும் காரணமாகிய பீஜத்தினால் திருமேனிதாங்கியும் நின்றான். மகாரமென்னுங் காரணமாகிய பீஜத்தினால் மாயாசம்பந்தப்படுகின்ற இந்த உலகமானது மீண்டும் சிகாரமென்னுங் காரணமாகிய பீஜத்தினால் தெளிந்ததாகும் எ - று.

அகார பீஜமானது பிரணவத்திற்கு தலைமையான பீஜமென்பார், 'அகாரகார ணத்திலே' எனவும், அதுவே சகல ரூபங்களு முண்டாவதற்குத் தாயகமென்பார், 'அநேகநேக ரூபமாய்' எனவும், உகாரமும் இவ்வண்ணமே யாமென்பார், 'உகாரகார ணத்திலே யுருத்தரித்து நின்றனன்' எனவும், மகாரமென்னும் பீஜமானது விஷ்ணு பீஜமாகையால் அதினால் உலகத்தார் மயக்கத்தை யடைவாரென்பார், 'மகாரகார ணத்திலே மயங்குகின்ற வையகம்' எனவும், அதுவும், சிகாரமானது ஈஸ்வர பீஜமாகையால் அதினால், தெளியவேண்டு மென்பார், 'சிகார கார ணத்திலே தெளிந்ததே சிவாயமே' எனவுங் கூறினார்.

அகார உகார பீஜங்கள் பிரணவத்திற்குக் காரணமென்றதை:

"பகவதி கரவணை மிசைதுயில் பயிலு
மிகலறு குமரனை யினிதருள் புரிக
அகாரமு முகாரமு மகாரமு மாகித்
திகழுறு பிரணவ மெழுசிறு களிறே"

என ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் கூறியவற்றா னறிக. 214

ஞானிக ளுணர்ச்சி

அவ்வெழுத்தி லுவ்வுவந் தகாரமுஞ் சனித்ததோ
உவ்வெழுத்து மவ்வெழுத்து மொன்றையொன்றி நின்றதோ

செவ்வையொத்து நின்றலோ சிவபதங்கள் சேரினும்
மிவ்வையொத்த ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே.

(பொ - ரை) அகாரமென்னும் பீஜத்தில் உகாரமானது சேர்ந்து மீண்டும் அதிலிருந்து அகாரபீஜ முண்டாயதோ? அது தெரியாது. ஆகையால், இவ்வெழுத்துக்களெல்லாம் நன்றாகப் பொருந்தியிருந்தா லல்லவோ சிவபதஞ் சேர்வதாகும்? ஆனால், இதுவிஷயத்தை நற்புத்தி வாய்ந்த ஞானிகளே நீங்களே விரித்துச் சொல்லவேண்டும் எ - று.

பிரணவத்தினால் எல்லாங் கைகூடுகின்றன வென்கிறீராகையால் அப்பிரணவத்தின் உள் மர்மங்களை ஞானிகளே! நீங்களே எனக்குத் திருவருள் செய்யவேண்டும் என்பது கருத்து. 215

## சிவ வியாபகம்

ஆதியான வஞ்சிலு மனாதியான நாலிலும்
சோதியான மூன்றிலுஞ் சொரூபமற்ற ரெண்டிலும்
நீதியான தொன்றிலே நிறைந்துநின்ற வஸ்துவை
ஆதியான தொன்றுமே யற்றதஞ் செழுத்துமே.

(பொ - ரை) முதன்மையான தாகிய பஞ்சாட்சரங்களிலும், அநாதியாயிருக்கின்ற அந்தக் கரணங்கள் நான்கிலும், தேஜோமய மானதாகிய முக்குணங்களிலும், அரூபமாகிய இரண்டு வஸ்துக்களி லும், நியாயமாய் நிறைந்திருக்கின்ற ஒரு பொருளாகிய ஆன்மாவிலும் கலந்திருக்கின்ற ஒப்பற்ற ஒரு வஸ்துவை அடைவிக்கு மார்க்கத்தை கொண்டுள்ளது பஞ்சாட்சர மந்திரமேயாகும் எ - று.

பஞ்சாட்சரமே எல்லாப் பீஜங்களுக்கும் முதன்மையான தென் பார், 'ஆதியான வஞ்சிலும்' எனவும், அநாதியாகவே உயிர்களுக்கு அந்தக் கரணங்கள் உண்டென்பார், 'அநாதியான நாலிலும்' எனவும்,

முக்குணங்களும் தேஜோரூபமுள்ளனவென்பார், 'சோதியான மூன்றிலும்' எனவும், இங்ஙனமே உயிர் முதலியவற்றிலுங் கலந்திருக்கின்றானென்பார், 'நீதியான தொன்றிலே நிறைந்துநின்ற வஸ்துவை, ஆதியான தொன்றுமே யற்றதஞ் செழுத்துமே' எனவுங் கூறினார். 216

## இதுவுமது

வானிலாத தொன்றுமில்லை வானுமில்லை வானிடில்
ஊனிலாத தொன்றுமில்லை யூனுமில்லை யூனிடில்
நானிலாத தொன்றுமில்லை நானுமில்லை நண்ணிடில்
தானிலாத தொன்றுமே தயங்கியாடு கின்றதே.

(பொ - ரை) ஆகாயபூதமானது கலந்திராதவஸ்து ஒன்றுமில்லை. பொருள்கள் கலவாத ஆகாயமுமில்லை. ஊனையிருக்கப்பெறாத பொருள் ஒன்றுமில்லை. பொருள்களடையாத ஊனுமில்லை. நான் கலந்திராத பொருளும் ஒன்றுமில்லையாம். கலந்தபின் நானுமில்லையாம். அங்ஙனம் இறைவனுடன் சேர்ந்தால் அவனே எல்லாவற்றிலுங் கலந்தவனாய் வெளிப்பட்டு ஆடாநிற்பன் எ - று.

ஆகாயபூதமானது எல்லாப் பொருள்களும் தங்குதற்கு இடங்கொடுத்து நிற்பதென்பார், 'வானிலாத தொன்றுமில்லை வானுமில்லை வானிடில்' எனவும், சரீரமாகிய பிருதிவி பூதத்தின் சம்பந்தமில்லாத பொருளில்லாமையால், 'ஊனிலாத தொன்றுமில்லை யூனுமில்லை யூனிடில்' எனவும், நான் உயிராகையால் உயிர்கலவாத பொருளொன்றில்லை யென்பார், 'நானிலாத தொன்றுமில்லை நானுமில்லை' எனவும், ஈஸ்வரசம்பந்தத்தை யடையுங்கால் எல்லாம் அவனே யாவானென்பார், 'தானிலாத தொன்றுமே தயங்கியாடு கின்றதே' எனவுங் கூறினார். 217

## யோகம்

சுழித்ததோ ரெழுத்தையுன்னி சொல்முகத் திருத்தியே
துன்பவின்ப முங்கடந்து சொல்லும்நாடி யூடுபோய்
அழுத்தமான வக்கரத்தி னங்கியை யெழுப்பியே
ஆறுபங்க யங்கடந் தப்புறத்து வெளியிலே
விழித்தகண் குவித்தபோ தடைந்துபோ யெழுத்தெலாம்
விளைந்துவிட்ட விந்திரசால வீடதான வெளியிலே
அழுத்தினலு மதிமயங்கி யனுபவிக்கும் வேளையில்
அவனுமுண்டு நானுமில்லை யாருமில்லை யானதே.

(பொ - ரை) சுழித்ததாகிய ஒரு எழுத்தை மனத்தில் நினைந்து கொண்டு வாக்கின்கண் துதிசெய்வதை வைத்து சுக துக்கங்களைக் கடந்து சொல்லப்படுகின்ற முக்கிய நாதவின்வழியே சென்று சுத்தமான பதிவைப்பெற்ற அட்சரத்தினல் அங்குள்ள அக்கினியை எழுப்பி ஆறு தாமரைகளையுங் கடந்து அவைகளுக் கப்புறத்திலிருக்கும் வெளியிலே திறந்திருக்கும் கண்களை மூடிப் பார்த்தகாலத்தில் எழுத்துக்களெல்லாம் மறைந்து அதன்பின்ன ருண்டான இந்திரசால வீடாகிய வெளியில் பதிந்து அறிவு மயங்கி சுகாநுபூதியை அநுபவிக்கும் வேளையில் அவன்மாத்திர மிருப்பானே யொழிய நாங்கள் யாவரு மிருப்பதில்லை எ - று.

சிவபெருமான் அடியார்களை யடிமைப்படுத்துமாறு செய்கின்ற அவசரத்தில் அவனுடைய திருவருள் வியாபகத்தில் சீவர்களுடைய தலைகளைத் தெரியாம லழுத்தி இறைவனே முன்னிற்கின்றா னென்பார், 'அநுபவிக்கும வேளையில் அவனுமுண்டு நானுமில்லை யாருமில்லையானதே' எனக் கூறினர். 218

## தீர்த்த ஸ்நானம் விலக்கல்

நல்லமஞ் சனங்கள்தேடி நாடிநாடி யோடுறீர்
நல்லமஞ் சனங்களுண்டு நாதனுண்டு நம்முளே
எல்லைமஞ் சனங்கள்தேடி யேகபூசை பண்ணினல்
தில்லைமேவு சீவனுஞ் சிவபதத்து ளாடுமே.

(பொ - ரை) உலகமாக்களே! நீங்கள் நல்ல தீர்த்தங்களைத் தேடி அவைகளை நாடிநாடி பலகாலும் ஓடிக்கொண்டிருக்கிறீர், நீங்கள் தேடுகின்ற மஞ்சனங்களும் சர்வேஸ்வரனும் நமக்குள்ளேயுண்டு. ஆகையால், அவனிருக்கும் எல்லையைக் கண்டுணர்ந்து ஒரே மனதாய்ப் பூசைசெய்தால் தில்லையென்னு மிடத்திலிருந்து வாழ்கின்ற சிவனும் சிவபெருமானுடைய திருவடிகளிற் சேர்ந்து நடனஞ் செய்யாநிற்கும். எ - று.

உலகத்தில் பெரும்பாலோர் தீர்த்தமாடுதற்குச் செல்லுகின்ருரென்பார், 'நல்லமஞ்சனங்கள்தேடி நாடிநாடி யோடுறீர்' எனவும், அவை நமக்குள்ளேயே யிருக்கின்றன வென்பார், 'நல்லமஞ்சனங்களுண்டு நாதனுண்டு நம்முளே' எனவும், அவனை நாடிப் பூசை செய்பவர்களுக்கு சிவபதங்கிடக்கு மென்பார், 'எல்லைமஞ்சனங்கள்தேடி ஏகபூசை பண்ணினல், தில்லைமேவு சீவனுஞ் சிவபதத்து ளாடுமே' எனவுங் கூறினர். 219

## உயிர் விளக்கம்

உயிரகத்தில் நின்றிடு முடம்பெடுத்த தற்குமுன்
உயிரகார மாயிடு முடலுகார மாயிடும்
உயிரையு முடம்பையு மொன்றுவிப்ப தச்சிவம்
உயிரினு முடம்புதா னெடுப்பவா றுரைக்கினே.

(பொ - ரை) சரீரத்தை யெடுப்பதற்குமுன்னமே உயிரானது அகத்தின்கண் நிற்பதாகும். உயிர் அகாரபீஜமும், உடல் உகாரபீஜமும், உயிரையும் உடம்பையும் சேர்ப்பிப்பது அந்தச் சிவமேயாகும். உயிரே உடம்பை எடுத்ததாகும் எ - று.

உடம்பை எடுப்பதற்குமுன் உயிரானது அறிவுமயமா யிருப்பது சகசந்தானே யென்பார், 'உயிரகத்தில் நின்றிடு முடம்பெடுப்ப தற்குமுன்' எனவும், அகாரபீஜமே உயிருக்குத் தாயகமென்பார், 'உயிரகாரமாயிடும்' எனவும், உகாரபீஜமே உடலுக்குத் தாயகமென்பார், 'உடலுகாரமாயிடும்' எனவும், சிவபெருமானே அவ்வுயிர்களை அவ்வவற்றின் செய்வினைக்குத் தக்கவண்ணம் தேகத்திற் சேர்க்கின்றா ரென்பார், 'உயிரையு முடம்பையு மொன்றுவிப்ப தச்சிவம்' எனவும், ஆயினும் உயிருக்காகவே உடம்பு உண்டான தென்பார், 'உயிரினு லுடம்புதானெடுத்தவா றுரைக்கினே' எனவுங் கூறினர். 220

## விராட் சொரூபம்

அண்டமேழு முழலவே யனந்தயோனி யுழலவே
பண்டமா லயனுடன் பரந்துநின் றுழலவே
எண்டிசை கடந்துநின் றிருண்டசத்தி யுழலவே
அண்டரண்ட மொன்றதா யாதிநட்ட மாடுமே.

(பொ - ரை) எம்முடைய முதற்பொருளாகிய சர்வேஸ்வரனவன் அண்டங்கள் ஏழும், சர்வ யோனிகளும், புராதனமா யிருக்கின்ற விஷ்ணு பிரமர்களும், அஷ்டதிக்குகளையுங் கடந்திருக்கின்ற இருண்ட சத்தியாகிய மாயா சத்தியும் நடுங்கும்படி சர்வ அண்டங்களும் ஒன்றாக ரூபங்கொண்டு நடனஞ் செய்வான் எ - று.

சர்வேஸ்வரன் விராட் சொரூபங்கொண்டு நடனஞ் செய்வான் என்பது கருத்து. 221

## ஈஸ்வரன் வியாபகம்

உருவநீ ருறுப்புகொண் டுருத்தரித்து வைத்திடும்
பெரியபாதை பேசுமோ பிசாசையொத்த மூடரே
கரியமாலு மயனுமாக காணொணாத கடவுளை
உரிமையாக வும்முளே யுணர்ந்துணர்ந்து கொள்ளுமே.

(பொ - ரை) ரூபத்தை யுடைத்தா யிருக்கின்ற நீர் சகல அவய வங்களையுந் தாங்கி வைக்கின்ற பெரிய வழியில் அந்த அவயவங்கள் பேசக் கூடியவையாவனவோ? ஆகையால், பசாசினையொத்த அறி வீனர்களே! நீங்கள் நீலமேனியையுடைய விஷ்ணுமூர்த்திக்கும், பிரமதேவனுக்குங் காணப்படாத பெரிய கடவுளை உள்ளன்போடு உம்முடைய மனத்தின்கண்ணே உள்ளபடியே உணர்ந்து கொள்ளுங் கள் எ - று.

பிரம விஷ்ணுக்களால் இன்னமுந் தேடிக் காணப்படாத இறை வனை நீங்கள் உள்ளன்போடு உங்களுடைய மனத்தி லுணர்ந்து கொள் ளுங்கள் என்பது கருத்து. 222

## சிலாஸ்துதி விலக்கல்

பண்ணிவைத்த கல்லையும் பழம்பொருள தென்றுநீர்
எண்ணமுற்று மென்னபே ருரைக்கிறீர் கசளழைகாள்
பண்ணவும் படைக்கவும் படைத்துவைத் தளிக்கவும்
ஒண்ணுமாகி யுலகளித்த வொன்றைநெஞ்சி லுன்னுமே.

(பொ - ரை) சிற்பிகளால் உருவமைக்கப்பட்டு கோயில்களில் நாட் டப்பட்ட சிலாரூபங்களையும் இவைகளே உயர்ந்த தெய்வங்களென்று நீங்கள் நினைந்துகொண்டு அவைகளுக்கு என்ன பேரிட்டழைக்கிறீர் கள்? ஆகையால், நீங்கள் மூடர்களேயாவீர்கள். அப்படிப்பட்ட மூடர்

களே! நீங்கள் எந்தப் பொருளையுஞ் சிருஷ்டிக்கவும், காப்பாற்றவும் அழிக்கவும் வல்லமையோடு உலகத்தைச் சிருஷ்டித்த ஒரு பொருளாகிய பரமேஸ்வரனை நீங்கள் சதா சிந்தனை செய்யுங்கள் எ - று.

சிலாரூபத்தை வணங்கி வீணாள் கழிப்பதைவிட பரமேஸ்வரனை உள்ளன்போடு அந்தர்முகமாக நினையுங்கள் என்பது கருத்து. 223

## பிறவி நிலை

நாலதான யோனியுள் நவின்றவிந்து மொன்றதாய்
ஆலதான வித்துளே யமர்ந்தொடுங்கு மாறுபோல்
சூலதான வுற்பனஞ் சொல்வதான மந்திரம்
மேலதான ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே.

(பொ - ரை) நான்கு வகையாகிய யோனிகளிலும் நுழைந்த விந்துக்கள் ஒன்றன் செய்கையைப் போலவே மற்றொன்றன் செய்கையுமாய் ஆலம் வித்தானது தனக்குள் பெரிய மரத்தை யடக்கி யிருப்பது போல் சூலாகி உற்பவத்தைச் சொல்லுவதான மந்திரம் ஒன்றை உயர்ந்த உண்மைஞானிகளே! நீங்களே எங்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் எ - று.

அண்டசம், சுவேதசம், உற்பிஜம், சராயுஜம் என்னும் நான்குமே யோனிகளென்பார், 'நாலதான யோனியுள்' எனவும், விந்துக்களெல்லாம் ஒரே செய்கையை யுடையன வென்பார், 'நவின்றவிந்து மொன்றதாய்' எனவும், ஆலம்விதை தனக்குள் பெரிய ரூபத்தை யடக்கியுள்ளதுபோல் விந்துவும் தனக்குள் சரீரத்தை யடக்கி வைத்திருக்கின்றதென்பார், 'ஆலதான வித்துளே யமர்ந்தொடுங்கு மாறுபோல், சூலதான வுற்பனஞ் சொல்வதான மந்திரம்' எனவும், இதனுடைய விஷயங்கள் ஞானிகளுக்கே புலப்படவேண்டு மென்பார், 'மேலதான ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே' எனவுங் கூறினர். 224

## கருவி னுண்மை

அருவமா யிருந்தபோ தன்னையங் கறிந்திலை
உருவமா யிருந்தபோ துன்னைநா னறிந்தனன்
குருவினால் தெளிந்துகொண்டு கோதிலாத ஞானமாம்
பருவமான போதலோ பரப்பிரம மானதே.

(பொ - ரை) அருவத்துடன் (அதாவது ரூபமில்லாமல்) உன்னுடைய கருப்பாசயத்தில் நான் வாசஞ்செய்துகொண்டிருந்த காலத்தில் அன்னாய் நீ அங்கு என்னை இன்னானென் றுணரமாட்டாய். அப்படியே நானும் அறியாதவனாக விருந்து எனக்கு ரூபமேற்பட்ட பின்னரே உன்னைத் தாயென் றுணர்ந்தேன். ஆயினும், இவ் விஷயத்தின் மர்மங்களை நல்ல ஞானாசிரியனா லுணர்ந்துகொண்டு குற்றமற்ற பரஞானத்தை யடைந்த பருவம்வந்த போதைக்கே பரப்பிரமமாகக் கூடும் எ - று.

சர்வ உயிர்களும் தங்கள் தங்கள் தாய்மார்களின் கருப்பாசயங்களில் விந்துமயமாகவோ, சோணிதமயமாகவோ இருக்கும்போது தங்களுக்குத் தாயாக விருக்கின்றவர்களுக்கு ஆண் என்றும், பெண் என்றும் தெரிந்துகொள்ள முடியாதென்பார், 'அருவமா யிருந்தபோ தன்னையங் கறிந்திலை' எனவும், அங்ஙனமே விந்துசுரோணி தங்களுக்கும் தாயென்று ரூபமேற்படாமுன்னர் தெரியாதென்பார், 'உருவமா யிருந்தபோ துன்னைநா னறிந்தனன்' எனவும், ஆயின் இதன் மர்மபாகங்கள் ஞானாசிரியனால் அறியப்படுவன வென்பார், 'குருவினால் தெரிந்துகொண்டு' எனவும், அங்ஙனம் தெரிந்து கொண்டபின் ஞானத்தை அவனிடத்திலேயே கற்கவேண்டு மென்பார், 'கோதிலாத ஞானமாம்' எனவும், அங்ஙனங் கற்கும் பரஞானமானது பருவம் வந்தாலே பரப்பிரமத்தை யடையச்செய்யு மென்பார், 'பருவமான போதலோ பரப்பிரம மாவதே' எனவுங் கூறினார்.

யாதொரு ஜீவான்மா பிரமசைதன்யத்தை யடையவேண்டிய தானல் ஞானசிரியன்பால் ஞானோபதேசம் பெறவேண்டும் என்பது கருத்து.

225

## இதுவுமது

பிறப்பது மிறப்பதும் பிறந்திடா திருப்பதும்
மறப்பது நினைப்பது மறைந்ததைத் தெளிந்ததுந்
துறப்பதுந் தொடுப்பதுஞ் சுகித்துவாரி யுண்பதும்
பிறப்பது மிறப்பதும் பிறந்தவீ டடங்குமே.

(பொ - ரை) ஜெந்மாந்தரங்களில் பிறப்பதும், இறப்பதும், தவிர பிறவாமலே யிருப்பதும், ஒரு பொருளை மறப்பதும், நினைப்பதும், மீண்டும் மறந்த பொருளைத் தெளிந்ததும், ஒரு பொருளை விட்டுவிடுவதும், ஒரு பொருளை சேர்த்துக்கொள்வதும், சுகமாயிருந்து அருமையான பொருள்களை எடுத்தெடுத்துண்பதும், மீண்டும் வேறு ஜெந்மங்களில் பிறந்து பிறந்து இறப்பதும் ஆகிய இவையெல்லாம் பிறந்த வீடாகிய கருவின் கண்ணேயே உண்டான விதமாகும் எ - று.

பிறப்பது முதலிய யாவும் கருவிலமைப்பாகும் என்பது கருத்து.

## திருமால் லீலை

கண்ணிலே யிருப்பனே கருங்கடல் கடைந்தமால்
விண்ணிலே யிருப்பனே மேவியங்கு நிற்பனே
தன்னுளே யிருப்பனே தராதலம் படைத்தவன்
என்னுளே யிருப்பனே யெங்குமாகி நிற்பனே.

(பொ - ரை) பெரிய கடலைக் கடைந்த விஷ்ணுவானவன் என்னுடைய கண்ணிலேயே சதா வாழ்வதுந் தவிர, ஆகாயத்திலும் பொருந்தி யிருப்பன், தனக்குள்ளும் தானொருவனக விருப்பன்.

அன்றி, என்னுள்ளத்தின் கண்ணுமிருப்பன், இவையனைத்தும் ஒரு விசேஷமோ வென்று பிறராற் சொல்லப்படாமல் எவ்விடத்திலும் பரவியு மிருப்பான் எ - று.

இச்செய்யுள் வைஷ்ணவ மதசாம்பிரதாயமாகச் சொல்லப்பட்டதாகலின், விஷ்ணுவின் வியாபகத்தைக கூறிய தென்றுணர்க. 227

## தர்மம் வற்புறுத்தல்

ஆடுநாடு தேடினு மானைசேனை தேடினும்
கோடிவாசி தேடினுங் குறுக்கேவந்து நிற்குமோ
ஓடியிட்ட பிச்சையு முகந்துசெய்த தர்மமும்
சாடிவிட்ட குதிரைபோல தர்மம்வந்து நிற்குமே.

(பொ - ரை) கோடிகோடியாக ஆடுகளையும், அநேகமான தேசங்களையும், கோடிகோடியாக யானைகளையும், அநேகமாக காலாட்படைகளையும், கோடிகோடியாக குதிரைகளையும் வெகுவாகக் கஷ்டப்பட்டு தேடிவைத்திருந்தாலும் எமனோலை வருகின்ற காலத்தில் இவைகளெல்லாம் குறுக்கே வந்து தடுப்பவைகளாவனவோ? ஆகா. ஆகையால், தடுப்பவைகளாக வுள்ளவைகள் ஓடியோடிப் பாத்திர மறிந்திட்ட பிச்சையும், மனோ திருப்தியாக வேதநெறிப்பட செய்த தருமமேயாகும் எ - று.

ஆடு, நாடு, சேனை முதலியவை ராஜ்ய முழுமைக்குஞ் சிறிதும் இடமில்லாதபடி சேர்த்து வைத்திருந்தாலும் அவைகளெல்லாம் எமனோலையைத் தடுக்காவாகையால் அவைகளை சேர்ப்பதைவிட்டு எமனோலையைத் தடுக்க வன்மையுள்ள தருமத்தைச் செய்யுங்கள் என்பது கருத்து. 228

## தானம்

எள்ளிரும்பு கம்பளி யிடும்பருத்தி வெண்கலம்
அள்ளியுண்ட நாதனுக்கோ ராடைமாடை வஸ்திரம்

உள்ளிருக்கும் வேதியர்க் குற்றதான மீதிரால்
மெள்ளவந்து நோயனைத்து மீண்டிடுஞ் சிவாயமே.

(பொ - ரை) உலகமாக்களே! நீங்கள் எள்ளு, இரும்பு, கம்பளம், பருத்தி, வெண்கலம், வஸ்திரம் முதலியவற்றைத் தானமாக மனம் பழுத்த பிராமணர்களுக்குக் கொடுப்பீரானால் உங்களை மெள்ள மெள்ள வந்து தொடர்ந்து வருத்தஞ்செய்யும் நோய்களனைத்தும் நீங்கிவிடும் எ - று.

வேதத்தில் எள் முதலிய தானங்கள் பிராமணர்க்கே உரியன வென்று சொல்லப்பட்டுள்ள வண்ணம் உலகத்தாருஞ் செய்கின்ற சுபாவகுணத்தை நோக்கி இங்ஙனங் கூறினர். ஆயின், கிரகசாரங்கள் விரோதமா யிருந்தாலே அத்தானங்கள் செய்வது உலக வழக்காகக் காணப்படுகின்றது.

எல்லாத் தானங்களும் வேதத்தில் விதிக்கப்பட்டன வாயினும் இரும்பு தானங்கொள்ளப் பிராமணர்கள் இசைவது பெரிய கஷ்டமாகும்.

229

## உத்ஸவம் விலக்கல்

ஊரிலுள்ள மனிதர்கா ளொருமனதாய்க் கூடியே
தேரிலே வடத்தைவிட்டு செம்பைவைத் திழுக்கிறீர்
ஆரினு மறியொணாத வாதிசித்த நாதரை
பேதையான மனிதர்பண் ணும் பிரளிபாரும் பாருமே.

(பொ - ரை) உலகத்திலுள்ள மனிதர்களே! நீங்களெல்லாரும் ஒரே மனதாகச் சேர்ந்து ஒரு பெரிய தேரில் செம்பு விக்கிரகத்தை வைத்து அந்தத் தேருக்குப் பலமான வடங்களைப் பூட்டி ஒரே மூச்சாக இழுத்து ரதோஸ்வம் செய்கின்றீர். யாவராலும் இப்படிப்பட்டவனென்றுணரப்படாத முதன்மைச் சித்தராகிய கடவுளை அறிவில்லாத மனிதர்கள் செய்யும் பிறளியை நீங்கள் பாருங்கள் எ - று.

உலகத்தில் மனிதர்களெல்லாம் வீண் விஷயங்களில் பெரும் பாலும் தலையிடுகின்றூ ரென்பார், 'ஊரிலுள்ள மனிதர்கா ளொருமன தாய்க் கூடியே' எனவும், சித்திரத் தேர்விழா நடத்துகின்றூ ரென் பார், 'தேரிலே வடத்தைவிட்டு செம்பைவைத் திழுக்கிறீர்' எனவும், சர்வேஸ்வரன் எவராலு மறியப்படாதவ னென்பார், 'ஆரிஞலு மறி யொணுத வாதிசித்த நாதரை' எனவும், அறிவீனர்களெல்லாம் இவ் வண்ணமே செய்வார்களென்பார், 'பேதையான மனிதர்பண்ணும் பிரளிபாரும் பாருமே' எனவுங் கூறினர். 230

## குருபதேசம்

மருள்புகுந்த சிந்தையால் மயங்குகின்ற மாந்தரே
குருக்கொடுத்த மந்திரங் கொண்டுநீந்த வல்லிரேல்
குருக்கொடுத்த தொண்டருங் குகனுடிந்த பிள்ளையும்
பருத்திபட்ட பன்னிரண்டு பாடுதான் படுவரே.

(பொ - ரை) மயக்கங்கொண்ட அறிவினல் மயங்குகின்ற உலக மாக்களே! ஆசாரியரானவர் கொடுத்த மந்திரங்களைக்கொண்டு மாயையை நீந்த வல்லமையுடையவரானல் சுப்பிரமணியக்கடவுளும் விநாயகரும் அடைந்த பாட்டை அடைவீர்கள் எ - று.

உலகத்தில் மானிடர்கள் குருபதேசத்தால் மாய்கையை நீக்கிக் கொண்டால் சுப்பிரமணிய விநாயகர்கள் அடைந்திருக்கும் பதவிகளை யடைவார்கள் என்பது கருத்து. 231

## சிவதயவு

அன்னைகர்ப்ப வறையதற்கு ளங்கியின்பிர காசமாய்
அந்தறைக்குள் வந்திருந் தரியவிந்து ரூபமாய்
தன்னையொத்து நின்றபோது தடையறுத்து வெளியதாய்
தங்கநற் பெருமைதந்து தலைவனுய் வளர்ந்ததே

உன்னையற்ப நேரமு மறந்திருக்க லாகுமோ
உள்ளமீ துறைந்தெனை மறைப்பிலாத சோதியை
பொன்னைவென்ற பேரொளிப் பொருவிலாத வீசனே
பொன்னடிப் பிறப்பிலாமை யென்றுநல்க வேணுமே.

(பொ - ரை) தாய்மார்களுடைய கர்ப்பாசயமாகிய அறைக்குள் அக்கினிப்பிரகாசமாய் வந்திருந்த அருமையான விந்துவடிவமாய் நின்ற காலத்தில் அங்கே யாதொரு தடையுமின்றி வெளியாய் எனக்கு நல்ல சிறப்பைத் திருவருள்செய்து தலைவனாய் இருந்து வளர்த்த உன்னை கொஞ்சநேரமானாலும் மறந்திருக்கலாகுமோ? நீயோ, என்னுடைய, உள்ளத்தின்கண் வாசஞ்செய்து என்னை எப்பொழுதும் மறவாமல் 'காக்கின்ற தேஜோமயனா யிருக்கின்றனை. ஆகையால், பொன்னினுடைய விளக்கத்திற் கதிதப்பட்டு விளங்குந் தேஜஸை யுடைய இணையில்லாத ஈஸ்வரனே! உன்னுடைய பொன்போலுந் திருவடிகளை நான் உள்ளபடியே யடைந்தமையால் எனக்கு தேவரீர், பிறப்பிலாமையைத் திருவருள் செய்யவேண்டும் எ - று.

சர்வ ஜீவர்களும் முன்னர் விந்துமயமாய்த் தாயின் கர்ப்பத்தில் விளங்குகின்றன ரென்பார், 'அன்னை கர்ப்ப வறையதற்கு ளங்கியின் பிரகாசமா யந்தறைக்குள் வந்திருந் தரியவிந்து ரூபமாய்' எனவும், சீவனும்-சிவனைப்போல் தனக்கு ஆகந்துகமாகக் கிடைத்த பாசங்களை நீக்கிக்கொண்ட காலத்தில் உதவுகின்றா ரென்பார், 'தன்னையொத்து நின்றபோது தடையறுத்து வெளியதாய் தங்கநற் பெருமைதந்து தலைவனாய் வளர்த்ததே' எனவும், இறைவனைச் சதா உள்ளபடியே சிந்தித் திருக்கவேண்டுமென்பார், 'உன்னையற்ப நேரமு மறந்திருக்க லாகுமோ உள்ளமீ துறைந்தெனை மறப்பிலாத சோதியை, பொன்னை வென்ற பேரொளிப் பொருவிலாத வீசனே பொன்னடிப் பிறப்பிலாமை யென்றுநல்க வேண்டுமே' எனவுங் கூறினார். 232

### வேஷதாரி நிலை

பிடித்ததெண்டு மும்மதோ பிரமமான பித்தர்காள்
தடித்தகோல மத்தைவிட்டு சாதிபேதங் கொண்மினோ
வடித்திருந்த தோர்சிவத்தை வாய்மைகூற வல்லிரேல்
திடுக்கமுற்ற வீசனைச் சென்றுகூட லாகுமே.

(பொ - ரை) நாம் பிரமமாய் விட்டோமென்றுசொல்லி அகந்தை கூறும் பித்தர்களே! நீங்கள் உங்கள்கையில் பிடித்திருக்கும் தண்டமானது உமக்குரியதாகுமோ? ஆகாது. ஆகையால், நீங்கள் எடுத்திருக்கும் அந்தக் கோலத்தைவிட்டு சாதிபேதங் கொள்ளுங்கள். ஏனெனில், நீங்கள் இப்பொழுது எடுத்திருக்குங் கோலத்தைவிட அதுவே சிறந்ததாகையால் இனியேனும் இவ்விரண்டையும்விட்டு நான்கு வேதங்களாலும் வடித்தெடுத்துக் கூறப்பட்ட உண்மைத்தெய்வமாகிய ஸ்ரீ சிவபெருமானை சத்தியத்துடன் துதிசெய்ய வல்லமையுடையீரானல் ஜெகதீஸ்வரனிடஞ் சென்று அவனுடைய திருவடிகளை யடையக் கூடும் எ - று.

உலகத்தில் பெரும்பாலோர் உண்மையாய்ச் சிவனை யறிந்தவர் போல் வேஷந்தரித்து நடிக்கின்றூர்களென்பார், 'பிடித்ததெண்டு மும்மதோ பிரமமான பித்தர்காள், தடித்தகோல மத்தைவிட்டு சாதிபேதங் கொண்மினோ' எனவும், இறைவனை உள்ளபடியே நாடுவோர் சிவ சாம்ராஜ்யத்தை யடைவார்களென்பார், 'வடித்திருந்த தோர்சிவத்தை வாய்மைகூற வல்லிரேல், திடுக்கமுற்ற வீசனைச் சென்றுகூட லாகுமே' எனவுங் கூறினூர். 233

### சர்வம் சிவமெனல்

சத்திநீ தயவுநீ தயங்குசங்கி னேசைநீ
சித்திநீ சிவனுநீ சிவாயமா மெழுத்துநீ

முத்திநீ முதலுநீ மூவரான தேவர்நீ
அத்திபூர மும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே.

(பொ - ரை) சத்திகள் திருவருள் விளங்குகின்ற சங்கநாதம், சித்திசிவபெருமான், சிவயநம என்னும் பஞ்சாட்சரம், முத்தி, முதல்வன், திரிமூர்த்திகள் ஆகிய யாவும் நீயேயா யிருக்கின்றாய். ஆகையால், அடியேனாகிய என்னை ஆதரிக்கவேண்டுமென்று தேவரீரே தெளிந்துணர்ந்து கொள்ளவேண்டும் எ - று.

எல்லாம் நீயேயா யிருக்கின்றபடியால் என்னையும் நீயே யுணர்ந்து ஆதரிக்க வேண்டும் என்பது கருத்து. 234

## பொய் வேடர்

சட்டையிட்டு மணிதுலங்குஞ் சாத்திரச் சழக்கரே
பொஸ்தகத்தை மெத்தவைத்து போதமோதும் பொய்யரே
நிட்டையேது ஞானமேது நீரிருந்த வக்ஷரம்
பட்டையேது சொல்லிரே பாதகக் கபடரே.

(பொ - ரை) வேடந்தாங்கி மணிகளை துலக்கி வைத்திருக்கும் சாஸ்திர மயக்கத்தை யுடையவர்களே! அநேகமாக புஸ்தகங்களை வைத்துக்கொண்டு உண்மை ஞானமென்று நினைத்ததை சொல்லுகின்ற பொய்யரே! பாதகங்களை அதிகமாகச் சொல்லுகின்ற கபடர்களே! உங்களுக்கு நிஷ்டை, ஞானம், யோகபட்டை இவைகள் எது? அதை நீங்களே சொல்லுங்கள் எ - று.

சாஸ்திர வாராய்ச்சிமட்டு மிருந்து அநுபவ மில்லார்க்கு ஞான மில்லை என்பது கருத்து. 235

## சுக்கில குணம்

உண்மையான சுக்கில முபாயமா யிருந்ததும்
வெண்மையாகி நீரிலே விரைந்துநீர தானதும்

தண்மையான காயமே தரித்துருவ மானதும்
தெண்மையான ஞானிகாள் தெளிந்துரைக்க வேணுமே.

(பொ - ரை) உண்மையாகத் தாயின் கருப்பத்தில் சுக்கில மானது உபாயமாய்ச் சேர்ந்திருந்ததும், அது நீரில் வெண்மையாய்க் கரைந்ததும், பின்னர் சேடமாய்த் தங்கியிருந்தது மெதுவாகச் சரீர மானதும் ஆகிய விஷயங்களை தெரிந்த ஞானிகளே! நீங்கள் ஆராய்ந்து சொல்லவேண்டும் எ - று.

விந்துவானது தாயின் கருப்பத்தில் வெகு தந்திரமாகச் செல்லு கின்றதென்பார், 'உண்மையான சுக்கில முபாயமா யிருந்ததும்' எனவும், அங்ஙனம் புகும்போது எல்லாம் நீராக விடையிலிருக்கும் நீரிற் கலந்து ஒரு பனித்துளி யளவே நிலைத்திருக்கு மென்பார், 'வெண்மை யான நீரிலே விரைந்துநீ ரானதும்' எனவும். அந்தச் சிறிய அளவே பெரிய ரூபமாய்ப் பரிணமிக்கின்றதென்பார், 'தன்மையான காயமே தரித்துருவ மானதும்' எனவும், இவ் வரிய பெரிய விஷயம் ஞானி களுக்கே புலப்படுவதென்பார், 'தெண்மையான ஞானிகாள் தெளிந் துரைக்க வேண்டுமே' எனவுங் கூறினர்.

236

## பிறவி யுண்மை

வஞ்சகப் பிறவியை மனத்துளே விரும்பியே
அஞ்செழுத்தி னுண்மையை யறிவிலாத மாந்தர்காள்
வஞ்சகப் பிறவியை வதைத்திடவும் வல்லிரேல்
அஞ்செழுத்தி னுண்மையை யறிந்துகொள்ள லாகுமே.

(பொ - ரை) கொடுமையை விளைவிக்கின்ற பிறவியை மனத் தின்கண் நினைந்து அஞ்செழுத்து என்றுசொல்லும் பஞ்சாட்சரத் தின் உண்மையை அறிந்திடாத மாந்தர்களே! நீங்கள் மேலே சொல் லப்பட்ட கொடுமையை விளைவிக்கும் ஜெக்மத்தை நீக்கிக்கொள்ள

வல்லமையை யுடையவீர்க ளாவீராஞல் பஞ்சாட்சரத்தின் உண்மையை எளிதிலுணர்ந்து கொள்ளலாகும் எ - று.

ஜெங்மம் உயிர்களுக்கு வருவது கொடுமையா மென்பார், 'வஞ்சகப் பிறவியை' எனவும், உலகத்தார் அது வரக்கூடிய விஷயங்களையே செய்கின்றார்களேயொழிய அதை நீக்கிக்கொள்ள முயற்சிக்கிறதில்லையென்பார், 'மனத்துளே விரும்பியே' எனவும், பஞ்சாட்சர விசேடத்தால் அப் பிறவியை அறுக்கலா மென்பார், 'வஞ்சகப் பிறவியை வதைத்திடவும் வல்லிரேல், அஞ்செழுத்தி னுண்மையை யறிந்து கொள்ள லாகுமே' எனவுங் கூறினர். 237

## அராபிமத வுண்மை

காயிலாத சோலையிற் கனியுகந்த வண்டுகள்
ஈயிலாத தேனையுண் டிராப்பக லுறங்குறீர்
பாயிலாத கப்பலேறி யக்கரைப் படுமுனே
வாயினா லுரைப்பதாகு மோமவுன ஞானமே.

(பொ - ரை) காய் பழம் முதலியவைகளை யிருக்கப்பெறாத சோலையின்கண் கனியையுண்ண விரும்பி வந்த வண்டுகளைப்போல் ஈயால் மொய்க்கப்பெறாத தேனைக்குடித்து இரவும்பகலும் தூங்குகிறீர்கள். பாய்விரித்துக் கட்டப்படாத கப்பலிலேறி அந்தக் கரையை யடைவதன்முன்னர் நல்லவாக்கில்லாத மூடர்களே! நீங்கள் லாஹி! லாஹி என்று தௌத்தியஞ் செய்யுங்கள் எ - று.

இது அராபிமத வாராய்ச்சியிற் பாடப்பட்டது.

பிறவிக்கடலில் விழுந்து தவிக்கும்போது சர்வேஸ்வரனை நினையுங்கள் என்பது கருத்து. ஸ்ரீமந் மணிவாசகப் பெருமானும்:

"தனியனேன் பெரும்பிறவிப் பௌவத்தெவ்வத்
தடங்கரையி லெற்றுண்டு பற்றொன்றின்றி

கனியை நேர்துவர்வாயா ரென்னுங்காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின்வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமாறென்றென் றேங்கி
யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே முதலந்த மில்லாமல்லற்
கரைகாட்டியாட் கொண்டாய் மூர்க்கனேற்கே''

என்று சொல்லியிருப்பதினு லறிக. 238

## பூசை விலக்கல்

பேய்கள்பேய்க ளென்கிறீர் பிதற்றுகின்ற பேயர்காள்
பேய்கள்பூசை கொள்ளுமோ பிடாரிபூசை கொள்ளுதே
ஆதிபூசை கொள்ளுமோ வனுதிபூசை கொள்ளுதோ
காயமான பேயலோ கணக்கறிந்து கொண்டதே.

(பொ - ரை) பலவாருகப் பிதற்றுகின்ற அறிவீனர்களே! நீங்கள் பசாசுகள் பசாசுகள் என்று எதற்கோ ஒரு பெயரைவைத்துச் சொல்லுகின்றீர்கள். ஆகையால், நீங்கள் சொல்லும் பேய்கள் உங்களால் போடப்படும் பூசைகளைக் கொள்ளுகின்றதோ? அது கொள்ளாதானுல் பிடாரிமட்டும் பூசையைக் கொள்ளுகின்றதே அது என்? அன்றி ஆதிப்பொருள், அநாதிப்பொருள் என்கிற இரண்டில் ஆதி பூசையைக் கொள்ளுமோ? அநாதிபூசையைக் கொள்ளுமோ? பார்க்குமிடத்தில் நம்முடைய காயமே பேயாகும். ஆகையால், இக் கணக்கை யறிந்து கொள்ளுங்கள் எ - று.

பேய்கள் என்று உங்களால் சொல்லப்பட்டு வருவது உங்கள் காயமே யன்றி வேறன்று என்பது கருத்து. 239

## சர்வம் சிவம்

மூலமண்ட லத்திலே முச்சதுர மாதியாய்
நாலுவாச லெம்பிரான் நடுவுதித்த மந்திரம்

கோலியெட் டிதழுமாய் குளிர்ந்தலர்ந்த தீட்டமாய்
மேலும்வேறு காண்கிலேன் விளைந்ததே சிவாயமே.

(பொ - ரை) மூலாதாரத்தின்கண் முச்சதுரவாதியாக நாலு வாசல்களிலும் எம்பெருமானனவன் நடுவே ஏற்படுத்திய மந்திரத்தை ஆராய்ந்து எட்டிதழாய்க் குளிர்ந்து மலர்ந்த வீட்டில் வேறு ஒன்றையுங் காணமல் சிவயநம வென்னும் பஞ்சாட்சரத்தையே கண்டேன் எ - று.

மூலாதாரயோகத்தில் பஞ்சாட்சரங்களே காரணமாக விருக்கின்றதென்பது கருத்து. 240

## இறப்பு

ஆதிகூடு நாடியோடி காலைமாலை நீரிலே
சோதிமூல மானநாடி சொல்லிறந்த தூவெளி
யாதிகூடி நெற்பறித்த காரமாதி யாகமம்
பேதபேத மாகியே பிறந்துட லிறந்ததே.

(பொ - ரை) முதற்பொருளைக் கூடுதற்கு நாடிநாடி ஓடுந் தன்மையையுடைய காலையிலும், மாலையிலும், தேஜோரூபனான பரமேஸ்வரன் எழுந்தருளியிருக்கின்ற மூலநாடியில் வாக்கிறந்த பரிசுத்தமான வெளியிலே முதற்பொருளானது உயிர்களைக் கலக்கக்கூடும். அப்படிப்பட்ட வஸ்துவைக் கலவாமையால் அநேக ஜென்மங்களுக் கேதுவாக இந்தச் சரீரமானது இறந்து இறந்து வருகின்றது எ - று.

சர்வேஸ்வரனை உள்ளபடியே ஆராயாமல் பாவங்களையே மேன்மேலுந் தேடியதால் இறப்புண்டாகின்றது என்பது கருத்து. 241

## பஞ்சாட்சர தியானம்

பாங்கினோ டிருந்துகொண்டு பரமனஞ் செழுத்துளே
யோங்கிநாடி மேலிருந்து உச்சரித்த மந்திரம்

மூங்கில்வெட்டி நாருரித்து முச்சில்தை விதத்தினி
ளுய்ந்தநூலிற் றேன்றுமே யறிந்துணர்ந்து கொள்ளுமே.

(பொ - ரை) சமீபத்தில் வேதமார்க்கத்தில் விதித்திருக்குங் கிரமப்படி யிருந்துகொண்டு பரமேஸ்வரனையுடைய பஞ்சாட்சரத்திற்குள் புகுந்து மூலநாடியின்மேலேறி அங்கிருந்துகொண்டு உச்சரித்த மந்திரங்களில் பயனுவது மூங்கிலைவெட்டி நாராக வுரித்து முச்சில்தைக்கும் வகையைப்போல் நீங்கள் ஆராய்ந்த நூலினுற் கிடைக்கும். ஆகையால், நீங்கள் அதை நன்ரு யுணர்ந்து சொல்லுங்கள் எ - று.

பஞ்சாட்சர தியானத்தின் பயன் வெளிப்படையாகத் தோற்ருமையால் சாஸ்திர வாராய்ச்சியினுல் தெரிந்து கொள்ளவேண்டும் என்பது கருத்து.

242

## சிவ வியாபகம்

புண்டரீக மத்தியி லுதித்தெழுந்த சோதியை
மண்டலங்கள் மூன்றினேடு மன்னுகின்ற மாயனை
அண்டரண்ட மூடறுத் தறிந்துணர வல்லிரேல்
கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்ப தில்லையே.

(பொ - ரை) இருதயதாமரையின் மத்தியில் உதித்தெழுந்த தேஜோரூபத்தை, சோம, சூரிய, அக்கினி யென்னும் மூன்று மண்டலங்களிலும் கலந்திருக்கின்ற மாயா சொரூபியை, சர்வ அண்டரண்டங்களையும் ஊடறுத்து ஆராய்ந்தறிந்துணர வல்லமை யுடையீரானுல், நீங்கள் காணுவதாக விருக்கின்ற கோயில்களைக் கும்பிடமாட்டீர்கள் எ - று.

சர்வேஸ்வரனை அகத்தில் தரிசிப்பவர்கள் சிலாரூபங்களை வணங்கமாட்டார்கள் என்பது கருத்து.

243

## சிவ திருப்தி

அம்பலங்கள் சந்தியி லாடுகின்ற வம்பனே
அன்பனுக்கு ளன்பனய் நிற்பனாதி வீரனே
அன்பருக்கு ளன்பராய் நின்றவாதி நாயனே
உன்பருக்கு வுண்மையாய் நின்றவுண்மை யுண்மையே.

(பொ - ரை) திருவம்பலங்களில் பல தேவராதியோரும் வந்து சந்தித்திருக்குஞ் சமயத்தில் திருநடனஞ் செய்யும் வம்பனும், அன்பர்களுக்கு அவர்களுள்ளத்தில் தானுமொரு அன்பனய் நிற்கின்ற ஆதிவீரனும், சர்வேஸ்வரனே யாவான். இது பலநாளும் உண்மையே யாகும் எ - று.

சர்வ ஜீவர்களிடத்தும் இரக்கங்கொண்டுள்ளவன் சிவபெருமானே யன்றி வேறு தெய்வங்களல்ல என்பது கருத்து. 244

## மந்திரம் விலக்கல்

அண்ணலாவ தேதடா வறிந்துரைத்த மந்திரம்
தண்ணலாக வந்தவன் சகலபுராணங் கற்றவன்
கண்ணனாக வந்தவன் காரணத் துதித்தவன்
ஒண்ணதாவ தேதடா வுண்மையான மந்திரம்.

(பொ - ரை) பெருமையிற் சிறந்த சர்வேஸ்வரனல் உரைக்கப் பட்ட மந்திரமெது? குளிர்ச்சியோடு வந்தவனும் சர்வ புராணங்களை யுங் கற்றவனும், திருமாலாக வந்தவனும், காரணப் பொருளாய் நிற்பவனும், உண்மையான சிவயநம என்னும் மந்திரத்திற்குத் தலைவனே யாவான் எ - று.

சர்வேஸ்வரனே சர்வ தேவர்களுமாவான் என்பது கருத்து. 245

### சிவ வியாபகம்

உள்ளதோ புறம்பதோ ருயிரொடுங்கி நின்றிடம்
மெள்ளவந்து கிட்டிநீர் வினவவேணு மென்கிறீர்
உள்ளதும் புறம்பது மொத்தபோது நாதமாம்
கள்ளவாச லைத்திறந்து காணவேணு மப்பனே.

(பொ - ரை) உயிரானது ஒதுங்கியிருந்த இடமானது உள்ளிடமா? அன்றி, வெளியிடமா? என்று நீங்கள் மெதுவாகவந்து சமீபத்திற் சேர்ந்து கேட்கவேண்டுமென்று சொல்லுகிறீர். ஆகையால், அதன் விவரத்தைச் சொல்லுகின்றேன் கேளுங்கள். எப்படியென்றால்: உள்ளிடமென்பதும், வெளியிடமென்பது மின்றி ஒரே யிடமென்று ஒத்த காலத்தில் நாதமாகிய கள்ளவாசலைத் திறந்து அதின் வழியாகவே சர்வேஸ்வரனைக் காணக்கூடும் எ - று.

உயிரானது இருப்பதற்கு இடம் ஒன்றல்லவென்பார், 'உள்ளதோ புறம்பதோ வுயிரொடுங்கி நின்றிடம்' எனவும், அவ்விஷயத்தை லகுவானே யறியவேண்டு மென்பார், 'மெள்ளவந்து கிட்டிநீர் வினவவேணு மென்கிறீர்' எனவும், இவ்விரண்டு விடங்களுமல்ல சர்வ வியாபகமேயென்று இரண்டு மொத்த அறிவு உதயமானபோதே இறைவன் வெளிப்படுவா னென்பார், 'உள்ளதும் புறம்பது மொத்தபோது நாதமாம், கள்ளவாச லைத்திறந்து காணவேணு மப்பனே' எனவுங் கூறினர்.

246

### சரீர நிலையாமை

ஆரலைந்து பூதமா யளவிடாத யோனியும்
பாரமான தேவரும் பழுதிலாத பாசமும்
ஓரொணாத வண்டமு முலோகலோக லோகமும்
சேரவெந்து போயிருந்த தேகமேது செப்புமே.

(பொ - ரை) வழிகளில் பூதங்களாக அலைந்த அளவு சொல்லப் படாத அநேக யோனிகளும், உயர்ந்த அந்தஸ்துகளுடைய தேவர் களும், ஒழியுந் தன்மையை யடையாத பாசங்களும், நினைக்கப் படாத அண்டங்களும், சர்வ லோகங்களும் ஒருங்கேவந்து நீருய்ப் போயிருப்பது உண்மையே யாகையால் தேகம் என்பது எங்ஙனம் நிலையுள்ளதாகச் சொல்லக்கூடும்? எ - று.

உலகத்திலுள்ள சர்வ தேகங்களும் இறந்து படுகின்றனவே யொழிய நிலைத்திருப்பதல்ல. ஆகையால், நீங்கள் சர்வேஸ்வரனைத் தியானியுங்கள் என்பது கருத்து. 247

## தற் சொரூபம்

என்னகத்து ளென்னைநா னெங்குநாடி யோடினேன்
என்னகத்து ளென்னைநா னறிந்திலாத தாகையால்
என்னகத்து ளென்னைநா னறிந்துமே தெரிந்தபின்
என்னகத்து ளென்னையன்றி யாதுமொன்று மில்லையே.

(பொ - ரை) உலகமாக்களே! என்னுடைய உள்ளத்தின்கண் ணேயே யிருக்கின்ற என்னை நான் பலவிடங்களிலுந் தேடிநாடி ஓடிப் பார்த்தேன். ஏனென்ருல், நான் என்னுடைய மனத்தி லிருப்பதை யறியாமையால், அங்ஙனம் நான் என்னுளத்தி லிருக்கின்றேனென்று தெரிந்து அதின் உண்மை விளங்கியபின் என்னுடைய மனத்தில் என்னையல்லாமல் வேருெரு பொருளுமில்லை எ - று.

என்னுடைய மனத்தில் என்னல் நினைக்கக்கூடிய வேருெரு பொருளில்லை யென்பார் இவ்வண்ணங் கூறினர். ஆகையால், தானே பிரமம் என்னும் ஞானமே இதனல் ஏற்படுகின்றது. 248

## அக தரிசனம்

விண்ணினின்று மின்னெழுந்து மின்னெடுங்கும் வாறுபோல்
என்னுள்நின்று மெண்ணுமீச னென்னகத் திருக்கையால்

கண்ணினின்று கண்ணில்தோன்றும் கண்ணறிவிலாமையால்
என்னுணின்ற வென்னையு மியானறிந்த தில்லையே.

(பொ - ரை) மின்னலானது ஆகாயத்தினின்றுந் தோன்றி அவ்வாகாயத்தின் கண்ணே மீண்டும் ஒடுங்குவதுபோல் என்னுடைய இருதயத்தின் கண்ணிருந்து என்னால் உண்மையாக நினைக்கப்படும் சர்வேஸ்வரன் என்னுடைய இருதயத்தின்கண்ணே யிருப்பதால், அவனைக் கண்ணறிவானது கண்ணிலிருந்தும் அக் கண்ணைத் தானே நோக்கிக்கொள்ளத்தக்க கண்ணறிவானது இல்லாமையால் என்னுள் நின்ற என்னையும் நானே யறியும் அறிவு எனக்கில்லை. ஆகையால், என்னை நானறிந்ததில்லை. அங்ஙனமிருப்பதால் என்னுடைய தலைவனை நான் எங்ஙனம் அறியக்கூடும்? எ - று.

மின்னலானது ஆகாயத்தினின்றுமே தோன்றி மீண்டும் ஆகாயத்திலேயே ஒடுங்குவதா யிருந்தாலும் அது அவ்வொடுக்கத்தை யுணராமைபோலவும், கண்ணானது வேறு பொருளைக் காணும் அறிவைப் பெற்று தன்னைத்தானே காணும் அறிவைப் பெறாமை போலவும், என்னுள் நின்ற என் சொரூபத்தை நானறியாமையால் என்னுடைய தலைவனையும் அறியமாட்டேன் என்பது கருத்து. 249

## நாத விசேஷம்

அடக்கினு மடக்கொணாத வம்பலத்தி னூடுபோய்
அடக்கினு மடக்கொணாத வன்புருக்கு மென்றுளே
கிடக்கினு மிருக்கினுங் கிலேசம்வந் திருக்கினும்
நடக்கினு மிடைவிடாத நாதசங் கொலிக்குமே.

(பொ - ரை) எவ்வளவு பெரிய பொருள்களைக்கொண்டு மறைத்தாலும் மறைவுபடாத சிற்றம்பலத்தில் ஊடுருவிச் சென்று எவ்வளவு நேரம் தடுத்தாலு மில்லாமல் அன்பினால் மிகவும் உருக்கப்படும் என்

ஞடைய உள்ளத்தின்கண் நான் படுத்திருந்தாலும், உட்கார்ந்திருந்தாலும், நடந்துகொண் டிருந்தாலும், இடைவிடாமல் நாதசங்கமானது என்னிடத்தில் வந்து சப்தியா நிற்கும் எ - று.

இறைவன் என்னிடத்தில் மிக்க ஆவலுள்ளவனு யிருப்பதால் நான் அவனுக்குச் செய்த அடிமைத்திறத்தை நோக்கி என்னிடத்தில் எப்படிப்பட்ட அருஞ்செய்கையை விளைவித்தான் என்பது கருத்து.

## இன்ப விளைவு

மட்டுலாவு தண்டுழா யலங்கலாய் புனற்கழல்
விட்டுவீழில் தாகபோக விண்ணில் நண்ணில் வெளியினும்
எட்டினே டிரண்டினு மிதத்தினல் மனந்தனைக்
கட்டிவீடி லாதுவைத்த காதலின்ப மாகுமே.

(பொ - ரை) வாசனைவீசுகின்ற குளிர்ந்த துளசிமாலையைத் தரித்தவனே! உன்னுடைய அதிருங் கழல்பூண்ட திருவடிகளை விட்டுக் கீழேவிழுந்தால் தாகபோகமுண்டாகும், விண்ணிற்சேர்ந்தாலும், ஆகாயத்திலும், அஷ்ட அட்சரங்களிலும் இரண்டு அட்சரங்களிலும் மனத்தை நன்ருய்க்கட்டி வீடு அடையும்படி ஆசைவைப்பதே மிகுந்த இன்பமாகும் எ - று.

விஷ்ணுமூர்த்தியின் திருவடிகளை யடைந்து அவருடைய அஷ்டாட்சரங்களைத் தியானித்து வீடுபேற்றிற்கு ஆஸ்ரயிக்க வேண்டும் என்பது கருத்து. 251

## முத்தி விகற்பம்

ஏகமுத்தி மூன்றுமுத்தி நாலுமுத்தி நன்மைசேர்
போகமுற்றி புண்ணியத்தில் முத்தியன்றி முத்தியாய்
நாகமுற்ற சயனமாய் நலங்கடல் கடந்ததீ
யாகமுற்றி யாகிநின்ற தென்கொலாதி தேவனே.

(பொ - ரை) ஏகமோட்சமும், மூன்றுவிதமான மோட்சமும், சதுர்விதமான மோட்சமும்; நன்மைமிகுந்த போகமுத்தியும், புண்ணியத்தால் கிடைக்கக்கூடும் முத்தியும், அல்லாமல் வேறுவிதமான முத்தியாயும் சர்ப்பசனனுயும், நன்மைமிகுந்த கடலைத்தாண்டிய தீச்சொரூபமாகிய சரீரமுத்தியும் ஆயிருந்தது என்னவோ? ஓ முதற்றெய்வமே! எ - று.

ஓ விஷ்ணுமூர்த்தியே! நீ சர்வ மோட்ச ரூபங்களா யமைந்தது என்னகாரணமோ? என்பது கருத்து. 252

## இதுவுமது

மூன்றுமுப்பத் தாறினோடு மூன்றுமூன்று மாயமாய்
மூன்றுமுத்தி யாகிமூன்று மூன்றுமூன்று மூன்றுமாய்
தோன்றுசாதி மூன்றதாய் துலக்கமில் விளக்கதாய்
என்றனாவி னுள்புகுந்த தென்கொலோநம் மீசனே.

(பொ - ரை) எங்களுடைய சர்வேஸ்வரனே! மூன்றும் முப்பத்தாறும், ஆறும் ஆகி அன்றி மாயமாய் மூன்று முத்தியாய், ஒன்பது மூர்த்தமாய், சாதிபேதங்கள் மூன்ருய், விளங்குகின்ற விளக்காய், என்னுடைய உயிருக்குள்புகுந்தது என்னகாரணமோ? எ - று. 253

## ரூப விகற்பம்

ஐந்துமைந்து மைந்துமா யல்லவத்து ளாயுமாய்
ஐந்துமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனே
ஐந்துமைந்து மைந்துமா யமைந்தனைத்து நின்றநீ
ஐந்துமைந்து மாயநின்னை யாவர்காண வல்லரே.

(பொ - ரை) ஐந்து, ஐந்து, ஐந்துஎன்னுந் தொகையுள்ள மூர்த்தமாயும், அல்லாமல் அவைகளுக்கு மேற்பட்ட வஸ்துவாயும், நவமூர்த்த

மாகியுமிருந்த முதல்தெய்வமே இங்ஙனம் பஞ்சமூர்த்தங்களாக விருந்து எல்லாப் பொருள்களாகவும் அமைந்து நின்ற தேவரீர், இவ்வண்ணம் சங்கற்பரூபந்தாங்கி யிருப்பதால் உன்னைக் காணவல்லவர் எவரிருக்கின்றனர்? ஒருவருமில்லை எ - று.

சர்வேஸ்வரனே! நீ சர்வ மூர்த்தங்களாய் சங்கற்பத்தால் மாறி வருவதால் உன்னை யறிபவர் ஒருவருமில்லை யென்பது கருத்து. 254

## இதுவுமது

ஆறுமாறு மாறுமாயோ ரைந்துமைந்து மைந்துமாய்
ஏறுசீ ரிரண்டுமூன்று மேழுமாறு மெட்டுமாய்
வேறுவேறு ஞானமாகி மெய்யினோடு பொய்யுமாய்
ஊறுமோசை யாயமர்ந்த மாமமாய மாயனே.

(பொ - ரை) ஆறு முதலிய தொகையை வாய்ந்த ரூபங்களைத் தாங்கியிருக்கின்ற தேவரீர், வெவ்வேறு அறிவுகளாகவும், உண்மையாளர்க்கு உண்மையாகவும், பொய்யினர்க்கும் பொய்யாகவும், ஊமை மந்திரத்தால் அறியப்படும் மூர்த்தியாயும் அமர்ந்திருக்கும் மாயம் என்ன மாயமோ? அதை யறியேன் எ - று. 255

## இதுவுமது

எட்டுமெட்டு மெட்டுமாயோ ரேழுமேழு மேழுமாய்
எட்டுமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனே
எட்டுமாய பாதமோ டிறைஞ்சிநின்ற வண்ணமே
எட்டெழுத்து மோதுவார்க ளல்லல்நீங்கி நிற்பரே.

(பொ - ரை) எட்டு முதலிய தொகையை வாய்ந்த ரூபங்களைத் தாங்கி இருந்த தலைமைத் தெய்வமே! தேவரீருடைய திருவடிகளை வணங்கி நின்றபடியே தங்களுடைய அஷ்டாட்சரங்களையும் உள்ள

படியே துதிசெய்பவர்கள் தங்களுக்குள்ள துன்பங்கள் நீங்கி சுகமா யிருப்பார்கள் எ - று.

அஷ்டாட்சரமென்பது: ஓம் நமோ நாராயணு என்பதாம். 256

## இதுவுமது

பத்திஞேடு பத்துமாயோ ரேழிஞேடு மொன்பதாய்
பத்துநாற் றிசைக்குநின்ற நாடுபெற்ற நன்மையா
யத்துமாய கொத்தமோடு மத்தலமிக் காதிமால்
பத்தர்கட்க லாதுமுத்தி முத்திமுத்தி யாகுமே.

(பொ - ரை) பத்து முதலிய தொகையைவாய்ந்த ரூபங்களைத் தாங்கி விரும்புகின்ற நான்கு திசைகளுக்குள்ளு மிருந்த உலகத்தார் கள் பெற்றிருக்கின்ற ஞானமார்க்கத்தால் அந்த நாற்றிசைக் குட் பட்ட நாடுகள் உயர்ந்த தாகையால் அங்குள்ள பத்தர்கட்கே யல்லாமல் வேறொருவருக்கு மோட்சங் கை கூடுமோ? கூடாது எ - று.

ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியானவர் உள்ளபடியே யன்பர்களா புள்ள வர்களுக்கு மோட்சங் கொடுப்பார் என்பது கருத்து. 257

## வாசியி னிலே

வாசியாகி நேசமொன்றி வந்தெதிர்ந்த தென்னுக
நேசமாக நாளுலாவ நன்மைசேர் பவங்களில்
வீசிமேல் நிமிர்ந்ததோளி யில்லையாக்கி னுய்கழல்
ஆசையால் மறக்கலா தமரராக லாகுமே.

(பொ - ரை) வாசி முதலானவைகளில் நேசம் வைத்து நான் உன்னைவந்து எதிர்த்ததென்று சொல்லுக. தினந்தோறும் பெருகிக் கொண்டே வருகின்ற நன்மையைச் செய்ததினு லுண்டாகின்ற உயர்ந்த ஜெனமங்களில் மேலேவீசி நிமிர்த்திய தாள்களையுடையானே!

உன்னுடைய திருவடிகளை கொடாமல் நிறுத்திவிட்டாய். ஆகையால், நாங்களெல்லோரும் உன்னிடத்தில் மிக்க ஆசைகொண்டு சதா மறவாம லிருந்தால் தேவர்களாகக் கூடும் எ - று.

உலகர்களாகிய நாங்கள் வாசியோகங்களைச் செய்து உன்னை உள்ளபடியே ஆஸ்ரயித்தால் தேவர்களாகக் கூடும் என்பது கருத்து. 258

## சிவவுண்மை யிடம்

எளியதான காயமீது மெம்பிரா னிருப்பிடம்
அளிவுருது நின்றதே அகாரமும் உகாரமும்
கொளுகையான சோதியுங் குலாவிநின்ற தவ்விடம்
வெளியதாகு மொன்றிலே விளைந்ததே சிவாயமே.

(பொ - ரை) சர்வேஸ்வரனுக்கு உண்டாக்கற் கெளிதாகிய இந்தச் சரீரத்தில் எம்பெருமானுகிய பரமேஸ்வரன் குடியிருப்பதாகவும், ஆகையால், அந்தச் சரீரமானது அகர உகாரங்களால் அழியாமல் நின்றதாம். அப்பொழுதே யாவராலுங்கொள்ளவிருக்கின்ற தேஜோமயனும் அவ்விடத்திலேயே எழுந்தருளி யிருந்தால் இங்ஙனமிருத்தலால் சிதாகாசமாகிய ஓரிடத்திலேயே சிவயநம என்னும் பஞ்சாட்சரம் விளைந்ததாகும் எ - று.

அகர உகாரங்களை உள்ளபடிமே சிந்தித்து அதின் மயமாயிருக்குஞ் சரீரிகளாலே இறைவன் வசித்திருப்பான் என்பது கருத்து 259

## பொருள் உண்மை

அஞ்செழுத்து மூன்றெழுத்து மென்றுரைக்கு மன்பர்காள்
அஞ்செழுத்து மூன்றெழுத்து மல்லகாணு மப்பொருள்
அஞ்செழுத்தை நெஞ்சழுத்தி யவ்வெழுத் தறிந்தபின்
அஞ்செழுத்து மூன்றெழுத்து மவ்வுமாஞ் சிவாயமே.

(பொ - ரை) இது பஞ்சாட்சரம் என்றும், இது பிரணவம் என்றுஞ் சொல்லித் திரியும் அன்பர்களே! அந்தப் பொருளானது உங்களால் சொல்லப்படுகின்ற பஞ்சாட்சரம், பிரணவமுமே ஆகமாட்டாது. ஆகையால், நீங்கள் மேலே சொல்லப்பட்டிருக்கின்ற பஞ்சாட்சரத்தை உங்களுடைய மனத்தின்கண் நன்ருய்ப் பதிவித்து அதின்மூலமாகிய அகாரபீஜத்தை உள்ளபடியே யுணர்ந்தால் அப்பொழுதே மேலே சொல்லப்பட்ட பஞ்சாட்சரமும், பிரணவமும், அகாரமுமே சிவாய மென்னும் பொருளாய் விளங்கும் எ - று.

பஞ்சாட்சரமும் அதற்குத் தாயாகிய பிரணவமும் உயர்ந்த மந்திர பீஜங்களென்று உலகத்தார் நினைக்கின்ருர்க ளென்பார், 'அஞ்செழுத்து மூன்றெழுத்து மென்றுரைக்கு மன்பர்காள்' எனவும்' இந்தப் பீஜங்களாலேயே இறைவன் அகப்படா னென்பார், 'அஞ்செழுத்து மூன்றெழுத்து மல்லகாணு மப்பொருள்' எனவும், அஞ்செழுத்தை உள்ளன்போடு துதித்தால் அது அவ்வெழுத்தை அறிவிக்கு மென்பார், 'அஞ்செழுத்தை நெஞ்சமுத்தி யவ்வெழுத் தறிந்தபின்' எனவும், இறைவன் அவ்வெழுத்துக்களின் மயனுய் பின்னர் ஆவானென்பார், 'அஞ்செழுத்து மூன்றெழுத்து மவ்வுமாஞ் சிவாயமே' எனவுங் கூறினர். 260

## போய் விரும்பல்

பொய்யுரைக்க போதமென்று பொய்யருக் கிருக்கையால்
மெய்யுரைக்க வேண்டுதில்லை மெய்யர்மெய்க் கிலாமையால்
வையகத்தி லுண்மைதன்னை வாய்திறக்க வஞ்சினேன்
நையவைத்த தென்கொலோ நமசிவாய நாதனே.

(பொ - ரை) பொய் சொல்லுவதை உண்மை யறிவென்று பொய்யருக் கெல்லா மிருப்பதாலும், உண்மையை யுணர்பவர்களுக்கு அங்ஙனம் எந்தப் போதமும் வேண்டிய தில்லாமையாலும், அவர்

களுக்கு மெய்யை சொல்லவேண்டிய அவசியமே யில்லை. ஆகையால், நான் இந்த உலகத்தில் உண்மையை எடுத்துச் சொல்லப் பயந்தேன். அப்படியாக இவ்விடத்தில் என்னை மனவருத்தப்படும்படி வைத்தது ஓ கடவுளே! என்ன காரணமோ? தெரியவில்லை எ - று.

உலகத்தில் பொய்யியம்புவதே சகசமா யிருப்பதால் நான் இவ்விடத்தில் உண்மையை எடுத்துச் சொல்ல பயந்தேன் என்பது கருத்து.

உலகம் பொய்யாகலான் அதிலுள்ளாரும் பொய்யை நம்புகின்றார்கள் என்றவாறாயிற்று. 261

பக்தி

ஒன்றையொன்று கொன்றுகூட வுணவுசெய் திருக்கினும்
மன்றினூடு பொய்களவு மாறுவேறு செய்யினும்
பன்றிதேடு மீசனைப் பரிந்துகூட வல்லிரேல்
அன்றுதேவ ரும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே.

(பொ - ரை) ஒருபொருளை மற்றொரு பொருள்கொன்று தனக்குத் தீனியாகத் தின்றுகொண்டு வந்திருந்தாலும், கடையில் யாவர்க்குக் தெரியும்வண்ணமே பொய், களவு, முதலியவைகளை வெவ்வேறாக மாறிமாறிச் செய்தாலும், பூர்வம் அநேக காலம்வரைக்கும் பன்றி ரூபங்கொண்ட விஷ்ணுவால் தேடப்படும் பரமேச்சுரனை மனம் விரும்பி சேர்வீரானால் அன்றைக்கே நீங்களுந் தேவர்க ளாவீர்கள். இதை நீங்கள் உங்களுடைய உள்ளத்தில் நன்றா யறிந்து கொள்ளுங்கள் எ - று.

உலகத்திலுள்ள பஞ்ச அறிவு பிராணிகள் முதலிய யாவரும் கொன்றுதின்னுஞ் செயலிலேயே யுள்ளவர்க ளென்பார், 'ஒன்றையொன்றுகொன்று உணவுசெய் திருக்கினும்' எனவும், பொய் களவு

முதலியவைகளும் விசேஷமாக வுண்டென்பார், 'மன்றினூடு பொய் களவு மாறுவேறு செய்யினும்' எனவும், சர்வேஸ்வரனை உள்ளபடியே யுணர்பவர்கள் தாங்களும் பிரமமே யாவார்க ளென்பார், 'பன்றிதேடு மீசனைப் பரிந்துகூட வல்லிரேல்' எனவுங் கூறினர்.

கொல்லாவிரதமே உயர்ந்ததென்பதை:

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்" என்பதினு லறிக. 262

சர்வம் சிவம்

மச்சகத்து ளேயிவர்ந்து மாயைபேசும் வாயுவை
அச்சகத்து ளேயிருந் தறிவுணர்த்திக் கொள்விரேல்
அச்சகத் துளேயிருந் தறிவுணர்த்தி கொண்டபின்
இச்சையற்ற வெம்பிரா னெங்குமாகி நிற்பனே.

(பொ - ரை) மச்சாகிய இந்தத் தேகமென்னும் வீட்டிலிருந்து கொண்டு மாயா விஷயங்களில் மனத்தைச் செலுத்துகின்ற வாயுவை அந்த இடத்திலேயே நிறுத்தி நீயும் அவ்விடத்திலேயே யிருந்து அதன் விஷயங்களை அறிவுணர்த்திக் கொள்வீரானல், யாதொரு பொருளிலும் ஆசை வைக்காத எம்பெருமானனவன் எங்கும் வியாபித் திருப்பான் எ - று.

வாயுவின் காரண மர்மங்களை உள்ளபடியே யுணர்ந்து கொண்டால் சர்வேஸ்வரனுடைய வியாபகம் நன்ருய் விளங்கும் என்பது கருத்து. 263

இதுவுமது

வயலிலே முளைத்தசெந்நெல் களையதான வாறுபோல்
உலகினேரும் வண்மைகூறி லுய்யுமாற தெங்ஙனே

விரகிலே முளைத்தெழுந்த மெய்யலாது பொய்யதாய்
நரகிலே பிறந்திருந்து நாடுபட்ட பாடதே.

(பொ - ரை) உயிரின்கண் முளைத்தெழுந்த செந்நெற் பயிருக்கு வேறொரு பூண்டு அந்த வயலிலேயே முளைத்துக் களையானதுபோல உலகத்தார்களும் தங்களுக்குள்ள வன்மையை வெளிப்படுத்தினால் பிழைக்கும் வழி இல்லையாய் முடியும். ஆகவே, இந்தத் தேகமானது தாய் தகப்பன்மாருடைய விரகத்தாலுண்டான மெய்யா யிருந்தாலும் அது பொய்யேயாய் பிறந்துபிறந்து இறந்திறந்து நரகத்தில்பட்ட பாட்டை யடையும் எ - று.

சரீரம் மெய்யாகக் காணப்பட்டாலும் பொய்யேயாய் முடியும் என்பது கருத்து. 264

## அக தரிசனம்

ஆடுகின்ற வெம்பிரானை யங்குமிங்கு மென்றுநீர்
தேடுகின்ற பாவிகாள் தெளிந்தவொன்றை யோர்கிலீர்
காடுநாடு வீடுவீண் கலந்துநின்ற கள்வனை
நாடியோடி யும்முளே நயந்துணர்ந்து பாருமே.

(பொ - ரை) காடுகளிலும், நாடுகளிலும், வீடுகளிலும் கலந்து திருத்தாண்டவஞ் செய்கின்ற எம்பெருமானாகிய சிவபெருமானை, அங்குமிங்கும் அலைந்தலைந்து தேடுகின்ற பாவிகளே! நீங்கள் தெளிந்த பொருளாகிய ஒன்றை உள்ளபடி உணர்ந்தீரில்லை. ஆகையால், நீங்கள் இனியேனும் இறைவனை உங்களுக்குள்ளேயே நாடி விரும்பி அறிந்து பாருங்கள் எ - று.

எங்குமா மிறைவனை அந்தர்முகத்தில் தரிசியாமல் பல ஊர்களிலுந் திரிந்து வருவதில் பயனில்லை என்பது கருத்து. 265

## யாவும் போய்

ஆடுகின்ற வண்டர்கூடு மப்புற மதிப்புறம்
தேடுநாலு வேதமுந் தேவரான மூவரும்
நீடுவாழி பூதமும் நின்றதோர் நிலைகளும்
ஆடுவாழி னெழியலா தனைத்துமில்லை யில்லையே.

(பொ - ரை) தில்லையில் திருத்தாண்டவஞ் செய்கின்ற சிவ பெருமானைக் கைகூடுகின்ற சந்திரமண்டலமும் சதா ஆராய்ந்து கொண் டிருக்கின்ற நான்கு வேதங்களும், திரிமூர்த்திகளும், வாழ் கின்ற ஐந்துபூதங்களும், அவைகள் நின்ற நிலைகளும், ஆகிய யாவும் சர்வேஸ்வரனுடைய உண்மை இடங்க ளாகமாட்டா எ - று.

இறைவன் அன்பருள்ளத்திருப்பா னென்பது கருத்து. 266

## சர்வம் பரம்

ஆவதும் பரத்துளே யழிவதும் பரத்துளே
போவதும் பரத்துளே புகுவதும் பரத்துளே
தேவரும் பரத்துளே திசைகளும் பரத்துளே
யாவரும் பரத்துளே யானுமப் பரத்துளே.

(பொ - ரை) சர்வ பொருள்களும் கைவல்லியமாவது பரத் துள்ளேயாகும், அழிந்துபடுவதும் பரத்துள்ளே யாகும், எதிலுங் கல வாமல் வெளிப்படுவதும் பரத்துள்ளே யாகும், எல்லாம் அமைவதும் பரத்துள்ளே யாகும், தேவர்கள் இருப்பதும் பரத்துள்ளே யாகும், அஷ்டதிசைகள் அடங்குவதும் பரத்துள்ளேயாகும். ஆகையால், யாவ ரும் பரத்துள்ளே யாவர் அதுபோலவே நானும் அப்பரத்துள்ளே யாவேன் எ - று.

சர்வ பொருள்களும் ஈஸ்வர சந்நிதியிலடங்கும் என்பது கருத்து,

## சங்கார கர்த்தா சிறப்பு

எழுபா ரெழுகட லிபங்களெட்டு வெற்புடன்
சூழுவான் கிரிகடந்து சொல்லுமே ழுலகமும்
ஆழிமால் விசும்புகொள் பிர்மாண்டரண்ட வண்டமும்
ஊழியா னொளிக்குளே யுதித்துட னொடுங்குமே.

(பொ - ரை) ஈரேழுலகங்களும், எழு கடல்களும், அஷ்டதிக்குக் கஜங்களும், அஷ்டமலைகளும், சூழ்கின்ற உயர்ந்தகிரிகளும் சொல்லப் பட்ட எழுலகங்களும், பரந்த ஆகாயமும், அது கொண்டிருந்த பிரமாண் டங்களும், ஆகிய இவைகளெல்லாம் சர்வ சங்கார காலத்தினு மழியாம லிருக்கின்றவன் எவனோ, அவனுடைய தேஜஸுக்குள் தோன்றி மீண்டும் அதிலேயே யொடுங்குமே எ - று.

சர்வேஸ்வரன் சர்வசங்கார காலத்தில் ஒடுங்காமனின்று மற்றைய எல்லாப்பொருள்களையுந் தனக்குள் அடக்கிக் கொள்ளுகின்றா னென் பார், இங்ஙனங் கூறினர். 268

## அன்பு

கயத்துநீ ரிறைக்குநீர் கைகள்சோர்ந்து நிற்பதேன்
மனத்துளீர மொன்றில்லாத மதியிலாத மாந்தர்காள்
அகத்துளீரங் கொண்டுநீ ரழுக்கறுக்க வல்லிரேல்
நினைத்திருந்த வோதியும் நீயும்நானு மொன்றலோ.

(பொ ரை) மனத்தின்கண் அன்பென்பது சிறிதுமில்லாத அறி வில்லாத மனிதர்களே! நீங்கள் தடாகத்திற்குச் சென்று அதிலுள்ள நீரை இறைக்கிறீர்களே அப்பொழுது கைகள் சோர்ந்து என் நிற்கிறீர் கள். ஆகையால், நீங்கள்மனத்தில் அன்பைக்கொண்டு உங்கள் பாசங் களை நீக்கிக்கொள்ள வல்லமை யுடையீரானல் உங்களால் நினைக்கப்பட் டிருந்த ஞானமும் நீயும், நானும் ஒன்றேயாவோ மல்லவா? எ - று.

இறைவனை நாடுவதாகவிருந்தால் மனத்திலன்பிருக்க வேண்டு மென்பார். 'அகத்துளீரங் கொண்டுநீ ரழுக்கறக்க வல்லிரேல்' எனவும், அங்ஙனஞ்செய்தால் சிவமாகலா மென்பார், 'நினைத்திருந்த வோதியும் நீயும்நானு மொன்றலோ' எனவுங் கூறினர். 269

## அருக்கியம் விலக்கல்

நீரிலே பிறந்திருந்து நீர்சடங்கு செய்கிறீர்
ஆரையுன்னி நீரெலா மவத்திலே யிறைக்கிறீர்
வேரையுன்னி வித்தையுன்னி வித்திலே முளைத்தெழுஞ்
சீரையுன்ன வல்லிரேற் சிவபத மடைவிரே.

(பொ - ரை) உலகமாக்களே! நீங்கள் நீரே காரணமாகப் பிறந்திருந்தும் அந்த நீரைக்கொண்டே சடங்குகள் செய்கின்றீர், அங்ஙனம் எவரைநினைத்து நீரையெல்லாம் வீணுக இறைக்கிறீர், அங்ஙனம் இறைப்பதினல் பிரயோசனம் ஒன்றுமில்லை. ஆகையால், நீங்கள் வேரையும், விதையையும் நினைத்து அந்தவிதையில் முளைத்தெழுந்த சிவபெருமானை உள்ளபடியே நினைப்பீரானல் அப்பெருமானுடைய திருவடிகளை யடைவீர் எ - று.

சிவபெருமானை உள்ளபடியே நினைந்து மோட்சவீடடைவதை விட்டு அருக்கிய பாத்திய முதலியவைகளைச் செய்வதனல் நீங்கள் சிவபதம் பெறமாட்டீர்கள் என்பது கருத்து. 270

## திருக்கூடம்

பத்தொற்ற வாசலிற் பரந்துமூல வக்கர
முத்திசித்தி தொந்தமென் றியங்குகின்ற மூலமே
மத்தசித்த வைம்புலன் மகாரமான கூத்தையே
அத்தியூரர் தம்முளே யமைந்ததே சிவாயமே.

(பொ - ரை) பத்துவாசல்களுடன் கூடியவாசலிற்பரவி மூலமந்திரத்தால் கிடைக்கக்கூடிய முத்தியானது சித்தியாவதற்கு தொந்தமென்று சத்திக்கின்ற மூலாதாரமே ஐம்புலன்களது மகாரமான கூத்தை அத்தியூராருக்கு பொருந்தியது சிவாயமே யாகும் எ - று. 271

## முத்தி

அணுவினோடு மண்டமா யளவிடாத சோதியை
குணமதாகி யும்முளே குறித்திருக்கில் முத்தியா
முணமுணென்று உம்முளே விரலையொன்றி மீளவும்
தினந்தின மயக்குவீர் செம்புபூசை பண்ணியே.

(பொ - ரை) அணுக்களும் அண்டங்களும் இப்படிப்பட்டவனென்று அளவிடப்படாத தேஜோரூபனை, ஒருகுணப் பொருளாய் உங்களுடைய உள்ளத்தின்கண் நினைத்திருப்பாயானால் மோட்சங் கொடுப்பான். ஆனால், நீங்கள் அங்ஙனஞ் செய்வதைவிட்டு தினமும் முணமுணவென்று சொல்லி செம்பு பூசை பண்ணுகிறீர். அதினாலடையும் பயன் ஒன்றுமில்லை எ - று.

கிரியாபூசை செய்வதில் பயன் ஒன்றுமில்லை. ஆகையால், ஞான பூசை செய்யுங்கள் என்பது கருத்து. 272

## இறப்பு

மூலமான வக்கர முகப்பதற்கு முன்னெலாம்
மூடமாக மூடுகின்ற மூடமேது மூடரே
காலனான வஞ்சுபூத மஞ்சிலே யொடுங்கினால்
ஆதியோடு கூடுமோ வனாதியோடு கூடுமோ.

(பொ - ரை) மூடமாகவிருக்கின்ற அறிவீனர்களே! உலகத்தில் மூலமந்திரத்தை உழன்று தேடிச் சம்பாதிப்பதற்கு முன் எமனாகிய

ஐந்து பூதங்களும், ஒன்றிலொன்று ஒடுங்கிவிட்டால் (இறந்துவிட்டால்) அப்போது இச்சீவனானவன் ஆதிப்பொருளோடு சேருமோ? அநாதிப் பொருளோடு சேருமோ? எ - று.

சீவனிறந்துபடுவதற்குமுன் சிவபெருமானைத் துதிசெய்யுங்கள் என்பது கருத்து. 273

### மந்திரம்

முச்சதுர மூலமாகி முடிவுமாகி யேகமாய்
அச்சதுர மாகியே யடங்கியோ ரெழுத்துமாய்
மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமாய்
உச்சரிக்கு மந்திரத்தி னுண்மையே சிவாயமே.

(பொ - ரை) முக்கோணங்களையுடைய மூலாதாரமாகியும், முடிவாகியும், ஒன்றாகியும், அந்த முக்கோணமாயிருந்தே ஓரெழுத்தாயடங்கியும், சதுரமாகிய இந்தச் சரீரத்திற்குள் விளங்குகின்ற ஞான தீபமாகியும், உச்சரிக்கின்ற மந்திரத்தி னுண்மையே சிவயநம என்னும் பஞ்சாட்சரமாகும் எ - று.

மூலாதாரத்தி னுட்கிடையாக உச்சரிக்கின்ற மந்திரமே பஞ்சாட்சரமாகையால் அதையே உச்சரிக்க வேண்டும் என்பது கருத்து.

### சிவனுண்மை

வண்டுலங்கள் போலுநீர் மனத்துமா சறுக்கிலீர்
குண்டலங்கள் போலுநீர் குளத்திலே முழுகுநீர்
பண்டுமுங்கள் நான்முகன் பறந்துதேடி காண்கிலான்
கண்டிருக்கு மும்முளே கலந்திருப்பர் காணுமே.

(பொ - ரை) உலகர்களே! நீங்கள் வண்டுலங்களைப்போல் மனத்தின்கண்ணுள்ள குற்றத்தை நீக்கினீரில்லை. குண்டலங்களைப்போல்

மாத்திரம் குளத்தில் ஸ்நானஞ் செய்கின்றீர்கள். பூர்வத்தில் உங்களுடைய நான்கு முகங்களையுடைய பிரமனானவன் பலகால் அன்னப்பட்சியாய்ப் பறந்து தேடியுங் காணப்படாதனாகிய இறைவனை உங்களுக்குள் கண்டிருந்தால் அவனும் உங்களோடு கலந்திருப்பான் எ - று.

பிரமனானவன் அன்னப்பட்சியாய் நெடுநாள் வரைக்கும் தேடிக் காணப்படாதவன் நம்மிறைவ னென்பார், 'பண்டுமுங்கள் நான் முகன் பறந்துதேடி காண்கிலான்' எனவும், அவனை அந்தர் முகத்தானே கண்டுகொண்டால் அவனுங் கலந்திருப்பா னென்பார், 'கண்டிருக்கும் மும்முளே கலந்திருப்பர் காணுமே' எனவுங் கூறினர். 275

## இதுவுமது

நின்றதன் றிருந்ததன்று நேரிதன்று கூறிதன்று
பந்தமன்று வீடுமன்று பாவகங்க ளற்றது
கெந்தமன்று கேள்வியன்று கேடிலாத வானிலே
அந்தமன்றி நின்றதொன்ற தெங்ஙனே யுரைப்பதே.

(பொ - ரை) சிவமென்னும் பொருளானது நின்றதும் இருந்ததும், நேர்ந்ததும், கூர்ந்ததும், பந்தமுள்ளதும், மோட்சமுள்ளதும், பாவகங்களில்லாததும், கந்தரூபமுள்ளதும், கேள்வியுள்ளதும், அல்ல. ஆயின், அப் பொருளானது என்றும் அழிவில்லாத ஆகாயத்தின்கண் முடிவில்லாமல் இருக்கிற ஒன்றாகும். ஆகையால், அப்படிப்பட்ட பொருளை எங்ஙனம் நான் விரித்துச் சொல்ல முடியும் எ - று.

இறைவன் எந்த விகாரத்தையு மடையாதவ னென்பார், 'நின்றதன்றிருந்ததன்று நேரிதன்று, கூரிதன்று பந்தமன்று வீடுமன்று பாவகங்க ளற்றது, கெந்தமன்று கேள்வியன்று கேடிலாத வானிலே, அந்தமன்றி நின்றதொன்றறை யெங்ஙனே யுரைப்பதே' எனக் கூறினர். ()

## இதுவுமது

பொருந்துநீரு மும்முளே புகுந்துநின்ற காரணம்
எருதிரண்டு கன்றையீன்ற வேகமொன்றை யோர்கிலீர்
அருகிருந்து சாவுகின்ற யாவையு மறிந்திலீர்
குருவிருந்து லாவுகின்ற கோலமென்ன கோலமே.

(பொ - ரை) பொருந்தியிருக்கின்ற நீரானது உங்களுக்குள் புகுந்திருந்த காரணமானது ஒரு எருதானது இரண்டு கன்றுக்களைப் பெறக் காரணம் போன்றதாகும். ஆயின் நீங்கள் அதின் மர்மத்தை அறிந்து கொள்ளவில்லை. இது அறியாமல் போனாலும் பெரிதல்ல, உங்களுடைய சமீபத்திலிருந்து இயங்குகின்ற வாயுவின் மயக்கத்தை யாவது உணர்ந்தீரென்று பார்த்தால் அதுவுமில்லை. இங்ஙன மிருப்பதால் உங்களுடைய குருவானவ ரிருந்து உலாவுகின்ற கோலம் என்ன கோலமோ? எ - று.

உலகர்களே! நீங்கள் இவ்வண்ணமானால் எல்லாம்வல்ல இறைவனை எவ்வண்ண மடைவீர் என்பது கருத்து. 277

## இதுவுமது

அம்பரத்து ளாடுகின்ற வஞ்செழுத்து நீயலோ
சிம்புளாய் பறந்துநின்ற சிற்பரமு நீயலோ
எம்பிரானு மெவ்வுயிர்க்கு மேகபோக மாதலால்
எம்பிரானு நானுமா யிருந்ததே சிவாயமே.

(பொ - ரை) ஆகாயத்தின்கண் திருநடனஞ் செய்கின்ற பஞ்சாட்சரங்களும் நீயே யல்லவா? சரபப்பட்சியாகப் பறந்து நின்றவனும் நீயேயல்லவா? எம்பெருமானும், எவ்வுயிர்களும் ஏகபோகமாயிருப்பவர்களாதலால் அவனும் நானுமாயிருந்ததே சிவாயமாகும் எ - று.

ஈர்வேஸ்வரனுக்குத் திருநடனஞ்செய்யுமிடம் ஆகாயமே யாமென்பார், 'அம்பரத்து ளாடுகின்ற' எனவும், அங்ஙனம் நடிக்கும் பஞ்சாட்சரத்தை அநுஷ்டிப்பா னென்பார், 'அஞ்செழுத்து நீயலோ' எனவும், இறைவன் விஷ்ணுவின் அகங்காரத்தை யடக்க முன்னொரு காலத்தில் சரபமானு னென்பார், 'சிம்புளாய் பறந்துநின்ற சிற்பரமு நீயலோ' எனவும், இறைவனுக்கும் உயிர்களுக்கும் கலக்க வேண்டிய அவசிய முண்டென்பார், 'எம்பிரானு மெவ்வுயிர்க்கு மேகபோக மாதலால், எம்பிரானு நானுமா யிருந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். ()

## இதுவுமது

ஈரொளிய திங்களே யியங்கிநின்ற தப்புறம்
பேரொளிய திங்களே யாவரு மறிகிலீர்
காரொளிப் படலமுங் கடந்துபோன தற்பரம்
பேரொளிப் பெரும்பத மேகநாத பாதமே.

(பொ - ரை) குளிர்ந்த கிரணங்களை வீசாநின்ற சந்திரனே உலகத்தின் வெளிப்புறத்தில் விளங்குகின்றது. இது தவிர மிக்க தேஜஸையுடைய சந்திரனொன்று இருக்கின்றது. அதை நீங்கள் யாவரும் உணரமாட்டீர்கள். ஆசையால், இனி அந்தச் சந்திரனை உள்ளபடியே உணர்வீராஜல் உங்களுக்குண்டாயிருக்கின்ற இருட் படலமும் கடந்து அதற்குமேல் விளங்காநின்ற தற்பரமும், மிக்க தேஜஸையுடைய பெரும்பதத்தையும் அடையக்கூடும் எ - று.

அகத்தில் விளங்குஞ் சந்திரனை அறிபவர்க்கே முத்தி சித்திக்கும் என்பது கருத்து. 279

## இதுவுமது

கொள்ளொணாது மெல்லொணாது கோதறக் குதட்டடா
தள்ளொணா தணுகொணா தாகலான் மனத்துளே

தெள்ளொணாத தெளியொணாது சிற்பரத்தி னுட்பயன்
விள்ளொணாத பொருளைநான் விளம்புமாற தெங்ஙனே.

(பொ - ரை) சிற்பரமாகிய ஞானப்பொருளைக் கொள்ளவும், வாக்கினாற் சொல்லவும், குற்றமறத் துதிக்கவும், தள்ளவும், சமீபத்திற் சேரவு முடியாது. ஆகையால், மனத்தின்கண் தெளிவதற்கு முடியாது. இங்ஙன மிருப்பதால் நான் அப்பொருளை எடுத்துச் சொல்ல எங்ஙனம் இயலும்? எ - று.

சர்வேஸ்வரன் பாமரர்களால் அறியப்படா னென்பார், 'கொள்ளொணாது மெல்லொணாது கோதறக் குவட்டொணாது, தள்ளொணாது நணுகொணா தாகலின் மனத்துளே, தெள்ளொணாது தெளியொணாது சிற்பரத்தி னுட்பயன், விள்ளொணாத பொருளைநான் விளம்புமாற தெங்ஙனே' எனக் கூறினார். 280

இதுவுமது

வாக்கினால் மனத்தினால் மதித்தகார ணத்தினால்
நோக்கொணாத நோக்கையுன்னி நோக்கையாவர் நோக்குவார்
நோக்கொணாத நோக்குவந்து நோக்கநோக்க நோக்கிடில்
நோக்கொணாத நோக்குவந்து நோக்கையெங்க ணோக்குமே.

(பொ - ரை) 'வாக்கினாலும் மனத்தினாலும்' யாவராலும் மதிக்கப்பட்ட காரணத்தினாலும் பார்க்கக்கூடாம லிருந்தாலும் ஞானிகளால் பார்க்கப்படுவதால் நோக்கு என்னும் திருப்பெயருடைய வஸ்துவை யாவர் உள்ளபடியே பார்க்கவல்லவர்? அப்படி நம்மால் நோக்கப்படாத நோக்கென்னும் பொருளானது தானேவந்து எம்மீது கிருபைவைக்குமானால் அந்தப் பொருளே வெளிப்பட்டுவந்து எவ்விடத்திலும் நோக்கும் எ - று.

சிவபெருமானானவன் வாக்குக்கும், மனத்துக்கும் அதீதப்பட்டவனென்பார், 'வாக்கினால் மனத்தினால் மதித்தகார ணத்தினால்' என

வும், இறைவன் அஞ்ஞானிகளுடைய பார்வைக்குக் கிட்டானென் பார், 'நோக்கொணாத நோக்கையுன்னி நோக்கயாவர் நோக்குவார், நோக்கொணாத நோக்குவந்து நோக்கநோக்க நோக்கிடில், நோக்கொணாத நோக்குவந்து நோக்கையெங்க ணோக்குமே' எனவுங் கூறினர். ()

## இதுவுமது

உள்ளினும் புறம்பினு முலகமெங்க ணும்பரந்
தெள்ளிலெண்ணெய் போலநின் றியங்குகின்ற வெம்பிரான்
மெள்ளவந்தெ னுட்புகுந்து மெய்த்தவம் புரிந்தபின்
வள்ளலென்ன வள்ளலுக்கு வண்ணமென்ன வண்ணமே.

(பொ - ரை) அகத்திலும் புறத்திலும் அன்றி உலகமெங்கும் வியாபித்து எள்ளின்கண் எண்ணெய் கலந்திருப்பதுபோல் கலந்து விளங்குகின்ற எம்பெருமானாகிய பரமேஸ்வரனானவன் மெதுவாக வந்து என்னுடைய உள்ளத்தின்கண் புகுந்தனன், பிறகு நான் அவனை இடைவிடாது கலக்குந் தவத்தைச் செய்தேன். அங்ஙனஞ் செய்தபின் வள்ளலாகிய சிவபெருமான் என்ன? அவனுடைய சொரூப மென்ன? இவைகளை எனக்குந் தரிசிப்பித்தான். ஆனல், அவைகளின் விசேஷங்களை நான் உள்ளபடியே யுணர்ந்தவனல்லன்.

சர்வேஸ்வரன் சர்வ ஜீவான்மாக்கள் உள்ளத்திலுங் கலந்திருக்கின்றா னென்பார், 'உள்ளிலும்' எனவும், வெளிப் பூதங்களிலும் இங்ஙனமே கலப்பவ னென்பார், 'புறம்பிலு முலகமெங்கணும் பரந்து' எனவும், அவனுடைய வியாபகம் எள்ளிலெண்ணெய்போன்றதென் பார், 'எள்ளிலெண்ணெய் போலநின் றியங்குகின்ற வெம்பிரான்' எனவும், அவனே என்னுள்ளத்தினுங் கலந்தவ னென்பார், 'மெள்ள வந்தெ னுட்புகுந்து மெய்த்தவம் புரிந்தபின்' எனவும், அவனுடைய தரிசனங்களுக்கு அமையவில்லை யென்பார் 'வள்ளலென்ன வள்ளலுக்கு வண்ணமென்ன வண்ணமே' எனவுங் கூறினர். 282

## இதுவுமது

வேதமொன்று கண்டிலேன் வெம்பிறப்பி லாமையால்
போதநின்ற வடிவதாய்ப் புவனமெங்கு மாயினுய்
சோதியுள் ளொளியுமாய்த் துரியமோ டதீதமாய்
ஆதிமூல மாதியா யமைந்ததே சிவாயமே.

(பொ - ரை) எனக்குக் கொடிய பிறப்பில்லாமையால் நான் ஒரு வேதத்தையுங் கண்டதில்லை. நீயோ ஞான சொரூபனுய் உலகமெங்குங் கலந்துநின்றனை. ஆகையால், தேஜோமயத்தி னொளியாயும், துரியாதீதப் பொருளாயும் ஆதிமூலமாயும் அமைந்த பொருளே சிவயநம என்னும் பொருளாகும் எ - று.

எனக்கு அடிக்கடி பிறவிவந்தால் வேதத்தை யுணரக் கூடுமென்பார், 'வேதமொன்று கண்டிலேன் வெம்பிறப்பி லாமையால்' எனவும், இறைவன் எங்கு நிறைந்தவ னென்பார், 'போதநின்ற வடிவதாய்ப் புவனமெங்கு மாயினுய், சோதியுள் ளொளியுமாய் துரியமோ டதீதமாய், ஆதிமூலமாதியா யமைந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 283

## யோகம்

சாணிரு மடங்கினுற் சரிந்தகொண்டை தன்னுளே
பேணியப் பதிக்குளே பிறந்திறந் துழலுவீர்
தோணியான வைவரைத் துறந்தறுக்க வல்லிரேல்
காணிகண்டு கோடியாகக் கலந்ததே சிவாயமே.

(பொ - ரை) பெண்களுடைய சரிந்த கொண்டையின் வயப்பட்டு எண்சாண் அளவுள்ளனவாகிய சரீரத்தில் குடியிருக்கும் சீவனவன் ஒடுங்கினுல் நீங்கள் அந்தப் பதிக்குள்ளேயே பிறந்தும் இறந்துந் திரிவீர்கள். ஆகையால், தோணிபோ லிருக்கின்ற ஐம்பூதங்களையுங்

துறந்தறுக்க வல்லமை யுடையீரானல் நமக்கென்று ஏற்படுத்தியிருக்கு மோட்சமென்னுங் காணியைக் கண்டு அதில் கலந்து வாழக்கூடும். ஆயின், இவ்வளவும் செய்வது சிவயநம வென்னும் பஞ்சாட்சரமே யாகும் எ - று.

பெண்கள் மாய்கையே உயிருக்கு நமனென்பார், 'சாணுரு மடங்கினற் சரிந்தகொண்டை தன்னுளே' எனவும், உலகர்கள் அதற்கே இறக்கின்றார்களென்பார், 'பேணியப் பதிக்குளே பிறந்திறந் துழலுவீர்' எனவும், இவை ஐம்பொறிகளின் சேட்டைகளை யொழித்தாலே உண்டாகிறதில்லை யென்பார், 'தோணியான வைவரைத் துறந்தறுக்க வல்லிரேல் காணிகண்டு கோடியாக் கலந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 284

## யோகம்

அஞ்சுகோடி மந்திர மஞ்சுளே யடங்கினல்
நெஞ்சுகூற வும்முளே நினைப்பதோ ரெழுத்துளே
அஞ்சுநாலு மூன்றதாகி யும்முளே யடங்கினல்
அஞ்சுமோ ரெழுத்ததா யமைந்தமே சிவாயமே.

(பொ - ரை) வேதங்களிற் சொல்லப்பட்டுவருகின்ற அஞ்சுகோடி மந்திரங்களும் பஞ்சாட்சரங்களிலேயே யொடுங்கினல் அதை மனத்தாற் சிந்திக்க ஒரு எழுத்தில் நினைக்கவேண்டும். அது அஞ்சாகியும், நான்காகியும், மூன்ருகியும் உங்களுக்குள்ளேயே யடங்கினல் இந்த அஞ்செழுத்தும் ஓரெழுத்தாக அமைந்ததே யாகும் எ - று.

வேதங்களில் எழுகோடிமந்திரங்கள் சொல்லப்பட் டிருந்தாலும் அவற்றுள் ஐந்துகோடி மந்திரங்களே சிறந்ததென்பார், 'அஞ்சுகோடி மந்திரம்' எனவும், இவை அனைத்தும் பஞ்சாட்சரங்களி லடங்குமென்பார், "அஞ்சுளே யடங்கினல்' எனவும், இவற்றை உள்ளன்

போடு கினைக்கவேண்டுமானுல் ஓரெழுத்தே ஆதாரமாகு மென்பார் 'நெஞ்சுகூற வும்முளே நினைப்பதோ ரெழுத்துளே' எனவும், இங்ஙனம் தியானிப்பவர்கட்கு யாவும் ஓரெழுத்தாகவே விளங்குமென்பார், 'அஞ்சுநாலு மூன்றதாகி யும்முளே யடங்கினுல், அஞ்சுமோ ரெழுத்ததா யமைந்ததே சிவாயமே' எனவுங் கூறினுர். 285

## சிவ கலப்பு

அக்கரந்த வக்கரத்தி லுட்கரந்த வக்கரம்
சக்கரத்து சிவ்வையுண்டு சம்புளத் திருந்ததும்
எட்கரந்த வெண்ணெய்போ லெவ்வெழுத்து மெம்பிரான்
உட்கரந்து நின்றநேர்மை யாவர்காண வல்லரே.

(பொ - ரை) அட்சரமென்று சொல்லப்படும் முக்கிய எழுத்துக்களுள் ஒளித்துக்கொண்ட எழுத்தும், அறுகோணச் சக்கரத்துள் சிகாரபீஜத்தையுண்டு பரமேஸ்வரனுடைய திருவுள்ளத்தின்கண் இருந்ததும், எள்ளின்கண் எண்ணெயானது மறைந்திருப்பது போல் எந்த எழுத்திலும் எம்பெருமானுகிய சிவபெருமான் அந்தர் முகமாகக் கலந்துநின்ற தன்மையை காணவல்லமை யுடையவர்கள் எவரிருக்கின்றனர்? எ - று.

சர்வேஸ்வரன் மந்திர பீஜங்களில் கலந்திருக்கும் மர்மத்தை யாவரு மறியமாட்டார்கள் என்பது கருத்து. 286

## சிவ னுண்மை

ஆகமத்தி னுட்பொரு ளகண்டமூல மாதலால்
தாகபோக மன்றியே தரித்ததற் பராமுநீ
ஏகபாதம் வைத்தனை யுணர்த்துமஞ் செழுத்துளே,
ஏகபோக மாகியே யிருந்ததே சிவாயமே,

(பொ - ரை) இருபத்தெட்டாகமங்களிலும் உட்பொருளாயிருப்பது அகண்டவஸ்துவாகிய மூலாதாரப்பொருளாகும். ஆகையால், நீயே தற்பரப் பொருளாய் சர்வ ஆன்மகோடிகளுக்கும் அறிவை யுணர்விக்கும் பஞ்சாட்சரத்திற்குள் ஏகபாதம்வைத்தாய். ஆகையால், ஏகபோகமாயிருந்தது சிவயநம என்னும் பஞ்சாட்சரங்களே யாகும் எ - று.

ஆகமங்களில் பேசப்படுவோன் இறைவனேயென்பார், 'ஆகமத்தினுட்பொருளகண்டமூலம்' எனவும், அவனே யாவர்க்குஞ் சம்மதமான கடவுளென்பார், 'தாகபோக மன்றியே தரித்ததற் பரமுநீ' எனவும், இறைவன் பஞ்சாட்சரங்களில் நடிப்பவனென்பார், 'ஏகபாதம் வைத்தனை யுணர்த்துமஞ் செழுத்துளே' எனவும், ஆகையால், இறைவன் சிவயநம என்னும் எழுத்திலேயே கலந்திருக்கின்றா னென்பார், 'ஏகபோக மாகியே யிருந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 287

## சர்வம் சிவம்

மூலவாசல் மீதுளே முச்சதுர மாகியே
நாலுவாச லெண்விரல் நடுவுதித்த மந்திரம்
கோலமொன்று மஞ்சுமாகு மிங்கலைந்து நின்றநீ
வேறுவேறு கண்டிலேன் விளைந்ததே சிவாயமே.

(பொ - ரை) மூலாதாரமாகிய வாசலின்கண் முச் சதுரமாய், நான்கு வாசலும் எட்டு விரல்களுக்குநடுவே தோன்றிய மந்திரமானது ரூபத்தில் ஒன்றும், அஞ்சுமாகும். ஆகையால், நீங்கள் வீணாக அலைவதில் பயனொன்றுமில்லை அதுபற்றி நான் எதையும் வேறு வேறு கண்டிலேன். ஆகவே, எனக்கு உண்டானது சிவயநம என்னும் பஞ்சாட்சரமே யாகும் எ - று.

ஆறாதாரமுதலிய எந்த யோகங்களிலும் இறைவனுடைய பஞ்சாட்சரங்களே விளங்குகின்றன என்பது கருத்து. 288

## சிவனிடம்

சுக்கிலத் தடியுளே சுழித்ததோ ரெழுத்துளே
அக்கரத் தடியுளே யமர்ந்தவாதி சோதிநீ
உக்கரத் தடியுளே யுணர்ந்தவஞ் செழுத்துளே
அக்கரம தாகியே யமர்ந்ததே சிவாயமே.

(பொ - ரை) சுக்கிலத்தின் அடியிலும், சுழிந்த எழுத்தாகிய பிரணவத்திலும், அட்சரங்களின் அடியிலும், பொருந்தி யிருக்கின்ற ஆதி சோதி நீயேயாவாய். ஆகையால், உகாரமென்னும் எழுத்திற்கு அடியில் ஆராய்ந்துணரப்பட்ட பஞ்சாட்சரத்திற்குள் மந்திர பீஜங்களாய் அமர்ந்திருந்தது சிவயநம என்னும் பஞ்சாட்சரங்களாம் எ - று.

சிவாயமென்னும் பஞ்சாட்சரமானது சுக்கில மென்னும் விந்துஸ் தானத்திற்கு காரணமாகு மென்பார், 'சுக்கிலத் தடியுளே' எனவும், பிரணவத்தி லடங்கியிருப்பது மிதுவேயா மென்பார், 'சுழித்ததோ ரெழுத்துளே' எனவும், இறைவன் மந்திர பீஜங்களில் கலந்திருப்பவ னென்பார், 'அக்கரத் தடியுளே யமர்ந்தவாதி சோதிநீ' எனவும், இவ் வளவும் இறைவனுடைய செய்கைகளேயா மென்பார், 'உக்காரத் தடியுளே யுணர்ந்தவஞ் செழுத்துளே, அக்கரமதாகியே யமர்ந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 289

## மண்டலங்கள்

குண்டலத்து ளேயுளே குறித்தகத்து நாயகன்
கண்டவந்த மண்டலங் கருத்தழித்த கூத்தனை
விண்டலர்ந்த சந்திரன் விளங்குகின்ற மெய்ப்பொருள்
கண்டுகொண்ட மண்டலஞ் சிவாயமல்ல தில்லையே.

(பொ - ரை) குண்டலஸ்தானத்திற்குள் உண்மையாகக் குறித்து திருவுள்ளத்தின்கண்ணே தலைவனைக் காணுதற் பொருட்டுவா, அந்த

எண்ணத்தைக் கெடுத்த ஆநந்தத் திருத்தாண்டவக் கடவுளை, விரிந்து மலர்ந்த சந்திரனனவன் விளங்கிக்கொண் டிருக்கின்ற உண்மைப் பொருள் உணர்ந்துகொண்ட இடத்தில் சிவமென்னும் பொருளே யன்றி வேறில்லை எ - று.

எவ்விடத்துஞ் சிவபெருமானுடைய வியாபகமே யன்றி வேறு தேவர்களுடைய வியாபகமில்லை என்பது கருத்து. 290

## உடலின் தன்மை

*சுற்றுமைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி*
*சத்தியுஞ் சிவனுமாக நின்றதன்மை யோர்கிலீர்*
*சத்தியாவ தும்முடல் தயங்குசீவ னுட்சிவம்*
*பித்தர்கா ளறிந்திலீர் பிரானிருந்த கோலமே*

(பொ - ரை) சுற்றியிருக்கின்ற ஐந்துபூதங்க ளடங்கி யிருக்கின்ற ஒரு கூடத்தின்கண் மனமும் வாக்கு மிறந்ததாகிய ஒரு வெளியின் கண் சத்தியுஞ் சிவனுங் கலந்துநின்ற தன்மையை உணரமாட்டீர். ஆகையால், அங்ஙனம் அதை உணரும்போது சத்தியாவது உம்முடைய உடலும், அதற்காதாரமாகிய சீவன் அகத்தில் விளங்குகின்ற சிவனுமேயாவார்கள். ஆகையால், இவ்வண்ணம் எம்பெருமா னிருந்த கோலத்தைப் பித்தர்களே! நீங்கள் உணரமாட்டீர்கள் எ - று.

பஞ்ச பூதங்களுக்கும் இது வொரு கூடம்போன்றதென்பார், 'சுற்றமைந்து கூடமொன்று' எனவும், அங்ஙனம் ஒரு தேஜஸு உண்டென்பார், 'சொல்லிறந்த தோர்வெளி' எனவும், அவ்வெளியிலேயே சிவபெருமான் தன்னுடைய திருவருட் சத்தியோடு வெளிப்பட்டானென்பார், 'சத்தியுஞ் சிவனுமாக நின்றநேர்மை யோர்கிலீர்' எனவும், அதை விளக்குங்கால் சத்தியாவது உம்முடைய சரீரமாகவும் சீவன் சிவனுமாகவுமே யிருப்பார்களென்பார், 'சத்தியான தும்முடல் தயங்கு

சீவ னுட்சிவம்' எனவும், இதை அஞ்ஞானிகள் அறியமாட்டார்க ளென்பார், 'பித்தர்கா ளறிந்திலீர் பிரானிருந்த கோலமே' எனவுங் கூறினர். 291

## யாவும் சிவம்

மூலமென்ற மந்திர முளைத்தவஞ் செழுத்துளே
நாலுவேத நாவுளே நவின்றஞான மெய்யுளே
ஆலமுண்ட கண்டனு மரியயனு மாதலால்
ஓலமென்ற மந்திரஞ் சிவாயமல்ல தில்லையே.

(பொ - ரை) பிரணவமாகிய மூலமந்திரமானது முளைத்தெழுந்த அஞ்செழுத்துக்களாகிய பஞ்சாட்சரத்திற்குள் நான்குவேதங்களும், நாக்குக்குள்ளே நினைத்துத் துதிக்கப்பட்ட ஞானமும் உள்ளத்தின் கண் உண்மையாக வமைந்திருக்கும் அங்ஙனம் அமைந்திருப்பது திருப்பாற்கடலிற் றோன்றிய ஆலகால விஷத்தையுண்டு திருமிடற் றடக்கிய சிவபெருமானும், விஷ்ணுவும், பிரமதேவனு மாகையால் யாவராலும் ஓலமிடப்படும் மந்திரபீஜமாயுள்ளது சிவாயநம என்னும் பஞ்சாட்சரமேயன்றி வேறில்லை எ - று.

அஞ்செழுத்தானது பிரணவத்தில் உதித்த தென்பார், 'மூல மென்றமந்திர முளைத்தவஞ் செழுத்துளே' எனவும், இதுவே வேதங் கள் முதலியவற்றில் சொல்லப்படுவ தென்பார், 'நாலுவேத நாவுளே நவின்றஞான மெய்யுளே' எனவும், இங்ஙன மிருப்பவர்கள் திரிமூர்த் திகளே யென்பார், 'ஆலமுண்ட கண்டனு மரியயனு மாதலால்' என வும், 'யாவராலும் பஜிக்கப்படுவது பஞ்சாட்சரமே யென்பார், ஓல மென்ற மந்திரஞ் சிவாயமல்ல தில்லையே' எனவுங் கூறினர். 292

## தத்துவம் விலக்கல்

தத்துவங்க ளென்றுநீர் தமைக்கடிந்து போவிர்காள்
தத்துவஞ் சிவமதாகில் தற்பரமு நீரல்லோ

முத்திசீவ னுதமே மூலபாதம் வைத்தபின்
அத்தனுரு மும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே.

(பொ - ரை) உலகர்களே! நீங்கள் தத்துவங்களை நோக்கி நோக்கிப்பார்த்து அதினுல் தன்னைத் தானறியும் ஞானத்தைக் கைவிட்டு விடுவீர். அங்ஙனம் உங்களுடைய எண்ணம்போலவே தத்துவமே சிவசொரூபமாகும்பட்சத்தில் தற்பரம்பொருளாயுள்ள வஸ்து நீங்களே யாவீரே? அங்ஙன மாகாமையால் மோட்சத்தைக் கொடுக்கின்ற சிவனுடைய நாதத்தின்கண் எவற்றிற்குங் காரணமாகிய திருவடியை வைத்தபின்னர் அத்தனுாகிய சர்வேஸ்வரன் உம்முள்ளத்தின் கண்ணே யமர்ந்திருப்பார். ஆகையால், நீங்கள் இதைத் தெரிந்து கொள்ளுங்கள் எ - று.

உலகத்தில் பெரும்பாலார் தத்துவங்களே உண்மைப்பொருளென்று அதையே நாடியிருப்பது சகசமென்பார், 'தத்துவங்களென்று' எனவும், இங்ஙனஞ் செய்வதால் தன்னைத்தானுணரும் பசுஞானத்தை யடையாமல் விடுகின்றுரென்பார், 'தமைக்கடிந்துபோவீர்காள்' எனவும், தத்துவமே சிவமானுல் சீவர்கள் தற்பரப் பொருளாகலா மென்பார், 'தத்துவஞ் சிவமதாகில் தற்பரமு நீரல்லோ' எனவும், இறைவன் தன்னுடைய திருவருட்பாதத்தை சீவர்களுள்ளத்தின் வைத்துள்ளதை அவர்கள் உணரவேண்டு மென்பார், 'முத்திசீவனுதமே மூலபாதம் வைத்தபின், அத்தனுரு மும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே' எனவுங் கூறினுர். 293

## ஞான தீட்சை

மூன்றுபத்து மூன்றையு மூன்றுசொன்ன மூலனே
தோன்றுசேர ஞானிகாள் துய்யபாத மென்றலை
என்றுவைத்த வைத்தபின் னியம்புமஞ் செழுத்தையும்
தோன்றவோத வல்லிரேல் துய்யசோதி காணுமே.

(பொ - ரை) சாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களின் முக்கிய கருத்தையுஞ் சொன்ன மூலமே எனக்குத் தோன்றுமாறு ஞானிகளுடைய திருவடிகளையே உள்ளபடியே என்னுடைய சிரசின்கண் வைத்தேன் அங்ஙனம் நான் வைத்துக்கொண்ட பின் சொல்லப்பட்ட பஞ்சாட்சரங்களையும் நீங்கள் சிவபெருமானுக்கு வெளிப்படும்படி துதிசெய்ய வல்லமையுடையீரானல் பரிசுத்தமாகிய தேஜோமயப் பொருள் வெளிப்பட்டுத் தரிசனங் கொடுக்கும் எ - று.

ஞானிகளிடத்தில் உள்ளன்பு செலுத்தி அவர்களுடைய திருவடிகளைத் தலைமேல்வைத்து பஞ்சாட்சர தியானஞ் செய்தாலே சிவபெருமானுடைய தரிசனங்கிடைக்கும் என்பது கருத்து. 294

## சர்வம் சிவம்

உம்பர்வான கத்தினு மூலகபார மேழினும்
நம்பர்நாடு தன்னிலு நாவலென்ற தீவினும்
செம்பொன்மாட மல்குதில்லை யம்பலத்து ளாடுவான்
எம்பிரான லாதுதெய்வ மில்லையில்லை யில்லையே.

(பொ - ரை) தேவர்கள் வாழும் இந்திரலோகத்திலும், ஏழுலகங்களிலும், அதிகாரிகள் வாழ்கிற நாடுகளிலும், சம்புத்தீவிலும், செவந்த பொன்னினற் செய்த மாடமாளிகைகள் விளங்குகின்ற தில்லையிலுள்ள சிற்றம்பலத்தின்கண் திருநடனஞ் செய்வோனுகிய எம்பெருமானே யல்லாமல் வேறு தெய்வமில்லை எ - று.

எவ்விடத்திலும் சிவபெருமானேயன்றி வேறு தெய்வமில்லை என்பது கருத்து. 295

## இதுவுமது

பூவலாய வைந்துமாய் புனலில்நின்ற நான்குமாய்
தீயிலாய மூன்றுமாய் சிறந்தகா லிரண்டுமாய்

வேயிலாய தொன்றுமாய் வேறுவேறு தன்மையாய்
நீயலாமல் நின்றநேர்மை யாவர்காண வல்லரே.

(பொ - ரை) பூமியின்கண் ஐந்தாகியும், சலத்தின்கண் நான்காகியும், நெருப்பின்கண் மூன்றாகியும், காற்றின்கண் இரண்டாகியும், ஆகாயத்தின்கண் ஒன்றாகியும், வேறுவேறு ரூபத்தோடு நீயல்லாமல் வேறு நிற்க வல்லவர் யார்? எ - று.

சர்வேஸ்வரன் பிருதிவியில் கலந்திருக்கும்போது ஐந்து மூர்த்தமாயும், அப்பு பூதத்தில் கலந்திருக்கும்போது நான்கு மூர்த்தமாயும், தேயு பூதத்தில் கலந்திருக்கும்போது மூன்று மூர்த்தமாயும், வாயு பூததில் கலந்திருக்கும்போது இரு மூர்த்தமாயும், ஆகாய பூதத்தில் கலந்திருக்கும்போது ஒரு மூர்த்தமாயும் விளங்குவோன் இறைவனன்றி வேறு தெய்வங்களல்ல வென்பார், இங்ஙனங் கூறினர். 296

## இதுவுமது

அந்தரத்தி லொன்றுமா யசைவுகா லிரண்டுமாய்
செந்தழலில் மூன்றுமாய்ச் சிறந்தவப்பு நான்குமாய்
ஐந்துபாரி லைந்துமா யமர்ந்திருந்த நாதனை
சிந்தையிற் றெளிந்தமாயை யாவர்காண வல்லரே.

(பொ - ரை) ஆகாய பூதத்தில் ஒன்றாகியும், அசைகின்ற வாயு பூதத்தில் இரண்டாகியும், அக்கினி பூதத்தில் மூன்றாகியும், அப்பு பூதத்தில் நான்காகியும், பிருதிவி பூதத்தில் ஐந்தாகியும் கலந்திருந்த தலைவனை மனத்தின்கண் தெளிந்துகொண்ட மாய்கையை காண வல்லவர்கள் யாவர்? எ - று.

சர்வேஸ்வரன் பஞ்ச பூதங்களிலும் வியாபிக்கிறான் என்பது கருத்து. 297

### புத்தி நிலை கூறல்

மனவிகார மற்றுநீர் மதித்திருக்க வல்லிரேல்
நினைவிலாத மணிவிளக்கு நித்தமாகி நின்றிடும்
அனைவரோதும் வேதமு மகம்பிதற்ற வேணுமேற்
கனவுகண்ட துண்மைநீர் தெளிந்ததே சிவாயமே.

(பொ - ரை) மனத்தை யாதொரு ஆபாச வழியிலுஞ் செல்ல விடாமல் சர்வேஸ்வரனை உள்ளபடியே சிந்தித்திருந்து எப்பொருளி லும் நினைப்பு மறப்பில்லாத இரத்தின விளக்காயுள்ள சிவபெருமான் அவர்களிடத்தில் என்றும் அழியாமல் அமர்ந்திருக்கும். ஆனல், இவ் விஷயத்தைப் பற்றி பலரும் கண்டபடி சொல்லுகின்ற வேதமானது பிதற்றுவதே யாகும். ஆகையால், அவர்கள் சொல்லுவதெல்லாம் கனவு கண்ட பொருள்போலாகும் இது உண்மையே யன்றி பொய்யல்ல இதை நீங்கள் உணர்ந்ததும் பஞ்சாட்சரங்களின் வலிவேயாகும்.

உலகிலுள்ள ஒவ்வொருவருக்கும் மனமானது சர்வ பொருள்களி லும் இச்சையைக் கொடுத்து மயக்குஞ் சுபாவ முடையதென்பார் 'மனவிகாரமற்று' எனவும், சர்வேஸ்வரனை ஸ்மரிக்க வேண்டியதுஞ் சுத்தமனத்தா லென்பார், 'மதித்திருக்க வல்லிரேல்' எனவும், உள்ளன் போடு நினைப்பவர்க ளிடத்திலேயே சர்வேஸ்வரன் குடியிருப்பா னென்பார், 'நிலைவிலாத மணிவிளக்கு நித்தமாகி நின்றிடும்' எனவும், வேதங்களிற் கூறப்படுவன வெல்லாம் இவ்விஷயத்திற் பொய்யா மென்பார், 'அனைவரோதும் வேதமு மகம்பிதற்ற வேணுமேற், கனவு கண்ட துண்மைநீர் தெளிந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 298

### குருக்களை வினுதல்

இட்டகுண்ட மேதடா விருக்குவேத மேதடா
சுட்டமட் கலத்திலே சுற்றுநூல்க ளேதடா •

முட்டிநின்ற தூணிலே முளைத்தெழுந்த சோதியை
பற்றிநின்ற தேதடா பட்டநாத பட்டரே.

(பொ - ரை) பட்டநாதர்கள் என்னும் பேர் வைத்துக்கொண்டிருக்கும் ஆசிரியர்களே! நீங்கள் இட்டிருக்கின்ற ஓமகுண்டமும், இருக்குவேத முதலிய நான்கு வேதங்களும், சுட்டுவைத்திருக்கும் மண்பாத்திரங்களில் சுற்றும் நூல்களும், யாதொரு தடையுமின்றி மூலத்தூணில் முளைத்தெழுந்த தேஜோ ரூபனைப்பற்றி நின்றதும் எது? எ - று.

உலகத்திலுள்ள குருக்களே நீங்கள் ஓமகுண்டம் வைத்தல் முதலிய காரியங்களால் என்ன பயனை அடைந்தீர்கள். ஒன்றுமில்லையே என்பது கருத்து. 299

## சிவத்தி னிலை

நீரிலே முளைத்தெழுந்த தாமரையி னோரிலை
நீரினோடு கூடிநின்று நீரிலாத வாறுபோல்
பாரிலே முளைத்தெழுந்த பண்டிதப் பராபரம்
பாரினோடு கூடிநின்ற பண்புகண் டிருப்பிரே.

(பொ - ரை) சலத்தின்கண் முளைத்தெழுந்த தாமரை யிலையானது அந்தச் சலத்தில் கூடியிருந்தும் அதின்மேல் அந்தச்சலம் சம்பந்தியாததுபோல் உலகத்தி லிருக்கின்ற பராபரமாகிய கடவுள் உலகத்தின்கண் இருந்தும் கலவாமல் நின்றகுணத்தை நீங்கள் பார்த்திருப்பீர்கள் எ - று.

தாமரை நீரிலிருந்தும் அந்த நீருடன் சேராவிதம்போல் சர்வேஸ்வரனும் உயிர்களிற் கலந்திருந்தும் மாயையின் வயப்படானென்பார் இங்ஙனங் கூறினர். 300

## ஞானிக ளுண்மை

உறங்கிலென் விழிக்கிலெ னுணர்வுசென் றொடுங்கிலென்
சிறந்தவைம் புலன்களுந் திசைத்திசைக ளொன்றிலென்
புறம்புமுள்ளு மெங்கணும் பொருந்திருந்த தேகமாய்
நிறைந்திருந்த ஞானிகாள் நினைப்பதேது மில்லையே.

(பொ - ரை) நித்திரை செய்தாலென்ன? விழித்திருந்தா லென்ன? அறிவானதுபோய் ஒடுங்கினுலென்ன? ஐம்புலன்களுஞ் சர்வதிசைகளிலும்போய்ப் பதுங்கினுலென்ன? வெளியிலும், உள்ளிலும் வேறு எவ்விடத்திலும் பொருந்தியிருந்து எங்கும் ஒன்ருய்நிறைந்திருந்த ஞானிகள் யாதொன்றையும் நினைப்பதில்லை எ - று.

சர்வேஸ்வரன் உண்மைஞானிகள் உள்ளத்தின்கண் சதா எழுந்திருப்பதால் அவர்களும் எப்படியிருந்தாலும் என்ன? என்பது கருத்து. 301

## மூர்த்திகள் நிலை

ஓதுவார்க ளோதுகின்ற வோரெழுத்து மொன்றதே
வேதமொன்ற தேகமாய் விளம்புகின்ற தன்றிது
நாதமொன்று நான்முகன் மாலுநாலு மொன்றதே
ஏதுமன்றி நின்றதொன்றை யானுணர்ந்த நேர்மையே.

(பொ - ரை) வேதாத்தியயனஞ் செய்கின்றவர்கள் பாராயணஞ் செய்கின்ற ஒரு எழுத்தும் ஒன்றே ஆனல், இதைவேதமானது ஒன்றென்று சொல்லவில்லை. ஆயினும், நாதம் பிரமன் விஷ்ணு முதலிய தேவர்களும் ஒரே தெய்வமாவார்கள். இங்ஙனமான அறிவு எந்த வியவகாரமுமில்லாத ஒருபொருளை நான் உணர்ந்தபடியா லுண்டானது எ - று. 302

## குரு கோலம்

பொங்கியே தரித்தவச்சு புண்டரீக வெளியிலே
தங்கியே தரித்தபோது தாதுமா துளையதாம்
அங்கியுட் சரித்தபோது வடிவுக ளொளியுமாய்க்
கொம்புமேல் வடிவுகொண்டு குருவிருந்த கோலமே.

(பொ - ரை) இந்தச் சரீத்தின்கண் பொங்கியுண்டான உயிரானது புண்டரீகஸ்தானத்தின் வெளியில்தங்கி யமர்ந்தசமயத்தில் தாதுவானது மாதுளையைப்போல் நிற்கும், அதில் அக்கினியானது தாக்கினல் ரூபமுண்டாம், தேஜஸுண்டாம், அப்போது அங்குள்ள மூலாதாரக் கொம்பின்மேல் குருவானவர் சர்வசுதந்தரத்துடன் எழுந்தருளி யிருந்தார் எ - று. 303

## நாதவிந்துக்களின் விளைவு

மண்ணுளோரும் விண்ணுளோரும் வந்தவாற தெங்கெனில்
கண்ணிஞெடு சோதிபோற் கலந்தநாத விந்துவும்
அண்ணலோடு சத்தியு மஞ்சுபஞ்ச பூதமும்
பண்ணிஞெடு கொடுத்தழிப் பாரொடேழு மின்றுமே.

(பொ - ரை) பூமியின்கண் வாழ்வோரும், தேவர்களும வந்த விதம் எப்படியென்றால்: கண்ணிற் சோதிபோற் கலந்தநாத விந்துக்களாலாகும். ஆகையால், ஈஸ்வரனும், சத்தியும் பஞ்சபூதங்களும் இசையும், ஆகிய இவைகளெல்லாமும் இவ்வண்ணமேயாகும் எ - று.

இம்பரிலும், உம்பரிலும் உள்ள சர்வபிராணிகளும் உண்டாவது விந்து நாதங்களாலென்பார், 'மண்ணுளோரும் விண்ணுளோரும் வந்தவாறதெங்கெனில், கண்ணிஞெடு சோதிபோற் கலந்தநாத விந்துவும்' எனவுங் கூறிஞர். 304

## அநாதி

ஒடுக்குகின்ற சோதியு முந்திநின்ற வொருவனும்
நடுத்தலத்தி லொருவனும் நடந்துகாலி லேறியே
விடுத்துநின்ற விருவரோடு மெய்யினோடு பொய்யுமாய்
அடுத்துநின் றறிமினோ வனாதிநின்ற வாதியே.

(பொ - ரை) மூலாதாரத்தின்கண் ஒடுங்குகின்ற தேஜோரூபனும், உந்தியில் இருந்த ஒருவனாகிய விஷ்ணுவும், நடுத்தலத்திலுள்ள ஒருவனாகிய ருத்திரனும் ஆகிய இவர்களெல்லாம் உள்ளபடியே நடந்து வாசியின் வழியா யேறி விடுத்துநின்ற மகேசன் சதாசிவன் என்கிற இருவரோடு உண்மையுடன் பொய்யாக விருப்பதை நீங்கள் பொருந்தியிருந்து அநாதிப்பொருளா யிருக்கின்ற தலைவனை நன்கு யுணருங்கள் எ - று.

மூலாதாரத்திலுள்ள விநாயகனே தேஜோமயனென்பார், 'ஒடுக்குகின்ற சோதியும்' எனவும், மணிபூரக ஸ்தானத்தில் விஷ்ணுவேயுள்ளவ னென்பார், 'உந்திநின்ற வொருவனும்' எனவும், நடுவிடத்திலுள்ள ருத்திரனே யாவருக்கும் வழிகாட்டுவோ னென்பார், 'நடுத்தலத்தி லொருவனும் நடந்துகாலி லேறியே' எனவும், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் இரண்டு ஸ்தானத்திலேயே தெரிசனஞ்செய்ய வேண்டுமென்பார், 'விடுத்துநின்ற விருவரோடு மெய்யினோடு பொய்யுமாய்' எனவும், அவ்விடத்தி லிறைவனை அறியவேண்டுமென்பார், 'அடுத்துநின் றறிமினோ வனாதிநின்ற வாதியே' எனவுங் கூறினர். 305

## மண்டலச் சிறப்பு

உதித்தமந் திரத்தினு மொடுங்குமக் கரத்தினும்
மதித்தமண் டலத்தினு மறைந்துநின்ற சோதிநீ

மதித்தமண் டலத்துளே மரித்துநீ ரிருந்தபின்
சிரித்தமண் டலத்துளே சிறந்ததே சிவாயமே.

(பொ - ரை) சர்வ சாஸ்திரங்களிலு முண்டாகிய மந்திரபீஜங்களி லும், ஒடுங்குகின்ற அட்சரத்திலும், யாவராலும் மதிக்கக்கூடிய மண் டலத்திலும், உறைந்து இருந்த தேஜோமயப்பொருள் நீயே யாவாய். ஆகையால், இங்ஙனமெல்லாம் மதித்த மண்டலத்தில் நீங்கள் மரித் திருந்தபின் சிரித்த மண்டலத்துள் சிறந்தது சிவாயநம என்னும் பஞ் சாட்சரமாகும் எ - று.

வேதத்தில் மந்திரபீஜங்கள் தோன்றியது போலவே ஒடுங்குவது என்பார், 'உதித்தமந் திரத்தினு மொடுங்குமக் கரத்தினும்' எனவும், எங்ஙனமும் சிவமந்திரமே விளங்குவதென்பார், 'மதித்தமண் டலத் தினு மறைந்துநின்ற சோதிநீ, மதித்த மண்டலத்துளே மரித்துநீ ரிருந்தபின், சிரித்தமண் டலத்துளே சிறந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 306

## குருக்கள் தன்மை

திருத்திவைத்த சற்குருவைச் சீர்பெற வணங்கிலீர்
குருக்கொடுக்கும் பித்தரே கொண்டுநீந்த வல்லிரோ
குருக்கொடுக்கும் பித்தருங் குருக்கொள் வந்தசீடனும்
பருத்திபட்ட பாடுதான் பன்னிரண்டும் பட்டதே.

(பொ - ரை) உங்களை நன்மார்க்கத்தை யுணரும்படி திருத்தி வைத்த ஞானசாரியர்களை நீங்கள் நன்றாக வணங்கினீரில்லை. ஆகை யால், நீங்கள் குருவின் குறியைக் கெடுக்கும் பத்தர்களே யாவீர்கள். அங்ஙனஞ் செய்ததால் நீங்கள் குருவசனத்தைக்கொண்டு அஞ்ஞானக் கடலை நீந்தவல்லவ ராவீரோ? ஆகையால், குருவை யிகழ்ந்த சீடனும், சீடனைவெறுத்த குருவும், பருத்திபட்ட பன்னிரண்டு பாடுகளையும் படுவார்கள் எ - று.

ஆசிரிய வசனத்தை உள்ளன்போடுகொண்டு அதின் வழியில் நில்லாதவர்கள் வீணே நரகத்தை யடைவார்கள் என்பது கருத்து. 307

## வெளி கலப்பு

விழித்தகண் துதிக்கவும் விந்துநாத வோசையும்
மேருவுங் கடந்தவண்ட கோலமுங் கடந்துபோய்
எழுத்தெலா மறிந்துவிட்ட விந்திரஞால வெளியிலே
யானுநீயு மேகலந்த தென்னதன்மை யீசனே.

(பொ - ரை) சாக்கிராவஸ்தையில் விழித்த கண்ணானது துதிக்கவும், விந்து நாதங்களின் ஓசையும், மேருமலையையும், அண்டகோளகையையுந் தாண்டி அப்புறஞ்சென்று சர்வ மந்திர பீஜாட்சரங்களும் இறந்துவிட்ட இந்திரஞால மென்னும் வீதியிலே நான் வந்து சேர்ந்தது எவ்வளவு புராதீன சுவாதீனமோ? அறியேன் எ - று.

சிவஜீவைக்கியத்தின் சிறப்பு இன்னதென்றுணர இசையவில்லை என்பது கருத்து. 308

## பாசவிதி

ஓம்நமா வென்றுளே பாவையென் றறிந்தபின்
பானுடற் கருத்துளே பாவையென் றறிந்தபின்
நானுநீயு முண்டடா நலங்குலம துண்டடா
ஊனுமூனு மொன்றுமே யுணர்ந்திடா யெனக்குளே.

(பொ - ரை) ஓம் நமசிவய என்று அந்தர் முகத்தில் துதிசெய்கின்ற யோகியே? சூரியமண்டலத்தை பாவையென்று வாயின்கணுணர்ந்தபிறகு நானும் நீயும் உண்டு நன்மையும் குலமும் உண்டு. ஊனும் ஊனும் ஆகிய இவைகள் ஒன்றி யிருப்பதையே, உனக்குள்ளாகவே நீ அறியக்கடவை எ - று.

யோகிகளும் மந்திரபீஜ உச்சாடனஞ் செய்கின்ருரென்பார், 'ஓம்நமா வென்றுளே யோதுகின்ற யோகியே' எனவும், அந்தர்முகத்தில் உண்மை ஞானமுள்ளவர்க்கே எல்லாந் தோன்று மென்பார், 'பானுடற் கருத்துளே பாவையென் றறிந்தபின், நானுமீயு முண்டடா நலங்குலம துண்டடா, ஊனுமூணு மொன்றுமே யுணர்ந்திடா யுனக்குளே' எனவுங் கூறினர். 309

## அன்னதானம் விலக்கல்

ஐம்புலனை வென்றவர்க்'கன்ன தான மீவதாய்
நன்புலன்க ளாகிநின்ற நாதருக்க தேறுமோ
ஐம்புலனை வென்றிடா தவத்தமே யுழன்றிடும்
வம்பருக்கு மீவதுங் கொடுப்பது மவத்தமே.

(பொ - ரை) ஐம்புலன்களை அறவே வென்ற யோகிகளுக்கு அன்னதானங் கொடுப்பதாகச் சொல்லி அவ்வண்ணமே செய்கின்றீர்கள். ஆனல், நீங்கள் செய்கின்ற அக்காரியம் சர்வேஸ்வரனுக்கு அருகமாமோ? ஆகாது. ஆயினுஞ் சற்பாத்திரத்தில் செலவிட்டது மிகவும் நன்மையே யாகும். ஆகையால், மேற்சொல்லப்பட்ட ஐந்து புலன்களையும் வெல்லாது அவைகளின் வழியே செல்லும் அஞ்ஞானிகளுக்கு அன்னதான முதலிய தருமங்கள் செய்வது வீணேயாகும் எ - று.

சற்பாத்திரத்தில் செலவிடுவது நன்மையையும் துர்பாத்திரத்தில் செலவிடுவது தீமையையும் விளைவிக்கும் என்பது கருத்து. 310

## பிறவி நிலே

ஆணியான வைம்புலன்க ளவைபுமொக்கு ளொக்குமோ
யோனியிற் பிறந்திருந்த துன்பமிக்கு மொக்குமோ
வீணர்காள் பிதற்றுவீர் மெய்ம்மையே யுணர்த்திரேல்
ஊனுறக்க போகமு முமக்கெனக்கு மொக்குமே.

(பொ - ரை) ஒ வீணர்களே! நீங்கள் உயர்ந்த வலிவுள்ள ஐம் புலன்களும் நீர்க்குமிழியை ஒப்பாகுமோ? யோனியின்கண் பிறந் திருந்த விதமும் மிக்க துன்பத்தை விளைவிக்குமோ? மெய்ம்மை யறி யாமையில் நீங்கள் கண்டகண்ட விதம் பிதற்றுவீர்கள். இங்ஙன மிருந் தாலும் ஊண், உறக்கம், போகம் இவைகள் உமக்கும் எமக்கும் ஒன்றே யாகும் எ - று. 311

## எழுத்தி னுண்மை

ஓடுகின்ற வைம்புல னொடுங்கவஞ் செழுத்துளே
நாடுகின்ற நான்மறை நவிலுகின்ற ஞானிகாள்
கூடுகின்ற கண்டித குணங்கள்மூன் றெழுத்துளே
ஆடுகின்ற பாவையா யமைந்ததே சிவாயமே.

(பொ - ரை) சகல இடங்களிலும் ஓடியோடித் திரிகின்ற ஐந்து புலன்களும் பஞ்சாட்சரத்தி லொடுங்கவேண்டுமென்று பன் முறையும் நாடிநாடிச் சொல்லுகின்ற நான்கு வேதங்களின் உட் கிடையை யறிந்த ஞானிகள் பலமுறையுஞ் சொல்லுகின்ற கண்டித குணங்களை யுடையது. பிரம்ம, விஷ்ணு, ருத்திர பீஜங்களேயாகும். அவ்வெழுத்துளே பிரதி பிம்பமாயாடுகின்ற பதுமையாக அமைந்ததே சிவாய என்னும் பஞ்சாட்சரங்களே யாகும் எ - று.

ஐம்புலன்கள் ஓரிடத்தில் நிற்குங் குணமுடைய வல்லனவென் பார், 'ஓடுகின்ற வைம்புலன்' எனவும், அவற்றை ஒடுக்கினாலே பய னுண்டென்பார், 'ஒடுங்க' எனவும், இவற்றை யொடுக்கக் காரணமா யுள்ளது பஞ்சாட்சரமே யென்பார், 'அஞ்செழுத்துளே' எனவும், இவற்றை விலக்குவது நான்கு வேதங்களே யென்பார், 'நாடுகின்ற நான்மறை நவிலுகின்ற ஞானிகாள்' எனவுங் கூறினார். 312

## பிராணயாமம்

புவனசக்க ரத்துளே பூதநாத வெளியிலே
பொங்குதீப வங்கியுள் பொதிந்தெழுந்த வாயுவைத்
தவனசோம ரிருவரு தாமியங்கும் வாசலில்
தண்டுமாறி யேறிநின்ற சரசமான வெளியிலே
மவுனவுஞ் செழுத்திலே வாசியேறி மெள்ளவே
வானளாய் நிறைந்தசோதி மண்டலம் புகுந்தபின்
அவனுநானு மெய்கலந் தனுபவித்த வளவிலே
அவனுமுண்டு நானுமில்லை யாருமில்லை யானதே.

(பொ - ரை) சக்கராகாரமாகிய உலகசக்கரத்திற்குள் அடங்கியிருக்கின்ற பூதங்களுடைய நாதந் தொனிக்கின்ற வெளியிலே விளங்குகின்ற தீபம்போல் விளங்கும் அக்கினியுள் மூடப்பட்டெழுந்த வாயுவைக் குளிர்ந்த காற்றை வீசுகின்ற சூரிய சந்திரர்களிருவரும் விளங்குகின்ற வாசலில் கத்தரிக்கோலாக மாறிநின்ற சரசமான வெளியிலே மௌன பஞ்சாட்சரத்தை ஆதாரமாகக்கொண்டு வாசியிலேறி மெதுவாக ஆகாயம் வரைக்கும் அளாவியிருக்கின்ற சோதிமண்டலத்தில் புகுந்தபின் அவனும் நானும் சரீரத்தில் கலந்து அநுபவித்த சமயத்தில் அவனிருக்க நானும் மற்ற யாவரும் இல்லையாய் முடிந்தது எ - று.

உலகம் சக்கராகாரமானதென்பார், 'புவனசக்கரத்துளே' எனவும், அவ்வுலகமும் நாதத்தையுடைய பூதசம்பந்த முடையதென்பார், 'பூதநாதம்' எனவும், நாதத்தின் முடிவில் அக்கினியுண்டாமென்பார், 'வெளியிலே பொங்குதீப வங்கியுள்' எனவும், அவ்விடத்திலே வாயுவும் இயக்கமாமென்பார், 'பொதிந்தெழுந்த வாயுவை' எனவும், சோமசூரிய மண்டலங்களிலுணரவேண்டு மென்பார், 'தவனசோம ரிருவருந் தாமியங்கு வாசலில்' எனவும், சர்வேஸ்வரனுடன் ஜீவன்

சேர்ந்த காலத்தில் சீவனை அடக்கிதான் வெளிப்படுவா னென்பார், 'அவனுநானு மெய்கலந் தநுபவித்த வேளையில், அவனுமுண்டு நானுமில்லை யாருமில்லை யானதே' எனவுங் கூறினர். 313

## ஒடுக்க நிலை

வாளுறையில் வாளடக்கம் வாயுறையில் வாய்வடக்கம்
ஆளுறையில் ஆளடக்கம் அருமைஎன்ன வித்தைகாண்
தாளுறையில் தாளடக்கம் தன்மையான தன்மையும்
நாளுறையில் நாளடக்கம் நானுநீயுங் கண்டதே.

(பொ - ரை) வாள் போடுதற்குரிய உறையில் வாளாயுதமானது அடங்கிநிற்கும், வாயாகிய வுறையின்கண் வாயுவானது அடக்கமாகும், மநுஷர்களானவர்கள் தங்களுக்கு உறையாகிய தேகத்தில் அடங்கி நிற்பார்கள். இங்ஙனம், அடங்கிநிற்பது என்ன அருமையான வித்தை, 'தாளுறையில் தாளடக்கமும் தன்மையான தன்மையும்' நாளுறையில் நாளடக்கமாகி நிற்பதையே நானும் நீயுங் கண்டபடியாகும் எ - று.

சகல பொருள்களிலும் அந்தந்தப் பொருள்கள் ஒடுங்கி யிருப்பதாகும் என்பது கருத்து. 314

## சிவ சோரூபம்

வழுத்திடா னழித்திடான் மாயரூப மாகிடான்
கழன்றிடான் வெகுண்டிடான் காலகால காலமும்
துவண்டிடா னசைந்திடான் றூயதூப மாகிடான்
சுவன்றிடா னுரைத்திடான் சூக்ஷசூக்ஷ சூக்ஷமே.

(பொ - ரை) சர்வேஸ்வரனானவன் எந்தப் பொருளையும் துதிசெய்யான், எதையும் அநியாயமாய்க் கெடுக்கமாட்டான், மாயா ரூபத்தை யடையமாட்டான், எந்தப் பொருளினிடத்தும் பிரிந்திருக்கமாட்

டான், கோபஞ் செய்யமாட்டான், எந்தக் காலங்களிலும் அவளமாட்டான், அசையமாட்டான், பரிசுத்தமுள்ள தூபமாகமாட்டான், வறளமாட்டான் சூட்சாதி சூட்சங்களை உரைக்கமாட்டான் எ - று.

கடவுள் எதிலும் கலவாது கலந்து என்றைக்கு மொழியாத நித்தியவஸ்துவா யுள்ளவன் என்பது கருத்து. 315

## அராபிமத வுண்மை

ஆகிகூவென் றேயுரைத்த வக்ஷரத்தி னனந்தம்
யோகியோகி யென்பர்கோடி யுற்றறிந்து கண்டிடார்
பூகமாய் மனக்குரங்கு பொங்குமங்கு மிங்குமாய்
ஏகமேக மாகவே யிருப்பர்கோடி கோடியே.

(பொ - ரை) ஆஹி ஹூ என்று சொல்லப்படும் மந்திர பீஜாட்சரங்களின் பேரின்பவிளக்கத்தை யோகியோகி என்னும் பேருடையவர்களிற் பெரும்பாலார் உணரமாட்டார்கள். ஏனெனில், அவர்களுடைய மனமாகிய குரங்கு அங்குமிங்கும் அவர்களை யிழுத்துக் கெடுக்கின்றபடியால், இவர்கள் தவிர்ந்த அநேக கோடி உண்மை யோகிகள் இவ் வெழுத்துக்களின் உண்மைப்பொருளை யுணர்ந்து இறைவனுடன் ஏகமாக கலந்திருப்பார்கள் எ - று.

பொய்யாக யோகிகள் என்று பேரை மாத்திரம் வைத்துக்கொண்டிருப்பவர்கள் மந்திரபீஜங்களின் உண்மையை உணரார்களென்பார், 'ஆகிகூவென் றேயுரைத்த வட்சரத்தி னநந்தம், யோகியோகி யென்பர்கோடி யுற்றறிந்து கண்டிடார்' எனவும், அவர்களெல்லாம் மனத்தின் வயப்பட்டவர்களென்பார், 'பூகமாய் மனக்குரங்கு பொங்குமங்கு மிங்குமாய்' எனவும், உண்மை ஞானிகள் எழுத்துக்களின் உண்மையை உணர்வார்களென்பார், 'ஏகபோகமாகவே யிருப்பர் கோடி கோடியே' எனவுங் கூறினர். 316

## ஆராய்ச்சி

கோடிகோடி கோடிகோடி குவலயத்தோ ராதியை
நாடிநாடி நாடிநாடி நாளகன்று வீணதாய்
தேடிதேடி தேடிதேடி தேகமுங் கசங்கியே
கூடிகூடி கூடிகூடி நிற்பர்கோடி கோடியே.

(பொ - ரை) அநேக தேசங்களில் வாழ்கின்ற மானிடர்களுக்கும் தேவர்களுக்கும் முதல்வனாகவுள்ள சிவபெருமானை, அநேக காலங்களாக நாடிநாட்க ளெல்லாங் கழிந்து அநேக தேசங்களிலுங் கலந்து கலந்து அநேக காலங்கள் மெலிந்துதேடி பின்னர் சர்வேஸ்வரனுடைய திருவரு ளுணர்த்தியதால் கோடிகோடியான ஞானிகள் அவனுடன் கலந் துறவாகி நிற்பார்கள் எ - று.

சர்வேஸ்வரனுடைய திருவருள் ஒரு ஜெனனத்தி லுண்டாகா தென்பார், இங்ஙனங் கூறினர். 317

## சிவ சொரூபம்

கருத்திலான் வெளுத்திலான் பரனிருந்த காரணம்
இருத்திலா னொளித்திலா னொன்றும்ரண்டு மாகிலான்
ஒருத்திலான் மரித்திலா னொழிந்திடா னழிந்திடான்
கறுத்திற்கீயுங் கூவுமுற்றோன் கண்டறிந்த வாதியே.

(பொ - ரை) தன்னுடைய மனத்தில் கீ கூ என்னும் பீஜாட்சரங்களை உள்ளபடியே யுணர்ந்தவர்களால் கண்டுணரப்பட்ட முதல்வனாவன் கறுக்கான், வெளுக்கான் பராபர னிருந்த காரணத்தில் இருத்திவைக்கான், ஒளிக்கான், ஒன்றும் இரண்டும் ஆகமாட்டான், ஏதையும் நீக்கான், இறவான், ஒழியான் அழியான் எ - று.

இறைவனுக்கு இதுதான் ரூபமென்று சொல்லப்படாதும் ஞானிகள் திருவுள்ளத்தின்கண் உணரும் விதமே ரூபமா மென்பார் இங்ஙனங் கூறினர். 318

### வாதிகள் நிலை

வாதிவாதி வாதிவாதி வண்டலை யறிந்திடான்
ஊதியூதி யூதியூதி யொளிமழுங்கி யுளறுவான்
வீதிவீதி வீதிவீதி விடையெருப் பொறுக்குவோன்
சாதிசாதி சாதிசாதி சாகரத்தை கண்டிடான்.

(பொ - ரை) ரசவாதிக ளென்னும் பேருடையவர்களெல்லாம் வண்டலை யறியமாட்டார்கள். ஆகையால், குமட்டியை யூதியூதி தேஜஸூ கெட்டு கண்ட கண்டபடி உளறுவார்கள். அதுபோலவே தெருக்கள்தோறும் சாணியைப் பொறுக்குகின்ற அறிவில்லாதவன் சாதி யென்னுங் கடலைக் காணமாட்டான் எ - று.

வாதிகள் முதலினோர் சிவபெருமானை உண்மையாகக் காணமாட்டார்கள் என்பது கருத்து. 319

### ஆண்மை

ஆண்மையாண்மை யாண்மையாண்மை ஆண்மைகூறு மசடரே
காண்மையான வாதிரூபங் காலகால காலமும்
பாண்மையாகி மோனமான பாசமாகி நின்றிடும்
நாண்மையான நாலைவாயில் நங்குமிங்கு மங்குமே.

(பொ - ரை) சர்வ தொழில்களிலும் ஆண் தன்மையைப் பேசுகின்ற மூடர்களே! முதற் பொருளாகிய சர்வேஸ்வரனுடைய முக்கிய ரூபத்தை அநேக காலங்கள் வரைக்கும் ஆராய்ந்து பார்த்து மௌனத்தை யடைந்து அதில் பந்தப்பட்டு நிற்கின்ற நாலையின் வாயில் நங், மங், மங் என்கிற பீஜாட்சரங்க ளுள்ளனவாகும் எ - று. 320

### அராபி மந்திரம்

மிங்குமென்ற வட்சரத்தின் மீட்டுவாகி கூவுடன்
துங்கமாகச் சோமனோடு சோமன்மாறி நின்றிடும்
அங்கமா முனைச்சுழியி லாகுமேக மாகையால்
கங்குலற்றுக் கியானமுற்று காணுவாய் சுடரொளி.

(பொ-ரை) மங் என்கிறமந்திர பீஜாட்சரத்தினல் மறுபடியும் ஆ, ஹி, ஹூ வுடன் பரிசுத்தமாகச் சந்திரனோடு சந்திரன்மாறி நிற்கும், தவிர சுழிமுனையின்கண்ணே சகம்பொருளிருப்பதால் அவ்விடத்தில் இராத்திரி, எண்ணம் இவைகளெல்லாமற்றுச் சுடரொளியைக் காணுவாயாக எ - று.

சர்வேஸ்வரனை அவாவைவிட்டு சுழிமுனையில் தரிசிக்க வேண்டுமென்பார் இங்ஙனங் கூறினர். 321

### ஞானி

சுடரெழும்புஞ் சூட்சமுஞ் சுழிமுனையின் சூட்சமும்
அடரெழும்பி யேகமாக வமர்ந்துநின்ற சூட்சமுந்
திடாதான சூட்சமுந் திரியின்வாலை சூட்சமுங்
கடலெழும்பு சூட்சந்தன்னை கண்டறிந்தோன் ஞானியே.

(பொ - ரை) மூலாதாரத்திலிருந்து கனலெழும்புஞ் சூட்சத்தையும், சுழிமுனையின் சூட்சத்தையும், ஒருங்கே யெழும்பி ஒன்றாக வமர்ந்த சூட்சத்தையும், சரீர சூட்சத்தையும், வாலைமூன் றெழுத்துக்களின் சூட்சத்தையும், கடலானது எழும்புகின்ற சூட்சத்தையும் உள்ளபடியே விசாரித்தறிந்தவன் உண்மை ஞானியாவான் எ - று.

சர்வபொருள்களின்தோற்ற ஒடுக்கங்களை உள்ளபடியே உணர்ந்தவனே உண்மை ஞானியாவான் என்பது கருத்து. 322

## இதவுமத

ஞானிஞானி யென்றுரைத்த நாய்கள் கோடிகோடியே
வானிலாத மழைநாளென்ற வாதிகோடி கோடியே
தானிலான சாகரத்தின் தன்மைகாணு மூடர்கள்
மூனிலாமற் கோடிகோடி முன்னறிந்த தென்பரே.

(பொ - ரை) நானேஞானி நானேஞானி என்று வீண்வார்த்தை பேசின நாய்கள் அநேகரிருக்கின்றனர் மேகமில்லாமல் மழைபெய்யக் கூடும் என்கிறவாதிகள் அநேகரிருக்கின்றனர், ஞானசமுத்திரத்தின், உண்மைக் குணங்களைக் காணாதமூடர்கள் நாம்முன்னே யுணர்ந்த விஷயம் கோடாநு கோடியாமென்று சொல்லுவார்கள் எ - று. 323

## அட்சர மகிமை

சூக்ஷமான கொம்பிலே சுழிமுனைச் சுடரிலே
வீச்சமான வீயிலே விபுலைதங்கும் வாயிலே
கூச்சமான கொம்பிலே குடியிருந்த கோவிலே
தீக்ஷையான தீவிலே சிறந்ததே சிவாயமே.

(பொ - ரை) சூட்சமாகிய கொம்பும், சுழிமுனைச்சுடரும் வீசுகின்ற வாசனைமலரும், பரமேஸ்வரி தங்கியிருக்கும் வாசலும், கூச்சமானகொம்பும், ஆகிய இவற்றில் வாசஞ் செய்துகொண்டிருந்த கோவிலும், தீட்சாபீஜமாகிய தீவிலும் சிறந்துள்ளதே சிவாய என்னும் பஞ்சாட்சரங்களாகும் எ - று. 324

## சிவ மோனம்

பொங்கிநின்ற மோனமும் பொதிந்துநின்ற மோனமுந்
தங்கிநின்ற மோனமுந் தயங்கிநின்ற மோனமுங்

கங்கையான மோனமுங் கதித்துநின்ற மோனமுந்
திங்களான மோனமுஞ் சிவனிருந்த மோனமே.

(பொ - ரை) உண்மையோகிகளிடத்தில் வெளிப்பட் டிருந்த மோனத்தையும், அவர்களிடத்திலேயே அடங்கியிருந்த மோனத்தையும், தங்கியிருந்த மோனத்தையும், பிரகாசித்துக் கொண்டிருந்த மோனத்தையும், கங்கைதங்கியிருக்கும் மோனத்தையும், பெருத்துநின்ற மோனத்தையும், சந்திரமண்டல மோனத்தையும், ஆராய்ந்து பார்க்கு மளவில் எல்லாம் சிவனிருந்த மோனமாகவே முடியும் எ - று.

எந்தெந்த யோகிகள் எந்தெந்த வழியில் மோனஞ் சாதிக்கின்றார்களோ அவையெல்லாம் சிவபெருமான் எழுந்தருளி யிருந்த மோனமே யாகும் என்பது கருத்து. 325

மோனம்

மோனமான வீதியில் முனைச்சுழியின் வாலையில்
பானமான வீதியில் பசைந்தசெஞ் சுடரிலே
ஞானமான மூலையில் நாலைதங்கும் வாயிலில்
ஓனமான செஞ்சுட ருதித்ததே சிவாயமே.

(பொ - ரை) மௌனஞானம் என்னும் வீதியிலுள்ள சுழிமுனையென்னும் வாலையில் விளங்குகின்ற செழுஞ்சுடரில், ஞானமென்னும் மூலையில் நாலைதங்கும் வாயிலின் ஓனமான செஞ்சுடரானது சிவாயநம என்னும் பஞ்சாட்சரத்தால் தோன்றியதாகும் எ - று. 326

அரபி மதம்

உதித்தெழுந்த வாலையு முயங்கிநின்ற வாலையுங்
கதித்தெழுந்த வாலையுங் காலையான வாலையும்
மதித்தெழுந்த வாலையு மறைந்துநின்ற ஞானமுங்
கொதித்தெழுந்து கும்பலாகி ஹூவுங்ஹீயு மானதே.

(பொ - ரை) தோன்றிவளர்ந்த வாலையும், கூடியிருந்த வாலையும், பெருத்தெழுந்த வாலையும், காலையானவாலையும், யாவராலும் மதிக்கப் பட்டெழுந்த வாலையும், மறைந்து இருந்த ஞானமும், பொங்கி யெழுந்து கும்பலாய் ஹூவும் ஹீயும் ஆனதாம் எ - று. 327

## இதுவுமது

கூவுங்கீயு மோனமாகி கொள்கையான கொள்கையை
மூவிலே யுதித்தெழுந்த முச்சுடர் விரிவிலே
பூவிலே நறைகள்போற் பொருந்திநின்ற பூரணம்
ஆவியாவி யாவியாவி யன்பருள்ள முற்றதே.

(பொ - ரை) கூவும், கீயும், மோனமாய் கொள்கையான கொள் கையை, மூவிலே தோன்றியெழுந்த முச்சுடரின்விளைவிலே, பூவின் கண் தேன்போல் பொருந்தியிருந்த பூரணப் பொருளானது உயிருக் குயிராகி அடியார்களுடைய திருவுள்ளத்திற் பொருந்தினது எ - று.

சர்வேஸ்வரன் சர்வ ஆன்மாக்களுக்கும் பரமான்மாவாகி அவ் வான்மாக்களுணராவண்ணமே கலப்பான் என்பது கருத்து. 328

## யோகம்

ஆண்மைகூறு மாந்தரே அருக்கனோடும் வீதியைக்
காண்மையாகக் காண்பிரே கசடறுக்க வல்லிரே
தூண்மையான வாதிருட்சஞ் சோபமாகு மாகுமே
நாண்மையான வாயிலில் நடிந்துநின்ற நாதமே.

(பொ - ரை) வீணாக ஆண்தன்மைபேசும் மனிதர்களே! சூரிய னுடன் அவன் பிரதட்சணஞ் செய்யும் வீதியை உண்மையாகத் தரி சிக்க வல்லமையுடையீரானால் குற்றங்களை நீக்கிக்கொள்ள வல்லமை யுடையீராவீர். என்றும் அழியாத சிவசம்பந்தமான வாசலில் நடித்

திருந்த நாதமானது ஆதிப்பொருளாகிய சர்வேஸ்வரனுடைய கோப மாகும் எ - று.

சர்வ பொருள்களும் சிவபெருமானுடைய சங்கற்பப் பொருள் களே யாகும் என்பது கருத்து. 329

அரபி மதம்

நாதமான வாயிலில் நடிந்துநின்ற சாயலில்
வேதமான வீதியில் விரிந்தமுச் சுடரிலே
கீதமான ஹ்ரீயிலே கிளர்ந்துநின்ற கூவிலே
பூதமான வாயிலைப் புகலறிவ னாதியே.

(பொ - ரை) நாதமானது உண்டாயிருக்கின்ற வாசலில் நடனஞ் செய்திருந்த சாயலில், வேதத்தின் உண்மை விளங்குகின்ற வாசலில் பரவி விளக்கஞ்செய்கின்ற சோம சூரியாக்கினிக ளென்னும் மூன்று சுடரிலே சாமவேத கீதத்தைப் பாடுகின்ற பீஜமாகிய ஹ்ரீயிலே விளங்கியிருந்த கூவிலே பஞ்சபூதமான வாசலை சொல்லு கின்ற ஞானமுடையவனே ஆதிப்பொருளாகும் எ - று. 330

இதுவுமது

ஆவியாவி யாவியாவி ஐந்துகொம்பி னாவியே
மேவிமேவி மேவிமேவி மேதினியின் மானிடர்
வாவிவாவி வாவிவாவி வண்டற்க ளறிந்திடார்
பாவிபாவி பாவிபாவி படியிலுற்ற மாந்தரே.

(பொ - ரை) ஆவிக் காதாரமாகிய பஞ்சமென்னுந் தொகை யினை வாய்ந்த ஆவியைப் பொருந்தி உலகத்திலுள்ள மானிடர்கள் உண்மைப்பொருள்களை வாவியும் உண்மை இதுவென்று உணரமாட் டார்கள். ஆகையால், அந்த உலகத்திலுள்ள மனிதர்கள் பாவிகளே யாவார்கள் எ - று.

உலகத்திலுள்ள மனிதர்கள் பாவிகளாகையால் உண்மைப் பொருளை யறியார்கள் என்பது கருத்து. 331

## வாலை சூட்சம்

வித்திலே முளைத்தசோதி வில்வளையின் மத்தியில்
உத்திலே யொளிவதாகி யோனமான தீபமே
நத்திலோதி ரட்சிபோன்ற நாதனை யறிந்திடார்
வத்திலே கிடந்துழன்ற வாலையான சூட்சமே.

(பொ - ரை) விதையின்கண் முளைத்தெழுந்த சோதியின் கண்ணுள்ள வில்லினுடைய வளையின் மத்தியில் ஒளியை வீசுவதாய் ஓம் என்னும் பிரணவதீபமே விரும்பினல் திரட்சிபோன்ற இறைவனை யறியமாட்டார்கள். ஆகையால், அதை யறிவதற்கு வஸ்து என்னும் உண்மைப்பொருளிலிருந்து உழலுகின்ற வாலையைப் பின்பற்றுவதே சூட்சமாகும் எ - று.

சர்வேஸ்வரனை யறியமுடியாதவர்கள் வாலை மனோன்மணித் தாயை யுணர்ந்து அவளைப் பின்பற்றி தொடர்ந்தால் சிவபெருமானை யடையக்கூடு மென்பார் இங்ஙனங் கூறினர். 332

## மோனம்

மாலையோடு காலையும் வடிந்துபொங்கு மோனமே
மாலையோடு காலையான வாறறிந்த மாந்தரே
மூலையான கோணமின் முளைத்தெழுந்த செஞ்சுடர்
காலையோடு பானகன்று தங்கிநின்ற மோனமே.

(பொ - ரை) காலையிலும், மாலையிலும் உண்மை ஞானமானது வடிந்து பொங்குகின்ற மோனமே காலை மாலைகளாகிய காலங்களுமான குணத்தை யறிந்த மனிதர்களே! நீங்கள் மூலாதார கோணத்

தில் முளைத்தெழுந்த செஞ்சுடரானது மௌனப்பொருள் தங்கியிருக்கும் விசேஷத்தை யுணர்ந்து கொள்ளுங்கள் அப்படி உணர்ந்து கொள்வீராஞல் சர்வேஸ்வரனுடைய திருவருள் கிடைக்கும் எ - று.

## இதுவுமது

மோனமான வீதியில் முடுகிநின்ற நாதமே
ஈனமின்றி வேகமான வேகமென்ன வேகமே
கானமான மூலையிற் கனிந்திருந்த வாலையில்
ஞானமான செஞ்சுடர் நடந்ததே சிவாயமே.

(பொ - ரை) மௌனஞானம் என்று சொல்லப்படும் வீதியில் வேகத்தோடு முடுகிகின்ற நாதமே சர்வவேகத்தையு முடையதாகும். அதன்வேகத்தை இவ்வளவுவேகமென்று சொல்ல ஆகாது, காடென்று சொல்லப்படும் மூலையில் கனிந்து எழுந்தருளியிருந்த வாலையில் ஞானமாகிய செஞ்சுடரானது ஆன்மாக்களுக்கு அருள்செய்யற் பொருட்டு அந்தர்முகமாக நடந்தது சிவாயகமவென்னும் பஞ்சாட்சரமாகும் எ - று.

நாதமானது மௌனத்தார்க்கு தத்துவமா யமைந்து சகாயமாகின்றதென்பார், 'மோனமானவீதியில் முடுகிகின்றநாதமே' எனவும், இந்தநாதமானது கொடிய வேகமுடையதென்பார், 'ஈனமின்றி வேகமான வேகமென்ன வேகமே' எனவும், இவையாவற்றிற்குஞ் சாதனமாயுள்ளது பஞ்சாட்சரமே யென்பார், 'கானமான மூலையில் கனிந்திருந்த வாலையில், ஞானமான செஞ்சுடர் நடந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 334

## இதுவுமது

உச்சிமத்தி வீதியி லொழிந்திருந்த சாதியிற்
பச்சியுற்ற சோமனும் பரந்துநின் றுலவமே

செச்சியான தீபமே தியானமான மோனமே
கச்சியான யோனமே கடந்ததே சிவாயமே.

(பொ - ரை) உச்சிக்குமத்தியிலுள்ள வீதியிலே நீங்கியிருந்த சாதிகளில் குளிர்ந்த சந்திரனும் விளங்கி உலாவ தூய்மையுடைய தீபத்தினிடத்தில் தியானஞ்செய்தற்குரிய மௌனமே காஞ்சி புரத்திலுள்ள ஏகாம்பரநாதரை யடைதற்குரிய மௌனமாகும். ஆகையால், அதைக் கடந்ததே சிவயநம என்னும் பஞ்சாட்சரங்களாகும் எ - று. 335

## இதுவுமது

அஞ்சுகொம்பி னின்றநாத மாலைபோ லெழும்பியே
பிஞ்சினோடு பூமலர்ந்து பெற்றியுற்ற சுத்தமே
செஞ்சுட ருதித்தபோது தேசிகன் சுழன்றுடன்
பஞ்சபூத மானதே பறந்துநின்ற மோனமே.

(பொ - ரை) பஞ்சபூதங்கள் என்னும் ஐந்துகொம்புகளிலிருந்த நாதமானது ஆலைபோலெழும்பியே பிஞ்சுடன்பூவும் மலர்ந்து குணத்தையடைந்த சுத்தம்போல, செஞ்சுடராகிய சூரியனானவன் தோன்றினபோது குருவானவர் திரும்பிவந்து பஞ்சபூதமானதே விளங்குகின்ற மோனமாகும் எ - று.

பஞ்சபூதங்களே மௌனஞானத்திற்குக் காரணமென்பார் இங்ஙனங் கூறினர். 336

## அரபி மதம்

சடுதியான கொம்பிலே தத்துவத்தின் ஹீயிலே
அடுதியான ஆவிலே யரனிருந்த ஹூவிலே
இடுதியென்ற சோலையி லிருந்தமுச் சுடரிலே
நடுதியென்று நாதமோடி நன்குறவ மைந்ததே.

(பொ - ரை) சீக்கிரம் மர்மப்பாகு பாடடைந்த கொம்பிலே தத்து வங்களில் விளங்கும் ஹீயிலே, அதையடுத்த ஆவிலே, சிவபெருமான் எழுந்தருளியிருந்த ஹூவிலே இடுதியாகிய சோலையில் கலந்திருந்த மூன்று சுடரிலே, நடுதியென்று நாதமானது ஒடிநன்ருகச் சேர்ந் தது எ - று. 337

## மோனம்

அமையுமால மோனமு மரனிருந்த மோனமும்
சமையும்பூத மோனமுந் தரித்திருந்த மோனமும்
இமையுங்கொண்ட வேகமு மிலங்குமுச்சி மோனமும்
தமையறிந்த மாந்தரே சடத்தையுற்று நோக்கிலார்.

(பொ - ரை) பொருந்திய விஷ்ணுவின் மோனமும், சிவபெரு மான் மோனமும், ஐம்பூதங்களின் மோனமும், இயற்கையாகத் தரித் திருந்த மோனமும், இமையின் வேகத்தைக்கொண்ட உச்சிமோன மும், ஆகிய இவைகளை தம்மைத் தாமுணர்ந்த மாந்தர்கள் தேகத்தை ஒரு பொருளாகப் பார்க்கமாட்டார்கள் எ - று.

சர்வ மௌன ஞானங்களையு முணர்ந்தவர்கள் தேகத்தை ஒரு பொருளாகக் கருதார் என்பது கருத்து 338

## யோகம்

பாய்ச்சலூர் வழியிலே பரனிருந்த சுழியிலே
காய்ச்சகொம்பி னுனியிலே கனியிருந்த மலையிலே
வீச்சமான தேதடா விரிவுதங்கு மிங்குமே
மூச்சினோடு மூச்சைவாங்கு முட்டிநின்ற சோதியே.

(பொ - ரை) பாய்ச்சலூர் என்னும் சிறந்த ஊரின், வழியிலே சர்வேஸ்வரன் எழுந்தருளி யிருந்த சுழியிலே, காய்ந்த கொம்பி

னுடைய நுனியிலே, கனியிருந்த மலையிலே வீச்சமானது எதடா? இங்கும் அங்கும் விரிவு தங்கும், மூச்சினோடு மூச்சை அதை முட்டி நின்ற சோதியே வாங்கும் எ - று.

சர்வேஸ்வரன் எழுந்தருளி யிருந்தது பாய்ச்சலூர் வழியிலே யென்பார், 'பாய்ச்சலூர் வழியிலே பாரிருந்த சுழியிலே' எனவும், சுழிமுனையே கொம்பினுனி யென்பார், 'காய்ச்சகொம்பி னுனியிலே' எனவும், அதுவே கனியிருந்த மலையென்பார், 'கனியிருந்த மலையிலே' எனவும், அதுவே விரிந்திருக்கு மென்பார், 'வீச்சமான தேதடா விரிவுதங்கு மிங்குமே' எனவும், அதுவே சோதியோடு முட்டிநின்ற தாகுமென்பார், 'மூச்சினோடு மூச்சைவாங்கு முட்டிநின்ற சோதியே' எனவுங் கூறினர். 339

## கடவுள் நிலை

சோதிசோதி யென்றுநாடித் தோற்பவர் சிலவரே
ஆதிஆதி யென்றுநாடு மாடவர் சிலவரே
வாதிவாதி யென்றுசொல்லும் வம்பருஞ் சிலவரே
நீதிநீதி நீதிநீதி நின்றிடு முழுச்சுடர்.

(பொ - ரை) சர்வேஸ்வரனை சோதிசோதி என்று விரும்பி நாடிப் பார்த்துத் தோற்பவர் சிலபேர், அவனையே ஆதிப் பொருளென்று நாடுபவர்கள் சிலபேர், அவரையே வாதியென்று சொல்லுபவர்கள் சிலபேர். ஆகையால், இவர்களெல்லா மன்றி நீதியாக நிற்பதே முழுச்சுடராயுள்ள பொருளாகும் எ - று.

மதங்களில் சில மதஸ்தர் சோதி யென்று இறைவனை சொல்லுகின்றார்களென்பார், 'சோதிசோதி யென்றுநாடித் தோற்பவர் சிலவரே' எனவும், சில மதஸ்தினர் ஆதியென்று சொல்லுகின்றாரென்பார், 'ஆதிஆதி யென்றுநாடு மாடவர் சிலவரே' எனவும், சில

மதஸ்தினர் வாதிவாதி என்று சொல்லுகின்றார்க ளென்பார், 'வாதி வாதி யென்றுசொல்லும் வம்பருஞ் சிலவரே' எனவும், இறைவன் கியாயவாயிலாக கிற்பவ னென்பார், 'நீதிநீதி நீதிநீதி கின்றிடு முழுச் சுடர்' எனவுங் கூறினர். 340

## இதுவுமது

சுடர தாகி யெழும்பியங்கு தூபமான காலமே
இடர தாய்ப் புவியும்விண்ணு மேகமா யமைக்கமுன்
படர தாக நின்றவாதி பஞ்சபூத மாகியே
அடர தாக அண்டமெங்கு மாண்மையாக நின்றதே.

(பொ - ரை) தேஜோமயமாக எழும்பி விளங்குகின்ற தூபமானது உண்டாகின்ற காலத்தில், சர்வ இடையூறுக ளுண்டாய் பூமியிலும் ஆகாயத்திலும் ஒரே வஸ்துவாய் அமைக்க முன்னே சர்வ இடங்களிலும் படர்ந்துகின்ற இறைவன் பஞ்சபூதமாகி அண்டாண்டங்களி லெல்லா மடர்ந்து ஆண் தன்மையோடு கின்றது எ - று.

சர்வேஸ்வரன் தேஜோரூபனாய் வருவா னென்பார், 'சுடரதா யெழும்பி' எனவும், அவனுக்கே தூபாதி கொடுக்கவேண்டு மென்பார், 'தூபமான காலமே' எனவும், சர்வேஸ்வரன் சர்வ வியாபக முள்ளவ னென்பார், 'இடரதாய்ப் புவியும்விண்ணு மேகமா யமைக்கமுன் படரதாக கின்றவாதி' எனவும், இறைவனே பஞ்சபூதமானவனு மென்பார், 'பஞ்சபூத மாகியே அடரதாக அண்டமெங்கு மாண்மை யாக கின்றதே' எனவுங் கூறினர். 341

## இதுவுமது

நின்றிருந்த சோதியை நிலத்திலுற்ற மானிடர்
கண்டறிந்து கண்குளிர்ந்து காதலுற் றுலாவுவோர்

கண்டமுற்ற மேன்முனையின் காட்சிதன்னைக் காணுவார்
நன்றியற்று நாலைபொங்கி நாதமு மகிழ்ந்திடும்.

(பொ - ரை) எழுந்தருளியிருந்த தேஜோமயக் கடவுளை உலகத்திலுள்ள மனிதர்கள் ஆராய்ந்தறிந்து உணர்ந்து கண் குளிர்ந்து ஆசையோடு உலாவுவோர், கண்டஸ்தானத்துக்கு மேலே யிருக்கின்ற சுழிமுனையின்கண் தோன்றுங் காட்சியைக் காணுவார்கள். அப்போது அவர்களுக்கு அவ்விடத்தில் நாலையானது பொங்கி நாதமானது மகிழ்ச்சியைக் கூட்டும் எ - று.

இறைவன் உலகமெங்கும் வியாபித்தவ னென்பார், 'நின்றிருந்த சோதியை' எனவும், உலகத்தார்களெல்லாம் இறைவனை உள்ளபடியே உணர்ந்தவர்க ளென்பார், 'நிலத்திலுற்ற மானிடர் கண்டறிந்து கண் குளிர்ந்து காதலுற் றுலாவுவோர்' எனவும், இறைவனும் சுழிமுனை யில் காணப்படுவோ னென்பார், 'கண்டமுற்ற மேன்முனையின் காட்சி தன்னைக் காணுவார்' எனவும், அவர்களுக்கே பேரின்பமுண்டா மென் பார், 'நன்றியற்று நாலைபொங்கி நாதமு மகிழ்ந்திடும்' எனவுங் கூறி னார். 342

## இதுவுமது

வயங்குமோனச் செஞ்சுடர் வடிந்தசோதி நாதமுங்
கயங்கள்போலக் கதறியே கருவூரற்ற வெளியிலே
பயங்கொடின்றி யின்றியே படர்ந்துநின்ற பான்மையே
நயங்கள்கோவென் றேநடுங்கி நங்கையான தீபமே.

(பொ - ரை) விளங்குகின்ற மௌனஞானத்தா லுணரப்படும் செவந்த தேஜோமயப் பொருளாகிய நாதமும், யானைகளைப்போலக் கதறிக் கருப்பாசயத்தை நீங்கிய வெளியிலே யாதொரு பயமுமில்லா மல் பரவியிருந்த உயர்குண வஸ்துவை வேண்டி நன்மை மிகுந்த

கோகோ என்று நடுங்கி சிவசத்தியான தீபமே வெளிப்படுவதாம் எ - று.

மௌனஞானங் கோடி சூரியப்பிரகாசமுள்ளதென்பார், 'வயங்கு மோனச் செஞ்சுடர்' எனவும், அதனுல் நாதந் தொனிக்குமென்பார், 'வடிந்தசோதி நாதமும்' எனவும், கருப்பாசயத்திற்கு வெளியில் சீவன் பயமின்றி யிருந்ததென்பார், 'சயங்கள்போலக் கதறியே கருவூாற்ற வெளியிலே, பயங்கொடின்றி யின்றியே படர்ந்துநின்ற பான்மையே' எனவும், இறைவனைக் காணுதற்குமுன் இறைவியைக் காணவேண்டுமென்பார், 'நயங்கொள் கோவென்றே நடுங்கி நங்கை யான தீபமே' எனவுங் கூறினர். 343

## சூட்சம்

தீபவுச்சி முனையிலே திவாகரத்தின் சுழியிலே
கோபமாறு கூவிலே கொதித்துநின்ற தீயிலே
தாபமான மூலையிற் சமைந்துநின்ற சூக்ஷமுஞ்
சாபமான மோட்சமுந் தடிந்துநின் றிலங்குமே.

(பொ - ரை) ஞானதீப வுச்சியின் முனையிலே, சூரிய பிரகாசத்தின் சுழிமுனையிலே கோபமானது ஆறுகின்ற கூவிலே, கொதித்திருந்த தீயிலே தாபமான மூலையிலே பொருந்தியிருந்த சூட்சமும் சாபமான மோட்சமும் தடிந்து வந்திருந்து விளங்கும் எ - று.

மோட்சமானது மேற்கண்ட இடங்களிலெல்லாம் அடையக் கூடுமென்பார், இங்ஙனங் கூறினர். 344

## குருபதேசம்

தேசிகன் கழன்றதே திரிமுனையின் வாலையில்
வேசமோடு வாலையில் வியனிருந்த மூலையில்

நேசசந்தி ரோதய நிறைந்திருந்த வாரமில்
வீசிவீசி நின்றதே விரிந்துநின்ற மோனமே.

(பொ - ரை) மோனஞானமானது தேசிகனுகிய ஆசிரியனுல் சொல்லபட்டதே யாகும். அது எங்ஙனமென்ருல், திரிமூனையின் வாலையிலும், கியாயவாலையிலும், பெரிய பொருளானது எழுந்தருளி யிருந்த மூலையிலும், சந்திரோதயத்தின் வாடை நிறைந்திருந்த இடத்திலும், வீசிவீசி நின்றதாகும் எ - று.

திரிபுடிஞானத்தை ஆசிரியன் உபதேசித்தா னென்பார், 'தேசிகன் கழன்றதே திரிமூனையின் வாலையில்' எனவும், இந்த உபதேசத்தால் அந்த ஞானம் எவ்விடத்தும் விளங்கு மென்பார், 'வேசமோடு வாலையில் வியனிருந்த மூலையில், நேசசந்தி ரோதய நிறைந்திருந்த வாரமில், வீசிவீசிநின்றதே விரிந்துநின்ற மோனமே' எனவுங் கூறினர்.

## நந்தி தரிசனம்

உட்கமல மோனமி லுயங்கிநின்ற நந்தியை
விக்கலோடு கீயுமாகி வில்வளேவின் மத்தியில்
முட்பொதிந்த தென்னவே முடுகிநின்ற செஞ்சுடர்
கட்குவைகள் போலவுங் கடிந்துநின்ற காட்சியே.

(பொ - ரை) இருதய கமலமாகிய மௌனமென்னு மிடத்தில் ஊஞ்சல்போ லசைந்துநின்ற நந்தியை விக்கலுடன் கீயும் என்னும் மந்திர பீஜாட்சரத்தினுல் வில் வளேவாகிய சுழிமுனையின் மத்தியில் முள்ளானது பொதிந்திருந்தாற்போலு மிருந்த செவந்த சுடரானது கண்ணின் இமைபோலவும் கவிந்திருந்த தன்மைபோலாகும் எ - று.

இருதய தாமரையின்கண்ணே ருத்திரமூர்த்தி எழுந்தருளி யிருப்ப தென்பார், 'உட்கமல மோனமி லுயங்கிநின்ற நந்தியை' எனவும், அவனேச் சுழிமுனையின் கண்ணேயே உணரவேண்டு மென்பார்,

'விக்கலோடு கீயுமாகி வில்வளை வின் மத்தியில்' எனவும், சர்வேஸ்வரன் முட்பொதிந்த கமலம்போலும் கண்ணிமை போலவும் ஆன்மாக்களைச் சூழ்ந்திருக்கின்றா னென்பார், 'முட்பொதிந்த தென்னவே முடுகி கின்ற செஞ்சுடர், கட்குவைகள் போலவுங் கடிந்துநின்ற காட்சியே' எனவுங் கூறினர். 346

## இதுவுமது

உந்தியிற் சுழிவழியி லுச்சியுற்ற மத்தியிற்
சந்திர னொளிகிரணந் தாண்டிநின்ற செஞ்சுடர்
பந்தமாக வில்வளைவிற் பஞ்சபூத விஞ்சையாங்
கிந்துபோற் கீயில்நின்று கீச்சுமூச்சு வென்றதே.

(பொ - ரை) உந்திக்கமலத்திலும், சுழிமுனை யென்னும் வழியிலும், உச்சியின் மத்தியாகிய பிரமஸ்தானத்திலும், சந்திரமண்டலத்தின்கண் சந்திரனுடைய ஒளியின் கிரணங்களைக் கடந்திருந்த செழுஞ் சுடரானது நெருக்கமாக வில்வளைவு என்னும் ஸ்தானத்தில் பஞ்ச பூதங்களின் விஞ்ஞைபோலவும், சந்திரனுடைய விஞ்ஞையைப் போலவும் கீயிலிருந்து கீச்சுமூச்சு என்று ஒலித்தது எ - று.

விஷ்ணு வாசஞ் செய்யுமிடமும் சாதனத்திற்குரிய தென்பார், 'உந்தியில்' எனவும், சுழிமுனையே முக்கியஸ்தான மென்பார், 'சுழி வழியில்' எனவும், பிரமாந்திரமே சர்வேஸ்வரனுடைய இருப்பிட மென்பார், 'உச்சியுற்ற மத்தியில்' எனவும், சந்திரமண்டலத்தையுங் கடந்த தென்பார், 'சந்திர னொளிகிரணந் தாண்டிநின்ற செஞ்சுடர்' எனவும், அவனுடைய திருவருள் பஞ்சபூதங்களின் செய்கை போன்ற தென்பார், 'பந்தமாக வில்வளைவிற் பஞ்சபூத விஞ்சையாங், கிந்துபோற் கீயில்நின்று கீச்சுமூச்சு வென்றதே' எனவுங் கூறினர். ()

## அரபி மதம்

செச்சையென்ற மூச்சினேடு சிகாரமும் வகாரமும்
பச்சையாகி நின்றதே பரவெளியின் பான்மையே
இச்சையான ஹாவிலே யிருந்தெழுந்த ஹீயிலே
உச்சியான கோணத்தி லுதித்ததே சிவாயமே.

(பொ - ரை) உயர்ந்த பரவெளியின் குணமானது செச்சையென்று சொல்லும் பிராணவாயுவுடனே சிகார, வகார பீஜங்கள் பச்சையாய் நின்றதாகும். ஆகையால், இச்சாசத்திக் குரித்தான ஹாவென்னும் மந்திரபீஜாட்சரத்தி லிருந்து எழுந்த ஹீ என்னும் பீஜாட்சரத்தில் தோன்றின உச்சியிலுண்டான கோணத்தில் சிவயநம என்னும் பஞ்சாட்சரமானது தோன்றியதாகும் எ - று.

வெள்ளாட்டின் மூச்சைப்போன்றது பிராணவாயு வென்பார், 'செச்சையென்ற மூச்சினேடு, எனவும், அவ்வாயுவுக்கு ஆதாரமா யுள்ளன சிகாரவகார பீஜங்க ளென்பார், 'சிகாரமும் வகாரமும்' எனவும், பரவெளியானது உமாதேவியின் ரூபமா யுள்ளதென்பார், 'பச்சையாகி நின்றதே பரவெளியின் பான்மையே' எனவும், அன்றி ஹாவிலும் ஹீயிலுமே பஞ்சாட்சரந் தோன்றிய தென்பார், 'இச்சையான ஹாவிலே யிருந்தெழுந்த ஹீயிலே, உச்சியான கோணத்தி லுதித்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 348

## மோனம்

ஆறுமூலக் கோணத்தி லமைந்தவொன்ப தாத்திலே
நாறுமென்று நங்கையான நாவியுந் தெரிந்திட
கூறுமென்று ஐவரங்கு கொண்டுநின்ற மோனமே
பாறுகொண்டு நின்றது பறந்ததே சிவாயமே,

(பொ - ரை) ஆறு மூலைகளையுடைய நவகோணத்தின் கண் பொருந்திய ஒன்பது வழிகளில் சிவபெருமானுடைய சொருபங் காணப்படுமென்று பெண்ணாகிய பரமேஸ்வரி உணர்த்த யாவராலும் எடுத்துச் சொல்லப்படும் பஞ்சகர்த்தர்களும் ரூபங்கொண்டு அங்கு எழுந்தருளியிருந்த மௌன ஞானப்பொருளே பாறுகொண்டு நின்ற தாகும், அப்பொழுது சிவயநம என்னும் பஞ்சாட்சரமானது எங்கும் பரவி நின்றது எ - று.

ஆறுமூலைகளை யுடையது நவகோணமென்பார், 'ஆறுமூலைக் கோணத்தி லமைந்த வொன்பதாற்றிலே' எனவும், சிவகாமியே உண் மையை உணர்த்துவாளென்பார், 'நாறுமென்று நங்கையான நாரியுந் தெரிந்திட' எனவும், அவ்விடத்திலேயே பஞ்சமூர்த்திகளும் தாண் டவஞ் செய்வதென்பார், 'கூறுமென்று ஐவரங்கு கொண்டுநின்ற மோனமே' எனவும், அந்த விடங்களெல்லாம் பஞ்சாட்சரத்தால் வியா பிக்கப்பட்டன வென்பார், 'பாறுகொண்டு நின்றது பறந்ததே சிவாயமே' எனவுங் கூறினர்.

349

## பஞ்சாட்சரம்

பறந்ததே கறந்தபோது பாய்ச்சலூர் வழியிலே
பிறந்ததே பிராணனன்றிப் பெண்ணுமாணு மல்லவே
துறந்ததோ சிறந்ததோ தூயதுங்க மானதோ
இறந்தபோதி லன்றதே இலங்கிடுஞ் சிவாயமே.

(பொ - ரை) இவ்வண்ணம் பறந்தவுடன் அதைக் கறந்தகாலத் தில் பாய்ச்சலூர் என்னும் ஒரு ஊரின்வழியிலே பிறந்த பிராணனே யல்லாமல் பெண்ணும் ஆணும் அல்ல. ஆகையால், துறந்தபொருளோ? சிறந்தபொருளோ? மிக்க பரிசுத்தமான பொருளோ? இவை மரண மிறந்தபோதே சிவாயவென்னும் எழுத்தினால் விளங்கும் எ - று.

சர்வேஸ்வரனுடைய உண்மையை யுள்ளபடியே உணரவேண்டு மானல் மனமிறந்து படவேண்டுமென்பார், 'இறந்தபோதி லன்றதே யிலங்கிடுஞ் சிவாயமே' எனவுங் கூறினர். 350

## அரபி மதம்

அருளிருந்த வெளியிலே அருக்கநின்ற விருளிலே
பொருளிருந்த சுழியிலே புரண்டெழுந்த வழியிலே
தெருளிருந்த கலையிலே தியங்கிநின்ற வலையிலே
குருவிருந்த வழியினின்று ஹூவும்ஹீயு மானதே.

(பொ - ரை) திருவருள் விளங்குகின்ற சிதாகாயத்திலும், உண்மைப் பொருளிருந்த சுழிமுனையிலும், சர்வ தத்துவங்களும் விளங்குகின்ற வழியிலும், அறிவிருந்த கலையிலும், மயங்கி யிருந்த வலையிலும் குருவிருந்த வழியிலுமிருந்து ஹூ, ஹீ என்னும் மந்திர பீஜாட்சரங்கள் உண்டாயின எ - று.

சிதாகாசமானது திருவருளையுடைய தென்பார், 'அருளிருந்த வெளியிலே' எனவும், இருளானது சூரியன்முன் இல்லாதென்பார், 'அருக்கனின்ற வெளியிலே' எனவும், சுழிமுனையின்கண் உண்மைப் பொருள் எழுந்தருளி யிருப்பது சுபாவ மென்பார், 'பொருளிருந்த சுழியிலே' எனவும், தத்துவங்கள் ஞானமார்க்கத்திற்கு வழியென்பார், 'புரண்டெழுந்த வழியிலே' எனவும், கலைகளால் நல்ல அறிவு உண்டாவது சுபாவ மென்பார், 'தெருளிருந்த கலையிலே' எனவும், உலக மாய்கையானது உயிர்களுக்கு வலைபோன்ற தென்பார், 'தியங்கி நின்ற வலையிலே' எனவும், ஆசாரியருடைய திருவருளின் வழி ஹூவும், ஹீயும் உண்டான தென்பார். 'குருவிருந்த வழியினின்று ஹூவும்ஹீயு மானதே' எனவுங் கூறினர். 351

## பஞ்சாட்சரம்

ஆனதோ ரெழுத்திலே யமைந்துநின்ற வாதியே
கானமோடு தாலமீதிற் கண்டறிவ தில்லையே
தானுந்தானு மானதே சமைந்தமாலை காலையில்
வேனலோடும் வாறுபோல் விரிந்ததே சிவாயமே.

(பொ - ரை) பொருந்திய ஒரு எழுத்து என்னும் பிரணவ மந்திர பீஜாட்சரத்தில் எழுந்தருளியிருந்த முதல்வனையே காட்டிலாவது உலகத்திலாவது யாவரும்பார்த் துணர்வதில்லையே. ஆகையால், அது தானே தன்மயமா யமைந்த பொருளாகும் ஆகவே, அது காலையிலும், மாலையிலும், தினைப்புனத்திற் காவலோடுவதுபோல சிவாயநம என்னும் பஞ்சாட்சரம்போல் விரிந்ததாகும் எ - று.

சர்வேஸ்வரனுக்குப் பீஜங்கள் பல வுளவேனும் அவைகளிலெல்லாம் முக்கிய பீஜம் பிரணவமே யென்பார், 'ஆனதோ ரெழுத்திலே' எனவும், ஆதிப்பொருளுஞ் சிவபெருமானே யென்பார், 'அமைந்து நின்ற வாதியே' எனவும், இறைவனை எவ்விடத்திலுங் கண்டறிவாரில்லை யென்பார், 'கானமோடு தாலமீதிற் கண்டறிவ தில்லையே' எனவும், இறைவன் தானுன தன்மயனே யென்பார், 'தானுந்தானு மானதே சமைந்தகாலை மாலையில்' எனவும், சர்வேஸ்வரனை இடைவிடாமல் தேடினாலே பஞ்சாட்சரரூபனாய் வெளிப்படுவா னென்பார், 'வேனலோடும் வாறுபோல் விரிந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். ()

## இதுவுமது

ஆறுகொண்ட வாரியு மமைந்துநின்ற தெய்வமுந்
தூறுகொண்ட மாரியுந் துலங்கிநின்ற தூபமும்
வீறுகொண்ட மோனமும் விளங்குமுட் கமலமும்
மாறுகொண்ட ஊவிலே மடிந்ததே சிவாயமே.

(பொ - ரை) சர்வ ஆறுகளையுந் தன்னுள் அடக்கிக்கொண் டிருக்கின்ற கடலும், அதுபோல் சர்வ தேவதைகளையுந் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கின்ற தெய்வம், தூற்றல்களைக் கொண்டிருக்கின்ற மழையும், விளங்குகின்ற தீபமும், வெற்றியைப் பெற்றிருக்கின்ற மௌன ஞானம் விளங்குகின்ற இருதயகமலமும், ஆகிய இவைகளெல்லாம் பகையைக்கொண் டிருக்கின்ற ஊ என்னும் மந்திர பீஜாட்சரத்தில் மடிந்ததே யாகும் எ - று.

சர்வ நதிகளுக்குத் தாயாய் விளங்குவது கடலே யென்பார், 'ஆறுகொண்ட வாவியும்' எனவும், உலகத்தில் எந்தெந்த மதத்தினர் எந்தெந்தத் தெய்வங்களைக் கொண்டிருக்கின்றார்களோ அந்தத் தெய்வங்களுக்கெல்லாம் தலைமைத் தெய்வம் சிவபெருமானே யென்பார், 'அமைந்துநின்ற தெய்வமும்' எனவும், அவனருளாலே மழை பொழிவது மென்பார், 'தூறுகொண்ட மாரியும்' எனவும், அவனுக்கே தூப தீப நைவேத்தியங்கள் செய்யவேண்டு மென்பார், 'துலங்கிநின்ற தூபமும்' எனவும், மௌனஞானமானது சர்வ வல்லமையுள்ள தென்பார், 'வீறுகொண்ட மோனமும்' எனவும், இருதய தாமரையின் கண்ணே அவனை எழுந்தருளப்பண்ணிச் சேவிக்கவேண்டு மென்பார், 'விளங்குமுட் கமலமும்' எனவும், இவற்றிற் கெல்லாங் காரணமாயுள்ளது ஊ என்னும் மந்திர பீஜமே யாமென்பார், 'மாறுகொண்ட வளவிலே மடிந்ததே சிவாயமே' எனவுங் கூறினர்.

சர்வ தெய்வங்களுக்கும் தலைவன் சிவபெருமான் என்றதை:

"யாதொரு தெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகி யெங்கள்
மாதொரு பாகனார்தம் வருவர்மற்றைத் தெய்வங்கள்
வேதனைபடும் பிறக்குமிறக்கு மேல்வினையுஞ் செய்யும்
ஆதலா லிவையிலா தானறிந்தருள் செய்வனன்றே"

என்பதினு லறிக. 353

## இதுவுமது

வாயில்கண்ட கோணமில் வயங்குமைவர் வைகியே
சாயல்கண்டு சார்ந்ததுந் தலைமன்ன யுறைந்ததுங்
காயவண்டு கண்டதுங் கருவூரங்கு சென்றதும்
பாயுமென்று சென்றதும் பறந்ததே சிவாயமே.

(பொ - ரை) வாசலைக்கண்ட கோணத்தில் வாழ்கின்ற பஞ்ச மூர்த்திகளும் பொருந்தியிருக்க அவர்களுடைய சாயல்களைத் தரிசித்து அவர்களை யடைந்ததும், அதனால் தலைவனான ராஜனாக வாசஞ் செய்ததும் அவ்விடத்தில் காய வண்டைக் கண்டதும், பிறகு கருவூரை விட்டு வெளியே சென்றதும், அந்த வெளியிடத்தில் பாயக்கூடு மென்று போனதும், அப்பொழுது பறந்துபோனதும் பஞ்சாட்சரங் களின் வலியேயாகும் எ - று.

சர்வேஸ்வரனை அறிதற்குமுன்னர் ஆறுதார வாசலைக் காண வேண்டு மென்பார், 'வாயல்கண்ட கோணமில்' எனவும், ஆறுதாரங் களிலேயே பஞ்சகர்த்தர்கள் வாழ்வது மென்பார், 'வயங்குமைவர் வைகியே' எனவும், இவர்களை உள்ளபடியே தரிசித்தால் தலைவனாக வாழலாமென்பார், 'சாயல்கண்டு சார்ந்ததுந் தலைமன்ன யுறைந்ததும்' எனவும், அவர்களுடைய தரிசனங் கிடைத்தபின்னர் சரீரமானது ஒரு வண்டுக் கொப்பா மென்பார், 'காயவண்டு கண்டதும்' எனவும், இது கருப்பாசயத்தினின்றும் வெளிப்பட்ட பின்னரென்பார், 'கருவூ ரங்கு சென்றதும்' எனவும், இவை யனைத்தும் பஞ்சாட்சரவன்மை யென்பார், 'பாயுமென்று சென்றதும் பறந்ததே சிவாயமே' எனவுங் கூறினார்.

ஞானிகளுக்கு சரீரத்தின்மேல் பற்றுதலில்லை என்பது கருத்து.

## இதுவுமது

பறந்ததே துறந்தபோது பாச்சலூர் வழியிலே
மறந்ததே கவ்வுமுற்ற வாணர்கையுன் மேவியே
பிறந்ததே யிறந்தபோதிற் பீடிடாமற் கீயிலே
சிறந்துநின்ற மோனமே தெளிந்ததே சிவாயமே.

(பொ - ரை) நான் சர்வ பொருள்களையுந் துறந்த காலத்தில் பாய்ச்சலூர் வழியிலே பறந்ததை மறந்து கவ் என்னும் மந்திர பீஜமானது பொருந்தியுள்ள வாணர்கையில் பொருந்தி வினைவயத்தாற் பிறந்து மீண்டும் இறைந்தபோது பெருமையில்லாமல் கீ என்னும் மந்திர பீஜாட்சரத்தினல் சிறந்துநின்ற மௌனஞானத்தையே தெளிவித்தது சிவாயநம என்னும் பஞ்சாட்சரமாகும் எ - று.

யாதொரு மௌனஞானமுண்டோ அதை சிவாயநம என்னும் பஞ்சாட்சரமே விளக்குவதென்பார், 'சிறந்துநின்ற மோனமே தெளிந்ததே சிவாயமே' எனக் கூறினர். 355

## ஆறாதார யோகம்

வடிவுபத்ம வாசனத் திருத்திமூல வனலையே
மாருதத்தி ஞலெழுப்பி வாசலைந்து நாலையு
முடிவுமுத்தி ரைப்படுத்தி மூலவீணை தண்டினல்
முளரியால யங்கடந்து மூலநாடி யூடுபோய்
அடிதுவக்கி முடியளவு மாறுமா நிலங்கடந்
தப்புறத்தில் வெளிகடந்த வாதியெங்கள் சோதியை
யுடுபதிக்க ணமுதருந்தி யுண்மைஞான வுவகையுள்
உச்சிபட் டிறங்குகின்ற யோகிநல்ல யோகியே.

(பொ - ரை) ரூபத்தோடுகூடிய தாமரை ஆசனத்தில் மூலா தாரத்திலுண்டாகும் அனலை இருக்கச்செய்து குண்டலியை வாயு வினலெழுப்பி ஒன்பது வாசல்களையும் முடிவரைக்கும் முட்டி ஞான முத்திரையை யடைந்து ஆதாரமாகிய வீணாதண்டினல் தாமரைக் கோயிலைக்கடந்து மூலமாகிய நாடியில் ஊடுருவிச்சென்று அடிமுதல் முடிவரைக்கும் உள்ள ஆருதாரங்களிலுஞ்சென்று அவைகளையுங் கடந்து அதின்மேற்சென்று அங்குள்ள வெளியையுந்தாண்டி விளங்கு கின்ற முதல்வனுகிய எங்கள் தேஜோரூபனை சந்திர மண்டலத்தி லிருந்து அங்கிருந்துண்டாகுஞ் சந்திராமிர்தத்தை யருந்தி உண்மை யாகிய ஞானாநந்தத்தில் உச்சியிலிருந்து இளகுகின்ற யோகியே நல்லயோகி யாவான் எ - று.

மூலாதாரமானது பத்ம தளம்போன்ற தென்பார், 'வடிவுபத்ம வாசனத்திருத்தி' எனவும், அங்குள்ள மூலக்கனலை வாயுவால் எழுப்ப வேண்டுமென்பார், 'மூலவனலையே மாருதத்தின லெழுப்பி, எனவும், இதுவே ஆதாரமாக நவவாசல்களையுந் தரிசிக்கவேண்டு மென்பார், 'வாசலைந்து நாலையும்' எனவும், அதனல் குருமுத்திரை ஏற்படு மென்பார், 'முடிவுமுத்தி ரைப்படுத்தி' எனவும், ஆருதாரங்களையுங் கடக்கவேண்டு மானல் வீணாதண்டே யாதாரமா யமைவ தென்பார், 'மூலவீணா தண்டினல்' எனவும், விஷ்ணுபதியாகிய மணிபூரகமே முளரியாலயமும் அது மாய்கைஸ்தான மாகையால் அதை நீங்க வேண்டுமென்பார், 'முளரியால யங்கடந்து' எனவும், ஆதிமுதல் அந்தம் வரைக்கும் பிராணயாமஞ் செய்யவேண்டுமென்பார், 'அடி துவக்கி முடியளவு மாறுமா கிலங்கடந் தப்புறத்தில்' எனவும் இந்தச் சோபனங்கள் எல்லாவற்றையுங் கடந்தவன் இறைவனே யென்பார், 'வெளிகடந்த வாதியெங்கள் சோதியை' எனவும், இங்ஙனஞ் செல் லுங்கால் சந்திரமண்டலத்தில் அமிர்த பானஞ்செய்ய வேண்டுமென் பார், 'உடுபதிக்க ணமுதருந்தி' எனவும், அங்ஙனம் அமிர்தபானஞ்

செய்தால் உண்மைஞானமென்னும் பரஞான முண்டாமென்பார், 'உண்மைஞான வுவகையுள்' எனவும், உச்சிதொடங்கி ஆநந்திக்கும் மனமுடையவர்களே உண்மை யோகிகளென்பார், 'உச்சிபட் டிரங்கு கின்ற யோகிநல்ல யோகியே' எனவுங் கூறினர்.

இச்செய்யுள் ஆருதாரயோகங் கூறியதென்க.

இதனை:

"மூலநிலத்திலதோ முகமாய் முகிழ்த்து
விழியின் பொடு துயிலு
மூரிப்பாம்பைக் காலனலை மூட்டி
யெழுப்பி நில மாறுஞ்
சீலமொடும் போய்த் தரிசித்துச்
செழுமா மதியி னமுதகட
றேக்கி யகத்தங் கசைவறமோர்
தெய்வத் தவத்தோ ருளவிழியிற்
காலுந் தீபமினல் பந்தங்
கடிகூர் விறிசு கதிர்மதிபோற்
காட்டு மொளியா யிவையாவுங்
கடந்தாங் கழிவில் பேரொளியாய்ச்
சால விளங்கும் விந்துவெனுந்
தடமா மயிலோய் தாலேலோ
தமரக் கடலைக் கடந்தமுதந்
தருவோன் மருகா தாலேலோ" என்பதினாலறிக. 356

மந்திரம்

மந்திரங்க ளுண்டுநீர் மயங்குகின்ற மானிடர்
மந்திரங்க ளாவது மறத்திலூற லன்றுகாண்

மந்திரங்க ளாவது மதித்தெழுந்த வாயுவை
மந்திரத்தை யுண்டவர்க்கு மாரணமேது மில்லையே.

(பொ - ரை) வெறும் மந்திரங்களை உருவேற்றி அதனால் மயக்கத்தை யடைகின்ற மானிடர்களே! நீங்கள் செபிக்கும் மந்திரங்களாவன: மரத்திலுண்டாகின்ற ஊறலான கள்ளன்று. ஆகையால், மந்திரங்களென்று எடுத்துச் சொல்லப்படுவது மதர்த்து ஆரவாரத்துடனே யெழுந்த வாயுவை மந்திரத்தையும் ஆதாரமாகக்கொண்டு உண்டவர்க்கு மரணம் உண்டாவதில்லை. ஆகையால், இதுவே மந்திரங்களல்லாமல் நீங்கள் வீணாக உருவேற்றுவது மந்திரமாகாது எ - று.

எந்த மந்திரமும் ஜெபிப்பவர்களைப் பிரமிக்கச் செய்கின்றதென்பார், 'மந்திரங்க ளுண்டுநீர் மயங்குகின்ற மானிடர்' எனவும், அங்ஙனம் அது செய்வதனால் கள்ளுமாகா வென்பார், 'மந்திரங்க ளாவது மரத்திலூற லன்றுகாண்' எனவும், பிராணவாயுவைப் பிராணாயாமஞ் செய்யும்போது மந்திரங்களையும் உட்படுத்த வேண்டுமென்பார், 'மந்திரங்க ளாவன மதர்த்தெழுந்த வாயுவை மந்திரத்தை யுண்டவர்க்கு' எனவும், இங்ஙனஞ் செய்தவர்க்கு எமன் பயப்படுவா னென்பார், 'மரணமேது மில்லையே' எனவுங் கூறினர்.

பெரியோர் எமனுக்கஞ்சார் என்பதை:

"எல்லா மறிந்தவரு மேதுமறியாதவரு
மில்லையெனு மிவ்வுலகமீ
தேதுமறியாதவ னெனப்பெயர் தரித்துமிக
வேழைக்கு ளேழையாகி
கல்லாதவறிவினிற் கடைப்பட்ட நானன்று
கையினா லுண்மைஞானம்
காட்டிட்ட நின்னருளி னுக்கென்ன கைம்மாறு,
கருதுவேன் குற்றேவலன்

அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறையெயிற்
றுருபாச வடிவமான
அந்தகா நீபொரு பகட்டாற் பகட்டுவ
தடாதடா காசுமம்பால்
செல்லாத டாவெனப் பேசவாயதுதந்த
செல்வமே சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோம யாநந்தமே" என்பதினு லறிக. 357

## இதுவுமது

மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே
மந்திரங்கள் கற்றநீர் மரித்தபோது சொல்விரோ
மந்திரங்க ளும்முளே மதித்தநீரு மும்முளே
மந்திரங்க ளாவது மனத்தினைந் தெழுத்துமே.

(பொ - ரை) வீணுகக் கண்ட கண்ட மந்திரங்களை யெல்லாங் கற்றுக்கொண்டு மயங்குகின்ற மனிதர்களே! அங்ஙனம் அதைக் கற்றுக் கொண்ட நீங்கள் இறந்துபோவீராஞல் அந்த மந்திரங்களைச் சொல்லு வீர்களோ? இல்லை. ஆகையால், அந்த மந்திரங்களும் உங்களால் மதிக் கப்பட்ட சுத்த நீரும் உம்முடைய உள்ளத்தின்கண் இருக்கின்றன. அந்த மந்திரமானது எதுவென்றால்: மனத்தின்கண் ஜபிக்கக் கூடிய பஞ்சாட்சரங்களே யாகும் எ - று.

வீண் மந்திரங்கள் மயக்கத்தை விளைவிக்கின்றன வென்பார், 'மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே' எனவும், நீங்கள் கற்றிருக்கும் மந்திரங்கள் மரணகாலத்தில் பயன்படா தென்பார், 'மந்திரங்கள் கற்றநீர் மரித்தபோது சொல்வீரே' எனவும், எந்த மந்திரங் களும் உம்முடைய மனத்திலேயே யுள்ளனவா மென்பார், 'மந்திரங்க

ளும்முளே மதித்தநீரு மும்முளே, மந்திரங்க ளாவது மனத்தினைந் தெழுத்துமே' எனவுங் கூறினர்.

பஞ்சாட்சரம் என்னும் மந்திரமே சர்வ மந்திரங்களுக்கும் உயர்ந் ததும்; மோட்ச சாதனத்தைக் கைகூட்டுவிப்பதுமாம் என்பது கருத்து. 358

## ஒடுக்கம்

உள்ளதோ புறம்பதோ வுயிரொடுங்கி நின்றிடம்
மெள்ளவந்து கிட்டிநீர் வினவவேண்டு மென்கிறீர்
உள்ளதும் பிறப்பது மொத்தபோது நாதமாங்
கள்ளவாச லைத்திறந்து காணவேண்டு மாந்தரே.

(பொ - ரை) ஓ உலகமாக்களே! நீங்கள் உயிரானது ஒடுங்கி நிற்குமிடத்தை என்றும் இருக்கிற விடமா? உயிர் ஒடுங்கும்போது உண்டாகிற யிடமா? என்று நினைந்து அதன் உண்மையை உணர்ந்து கொள்ள நீங்கள் மெள்ள மெள்ள அடுத்து வந்து கேட்கவேண்டு மென்று சொல்லுகின்றீர். ஆனல், உள்ளதும், பிறப்பதும் உயிர் ஒடுங் குங்காலம் ஒத்துவந்தபோது நாத தத்துவத்தின் கள்ள வாசலைத் திறந்து காணவேண்டும் எ - று.

உயிர் ஒடுங்குகிற காலத்தில் அது ஒடுங்குதற்குறிய இடம் உண் டாவதோ அன்றி என்று முள்ளதோ வென்பார், 'உள்ளதோ பிறப் பதோ வுயிரொடுங்கி நின்றிடம்' எனவும், இதைத் தெரிந்துகொள்ள வேண்டு மென்பார், 'மெள்ளவந்து கிட்டிநீர் வினவவேண்டு மென் கிறீர்' எனவும், இதைத் தெரிந்து கொள்வது நாத தத்துவத்தாரா லென்பார், 'உள்ளதும் பிறப்பது மொத்தபோது நாதமாங், கள்ளவாச லைத்திறந்து காணவேண்டு மாந்தரே' எனவுங் கூறினர். 359

## எழுத்து

ஓரெழுத்தி லிங்கமா யோதுமட் சரத்துளே
ஓரெழுத்தி யங்குகின்ற வுண்மையை யறிகிலீர்
மூவெழுத்து மூவராய் முளைத்தெழுந்த சோதியை
நாவெழுத்து நாவுளே நவின்றதே சிவாயமே.

(பொ - ரை) ஒரு எழுத்தைக் காரண எழுத்தாகப் பெற்றிருக்கின்ற எழுத்துகளுக்குள் அந்த ஒரு எழுத்தானது வாசஞ்செய்கின்ற உண்மையை உணர்ந்தீரில்லை. ஆகையால், மூன்று எழுத்துக்களால் மூன்று தேவர்களாய் முளைத்தெழுந்த தேஜோமயனை நாக்கிலுள்ள எழுத்துகளாகிய சிவயநம என்னும் பஞ்சாட்சரங்களாற் சொல்லப்பட்டதாகும் எ - று.

பிரணவமே ஒரு எழுத்தென்பார், 'ஓரெழுத்தி லிங்கமா யோதுமட்சரத்துளே' எனவும், அதன் உண்மை எல்லார்க்குமே தெரியாதென்பார், 'ஓரெழுத் தியங்குகின்ற வுண்மையை யறிகிலீர்' எனவும், மூன்று எழுத்துக்களின் சேர்க்கையே ஒரு எழுத்தென்பார், 'மூன்றெழுத்து' எனவும், அம் மூன்றெழுத்துக்களே மூவரிருப்பிடமென்பார், 'மூவராய் முளைத்தெழுந்த சோதியை' எனவும், இவை அனைத்திற்கும் ஆதாரமாகச் சொல்லப்படுவது பஞ்சாட்சரமே யென்பார், 'நாவெழுத்து நாவுளே நவின்றதே சிவாயமே' எனவுங் கூறினர். 360

## கடவுள் நிலை

முத்திசித்தி தொந்தமா முயங்குகின்ற மூர்த்தியை
மற்றுதித்த வப்புனல்க ளாகுமத்தி மப்புலன்
அத்தர்நித்தர் காளகண்ட ரன்பினா லனுதினம்
உச்சரித் துளத்திலே யறிந்துணர்ந்து கொண்மினே.

(பொ - ரை) முத்தியென்னும் மோட்சமும், சித்தியென்னும் கைவல்லியமும் ஆகிய இந்த இரண்டையுங் கலந்திருக்கின்ற மூர்த்தியாகிய பரமேஸ்வரனை வேருக வுதித்த புலன்களாலும், மத்திமைப் புலனுலும் உணரவேண்டும். ஆனல், தலைவனுகிய என்று மழியாத சித்தரும், திருநீலகண்டருமான சர்வேஸ்வரனை உள்ளன்பினுல் அநுதினமும் துதிசெய்து உங்களுடைய மனத்தில் உள்ளபடியே யறிந்துணர்ந்து கொள்ளுங்கள் எ - று.

மோட்சமும் வல்லமையும் என்னுஞ் சம்பந்தமா யிருக்குமென்பார், 'முத்திசித்தி தொந்தமாய்' எனவும், இவைகளுடனே இறைவனுங் கலந்திருக்கின்ருனென்பார், 'முயங்குகின்ற மூர்த்தியை' எனவும், புலன்களை வசப்படுத்தி உள்ளன்பினுல் துதிக்கவேண்டுமென்பார், 'மற்றுதித்த வப்புலன்க ளாகுமத்தி மப்புலன், அத்தர்சித்தர் காளகண்ட ரன்பினு லனுதினம், உச்சரித் துளத்திலே யறிந்துணர்ந்து கொண்மினே' எனவுங் கூறினர். 361

எழுத்து

மூன்றிரண்டு மைந்துமாய் முயன்றெழுந்த தேவராய்
மூன்றிரண்டு மைந்ததாய் முயன்றதே யுலகெலாம்
ஈன்றதாயு மப்பனு மியங்குகின்ற நாதமாய்
தோன்றுமோ ரெழுத்திஞேடு சொல்லவொன்று மில்லையே.

(பொ - ரை) மூன்ருகியும், இரண்டாகியும், ஐந்தாகியும், மேற்பட்டெழுந்த தேவராய் உலகமெல்லாம் மூன்று, இரண்டு, ஐந்தா யுள்ளதாம், பின்னர் பெற்றெடுத்த தாயுந் தகப்பனுகியும் இயங்குகின்ற நாதமாகியும், தோன்றும் ஒரு எழுத்துக் கிணையாக வேறென்றுஞ் சொல்லுதற் கில்லை எ - று.

பிரணவத்திற் கிணையாகச் சொல்ல எப்பொருளுமில்லை என்பது கருத்து. 362

## பஞ்சாட்சரம்

வெளியுருக்கி யஞ்செழுத்து விந்துநாத சத்தமுந்
தளியுருக்கி நெய்கலந்து சகலசத்தி யானதும்
வெளியிலு மவ்வினையிலு மிருவரை யறிந்தபின்
வெளிகடந்த தன்மையால் தெளிந்ததே சிவாயமே.

(பொ - ரை) பஞ்சாட்சரங்களையும் வெளியிலே துதித்துருக்கி அதனுல் விந்துநாத தத்துவங்களிற் கலந்து சர்வசத்தியானதும், வெளியிலும், அந்த வினையிலும் இருவரையும் உணர்ந்தபின் அவ்விருவரும் வெளியிற் கலந்திருப்பதால் சிவாயநம என்னும் பஞ்சாட்சரத்திஞல் அது தெளிந்த தாகும் எ - று.

விந்துநாதங்களால் பஞ்சாட்சரம் வெளிப்பட்ட தென்பார், 'வெளியுருக்கி யஞ்செழுத்து விந்துநாத சத்தமும்' எனவும், அதனல் சர்வ சித்திகளுமுண்டா மென்பார், 'தளியுருக்கி நெய்கலந்து சகல சத்தியானதும்' எனவும், ஆகாயத்தின்கண் தன்னையுந் தலைவனையும் உணரவேண்டு மென்பார், 'வெளியிலு மவ்வினையிலு மிருவரை யறிந்தபின்' எனவும், பஞ்சாட்சரமே எல்லாவற்றையும் விளக்குவ தென்பார், 'வெளிகலந்த தன்மையால் தெளிந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 363

## இதுவுமது

முப்புறத்தி லப்புறம் முக்கணன் விளைவிலே
சிற்பரத்து ளுற்பனஞ் சிவாயமஞ் செழுத்துமாந்
தற்பர முதித்துநின்று தாணுவெங்கு மானபி
னிப்புற மொடுங்குமோடி யெங்கும் லிங்கமானதே.

(பொ - ரை) திரிபுரங்களுக்கும் அப்புறத்தில் மூன்று கண்களையுடைய பரமேஸ்வரனது விளைவிலே சிற்பரவெளியில் தோன்று

கின்ற சிவயநம என்னும் பஞ்சாட்சரத்துள் உண்டாகி தாணுவென் கிற பேருடைய ஒரு வஸ்துவானது எங்கும் வியாபித்தபின் இந்தப் புறத்தில் ஒடுங்கி மீண்டும் எங்கும் பறந்து லிங்கமானது எ - று.

சர்வேஸ்வரனுக்கு இருப்பிடம் தூரியஸ்தான மென்பார், 'முப் புறத்தி லப்புறம் முக்கணன் விளைவிலே' எனவும், பஞ்சாட்சர தியா னத்தால் ஞானகாயம் வெளிப்படுமென்பார், 'சிற்பரத்து ளுற்பனஞ் சிவாயமஞ் செழுத்துமாம்' எனவும், இங்ஙனஞ் செய்வதால் சர்வேஸ் வரன் அந்தர்முகத்தில் வெளிப்படுவானென்பார், 'தற்பரமுதித்து நின்று தாணுவெங்கு மானபி, னிப்புற மொடுங்குமோடி யெங்கும் லிங்க மானதே' எனவுங் கூறினர். 364

## சீவ னுண்மை

ஆடிநின்ற சீவனோ ரஞ்சுபஞ்ச பூதமோ
கூடிநின்ற சோதியோ குலாவிநின்ற மூலமோ
நாடுகண்டு நின்றதோ நாவுகற்ற கல்வியோ
வீடுகண்டு விண்டிடின் வெட்டவெளியு மானதே.

(பொ - ரை) இந்தச் சரீரத்தின்கண் ஆடிக்கொண்டிருந்த சீவ னனது ஐந்துபூதங்களோ? அத்துடன் கலந்திருந்த தேஜோமயப் பொருளோ? கலந்திருக்கின்ற ஆதிபொருளோ? நாட்டார்களாலெல் லாம் தரிசிக்கப்பட்ட பொருளோ? நாவினால் கற்கப்பட்ட கல்வியோ? ஆனால், மோட்சவீட்டைக் கண்டுவிட்டால் வெட்டவெளியா யிருக்கும் பொருளேயாம் எ - று.

உயிர் என்னப்படுவது எதுவென்றுந் தெரியாதென்பார், 'ஆடி நின்ற சீவனோ வஞ்சுபஞ்ச பூதமோ, கூடிநின்ற சோதியோ குலாவி நின்ற மூலமோ, நாடுகண்டு நின்றதோ நாவுகற்றகல்வியோ' எனவும், மோட்சம் வெளிப்பட்டால் சீவனில்லை வெளிப்படுமென்பார், 'வீடு கண்டு விண்டிடின் வெட்டவெளியு மானதே' எனவுங் கூறினர். 365

## இதுவுமது

உருத்தரித்த போதுசீவ னொக்கநின்ற வுண்மையுந்
திருத்தமுள்ள தொன்றிலுஞ் சிவாயமஞ் செழுத்துமா
மிருத்துநின் றுறுத்தடங்கி யேகபோக மானபின்
கருத்தினின் றுதித்ததே கபாலமேந்து நாததே.

(பொ - ரை) கபாலத்தைக் கையில் தாங்கியிருக்கின்ற சிவபெருமானே? தாயின் கருப்பாசயத்தில் உருவுண்டானபோது அதனுடனே சம்மந்தப்பட்டு சீவனிருந்த உண்மையையும், திருத்தமுள்ள தாகிய அந்தச் சீவனுகிய ஒரு பொருளிலும் பஞ்சாட்சரமான திருந்து உறுத் தடங்கி ஏகபோக மானபின்னே அதுவே என்னுடைய கருத்தி லிருந்து பிறந்தது எ - று.

தாயின் கருப்பத்தில் சரீரம் ஏற்பட்டுச் சிலமாதங்களில் உயிர் அந்தச் சரீரத்தில் வந்து சேர்வதாக ஏற்பட்டாலும் அதுமுதல் நாளி லிருந்தே வளருங்குணத்தை யடைந்திருத்தலின் உயிருங்கூடவே கலந்துள்ளதென்பார், 'உருத்தரித்த போதுசீவ னொக்கநின்ற வுண்மை யும்' எனவும், அங்ஙனஞ் செய்வதும் பஞ்சாட்சரங்களே யென்பார், 'திருத்தமுள்ள தொன்றிலுஞ் சிவாயமஞ் செழுத்துமா, மிருத்துநின் றுறுத்தடங்கி யேகபோக மானபின், கருத்தினின் றுதித்ததே கபால மேந்து நாதனே' எனவுங் கூறினார். 366

## பிறவி நிலை

கருத்தரித் துதித்தபோது கமலபீட மானதுங்
கருத்தரித் துதித்தபோது காரணங்க ளானதுங்
கருத்தரித் துதித்தபோது கரணமிரண்டு கண்களாய்
கருத்தினின் றுதித்ததே கபாலமேந்து நாதனே.

(பொ - ரை) கருவானது தங்கித் தோன்றிய காலத்தில் கமல பீடமானதும், அதுவே காரணங்களானதும், அதுவே இரண்டு காரணங்களும், கண்களுமானதும் ஆகிய இவைகளெல்லாங் கபாலத்தைத் தாங்கியிருக்கின்ற தலைவனே! என்னுடைய மனத்தின்கண் ணிருந்து உண்டானது எ - று.

கருவுக்குச் சம்பந்தப்பட்ட யாவும் என்னுடைய மனத்தின்கண் தோன்றியதாகும் என்பது கருத்து. 367

## பஞ்சாட்சரம்

ஆனவன்னி மூன்றுகோண மாறிரண்டு எட்டிலே
யானசீவ னஞ்செழுத் தகாரமிட் டலர்ந்தது
மானசோதி யுண்மையு மனாதியான வுண்மையு
மானதான தானதா யவலமாய் மறைந்திடும்.

(பொ - ரை) பொருந்திய மூன்று அக்கினிகளும், பன்னிரண்டு இதழ்களையுடைய முக்கோணமும், எட்டில் கூடிய சீவனிடத்திலுண்டான பஞ்சாட்சரத்தில் அகார பீஜத்தையிட்டு அலர்ந்தது பெருமையுள்ள தேஜோமயத்தின் உண்மையும், அநாதிப் பொருளின் உண்மையும், தனதாய் வீணாக மறைந்திடும் எ - று. 368

## நாதம்

ஈன்றெழுந்த வெம்பிரான் றிருவரங்க வெளியிலே
நான்றபாம்பின் வாயினால் நாலுதிக்கு மாயினான்
மூன்றுமூன்று வளையமாய் முப்புரங் கடந்தபி
னீன்றெழுந்த அவ்வினோசை யெங்குமாகி நின்றதே.

(பொ - ரை) பிறந்து எழுந்தபின் எம்பெருமானுடைய திருவரங்கமென்னும் வெளியிலே தொங்கிய பாம்பின் வாயினால் நான்கு

திசைகளிலுமானால், மும்மூன்று வளையமாக திரிபுரங்களையுங் கடந்த பின் மூண்டெழுந்த அகாரத்தின் ஓசையானது எவ்விடத்தும் பரவி நின்றதாகும் எ - று.

சர்வ பீஜங்களுக்கும் ஆதாரமான பிரணவத்தின் ஒரு கூறாகிய அகார பீஜத்தின் சிங்கநாதமானது சர்வ லோகங்களிலும் விளங்கும் என்பது கருத்து. 369

## சர்வ வியாபகம்

எங்குமெங்கு மொன்றலோ வீரேழ்லோக மொன்றலோ
அங்குமிங்கு மொன்றலோ வனாதியான தொன்றலோ
தங்குதா பரங்களுந் தரித்துவார தொன்றலோ
உங்களெங்கள் பங்கினி லுதித்ததே சிவாயமே.

(பொ - ரை) எவ்விடத்திலும், பதினான்கு லோகங்களிலும், அவ்விடத்திலும், இவ்விடத்திலும், அநாதியாயிருக்கிற ஒருபொருளே யல்லவா கலந்திருக்கிறது. ஆகையால், நிலைத்திருக்கின்ற தாவரங்களி லும் கலந்திருக்கிறது ஒரு பொருளே யல்லவா? இப்படி யிருப்பதால் உங்கள் பங்கிலும் எங்கள் பங்கிலுந் தோன்றி யிருப்பது பஞ்சாட் சரமேயாகும் எ - று.

சர்வேஸ்வரனுக்கு எவ்விடத்தும் வியாபகமுண் டென்பார், 'எங்குமெங்கு மொன்றலோ வீரேழ்லோக மொன்றலோ, அங்குமிங்கு மொன்றலோ வனாதியான தொன்றலோ, தங்குதாவ ரங்களுந் தரித்து வார தொன்றலோ' எனவும், சிவபெருமான் யாவரிடத்தும் ஒரே கருணையுள்ளவ னென்பார், 'உங்களெங்கள் பங்கினி லுதித்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 370

## பஞ்சாட்சரம்

அம்பரத்தி லாடுஞ்சோதி யானவன்னி மூலமா
மம்பரமுந் தம்பரமு மகோரமிட் டலர்ந்தது

மம்பரக் குளியிலே யங்கமிட் டுருக்கிட
வம்பரத்தி லாதியோ டமர்ந்ததே சிவாயமே.

(பொ - ரை) அம்பரத்தில் திருநடனஞ்செய்கின்ற தேஜோரூப மூள்ளதான வன்னியின் மூலமாகிய அம்பரமும், தற்பரமும் அகோரமாக மலர்ந்ததாகும். ஆகையால், அதை தரிசித்து அதனுல் அம்பரக் குளியிலே அங்கத்தையிட்டிருக்க, ஆதியாகிய பரமசிவனோடு கலந்ததே சிவாயமாகும் எ - று.

சர்வேஸ்வரன் சர்வ ஆன்மகோடிகளும் உய்தற்பொருட்டு ஆநந்தத் திருத்தாண்டவஞ்செய்வது சிதாகாசத்தி லென்பார், 'அம்பரத்தி லாடுஞ்சோதி' எனவும், குண்டலியா லுண்டாகும் வன்னியினுல் இருதய தாமரை மலரவேண்டிய தென்பார், 'ஆனவன்னி மூலமா மம்பர மூந் தம்பரமு மகோரமிட் டலர்ந்தது' எனவும், அம்பரமென்பதையே மூசையாகக்கொண்டு அதில் அன்பு சரீரத்தைப் போட்டடக்கவேண்டு மென்பார், 'அம்பரக் குளியிலே யங்கமிட் டிருக்கிட' எனவும், இங்ஙனஞ் செய்வதால் சிவபெருமானுடன் கலந்தவாறே யாயிற்றென்பார், 'அம்பரத்தி லாதியோ டமர்ந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 371

## குரு தரிசனம்

வாடிலாத பூமலர்ந்து வண்டுரிசை நாவிலே
யோடிநின் றுருவெடுத் துகாரமா யலர்ந்தது
மாடியாடி யங்கமு மகப்படக் கடந்தபின்
கூடிநின் றுலாவுமே குருவிருந்த கோலமே.

(பொ - ரை) உலகமாந்தர்களே! வாடாதபூக்களானவை மலர்ந்து வண்டு நாவினுல் உருசியைப் பார்க்க இடமா யமைவதுபோல் அங்குமிங்குமாக வோடி ரூபந்தாங்கி உகாரமாக அலர்ந்தது சர்வ இடங்களிலும் திருத்தாண்டவஞ் செய்து அங்கங்களெல்லாந் தம்மிடத்தி லகப்

படக் கடந்தபின் சீவர்களிடத்தில் கலந்து குருவிருந்த கோலமானது உலாவா நிற்கும் எ - று.

ஞானாசிரியனிடத்தில் உடல் பொருள் ஆவி மூன்றினையுந் தத்தங் கொடுக்கவேண்டியது அவசியமாகலின், 'ஆடியாடி யங்கமு மகப் படக் கடந்தபின்' எனவும், பின்னரே குருபதேசங் கிடைக்கு மென்பார், 'கூடிநின் றுலவுமே குருவிருந்த கோலமே' எனவுங் கூறினார். ()

வீ டு

விட்டடி விரைத்ததோ வேருருக்கி நின்றதோ
எட்டிநின்ற சீவனு மீரேழ்லோகங் கண்டதோ
தட்டுருவ மாகிநின்ற சதாசிவத் தொளியதே
வட்டவீ டறிந்தபேர்கள் வானதேவ ராவரே.

(பொ - ரை) ஓ உலகர்களே! உண்மையிடமானது விட்ட அடியில் விதைத்ததோ வேரையுருக்கி நின்றதோ? எட்டிநின்ற சீவனானவன் பதினான்கு லோகங்களையுங் கண்டதோ? தட்டுருபமாகிய சதாசிவக் கடவுளின் ஒளியோ? அறியேன். ஆனால், வட்டமாகிய உயர்ந்த வீட்டை உணர்ந்தவர்கள் தெய்வலோகத்தி லெழுந்தருளி யிருக்குந் தேவர்களாவார்கள் எ - று.

சர்வேஸ்வரன் எழுந்தருளி யிருக்கின்ற உண்மை யிடத்தை உள்ளபடியே உணர்ந்தவர்கள் சொர்க்கலோகத்தை யாளுதற்குரிய தேவர்களாவார்கள் என்பது கருத்து. 373

இதுவுமது

வானவர் நிறைந்தசோதி மானிடக் கருவிலே
வானதேவ ரத்தனைக்குள் வந்தடைவர் வானவர்
வானகமு மண்ணகமும் வட்டவீ டறிந்தபின்
வானெலா நிறைந்தமன்னு மாணிக்கங்க ளானவே.

(பொ - ரை) தேவர்களிடத்தில் நிறைந்திருக்கின்ற தேஜோமய மானகடவுள் மானிடர்களுடைய கருவிலேயும் தேவலோகத்திலுள்ள முப்பத்திமுக்கோடி தேவர்களிடத்திலும் கலவாதுவந்து கலப்பார். ஆனால், தேவரானாலும் உலகமனிதர்களானாலும் உண்மையான வட்ட வீட்டை யுணர்ந்தபின் ஆகாயமெங்கும் நிறைந்திருக்கின்ற மாணிக்கங்க ளாவார்கள் எ - று.

சிவபெருமான் எல்லாரிடத்திலுங் கலந்திருப்பவனானாலும் புண் ணியம் விசேடித்தவரிடத்தில் சிறிது அதிகமாகக் கலந்திருப்பானென் பார், 'வானவர் நிறைந்தசோதி' எனவும், உலகத்தாரிடத்தும் தன்னு டைய பூரணனெனும் பெயரால் கலக்கவேண்டியவ னென்பார், 'மானிடக் கருவிலே வானதேவ ரத்தனைக்குள் வந்தடைவர்' எனவும், எப்பிறவியராயினும் இறைவனுடைய உண்மையிடத்தை உணர்ந் தவர்கள் உயர்வாக மதிக்கப்படுவாரென்பார், 'வானவர் வானகமு மண்ணகமும் வட்டவீ டறிந்தபின் வானெலா நிறைந்து மன்னு மாணிக்கங்களானவே' எனவுங் கூறினர். 374

## யோகம்

பன்னிரண்டு கால்நிறுத்திப் பஞ்சவர்ன முற்றிடின்
மின்னியே வெளுக்குணின்று வேறிடத் தமர்ந்ததுஞ்
சென்னியாந் தலத்திலே சீவனின் றியங்கிடும்
பன்னியுன்னி யாய்ந்தவர் பரப்பிரம மானதே.

(பொ - ரை) பன்னிரண்டு வாயுவுக்களையும் வெளியே போகா மல் நிறுத்திப்பார்க்கும்போது பஞ்சவர்ணங் காணப்பட்டால் வெளியே நின்று வேறிடத்தில் சேர்ந்ததும் சிரசிலே சீவனானவ னிருந்து சஞ் சரிக்கின்ற இடத்தைகேட்டும் நினைத்தும் ஆராய்ந்து பார்ப்பவர் பரப் பிரம மாவார்கள் எ - று.

வாயுவில் பன்னிரண்டுமாத்திரை வெளியில்பாயும்போது கெட்டு விடுகின்றதென்பார், 'பன்னிரண்டு கால்நிறுத்தி' எனவும், வாசியை பிராணயாமஞ் செய்வார்க்கு பஞ்சபூத ரூபங்கள் காணப்படு மென்பார், 'பஞ்சவர்ண முற்றிடின் மின்னியே' எனவும், இங்ஙனஞ் செய்வோர்க்கு இறைவன் வேறிடத்து மறைந்து காட்டுவா னென்பார், 'வெளிக்குணின்று வேறிடத் தமர்ந்ததும்' எனவும், சீவசொரூபத்தை யுண்மையாக உணர்ந்தவர்களே சிவசொரூப மாவார்க ளென்பார், 'சென்னியாந் தலத்திலே சீவனின் றியங்கிடும், பன்னியுன்னி யாய்ந்தவர் பரப்பிரம மானதே' எனவுங் கூறினர். 375

## இதுவுமது

உச்சிகண்டு கண்கள்கட்டி யுண்மைகண்ட தெவ்விடம்
மச்சுமாளி கைக்குளே மானிடங் கலப்பிரேல்
எச்சிலான வாசல்களு மேகபோக மாய்விடும்
பச்சைமாலு மீசனும் பரந்ததே சிவாயமே.

(பொ - ரை) உச்சிஸ்தானத்தைக் கண்டு கண்களைக்கட்டி உண்மைஸ்தானத்தை எவ்விடத்திற் கண்டது? அந்தர் முகத்திலுள்ள மச்சு மாளிகைக்குள்ளே மானிடர்களைக் கலப்பீரானல் எச்சிலான வாசல் களும், ஏகபோக வாசல்களாகும், பச்சைநிறமுள்ள விஷ்ணுவும் சிவபெருமானும் எங்கும் பரவினவர்க ளாவார்கள் சிவாய என்னும் பஞ்சாட்சரங்களும் வெளிவந்து காணப்படும் எ - று.

யோகியாயுள்ளவன் பிரமரந்திர ஸ்தானத்தை யறியவேண்டு மென்பார், 'உச்சிகண்டு' எனவும், கண்கள்மூடியே அந்தர் முகத்தில் தரிசிக்கவேண்டு மென்பார், கண்கள்கட்டி, எனவும், உண்மை ஸ்தானம் இதுவென்று உணரப்படாதென்பார், 'உண்மைகண்ட தெவ்விடம்' எனவும், அந்தர் முகத்திலேயே மச்சுமாளிகை முதலியவை யுண்

டென்பார், 'மச்சுமாளி கைக்குளே' எனவும், இவையாவும் மானிடப் பிறவிக்கே அமையுமென்பார், 'மானிடங் கலப்பிரேல்' எனவும், ஒதுக்கிய வாசல்களும் உண்மை வாசல்களாகு மென்பார், 'எச்சிலான வாசல்களு மேகபோக மாய்விடும்' எனவும், இங்ஙனஞ் சுத்த ஞானத்தை யடைந்தாலே தெய்வங்கள் நடமாடுவனவாகும் என்பார், 'பச்சைமாலு மீசனும் பரந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 376

## யோகம்

வாயிலிட்டு நல்லுரிசை யட்சரத் தொளியிலே
கோயிலிட்டு வாவியுமங் கொம்பிலே யுலர்ந்தது
மாயிலிட்ட காயமு மனுதியிட்ட சீவனும்
வாயுவிட்ட வன்னியும் வளர்ந்ததே சிவாயமே.

(பொ - ரை) வாயினால் உச்சரிக்க இனிக்கின்ற அட்சரத்தின் நாதத்தில் ஒரு கோயிலை நிர்மாணஞ் செய்து வாவியாகிய அழகிய கொம்பின்கண் உலர்ந்ததாகிய மாயையினின்று முண்டான காயமும், மனுதிகளாலுண்டாக்கிக் கொள்ளப்பட்ட சிவனும், வாயுவினா லுண்டாக்கப்பட்ட வன்னியும், சிவாய என்னும் பஞ்சாட்சரத்தினா லுண்டான விதமேயாகும் எ - று.

மந்திர பீஜாட்சரங்களை உச்சரிக்குங்கால் அவை நாவினுக்கு நன்மையைக் கொடுக்கின்றன வென்பார், 'வாயிலிட்டு நல்லுரிசை யட்சரத் தொளியிலே' எனவும், அதற்குக்காயாலயம் வேண்டுமென்பார், 'கோயிலிட்டு' எனவும், மாயையினால் சரீரமுண்டான தென்பார், 'வாவியுமங் கொம்பிலே யுலர்ந்தது, மாயையிட்ட காயமும்' எனவும், மனவிகாரத்தால் மறுஜென்ம முண்டென்பார், 'மனுதியிட்ட சீவனும்' எனவும், வாயுவால் அக்கினி சரீரத்தை வளர்க்கின்ற தென்பார், 'வாயுவிட்ட வன்னியும் வளர்ந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். ()

## அட்சர மகிமை

அட்சரத்தை யுச்சரித் தனுதியங்கி மூலமா
யட்சரத்தை யுந்திரந்த கோரமிட் டலர்ந்தது
மட்சரத்தி லுட்கர மகப்படக் கடந்தபின்
அட்சரத்தி லாதியோ டமர்ந்ததே சிவாயமே.

(பொ - ரை) மந்திரபீஜாட்சரங்களை உள்ளபடியே உச்சரித்து அனுதியாயுள்ள அக்கினியின் மூலமாக வேறு யோகாட்சரங்களை எல்லாந் திறந்து அகோரமாக அலர்ந்தது மட்சரத்தின்கண் உட்கரமானது அகப்படக் கடந்த பின்னர் உண்மையான அட்சரத்தில் ஆதியான சிவபெருமானோடு கூடி யமர்ந்ததே யாகும் எ - று.

மந்திர பீஜாட்சரங்களின் சம்பந்தமாக இறைவனுங் கலந்திருப்பான் என்பது கருத்து. 378

## சிவஸ் துதி

கோயிலுங் குளங்களுங் குறியினிற் குருக்களாய்
மாயிலு மடியிலு மனத்திலே மயங்குறீர்
ஆயனை யரனையு மறிந்துணர்ந்து கொள்விரேல்
தாயினுந் தகப்பனோடு தானமர்ந்த தொக்குமே.

(பொ - ரை) முக்கியமான கோயிலுங் குளங்களும் அவற்றிற் குருமார்களாய் சர்வ இடங்களிலுமிருந்து மயங்குகிறீர். ஆகையால், அம் மயக்கத்தைவிட்டு பிரமன், சிவபெருமான் என்று சொல்லப்படுந் தெய்வங்களை உள்ளபடியே உணர்ந்து கொள்வீரானால் தாய் தகப்பன்மார்களிடத்தில் கலந்திருப்பதை ஒப்பாகும் எ - று.

பொய்க் குருக்களாற் பயனின்றென்பார், 'கோயிலுங் குளங்களுங் குறியினிற் குருக்களாய்' எனவும், அவர்களை யெல்லாம்

பார்த்து மயங்கவேண்டா மென்பார், 'மாயயிலு மனத்திலு மனத்திலே மயக்குறீர்' எனவும், சர்வேஸ்வரனை யுள்ளபடியே யுணரவேண்டு மென்பார், 'ஆயனை யரனையு மறிந்துணர்ந்து கொள்விரேல்' எனவும், ஈஸ்வரனுடனும் உமாதேவியுடனுங் கலந்தவாறு மென்பார், 'தாயி னுந் தகப்பனோடு தானமர்ந்த தொக்குமே' எனவுங் கூறினர். 379

## கோயில்

கோயிலெங்கு மொன்றலோ குளங்கணீர்க ளொன்றலோ
தேயுவாயு வொன்றலோ சிவனுமங்கே யொன்றலோ
ஆயசீவ னெங்குமா யமர்ந்துவார தொன்றலோ
காயமீ தறிந்தபேர்கள் காட்சியாவர் காணுமே.

(பொ - ரை) சர்வ இடங்களிலுள்ள கோயில்களும், குளங்களும், அவைகளிலுள்ள ஜலங்களும் ஒன்றேயல்லவா? தேயுவும், வாயுவும் ஒன்றேயல்லவா? சீவனும் ஆய்ந்த சிவனும் எவ்விடத்தும் ஒன்றே யல்லவா? இவ் விஷயங்களைச் சரீரத்தில் கண்டறிந்தபேர்கள் காட்சிப் பொருளாவார்கள். இதை நீங்கள் உணர்ந்து கொள்ளுங்கள் எ - று.

சர்வமத சம்பந்தமான ஆலயங்களாக விருந்தாலும், அவற்றில் எல்லாம்வல்ல கடவுள் ஒருவனே அந்தந்த மதத்திற்கேற்க எழுந்தருளி யிருப்பானென்பார், 'கோயிலெங்கு மொன்றலோ' எனவும், அங் ஙனமே குளங்களும் சுத்த சலங்களுமா மென்பார், 'குளங்கணீர்க ளொன் றலோ' எனவும், பஞ்சபூதங்களும் பெயரி னளவால் ஒன்றேயாகு மென்பார், 'தேயுவாயு வொன்றலோ' எனவும், சிவனும் சீவனும் அநாதியா யுள்ளவர்க ளென்பார், 'சிவனுமங்கே யொன்றலோ ஆயசீவ னெங்குமா யமர்ந்துவார தொன்றலோ' எனவும், யோகமார்க்கத் தார்க்கே இது விளங்குமென்பார், 'காயமீ தறிந்தபேர்கள் காட்சியாவர் காணுமே' எனவுங் கூறினர். 380

## பிரமம்

காதுகண்கள் மூக்குவாய் கலந்துவார தொன்றலோ
சோதியிட் டெடுத்ததுஞ் சுகங்களஞ்சு மொன்றலோ
ஓதிவைத்த சாத்திர முதித்துவார தொன்றலோ
நாதவீ டறிந்தபேர்க ளுதராவர் காணுமே.

(பொ - ரை) காதுகள், கண்கள், மூக்கு, வாய் இவைகளில் கலந்து வருகிறது ஒன்றேயல்லவா? சோதியின் சுகசொரூபமும், பஞ்ச சுகங்களும் ஒன்றேயல்லவா? முன்னோர்களால் சொல்லிவைக்கப்பட்டுள்ள சாத்திரங்களின் முடிவுகளும் ஒன்றேயல்லவா? இவைகளின் மர்மங்களை யுணர்ந்து நாத தத்துவத்தின்வீட்டை யறிந்தவர்கள் தலைவராவார்கள் எ - று.

பஞ்சேந்திரியங்களுக்கும் ஒன்றுக்கொன்று சம்பந்தமுண் டென்பார், 'காதுகண்கள் மூக்குவாய் கலந்துவார தொன்றலோ' எனவும், இது வொன்றானபோது அவற்றின் விஷயங்களு மொன்றேயா மென்பார், 'சோதியிட் டெடுத்ததுஞ் சுகங்களஞ்சு மொன்றலோ' எனவும், சாஸ்திரங்களும் ஒன்றன்முடிவே மற்றவைகளுங் கொள்வதென்பார், 'ஓதிவைத்த சாத்திர முதித்துவார தொன்றலோ' எனவும், நாததத்துவத்தில் வாழ்வோர் தலைவர்க ளென்பார், 'நாதவீ டறிந்தபேர்க ளுதராவர் காணுமே' எனவுங் கூறினர். 381

## அட்சரம்

அவ்வுதித்த வட்சரத்தி னுட்கலந்த வட்சரம்
சவ்வுதித்த மந்திரஞ் சம்புளத் திருந்ததால்
மவ்வுதித்த மாய்கையால் மயங்குகின்ற மாந்தர்காள்
உவ்வுதித்த் தவ்வுமா யுருத்தரித்த வுண்மையே.

(பொ - ரை) அகாரமானது தோன்றின அட்சரத்தினுள்ளே அந்தரங்கமாகக் கலந்த அட்சரமும், சகாரமானது தோன்றின மந்திரமும், சம்புஎன்னும் பரமேஸ்வரனுடைய சங்கற்பமாத்திரத்தாலிருந்ததால் மகாரபீஜத்தின் மாய்கையால் மயங்குகின்ற மானிடர்கள் உகாரத்தால் அகாரத்தின் செய்கையாகிய ரூபந்தரித்தது உண்மையேயாகும் எ - று.

சர்வமந்திர பீஜங்களால் மயங்கிக் கடைசியாக ரூபந்தாங்கிய பீஜமும் அகாரமானதால் இது சிவசங்கற்பத்தால் உண்டான விதமேயாகும் என்பது கருத்து. 382

## இதுவுமது

அகாரமென்னு மக்கரத்தி லக்கர மொழிந்ததோ
அகாரமென்னு மக்கரத்தி லவ்வுவந் துதித்ததோ
உகாரமு மகாரமு மொன்றிநன்று நின்றதோ
விகாரமற்ற ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே.

(பொ - ரை) அகாரம் என்கிற எழுத்தில் சர்வ அட்சரங்களும் உண்டாயினவோ? அன்றி உகாரமென்னும் அட்சரத்தில் அகாரம் வந்து தோன்றியதோ? அன்றி உகாரபீஜமும் மகாரபீஜமும் பொருந்தி நன்றாக நின்றதோ? எப்பொழுதும் விகாரமற்ற ஞானிகளே! நீங்களே இதின் மர்மங்களை விரித்துச் சொல்லவேண்டும் எ - று.

சர்வ பீஜாட்சரங்களும் அகாரமென்னும் அட்சரத்திலே உதித்ததென்பார், 'அவ்வுதித்த வட்சரத்தி னுட்கலந்த வட்சரம்' எனவும், சகாரமும் வேறொன்றில் தோன்றுவதேயா மென்பார், 'சவ்வுதித்த மந்திரம்' எனவும், இவை யனைத்தும் சிவபெருமானுடைய உண்மை வாக்கென்பார், 'சம்புளந் திருந்ததால்' எனவும், உலகத்தார்கள் மகாரபீஜத்தால் மயங்குகின்றார்களென்பார், 'உகாரமு மகாரமு மொன்றி

நன்று நின்றதோ, விகாரமற்ற ஞானிகாள் விரித்துரைக்க வேண்டுமே' எனவுங் கூறினர். 383

## உடலுயிர்

சத்தியாவ துன்னுடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்கா ளிதற்குமேல் பிதற்றுகின்ற தில்லையே
சுத்தியைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்திசிவமு மாகிநின்று தண்மையாவ துண்மையே.

(பொ - ரை) உன்னுடைய சரீரமானது சத்தியின்கூறும், சீவனவன் சிவபெருமானுமாம், பித்தர்களே! இதற்குமேல் பிதற்றுகின்றது ஒன்றுமில்லை. ஆனல், சுற்றி ஐந்து கூடமும் சொல்லிறந்த ஒரு வெளியும் ஆன விடத்தில் சத்தியுஞ் சிவமுங் கலந்து நின்ற தன்மையாவது உண்மையே யாகும் எ - று.

சர்வஜந்துக்களுக்குஞ் சத்தியின் கூறுவது சரீமென்பார், 'சத்தியாவ துன்னுடல்' எனவும், சீவனே சிவமென்பார், 'தயங்குசீவ னுட்சிவம்' எனவும், பித்தர்களெல்லாம் கண்டபடி பிதற்றுகின்ரு ரென்பார், பித்தர்கா ளிதற்குமேல் பிதற்றுகின்ற தில்லையே' எனவும், சத்தியும் சிவமுங் கலந்தது உண்மையே யாகுமென்பார், 'சுற்றியைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி, சத்திசிவமு மாகிநின்று தண்மையான துண்மையே' எனவுங் கூறினர். 384

## பஞ்சாட்சரம்

சுக்கிலத் துளையிலே சுரோணிதக் கருவுளே
முச்சதுர வாசலில் முளைத்தெழுந்த மோட்டினில்
மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமா
யுச்சரிக்கு மந்திரம் ஓம்நமசி வாயமே.

(பொ - ரை) சுக்கிலதத்துவத்தின் துளையிலும், சுரோணித தத்துவத்தின் கருவிலும், மூன்று சதுரமாகிய முக்கோண வாசலிலும், முளைத்தோங்கின மோட்டினிலும், உண்மையான சதுரமாய் விளங்குஞ்சரீரத்திற்குள் விளங்குகின்ற ஞானதீபம்போல் ஸ்துதி செய்கின்ற மந்திரமானது ஓம் நமசிவாய என்னும் மந்திரமாகும் எ - று.

சுக்கில தாதுவுக்கு வழியுண்டென்பார், 'சுக்கிலத் துளையிலே' எனவும், சுரோணிதமே கருவாக அமைவதென்பார், 'சுரோணிதக் கருவுளே' எனவும், மூலவாசல் முக்கோண ரூபத்ததென்பார், 'முச்சதுர வாசலில்' எனவும், அங்ஙனமே உதயமாவ தென்பார், 'முளைத்தெழுந்த மோட்டினில்' எனவும், சரீரத்தின் கண்ணே அந்தர்முகமாக ஞானம் விளங்குவதென்பார், மெய்ச்சதுர மெய்புளே விளங்குஞான தீபமாய்' எனவும், சர்வ ஆன்மாக்களும் உண்மையாக உச்சரிக்க வேண்டியது பஞ்சாட்சரமேயா மென்பார், 'உச்சரிக்கு மந்திரம் ஓம் நமசி வாயமே' எனவுங் கூறினர். 385

அநாதி

அக்கர மனாதியல்ல வாத்தும வனாதியல்ல
புக்கிருந்த பூதமும் புலன்களு மனாதியல்ல
தக்கமிக்க நூல்களுஞ் சாஸ்திர மனாதியல்ல
ஒக்கநின் றுடன்கலந்த வுண்மைகா ணனாதியே.

(பொ - ரை) மந்திராட்சரங்களும், ஆன்மாவும், சரீரத்திற் புகுந்திருந்த பூதங்களும், புலன்களும், தகுந்த உயர்ந்த நூல்களும், சாஸ்திரங்களு ம அநாதியாயுள்ளவைகளல்ல. ஆனல், சமீபத்திலிருந்து உடனே கலந்திருக்கின்ற வுண்மைப் பொருளாயுள்ள ஒன்றே அநாதிப் பொருளாகும் எ - று.

அட்சரங்கள் ஒருவனுல் தோற்றப்பட்டன வாகலான், 'அக்கர மனாதியல்ல' எனவும், ஆன்மாவும் தேகத்திற்கு ஆதியாகக் காணப்

படுதலின் அவைகளும் அநாதியாகா என்னும் ஒரு சாரார் மதத்தை அநுசரித்து, 'ஆத்தும வனுதியல்ல' எனவும், ஆன்ம அநாதியாகாத போது அதற்குக் கீழ்ப்பட்ட தத்துவங்களும் அநாதியாகா வென்பார், 'புக்கிருந்த பூதமும் புலன்களு மநாதியல்ல' எனவும், சாஸ்திரங்க ளெல்லாம் ஒருவனுல் தோற்றப்பட்டவைக ளாகையால், 'தக்கமிக்க நூல்களுஞ் சாஸ்திர மனுதியல்ல' எனவும், ஆகையால் இறைவனே அநாதியா யுள்ளவ னென்பார், 'ஒக்கநின் றுடன்கலந்த வுண்மைகா ணனுதியே' எனவுங் கூறினர். 386

## முத்தி விதம்

மென்மையாகி நின்றதேது விட்டுநின்ற தொட்டதேது
வுண்மையாக நீயுரைக்க வேணுமெங்க ளுத்தமா
பெண்மையாகி நின்றதொன்று விட்டுநின்ற தொட்டதை
யுண்மையா யுரைக்குமுத்தி யுட்கலந் திருந்ததே.

(பொ - ரை) ஆன்மாக்களுக்கு மென்மையாகவும் விட்டு தொட் டும் நின்றது எந்தப்பொருள்? இதை எங்களுடைய உத்தமனே! நீ எங்களுக்குச் சொல்லவேண்டும். ஸ்ரீரூபத்தோடு அநுபோக முதிர்ச்சி யில் காணப்பட்டு நின்ற ஒரு பொருளை மாயாவசத்தால் விட்டு நின் றனை. அங்ஙனம் கண்ணினுல் ரூபித்த உண்மையான பொருளை உண்மையாகவே சொல்ல ஏகமுத்தியானது உன்னுடைய மனதி லேயே கலந்திருந்ததாகும்.

உலகத்தில் ஆசாரியவேடம் பூண்டவர்கள் பலவிதப்படுகின்ற தால் அவர்களுடைய உண்மை விளங்காதென்று அவர்களை நிறுத்தி சிவபெருமானை நோக்கி, 'உண்மையாக நீயுரைக்க வேணுமெங்க ளுத்தமா' எனவும் சிவபெருமானிடத்தில் மென்மையாக நடந்து கொள்ள வேண்டுமென்பார், 'மென்மையாகி நின்றதேது' எனவும், விட்டகுறை தொட்டகுறை யுண்டாமென்பார், 'விட்டுநின்ற தொட்ட

தேது' எனவும், பிரமரந்திரஸ்தானத்தில் ஸ்ரீரூபத்துடன் நிற்பவள் பரமேஸ்வரி யென்பார், 'பெண்மையாகி நின்றதொன்று' எனவும், அது நம்மை விட்டுநின்ற தொன்றுமென்பார், 'விட்டுநின்று தொட்டதை' எனவும், அதை உண்மையாகச் சிந்திப்பவர்க்கு உண்மை ஞானத்தால் மோட்சங் கைகூடுமென்பார், 'உண்மையா யுரைக்க முத்தி யுட்கலந் திருந்ததே' எனவுங் கூறினர். 387

## பஞ்சாட்சரம்

அடக்கினு லடங்குமோ வண்டமஞ் செழுத்துளே
யுடக்கினு லெடுத்தகாய முண்மையென் றுணர்ந்துநீ
சடக்கிலாறு வேதமுந் தரிக்கவோதி லாமையால்
விடக்குநாயு மாயவோதி வேறுவேறு பேசுமோ.

(பொ - ரை) அண்டமானது நம்மால் பலமுறைகளாக அடக்கப்பட்டாலும் அடங்குவனவாகுமோ? ஆகாது. ஆகையால், பஞ்சாட்சரங்களின் உள் மர்மங்களால் எடுக்கப்பட்ட இந்தச் சரீரமானது உண்மையாயுள்ளதென்று நீ உணர்ந்து அதனால் நான்கு வேதங்களையும், ஆறு சாஸ்திரங்களையும் செவ்வனே பாராயணஞ் செய்யாமையால் இடக்கனுய் மாயா செய்கைகளைச் சொல்லி வேறு வேறு கண்ட கண்டபடியாகப் பிதற்றும் எ - று.

பஞ்சாட்சரத்துள் அண்டங்கள் அடங்காதென்பார், 'அடக்கினு லடங்குமோ வண்டமஞ் செழுத்துளே' எனவும், சரீரம் நிலையாததென்பார், 'உடக்கினு லெடுத்தகாய முண்மையென் றுணர்ந்துநீ' எனவும், வேதபாகங்களை அறியவில்லை யென்பார், 'சடக்கினுலு வேதமுந் தரிக்கவோதி லாமையால்' எனவும், இதை யுணராதவர்கள் கண்டகண்ட விதமாகப் பேசுவார்களென்பார், விடக்குநாயு மாயவோதி வேறுவேறு பேசமே' எனவுங் கூறினர்.

தேகம் நிலையில்லை என்பதை:

"நீரிற்குமிழி யிளமை நிறை செல்வம்
நீரிற்சுருட்டு நெடுந் திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று" என்பதினு லறிக. 388

சக்கரம்

உண்மையான சக்கர முபாயமா யிருந்ததுந்
தண்மையான காயமுந் தரித்தரூப மானதும்
வெண்மையாகி நீறியே விளைந்துநின்ற தானது
முண்மையான ஞானிகள் விரித்துரைக்க வேண்டுமே.

(பொ - ரை) உண்மையாக யோகத்தில் தேர்ந்த ஞானி என்னும் பேரைப் பெற்றுள்ளவர்களே! நீங்கள் உண்மையான உடற் சக்கரமானது உபாயமா யிருந்ததும் அதனுல் சாந்தமான சரீரந்தோன்றி ரூபமானதும், பின்னர் அந்தச் சரீரத்திலிருந்து வெண்மையாக நீரு விந்தாக விளைந்து நின்றதும், விரித்துச் சொல்லவேண்டும் எ - று.

சரீரத்திலுள்ள சர்வ சக்கரங்களும் உண்மையானவைகளே என்பார், 'உண்மையான சக்கரம்' எனவும், அது சரீரத்தில் அரூபமாய் விளங்குகின்றதென்பார், 'உபாயமா யிருந்ததும்' எனவும், சரீரமுண்டான காலத்தில் வெகுசாந்தமா யுண்டானதென்பார், 'தண்மையான காயமும்' எனவும், அருவமா யிருந்தே பின்னர் சரீரமாயிற்றென்பார், 'தரித்தரூப மானதும்' எனவும், பின்னரே அந்தச் சரீரத்தினின்று விந்துவாய் விளைந்ததென்பார், 'வெண்மையாகி நீறியே விளைந்து நின்ற தானது' எனவும், இது பொய்யர்களால் சொல்லப்படாதென்பார், 'உண்மையான ஞானிகள் விரித்துரைக்கவேண்டுமே' எனவுங் கூறினர். 389

ஈஸ்வரனுண்மை

எள்ளகத்தி லெண்ணெய்போல வெங்குமாகி யெம்பிரா
னுள்ளகத்தி லேயிருக்க வூசலாடு மூடர்காள்
கொள்ளைநாயின் வாலினைக் குணக்கெடுக்க வல்லிரேல்
வள்ளலாகி நின்றசோதி காணலாகு மெய்ம்மையே.

(பொ - ரை) ஊசலைப்போல் இறந்து இறந்து, பிறந்து பிறந்து தவிக்கின்ற மூடர்களே! எம்பெருமானாகிய சிவபெருமான் எள்ளின்கண் எண்ணெயைப்போல் எங்குங் கலந்தும் சர்வ ஆன்மகோடிகளின் இருதயத்திலுங் கலவாமற் கலந்திருக்க அதை நீங்கள் உணர்ந்தீரில்லை. ஆகையால், இனி நீங்கள் கொள்ளையாகும் நாயின் வாலினுடைய முடக்கை நீக்க வல்லமை யுடையீரானால் வள்ளலாக எழுந்தருளியிருந்த தேஜோமயப்பொருளைத் தரிசிக்கலாகும். இது உண்மையே யாகும் எ - று.

இறைவனுடைய வியாபகம் எள்ளிலெண்ணெய்போன்றதென்பார், 'எள்ளகத்தி லெண்ணெய்போல எங்குமாகி யெம்பிரா னுள்ளகத்திலே யிருக்க' எனவும், உலகர்கள் பிறவியில் வருந்து மியல்புடையவரென்பார், 'ஊசலாடு மூடர்காள்' எனவும், மூடர்களுக்கு இறையவன் காணப்படானென்பார், 'கொள்ளைநாயின் வாலினைக் குணக்கெடுக்க வல்லிரேல், வள்ளலாகி நின்றசோதி காணலாகு மெய்ம்மையே' எனவுங் கூறினர்.

எள்ளில் எண்ணெய் வியாபித்தலாவது எள்ளின் முழுமையும் வியாபித்து எல்லாம் எண்ணெ யாகாமல் பாதி திப்பியும், பாதி எண்ணெயு மாதலால் இவ் வியாபகம் பொருந்தாதென்பார். சிலர் வியாபகமானது கலத்தல் என்னும் பெயருடைய தாகலின் சித்து, அசித்து என்னும் பொருள்களிடத்தில் கலத்தல் வேண்டியது அவசியம். அங்ஙனங் கலப்பழி சர்வேஸ்வரன் நம்முடைய சரீரத்தில் வியாபித்த

போது சரீரமும் அவனுய்விடுமோ? ஆகாது! ஆகாது!! அதுபோல் வியாபகமாகிய எண்ணெயானது எள்ளின்கண் வியாபித்தது எள் என்கிற ஒரு பொருள் இல்லாதபோது எண்ணெய் வியாபிக்க இடம் எது? இல்லை! இல்லை!! ஆகையால், வியாபக இலட்சணம் தெரியாதார் கூற்று இங்கு மறுக்கப்பட்டது. இனி, எள்ளில் எண்ணெய் வியாபித்த வியாபகமே கொள்ளற்பாற்று. 390

## இதுவுமது

வேணுமென்ற ஞானமும் விரும்புகின்ற நூலிலே
தாணுவுண்டங் கென்கிறீர் தரிக்கிலீர் மறக்கிலீர்
தாணுவொன்று மூலநாடி தன்னுள்நாடி யும்முளே
காணுமன்றி வேறியாவுங் கனுமயக்க மொக்குமே.

(பொ - ரை) நீங்கள் சர்வ சாஸ்திரங்களிலும் விரும்புகின்ற வேண்டிய ஞானமும், அவ்வச் சாஸ்திரங்களிலேயே கூறப்படுகின்றன. அன்றி, அந்தச் சாஸ்திரங்களைக்கொண்டே நீங்கள் நாடுகின்ற அவ்விடத்தில் தாணுவாகிய பரமேஸ்வரன் இருக்கிறானென்றுஞ் சொல்லுகிறீர். அவ் விஷயத்தை நிலையாகவும் ஸ்தாபிக்க மாட்டீர். ஆயின், தாணு உண்டென்கிற சொல்லை மறக்கவுமாட்டீர். ஆகையால், உலகர்களே! நீங்கள் உங்களால் உரைக்கப்படுந் தாணுவை உள்ளபடியே உணரவேண்டுமானல் அந்தப் பொருளானது பொருந்தி யிருக்கின்ற மூலாதாரத்தை உங்களுக்குள்ளாகவே நன்றாய் நாடிப் பார்த்துத் தரிசியுங்கள். அப் பொருள் தவிர, மற்றைய பொருள்களெல்லாம் கனுவிற் காணப்பட்ட பொருள்களாகும் எ - று.

ஞானம் பரஞானம் அபரஞானம் என்று இருவகைப்படுதலின், 'வேணுமென்ற ஞானமும்' எனவும், அவைகள் ஞானநூற்களிற் சொல்லப்படுவன வென்பார், 'விரும்புகின்ற நூலிலே' எனவும், சர்வேஸ்வரனை ஞானமார்க்கத்தா லுணரவேண்டு மென்பார், 'தாணுவுண்டங்

கென்கிறீர் தரிக்கிலீர் மறக்கிலீர்' எனவும், அவனை அம்மார்க்கத்தா லறிவதாகவிருந்தாலும் மூலநாடியே அவனுக்கு முக்கியஸ்தான மென்பார், 'தாணுவென்று மூலநாடி தன்னுள்நாடி உம்முளே' எனவும், மற்றபொருள்கள் வீணானவைக ளென்பார், 'வேறுயாவுங் கனமயக்க மொக்குமே' எனவுங் கூறினர். 391

## இதுவுமது

வழக்கிலே யுரைக்கிறீர் மனத்துளே தவிக்கிறீர்
உழக்கிலாது நாழியான வாறுபோலு மூமைகாள்
உழக்குநாலு நாழியான வாறுபோலு மும்முளே
வழக்கிலே யுரைக்கிறீர் மனத்துளீசன் மன்னுமே.

(பொ - ரை) ஊமையர்காள்! நீங்கள் தர்க்கவாதஞ் செய்து வீண் வார்த்தை பேசுகின்றீர். அன்றி, அதைப்பற்றியே மனத்தின்கண் அதிகமாகத் தவிக்கிறீர். அது எப்படி யிருக்கிறதென்றால் உழக்கு என்கிற எண்ணில்லாமல் நாழிஎன்கிற எண் உண்டான விதம்போலாகும். ஆகையால், உழக்கு நாலு கொண்டால் ஒரு நாழியான விதத்தைப் போல நீங்கள் உம்முடைய உள்ளத்தில் வழக்கிட்டுச் சொல்லுகின்ற சர்வேஸ்வரன் இருக்கின்றான். அவனை உள்ளபடியே உணர்ந்து கொள்ளுங்கள் எ - று.

சர்வேஸ்வரனைப் பற்றி தருக்கமிடுவது மதவாதிகளுக்குச் சுபாவமென்பார், 'வழக்கிலே யுரைக்கிறீர்' எனவும், அதனால் மனத்திற்கு வருத்தம் அதிக முண்டாகிற தென்பார், 'மனத்துளே தவிக்கிறீர்' எனவும், சர்வேஸ்வா னில்லாவழி சகமில்லை யென்பார், 'உழக்கிலாது நாழியான வாறுபோலு மூமைகாள், உழக்குநாலு நாழியான வாறு போலு மும்முளே வழக்கிலே யுரைக்கிறீர்' எனவும் ஈஸ்வரன் ஆன்மாக்களின் இருதயத்தின்கண் குடிகொள்வோ னென்பார், 'மனத்துளீசன் மன்னுமே' எனவுங் கூறினர். 392

## சிவ னுண்மை

ஆடுகின்ற வெம்பிரானை யங்குமிங்கு நின்றுநீர்
தேடுகின்ற வீணர்காள் தெளிவதொன்றை யோர்கிலீர்
நாடிநாடி யும்முளே நவின்றுநோக்க வல்லிரேல்
கூடொணாத தற்பரங் குவிந்துகூட லாகுமே.

(பொ - ரை) சிற்றம்பலத்தின்கண் திருத்தாண்டவஞ் செய்தருள்கின்ற எம்பெருமானை அவ்விடத்திலும் இவ்விடத்திலுமாக நின்று தேடுகின்ற வீணர்களே! நீங்கள் உங்கள் மனத்தை மாய்கையிற் செலுத்தினமையால் ஆராய்ந்து பார்த்து உண்மையான ஒருபொருளை உணரும் வலிவில்லாதவர்களானீர்கள். ஆகையால், இனியேனும் அம்மயக்கத்தைவிட்டு உங்களுடைய உள்ளத்தின்கண்ணேயே நாடி உண்மையைத் தரிசிக்க வல்லமை யுடையீர்களானல் பாவிகளை கூடாத பரம்பொருளை நீங்கள் கூடலாகும் எ - று.

சர்வேஸ்வரன் ஆன்மாக்கள் உய்தற்பொருட்டு ஆநந்தத் தாண்டவஞ் செய்கின்றவ னென்பார், 'ஆடுகின்ற எம்பிரானை' எனவும், சர்வ வியாபகனுனும் அந்தர் முகத்திலேயே வெளிப்படுவா னென்பார், அங்குமிங்கு நின்றுநீர் தேடுகின்ற வீணர்காள், தெளிவதொன்றை யோர்கிலீர் நாடிநாடி யும்முளே நவின்றுநோக்க வல்லிரேல்' எனவும், அங்ஙனம் உணர்வார்க்கே இறைவன் காணப்படுவா னென்பார், 'கூடொணாத தற்பரங் குவிந்துகூட லாகுமே' எனவுங் கூறினர். 393

## இதுவுமது

சுற்றியைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்தியுஞ் சிவமுமாகி நின்றதன்மை யோர்கிலீர்
சத்தியாவ தும்முடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்கா ளறிந்துகொள் பிரானிருந்த கோலமே.

(பொ - ரை) சரீரத்தைச் சுற்றி ஐந்து பூதங்கள் வாழ்கின்ற ஐந்து கூடங்களும், வாக்கிறந்த ஒப்பற்ற பொருள் வாசஞ் செய்கின்ற ஒரு வெளியு மிருக்கிறது, அவ்விடத்தில் சத்தியுஞ் சிவமுங் கலந்திருந்த தன்மையை உணரமாட்டீர்கள். அவர்கள் உங்களுடைய உடலாகவும், சீவனாகவும் கலந்திருக்கின்ற விஷயத்தை பித்தர்களே! நீங்கள் உணர்ந்து கொள்ளுங்கள் எ - று.

பஞ்சபூதங்களின் வாசஸ்தானங்களாகிய ஐந்திடங்களுங் கூடங்களே யென்பார், 'சுற்றியைந்து கூடமும்' எனவும், ஆகாயம் ஒன்றே யென்டார், 'ஒன்றுசொல்லிறந்த தோர்வெளி' எனவும், சிவசத்திகளிருவரும் சிதாகாசத்தின்கண் எழுந்தளி யிருப்பவர்களே யாவார்களென்பார், 'சத்தியுஞ் சிவமுமாகி நின்றதன்மை யோர்கிலீர்' எனவும், சரீரமும் அவ்விருவருடைய கூற்றின்கண் அடங்கு மென்பார், 'சத்தியாவ துன்னுடல் தயங்குசீவ னுட்சிவம்' எனவும், இதை உலகத்தார் உள்ளபடியே உணரமாட்டார்களென்பார், 'பித்தர்காளறிந்துகொள் பிரானிருந்த கோலமே' எனவுங் கூறினர். 394

## அம்பலம்

அகாரமான தம்பல மனாதியான தம்பலம்
உகாரமான தம்பல முண்மையான தம்பல
மகாரமான தம்பலம் வடிவமான தம்பலஞ்
சிகாரமான தம்பலம் தெளிந்ததே சிவாயமே.

(பொ - ரை) உலகமாக்களே! அகாரமும், அநாதியா யுள்ளதும், உகாரமும், உண்மையாயுள்ளதும், மகாரமும், சொரூபமா யுள்ளதும், சிகாரமும் அம்பலத்தி லுள்ளவைகளாம். ஆயின், இது பஞ்சாட்சரத்தினால் தெரியவந்த தாகும் எ - று.

மந்திர பீஜாட்சரங்களெல்லாம் அம்பலத்தில் சேர்ந்தவைக ளாகும். ஆகையால், அவைகள் பஞ்சாட்சரங்களால் உணரக்கூடியவை என்பது கருத்து. 395

## சிவனுண்மை

சக்கரம் பறந்ததோடி சக்கரமேல் பலகையாய்
செக்கிலாம லெண்ணெய்போல சிங்குவாயு தேயுவு
முக்கிலே யொளிகலந்து யுகங்களும் கலக்கமாய்
புக்கிலே புகுந்தபோது போனவாற தெங்ஙனே.

(பொ - ரை) சக்கரமானது மேல்சக்கரத்தில் பலகையாய் ஓடிப் பிறந்தது. ஆனால், செக்கில்லாமல் எண்ணெயுண்டாகாமை போல, சிங்குவை, வாயு, தேயு, இவைகள் ஒளியில் கலந்து சர்வ யுகங்களும் அவைகளில் கலக்கமாய் உள்ளிடத்தில் புகுந்தபோது சர்வேஸ்வரன் வெளிப்பட்டுப் போனது எங்ஙனம்? எ - று.

உடற் சக்கரமானது மேலிடத்திலுள்ளதென்பார், 'சக்கரம் பரந்த தோடி சக்கரமேல் பலகையாய்' எனவும், சர்வேஸ்வரனை யின்றி சரீர மில்லை யென்பார், 'செக்கிலாம லெண்ணெய்போல சிங்குவாயு தேயுவு, முக்கிலே யொளிகலந்து யுகங்களுங் கலக்கமாய், புக்கிலே புகுந்தபோது போனவாற தெங்ஙனே' எனவுங் கூறினர். 396

## இதுவுமது

வளர்ந்தெழுந்த கொங்கைதன்னை மாயமென் றெண்ணிநீ
ரருள்கொள்சீவ ராருடம் புடைமையாகத் தோர்வீர்காள்
விளங்குஞான மேவியே மிக்கோர்சொல்லைக் கேட்பீரேல்
களங்கமற்று நெஞ்சுளே கருத்துவந்து புக்குமே.

(பொ - ரை) பெண்களுடைய மார்பின்கண் வளர்ந்தெழுந்த ஸ்தனங்களை மாயையை விளைவிக்கக்கூடியவை என்று நினைத்து சீவர்

களுடைய உடம்பை உடமையாக மனத்தில் நினைப்பீர்கள். ஆகையால், நீங்கள் இவைகளை விட்டு பரிபாகிகளுக்கு விளங்குகின்ற ஞானத்தை யடைந்த பெரியோர்களுடைய சொல்லைக்கேட்பீரானால் நீங்கள் மனத்தின்கண் யாதொரு களங்கமு மில்லாமல் உங்களுடைய மனத்தில் சர்வேஸ்வரன் வந்து குடிகொள்ளுவான் எ - று.

பெண்களது கொங்கைகளைக் கண்டே ஆடவர்கள் மயங்குகின்றார்களென்பார், 'வளர்ந்தெழுந்த கொங்கைதன்னை மாயமென்றெண்ணிநீர்' எனவும், மாயையென் றெண்ணின அவர்களே மீண்டும் உடமையாக நினைக்கின்றார்க ளென்பார், 'அருள்கொள் சிவாருடம் புடமையாகத் தோர்வீர்காள்' எனவும், உலகர்களெல்லாம் ஞானோபதேசத்தைப் பெறவேண்டு மென்பார், 'விளங்குஞான மேவியே' எனவும், ஞானிகள் அநுபவ முள்ளவர்க ளாகையால் அவர்கள் சொல்லையுங் கேட்கவேண்டு மென்பார், 'மிக்கோர் சொல்லைக் கேட்பிரேல்' எனவும், சர்வேஸ்வரன் கபடமற்றவர்களுடைய மனத்திலேயே கலப்பவனென்பார், 'களங்கமற்ற நெஞ்சுளே கருத்துள்வந்து புக்குமே' எனவுங் கூறினார்.

சர்வேஸ்வரன் கபடமற்றவர்களுக்கே அறியப்படுவா னென்றதை:

"கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ வங்கையி லனலேந்தி
யிரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே"

என்பதினா லறிக.

397

### ஞானம்

நாலுவேத மோதுகின்ற ஞானமொன் றறிவிரோ
நாலுசாம மாகியே நவின்றஞான போதமா

யாலமுண்ட கண்டனு மயனுமந்த மாலுமாய்ச்
சாலவுன்னி நெஞ்சுளே தரித்ததே சிவாயமே.

(பொ - ரை) நான்கு வேதங்களிலுஞ் சொல்லப்படுகின்ற ஞானத்தை நீங்கள் உள்ளபடியே உணர்வீர்களோ? அது நான்கு சாமம் வரைக்கும் ஆசாரியனால் உபதேசிக்கப்பட்ட உண்மைஞான போதமாகவும், ஆலகால விஷத்தையுண்ட திருநீலகண்டனும், பிரமனும், விஷ்ணுவும் ஆகிய இவர்களை யுள்ளபடியே மனத்தில் நினைந்து உணர்ந்துகொள்ள நிலைத்ததாகும் அவ்வுபதேசத்தின் உள் மர்மமும் பஞ்சாட்சரமே யாகும் எ - று.

இருக்கு, சாமம், யசுர், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களிலுஞ் சொல்லப்படுவது முக்கிய ஞானமென்பார், 'நாலுவேத மோதுகின்ற 'ஞானமொன்று' எனவும், உலகர்கள் ஞானத்தை பலவித கற்பங்களாகக் கூறுவார்களென்பார், 'அறிவீரோ' எனவும், அது கலைஞானம் எனவும், பரஞானம் எனவும், இருவகைப்படுதலின் அதின் உண்மையை ஞான குருவால் நன்றாய் உணரவேண்டுமென்பார், 'நாலுசாம மாகியே நவின்றஞான போதமாய்' எனவும், அவ்வுபதேசத்தால் பஞ்ச கர்த்தர்களும் மனத்தின்கண் பொருந்துவாரென்பார், 'ஆலமுண்ட கண்டனு மயனுமந்த மாலுமாய்' எனவும், இது பஞ்சாட்சரத்தினால் விளைவதென்பார், 'சாலவுன்னி நெஞ்சுளே தரித்ததே சிவாயமே' எனவுங் கூறினர் 398

சுற்றம்

சுற்றமென்று சொல்வதுஞ் சுருதிமுடிவில் வைத்திடீர்
அத்தநித்த மாடியே யமர்ந்திருந்த தெவ்விடம்
பத்திமுற்றி யன்பர்கள் பரத்திலொன்று பாழது
பித்தரே யிதைக்கருதி பேசலாவ தெங்ஙனே.

(பொ - ரை) பித்தர்களே! நீங்கள் சுற்றத்தார் என்று சொல்லுவதும், வேதங்களின் முடிவில் வைத்துவிடுங்கள். ஆகையால், அதை அங்ஙனம் வைத்துவிட்டு சர்வேஸ்வரன் நித்தமும் திருநடனஞ் செய்துகொண் டிருந்தது எவ்விடம்? ஆகையால், பக்தியானது முதிர்ந்து அன்பர்கள் சொல்லுகின்ற பராபரத்தில் கலந்து மற்றவைகளைப் பாழாக்கவேண்டியது அங்ஙனஞ்செய்யாமையால் நீங்கள் வீண் வார்த்தை யாடவேண்டியது எற்றுக்கு எ - று.

உலகர்கள் சுற்றத்தார்களை மிகவும் விரும்புகின்றார்க ளென்பார், 'சுற்றமொன்று சொல்வதும்' எனவும், அதை எல்லாங் கட்டிவையுங்க ளென்பார், 'சுருதிமுடிவில் வைத்திடீர்' எனவும், இவர்களுக்கெல்லாம் சர்வேஸ்வரன் நடனஞ்செய்யுமிடந் தெரியா தென்பார், 'அத்தனித்த மாடியே யமர்ந்திருந்த தெவ்விடம்' எனவும், அன்பர்காள் மாயையை அறவே யொழிக்க வேண்டு மென்பார், 'பத்திமுற்றி யன்பர்கள் பாத்திலொன்று பாழது' எனவும், இதை உலகர்கள் பேசுவதால் என்ன பயன்? என்பார், 'பித்தரே யிதைக்கருதி பேசலாவ தெங்ஙனே' எனவுங் கூறினர். 399

மல விமோசனம்

எங்ஙனே விளக்கதுக் கேற்றவாறு னின்றுதா
னெங்ஙனே யெழுந்தருளி யீசனேச ரென்பரே
லங்ஙனே யிருந்தருளு மாதியான தற்பரம்
சிங்கமண்மி யானைபோலத் திரிமலங்க ளற்றவே.

(பொ - ரை) தீபத்திற் கேற்றவிதம் உள்ளேயிருந்து வெளிவந்த அன்பர்களை ஈசனிடத்தில் பிரியமுள்ளவர்க ளென்று சொல்லுவது எப்படி? சிங்கத்தைச் சேர்ந்த யானையின் மும்மதங்களும் ஒழிந்தது போல அடியார்களுடைய மூன்று மலங்களும் ஒழிந்தன எ - று.

சர்வேஸ்வரன் விளக்கைப்போல் தெளிசெய்வோன் என்பார், 'எங்ஙனே விளக்கதுக் கேற்றவாறு ணின்றுதான்' எனவும், ஈசனிடத்தில் பிரியமுள்ளவர்களை அன்பர்களென்று சொல்லும் வழக்க முண்டென்பார், 'எங்ஙனே யெழுந்தருளி யீசனேச ரென்பரே' எனவும், குருபதேசம் பெற்றபின் மும்மலங்களும் ஒழிந்துவிடுவது சகசமென்பார், 'சிங்கமண்மி யானைபோலத் திரிமலங்க ளற்றவே' எனவுங் கூறினர். 400

## சி வ பூ ை ச

அற்றவுள் ளகத்தையு மலக்கிடு மெழுகிடு
மெத்ததீப மிட்டதிற்பிற வாதபூசை யேத்தியே
நற்றவம் புரிந்துஏக நாதர்பாதம் நாடியே
கற்றிருப்ப தேசரிதை கண்டுகொள்ளு மும்முளே.

(பொ - ரை) மாய்கையற்ற மனத்தை அந்தர்முகத்தில் அலகிடு, மெழுகிடு, அதின்பின்னர் தீபமிட்டு அதில் பிறவா நெறியைப்பற்றி பூசைபண்ணி நல்ல உயர்ந்த தவத்தைச் செய்து ஏகநாதராகிய பரமேஸ்வரனுடைய திருவடிகளை விரும்பி அவைகளை மனத்தில் தியானித்திருப்பதே சரியா மார்க்கமாகும். இதை நீங்கள் உம்முடைய திருவுள்ளத்தில் கண்டுணர்ந்து கொள்ளுங்கள் எ - று.

துறந்த மனத்தையே சர்வேஸ்வான் அதிகமாக விரும்புவதால், 'அற்றவுள் ளகத்தையு மலக்கிடு மெழுகிடு' எனவும், பின்னர் தரிசிக்க வேண்டிய நிமித்தம் தூபதீப நைவேத்தியஞ் செய்யவேண்டு மென்பார், 'மெத்ததீப மிட்டதிற் பிறவாதபூசை யேத்தியே' எனவும், அங்ஙனம் நாடவேண்டியது இறைவனை யென்பார், 'நற்றவம் புரிந்துஏக நாதர்பாதம் நாடியே' எனவும், இங்ஙனம் செய்வதே சரியாமார்க்கமென்பார், 'கற்றிருப்ப தேசரிதை கண்டுகொள்ளு முள்முளே' எனவுங் கூறினர். 401

## அம்பலம்

பார்த்துநின்ற தம்பலம் பரமனுடு மம்பலங்
கூத்துநின்ற தம்பலங் கோரமான தம்பலம்
வார்த்தையான தம்பலம் வன்னியான தம்பலஞ்
சீற்றமான தம்பலந் தெளிந்ததே சிவாயமே.

(பொ - ரை) துறவிகளால் தரிசிக்கப்பட்டு நின்றதும், கடவுள் திருத்தாண்டவஞ் செய்வதும், திருக்கூத்து இருப்பதும், கோரம் விளைவிப்பதும், ஞானவார்த்தையை யுடையதும், அக்கினி சொரூபம் விளைவதும், சீற்றத்தை விளைவிப்பதும், தெளிந்ததும் அம்பலமேயாகும் இதற்குக் காரணம் பஞ்சாட்சரமே யாகும் எ - று.

துறவிகள் சிற்றம்பலத்தையே தரிசிப்பா ரென்பார், 'பார்த்து நின்ற தம்பலம்' எனவும், சர்வேஸ்வரன் திருநடனஞ் செய்வதும் அவ்விடத்திலேயே என்பார், 'பரமனுடு மம்பலம், எனவும், தாண்டவம் நிலைத்து நின்றதும் அவ்விடமே யென்பார், 'கூத்துநின்ற தம்பலம்' எனவும், மாயா மலமுள்ளவர்க்கு அகோரமாய்க் காணப்படுவதும் அதுவே யென்பார், 'கோரமான தம்பலம்' எனவும், ஞானோபதேசம் பெறவேண்டிய இடமும் அதுவே யென்பார், 'வார்த்தையான தம்பலம்' எனவும், அவ்விடத்து தேஜோமய விளக்கங் காணப்படு மென்பார், 'வன்னியான தம்பலம்' எனவும், மற்றுயாவும் அதுவேயா மென்பார், 'சீற்றமான தம்பலந் தெளிந்ததே சிவாயமே' எனவுங் கூறினார். 402

## இதுவுமது

சென்றுசென் றிடந்தொறும் சிறந்தசெம்பொ னம்பலம்
அன்றுமின்று நின்றதோ ரனாதியான தம்பலம்
என்றுமென்று மிருப்பதோ ருறுதியான வம்பல
ஒன்றியொன்றி நின்றது ளொழிந்ததே சிவாயமே.

(பொ - ரை) சென்றசென்ற இருக்கின்ற இடங்களெல்லா வற்றிலுஞ் சிறந்து விளங்குகின்ற செவந்த பொன்னம்பலத்தின்கண் எக்காலத்திலும் நின்றதாகிய ஒரு அநாதிப்பொருளாயுள்ளது சிற்றம் பலமாகும். ஆகையால், அதை மிகவும் நெருங்கிச்சேர்ந்து நின்று அந் தர்முகத்தில் மாயையை ஒழிந்ததே சிவாயநம என்னும் பஞ்சாட்சரங் களின் வன்மையே யாகும் எ - று.

சர்வ இடங்களும் வியாபகமுடையது அம்பலமென்பார், 'சென்று சென் றிடந்தொறுஞ் சிறந்தசெம்பொ னம்பலம்' எனவும், அழிவில் லாததும் அதுவே யென்பார், 'அன்றுமின்று நின்றதோ ரனாதியான தம்பலம்' எனவும், பொருந்திநின் றுணரவேண்டு மென்பார், 'ஒன்றி யொன்றி நின்றது ளொழிந்ததே சிவாயமே' எனவுங் கூறினார். 403

## சர்வம் சிவம்

தந்தைதாய் தமரும்நீ சகலதே வதையும்நீ
சிந்தைநீ தெளிவுநீ சித்திமுத்தி தானும்நீ
விந்துநீ விளைவுநீ மேலதாய வேதம்நீ
யெந்தைநீ யிறைவனீ யென்னையாண்ட வீசனே.

(பொ - ரை) என்னை உள்ளபடியே கிருபையாக ஆண்டடிமை கொண்ட சிவபெருமானே! தந்தையாவானும், தாயாவாளும், தம்ம வர்களாகின்றவர்களும், சர்வ தேவதைகளாவானும், சிந்தையாவானும், ஞானமாவானும், சித்தி முத்திகளாய் விளங்குவானும், விந்துவா வானும், சர்வ விளைவுப்பொருள்க ளாவானும், உயர்ந்த வேத சொரூப னவானும், எம்முடைய தந்தையாவானும், இறைவ னவானும் நீயே யாவாய். ஆகையால், என்னை காப்பாற்ற வேண்டியவன் நீயே யாவாய் எ - று.

சர்வேஸ்வரன் சர்வ ஆன்மகோடிகளுக்கும் தாயுந் தகப்பனுமாவா னென்று வேதம் பலகாலும் முறையிடுதலின், 'தந்தைதாய்' எனவும்,

இறைவனுடைய வியாபகத்தால் சாதியாராக வுள்ளவர்களையும் அவனேயாகச் சொல்லவேண்டு மென்பார், 'தமரும்நீ' எனவும், எல்லாத் தெய்வங்களாகவு மிருப்பவன் ஒருவனே யென்பார், 'சகல தேவதையும்நீ' எனவும், இறைவனது வாசஸ்தான மாகையால், 'சிந்தைநீ' எனவும், ஞானரூபியும் அவனேயென்பார், 'தெளிவுநீ, எனவும், சித்தியையும் மோட்சத்தையுங் கொடுப்பவன் இறைவனே யென்பார், 'சித்திமுத்தி தானும்நீ' எனவும், தத்துவங்களுக்குந் தலைவன் இறைவனே யென்பார், 'விந்துநீ விளைவுநீ' எனவும், நான்கு வேதங்களும் இவனையே இறைவனாகக் கூறுகின்றதென்பார், 'மேலதாய வேதம்நீ' எனவும், யாவருக்கு மிறைவனாதலால் 'எந்தைநீ யிறைவனீ யென்னையாண்ட வீசனே' எனவுங் கூறினார். 404

## மல நீக்கம்

எப்பிறப்பி லும்பிறந் திறந்தழிந்த வேழைகா
ளிப்பிறப்பி லும்பிறந்து என்னநீறு பூசுறீ
ரப்புடன் மலமறுத்து ஆசைநீக்க வல்லிரேல்
செப்புநாத வோசையிற் றெளிந்துகாண லாகுமே.

(பொ - ரை) எந்தச் சென்மத்திலும் பிறந்து பிறந்து இறந்து இறந்து அழிந்த ஏழைகளே! அதுபோலவே இந்தச் சன்மத்திலும் வந்து பிறந்து நீறு பூசுவது ஏன்? இதனால் ஒன்றும் பயனில்லை. ஆகையால், சலமலங்களற்று அவாவையும் நீக்கிக்கொள்ள வல்லமையுடையீரானால் வேதங்களாலும், பெரியோர்களாலுஞ் சொல்லப்படுகின்ற நாத தத்துவத்தின் நாதத்தில் அந்தக் கடவுளைத் தெளிந்து தரிசிக்கலாகும் எ - று.

உயிர்கள் ஜென்மாந்திரங்களி லெடுத்த ஜெந்மங்களுக்கு அளவில்லை யென்பார், 'எப்பிறப்பி லும்பிறந் திறந்தழிந்த வேழைகாள்' எனவும், இப்பிறவி மானிடப் பிறவி யென்பார், 'இப்பிறப்பிலும்

பிறந்து என்னநீறு பூசுறீர்' எனவும், ஞானிகள் சலமலவாதைகளி னின்றும் நீங்கினவர்களென்பார், 'அப்புடன் மலமறுத்து' எனவும், ஆசைக்கு அளவில்லை யாகையால் அது உள்ளவரைக்கும் கெடுதி யுண்டாமென்று அதை நீக்கவேண்டு மென்பார், 'ஆசைநீக்க வல்லி ரேல்' எனவும், இங்ஙனஞ் செய்தால் நாத தத்துவத்தில் இறைவனைக் காணலா மென்பார், 'செப்புநாத வோசையில் தெளிந்துகாண லாகுமே' எனவுங் கூறினர்.

பூர்வத்தில் பல பிறவி எடுத்திருக்கிறோம் என்றதை:

"எண்ணிலாத பலபிறவியெடுத்தே யிளைத்திங் கவைநீங்கி
யிம்மானிடத்தில் வந்துதித்து" என்பதினாலும்,

ஆசைக்கு அளவில்லை என்றதை:

"ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல்லாங் கட்டி
யாளினுங் கடல்மீதிலே
ஆணைசெலவே நினைவரள கேசனிகாக
வம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்தபேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணாவ ரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதுவு
முறங்குவது மாகமுடியும்
உள்ளதே போதுநா னானெனக் குளறியே
யொன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்தநிலையை யருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணா நந்தமே" எனவும்,

"ஆசையெனும் பெருங்காற் றூடிலவம்பஞ் செனவுமன தலையுங்காலம்
மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட்டதும் தூர்ந்து முத்திக்கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலநாயிற்கொடுமை பற்றிகிற்ப ரந்தோ
தேசுபழுத்தருள்பழுத்தபராபரமே நிராசையின்றேற் றெய்வமுண்டோ
எனவுங் கூறியுள்ளவற்றாலு மறிக. 405

## அட யோகம்

எட்டுயோக மானது மியங்குகின்ற நாதமும்
எட்டுவக்க ரத்துளே உகாரமு மகாரமும்
விட்டலர்ந்த மந்திரம் வீணாதண்டி னூடுபோ
யட்டவக்ஷ ரத்துளே யமர்ந்ததே சிவாயமே.

(பொ - ரை) அஷ்டவிதமாய்ச்செய்யும்யோகங்களும், விளங்குகின்ற நாத தத்துவமும், அஷ்டாட்சரங்களுக்குள் விளங்குகின்ற அட்சர பீஜமும், மகார பீஜமும் ஆகிய காரணத்தால்விட்டு மலர்ந்த மந்திரங்களேயே காரணமாகக்கொண்டு அவைகளின் சகாயத்தால் வீணாதண்டின்வழியாகச் சென்று எட்டு அட்சரங்களினுள் அமர்ந்ததே சிவயநம என்னும் பஞ்சாட்சரங்களாகும் எ - று.

இயமம் முதலிய எட்டுவகையாக யோகஞ்செய்வது யோகிகளுக்கெல்லாம் சுபாவமென்பார், 'எட்டுயோக மானது' எனவும், அவ்யோகஞ் செய்வார்க்கு நாதங்காணப்படுவது சகசமென்பார், 'இயங்குகின்ற நாதமும்' எனவும், அஷ்டாட்சரங்களில் உகாரமும், மகாரமும் உயர்ந்த பீஜங்களேயா மென்பார், 'எட்டுஅட்ச ரத்துளே உகாரமும் மகாரமும்' எனவும், அவ் யோகஞ் செய்வோர்க்கு வீணாதண்டே மார்க்கமா மென்பார், 'விட்டலர்ந்த மந்திரம் வீணாதண்டி னூடுபோய்' எனவும், அஷ்டாட்சரங்களில் பஞ்சாட்சரங்கள் எண்ணலளவையால் அடங்கு மென்பார், 'அட்டவட் சரத்துளே யமர்ந்ததே சிவாயமே' எனவுங் கூறினார். 406

## சர்வம் சிவம்

பிரான்பிரா னென்றுநீர் பினத்துகின்ற மூடரே
பிரானைவிட்டு மெம்பிரான் பிரிந்தவாற தெங்ஙனே
பிரானுமாய் பிரானுமாய் பேருலகு தானுமாய்
பிரானிலே முளைத்தெழுந்த பித்தர்காணு மும்முடல்

(பொ - ரை) பெருமான், பெருமான் என்று பினத்துகின்ற மூடர்களே! நீங்கள் சொல்லும் பெருமானைவிட்டு எம்பெருமானுகிய பரப்பிரமம் எப்படி பிரிந்தது? பிரியாது. ஆகையால், பிரமனுமாய் பெரிய வுலகமுந் தம்முடைய திருமேனியுமாய் விளங்குகின்ற பரப்பிரமத்திலே உம்முடைய சரீரங்கள் உண்டாயின. இதை பித்தர்களே நீங்கள் நன்ருய் உணர்ந்து கொள்ளுங்கள் எ - று.

உலகர்கள் சர்வேஸ்வரனை வாசாவாகப் பிரானென்று சொல்லுகின்ருர்களென்பார், 'பிரான்பிரா னென்றுநீர் பினத்துகின்ற மூடரே' எனவும், பரமேஸ்வரனுக்கும் பரப்பிரமத்திற்கும் பேதமில்லை யென்பார், 'பிரானைவிட்டு மெம்பிரான் பிரிந்தவாற தெங்ஙனே' எனவும், சர்வேஸ்வரன் எல்லாமானவ னென்பார், 'பிரானுமாய் பிரானுமாய் பேருலகு தானுமாய்' எனவும், சர்வேஸ்வரனிடத்தி லிருந்தே சரீர முண்டான தென்பார், 'பிரானிலே முளைத்தெழுந்த பித்தர்காணு மும்முடல்' எனவுங் கூறினர்.

சர்வேஸ்வரன் தன்னுடைய சக்தியால் மாயையினிட ஆன்மாக்களுக்குத் தநு, கரண, புவன, போகங்களைக் கொடுப்பவ ராகலின் இங்ஙனங் கூறினர். 407

## சிவ தரிசனம்

ஆதியில்லை யந்தமில்லை யானநாலு வேதமில்லை
சோதியில்லை சொல்லுமில்லை சொல்லிறந்த தூவெளி

நீதியில்லை நேசமில்லை நிச்சயப் படாததும்
ஆதிகண்டு கொண்டபின் னஞ்செழுத்து மில்லையே.

(பொ - ரை) ஆதியாயுள்ள ஒரு பொருளை உண்மையாகக் கண்டுணர்ந்துகொண்டபின், ஆதியில்லை, அந்தமில்லை, பொருந்திய நான்கு வேதங்களில்லை, தேஜோமயமில்லை, பேசவாக்கில்லை, வாக்கிறந்ததாய் விளங்குகின்ற நிர்மல ஆகாயமில்லை, நியாயமில்லை, சிநேகமில்லை, நிச்சயப்படாத பொருளில்லை, பஞ்சாட்சரங்களு மில்லை எ - று.

சர்வேஸ்வரனை உள்ளபடியே உணர்ந்தபின் எப்பொருளும் நானென்று தலைகாட்டா தென்பது கருத்து.

சர்வேஸ்வரனை உணர்ந்தபின் ஆதியந்தங்கள் வெளிப்படுதலில்லை யென்பார், 'ஆதியில்லை யந்தமில்லை' எனவும், அவனருள் வெளிப்படையாகக் கண்டவர்க்கு போதிக்கும் வேலை வேதத்திற்கில்லை யென்பார், 'ஆனநாலு வேதமில்லை' எனவும், இனி தேஜோமயத்தின் தயவு வேண்டப்படுவதில்லை யென்பார், 'சோதியில்லை' எனவும், அவனை யடைந்தார்க்கு வசனமுமில்லை யென்பார், 'சொல்லுமில்லை' எனவும், ஆகாயத்தி லிருக்கவேண்டிய வேலை எள்ளளவுமில்லை யென்பார், 'சொல்லிறந்த தூவெளி யில்லை' எனவும், எந்த நியாயமும் அவனுக் கவசியமில்லை யென்பார், 'நீதியில்லை நேசமில்லை நிச்சயப்படாததும்' எனவும், ஈஸ்வர சம்பந்தமான பஞ்சாட்சரங்களாலும் பிரயோசன மில்லையென்பார், 'ஆதிகண்டு கொண்டபின் அஞ்செழுத்து மில்லையே' எனவுங் கூறினர்.

ஈஸ்வரனே எல்லாவற்றிற்குந் தலைவனென்பதை:

"தானான தன்மயமே யல்லாலொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட்டாங்கே
போனாலுங் கர்ப்பூர தீபம்போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வேறுண்டோ"

என்பதினு லறிக. 408

## அர்த்தநா ரீஸ்வரர்

அம்மையப்ப னப்பநீ ரமர்ந்தபோ தறிகிலீ
ரம்மையப்ப னானநீ ராதியான பாசமே
யம்மையப்ப னின்னையன்றி யாருமில்லை யானபின்
னம்மையப்ப னின்னையன்றி யாருமில்லை யில்லையே.

(பொ - ரை) நீங்கள் அப்பனே? அம்மையப்ப னவானென்று லௌகீகத்தில் அமர்ந்தபோது உணரமாட்டீர்கள், அம்மையும், அப்பனுமாக விருக்கின்ற நீங்கள் பாசத்தா லிருக்கிறீர்கள். ஆகையால், அம்மையப்பனாகிய கடவுளே! உன்னையல்லாமல் உலகத்தின்கண் அம்மையப்பனாயிருக்கிற கடவுள் ஒருவருமில்லை. அங்ஙன மானபின் எங்களுக்குத் தாயுந் தகப்பனும் உன்னையன்றி ஒருவரு மில்லை எ - று.

சர்வ ஜீவான்மாக்களையுந் தந்தமையால், 'அம்மையப்ப னப்ப' எனவும், இது மாயாசம்பந்தப் பட்டவர்களால் அறியமுடியா தென்பார், 'நீர் அமர்ந்தபோ தறிகிலீர், எனவும், சிவனும் சீவனும் அநாதியே யுள்ளவர்கள் என்பதற் கறிகுறியாக உலகர்களும் அம்மையப்பர்களாகவே யிருக்கின்றார்க ளென்பார், 'அம்மையப்ப னானநீ ராதியான பாசமே', எனவும், ஆயினும் இறைவனாக மாட்டார்க ளென்பார், 'அம்மையப்ப னின்னையன்றி யாருமில்லை யானபின் அம்மையப்ப னின்னையன்றி யாருமில்லை யில்லையே' எனவுங் கூறினார். 409

## மந்திர சிறப்பு

நூறுகோடி மந்திரம் நூறுகோடி யாகமம்
நூறுகோடி நாளிருந் தூடாடிநாலு மென்பயன்
ஆறுமாறு மாறுமா யகத்திலோ ரெழுத்ததாய்
சீரையோத வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம்.

(பொ - ரை) அநேகமான மந்திரபீஜங்களையும் அநேகமான யோகங்களையும் அநேககோடி காலம்வரைக்கும் உயிருடன் ஜீவித்திருந்து அவைகளை உச்சரித்தும், செய்துமுடித்தும் என்ன பிரயோசனம்? ஆருதாரங்களாகவும், முப்பத்தாறு தத்துவங்களாகவும், உள்ளன்பினர் மனத்தின்கண் ஒரு எழுத்து வடிவமாகவும் அமர்ந்திருக்கின்ற சிறப்புப் பொருந்திய கடவுளை உள்ளபடியே தியானிக்க வல்லமை யுடையீராஞல் சிவபெருமானுடைய திருவடிகளை அடையலாம் எ - று.

மந்திரோச் சாடனத்திஞலும், யாகங்களைக் கிரமப்படி செய்து முடிப்பதாலும் யாதும் பயனில்லை யென்பார், 'நூறுகோடி மந்திரம் நூறுகோடி யாகமம், எனவும், அநேககாலம் வரைக்கும் காயகற்பஞ் செய்திருந்தும் பயனில்லை யென்பார், 'நூறுகோடி நாளிருந் தூடாடிஞலு மென்பயன்' எனவும், அட்சரரூபமா யிருக்கின்ற இறைவனை யடையவேண்டு மென்பார், 'ஆறுமாறு மாறுமா யகத்திலோ ரெழுத்துமாய், சீரையோத வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம்' எனவுங்கூறிஞர்.

மந்திர பீஜாட்சரங்களிற் பயனில்லையென்று சொன்ஞலும் அவ்வடிவிஞல் பயனுண்டென்பார், இங்ஙனங் கூறிஞர். 410

## எழுத்து வகை

முந்தவோ ரெழுத்துளே முளைத்தெழுந்த செஞ்சுட
ரந்தவோ ரெழுத்துளே பிறந்துகாய மானது
மந்தவோ ரெழுத்துளே யேகமாகி நின்றது
மந்தவோ ரெழுத்தையு மறிந்துணர்ந்து கொள்ளுமே.

(பொ - ரை) முதலில் முதன்மையாகிய ஒப்பற்ற மந்திர பீஜாட்சரம் ஒன்றில் வெளிப்பட்டுண்டான தேஜோமயப் பொருளானது நம்மால் சொல்லப்பட்ட அந்த ஒரு எழுத்தாகிய' பிரணவத்திற்

குள் உதித்து காயமாய்த் தோன்றியது. அப்படிப்பட்ட அந்த ஒரு எழுத்துக்குள் ஒரே பொருளாக நின்றது. அப்படிப்பட்ட அந்த ஒரு எழுத்தையும் நன்று யறிந்துணர்ந்து கொள்ளுங்கள் எ - று.

சர்வேஸ்வரனானவன் பிரணவ பீஜத்தி லமர்வோன் என்பார் இங்ஙனங் கூறினர். 411

## வேத பாராயணம்

கூட்டமிட்டு நீங்களுங் கூடிவேத மோதுறீர்
எட்டகத்து ளீசனு மிருப்பதென் னெழுத்துளே
நாட்டமிட்டு நாடிடு நாலுமூன்று தன்னுளே
யாட்டகத்து ளாடிடு மம்மையாணை யுண்மையே.

(பொ - ரை) பிராமணர்களே! நீங்களெல்லோருங் கூட்டமாய்க் கூடி நான்கு வேதங்களையும் பாராயணஞ் செய்து கொண்டு வருகின் றீர். அங்ஙனம் நீங்கள் ஓதுகின்ற ஏடுகளிலிருக்கின்ற எழுத்துக்களிலா ஈசனிருக்கின்றான்? ஆகையால், அவ்வெழுத்துக்களைவிட்டு நான்கும் மூன்றும் எழு என்னும் தொகையினையுடைய ஆறாதாரங்களிலே ஆநந்தத் தாண்டவத்தை விரும்பி யாடுகின்றது உண்மையாகும். ஆகை யால், இதற்காக சர்வேஸ்வரனுடைய திருவடிகளில் சத்தியமாகச் சொன்னேன் எ - று.

பிராமணர்களெல்லாந் தங்கள் தங்களுக்குள் கூடி தங்களுடைய இடைகளில் வேத பாராயணஞ் செய்கின்றா ரென்பார், 'கூட்டமிட்டு நீங்களுங் கூடிவேத மோதுறீர்' எனவும், சர்வேஸ்வரன் அநுபவத் தில் வெளிப்படுவானே யொழிய எட்டில் வெளிப்படா னென்பார், 'எட்டகத்து ளீசனு மிருப்பதென் னெழுத்துளே' எனவும், ஆறா தாரத்துடனே, ஒராதாரத்திலுமே இறைவன் உண்மையாய் எழுந் தருளி யிருப்பானென்பார், 'நாட்டமுற்று நாடியே நாலுமூன்று தன

னுளே, யாட்டகத்து ளாடிடு மம்மையாணை யுண்மையே' எனவுங் கூறினர். 412

## எங்கும் பிரமம்

காக்கைமூக்கை யாமையா ரெடுத்துரைத்த காரணம்
நாக்கையூன்றி யுள்வளைத்து ஞானநாடி யூடுபோ
யேக்கைநோக்க வட்சர மிரண்டெழுத்து மேத்திடிற்
பார்த்தபார்த்த திக்கெலாம் பரப்பிரம மானதே.

(பொ - ரை) காக்கையினது மூக்கை ஆமையாரானவர் எடுத்துச் சொல்ல காரணமானது சுபாவமாகவுள்ள நாக்கை யடிப்பற்றை யறுத்து அதை மடித்து ஊன்றி ஞானத்தை யநுபவிக்கும் நாடியின் வழியாக ஊடுருவிச் சென்று யாதொரு ஏக்கமுமில்லாமல் இரண்டு மந்திர பீஜாட்சரங்களையும் உள்ளபடியே துதிசெய்தால் பார்த்த திசைகளெல்லாம் பரப்பிரமமாகவே காணப்படும் எ - று.

யோகிகளைப் பலவேறு நாமங்களால் அழைப்பதுண் டென்பார், 'காக்கைமூக்கை யாமையா ரெடுத்துரைத்த காரணம்' எனவும், யோகஞ் செய்வதற்கு இதுவும் ஒரு வழி யென்பார், 'நாக்கையூன்றி யுள் வளைத்து நாதநாடி யூடுபோய்' எனவும், உண்மை மந்திரத்தை உச்சரித்தால் உண்மை வெளிப்படு மென்பார், 'ஏக்கைநோக்க வட்சர மிரண்டெழுத்து மேத்திடில், பார்த்தபார்த்த திக்கெலாம் பரப்பிரம மானதே' எனவுங் கூறினர். 413

## சிலாஸ்துதி விலக்கல்

ஓசையுள்ள கல்லைநீ ருடைத்திரண்டாய் செய்துமே
வாசலிற் பதித்தகல்லை மழுங்கவே மிதிக்கிறீர்
பூசனைக்கு வைத்தகல்லில் பூவும்நீருஞ் சாத்துறீர்
ஈசனுக் குகந்தகல் லெந்தக்கல்லு சொல்லுமே.

(பொ - ரை) நாதம் பொருந்திய கருங்கல் ஒன்றை நீங்கள் இரண்டாக வுடைத்து அதில் ஒன்றை வாசலிற் புதைத்து வைக்கிறீர், மற்றொரு பாதியை விக்கிரகஞ்செய்து பூசையில் வைக்கிறீர்கள். ஆனல், முன்னர் வாசலில் புதைத்த கல்லை நன்ருய் மழுங்கும்படி மிதிக்கிறீர், விக்கிரமாக வைத்த கல்லை நன்ரு யபிஷேகித்து புஷ்பத்தையுந் திருநீற்றையுந் தரிக்கிறீர். ஆகையால், இந்தக் கல் இரண்டில் எந்தக் கல் ஈஸ்வரனுக் குரியதாகும் எ - று.

கல்லுக்கு நாதமுண் டென்பார், 'ஓசையுள்ள கல்லை' எனவும், இரண்டாகச் செய்வது சுபாவந்தானே யென்பார், 'நீருடைத்திரண் டாய்ச் செய்துமே' எனவும், ஒன்றை ஓரிடத்திலும் மற்றொன்றை ஓரிடத்திலும் வைக்கின்ருர்க ளென்பார், 'வாசலிற் பதித்தகல்லை மழுங்கவே மிதிக்கிறீர், பூசனைக்கு வைத்தகல்லில் பூவுநீருஞ் சாத்துறீர்' எனவும், இரண்டும் ஒரு கல்லின் பிரிவாகையால் சர்வேஸ்வரன் எந்தக் கல்லில் இஷ்டம்வைத் தருள்வா னென்பார், 'ஈசனுக் குகந்த கல் லெந்தக்கல்லு சொல்லுமே' எனவுங் கூறினர்.

உலகத்தில் சிலாரூப வணக்கஞ் செய்பவர்கள் பெரும்பாலா ருளராகலின், அவர்களை அச் செய்கைகளினின் றும் நீக்க இங்ஙனம் கூறினரென்று வெளிப்படுகின்றது.

சர்வேஸ்வரன் சர்வ வியாபகனென்னும் பேருடையவ னகையால், அவன் இரண்டு கல்லிலுமே விருப்பங்கொண்டான் என்பது கருத்து.

414

## மந்திர விசேஷம்

ஓட்டுவைத்து கட்டிநீ ருபாயமான மந்திரங்
கட்டுபட்ட போதிலுங் கர்த்தனங்கு வாழுமோ
எட்டுமெட்டு மெட்டுளே யியங்குகின்ற வாயுவை
வட்டமிட்டு யவ்விலே வைத்துணர்ந்து பாருமே.

(பொ - ரை) ஒட்டியொட்டி வைத்துக்கட்டி நீங்கள் தந்திரமாக வைத்திருக்கும் மந்திரமானது உங்களுக்குச் சித்தியானபோதிலும், சர்வேஸ்வரன் அவ்விடத்தில் பூரணமாக வாசஞ் செய்திருப்பானோ? இருக்கமாட்டான். ஆகையால், நீங்கள் அங்ஙனஞ் செய்வதைவிட்டு இருபத்துநான்கு தத்துவங்களுள் சஞ்சரிக்கின்ற வாயுவை வட்ட வடிவமா யிருக்கின்ற ஆதாரத்தில் யகாரபீஜத்தில் மனத்தை ஒருமிக் கப்பண்ணி உணர்ந்து பாருங்கள் எ - று.

உலகர்கள் மந்திரபீஜங்களைக் கிரமத்தோடு உணர்வதில்லை யென் பார், 'ஒட்டுவைத்து கட்டிநீ ருபாயமான மந்திரம்' எனவும், சர்வேஸ் வரன் மந்திரபீஜாட்சரத்தில் முழுவியாபகனுமிரா னென்பார், 'கட்டு பட்ட போதிலுங் கர்த்தனங்கு வாழுமோ' எனவும், அகத்தத்து வத்திலேயே பிராணவாயு இயங்குகின்றதென்பார், 'எட்டுமெட்டு மெட்டுளே யியங்குகின்ற வாயுவை' எனவும், ஆஞ்ஞையிலேயே சர் வேஸ்வரன் அறியக்கிடக்கின்றாரென்பார், 'வட்டமிட்ட யவ்விலே வைத்துணர்ந்து பாருமே' எனவுங் கூறினர். 415

சர்வம் சிவம்

இந்தவூரி லில்லையென்று எங்குநாடி யோடுநீ
ரந்தவூரி லீசனு மமர்ந்துவாழ்வ தெங்ஙனே
யந்தமான பொந்திலாரில் மேவிநின்ற நாதனை
யந்தமான சீயிலவ்வி லறிந்துணர்ந்து கொள்ளுமே.

(பொ - ரை) உலகர்களே! நீங்கள் சர்வேஸ்வரன் இந்த வூரி லில்லையென்று நினைந்து பல பல இடங்களிலும் சென்று சென்று தேடுகின்றீர். அங்ஙனம் நீங்கள் செல்லுகின்ற அவ்வூர்களிலெல்லாம் சர்வேஸ்வரன் இருந்து வாழ்வானோ? ஆகையால், அழகிய சரீரத்தின் கண் அந்தர்முகமாக நின்று விளங்குகிற தலைவனை வரிசைக்கிரமமா

யிருக்கின்ற அநாகதத்தில் சிகாரம், வகாரம் என்னும் பீஜத்தில் அறிந் துணர்ந்து கொள்ளுங்கள் எ - று.

ஈஸ்வரன் சர்வ வியாபகனு யிருக்கின்ருனென்பார், 'இந்தவூரி லில்லையென்று எங்குநாடி யோடுறீர்' எனவும், ஒரு இடத்தில் மட்டுமோ இருப்பானென்பார், 'அந்தவூரி லீசனு மமர்ந்துவாழ்வ தெங்ஙனே' எனவும், அந்தர் முகத்தில் ஆராய்வோர்க்கே அநாகத ஸ்தானத் தில் உணரப்படுவோனென்பார், 'அந்தமான பொந்திலாரில் மேவி நின்ற நாதனே, யந்தமான சீயிலவ்வி லறிந்துணர்ந்து கொள்ளுமே' எனவுங் கூறினர். 416

## தேஜோ சோரூபம்

புக்கிருந்த தும்முளே பூரியிட்ட தோத்திரம்
தொக்குசட்சு சிங்குவை யாக்கிராணன் சூழ்ந்திடி
லக்குமணி கொன்றைசூடி யம்பலத்து ளாடுவார்
மிக்கசோதி யன்புடன் விளம்பிடாது பின்னையே.

(பொ - ரை) உங்களுக்குள் புகுந்திருந்த தோத்திரமானது மிக வுஞ் சிறந்ததாகும். தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் இவை களும் உங்களுடைய மனத்தோடு சம்பந்தப்படுமானல், அங்ஙனஞ் செய்விரேல் பின்னர் கொன்றை, உருத்திராக்க முதலியவைகளைத் தரித்து சிற்றம்பலத்தில் திருநடனஞ் செய்கின்ற பரமேஸ்வரனனவர் மிகுந்த தேஜோரூபமாக அன்பினுல் வெளிப்பட்டுத் தரிசனங் கொடுப்பார் எ - று.

ஜகதீஸ்வரன் ஆன்மாக்கள்தோறும் அந்தர்முகமாக எழுந்தருளி யிருப்பவனென்பார், 'புக்கிருந்த தும்முளே' எனவும், அன்பர்களும் அங்ஙனமே துதிசெய்யவேண்டுமென்பார், 'பூரியிட்ட தோத்திரம்' எனவும், அவ்வண்ணமே துதிசெய்வதானல் கருவிகளும் ஒத்திருக்க

வேண்டு மென்பார், 'தொக்கு சட்சுவை சிங்குவை யாக்கிராணஞ் சூழ்ந்திடில்' எனவும், இதனுல் சிவபெருமானுடைய கிருபை கிடைப்பது உண்மையென்பார், 'அக்குமணி கொன்றைசூடி யம்பலத்து ளாடுவார், மிக்கசோதி அன்புடன் விளம்பிடாது பின்னையே' எனவுங் கூறிஞர். 417

## சரீரம் விலக்கல்

பின்னெழுந்த மாங்கிஷத்தை பேதையர்கண் பற்றியே
பின்புமாங் கிஷத்திஞல் போகமாய்கை பண்ணிஞல்
துன்புறும் விணைகள் தான் சூழ்ந்திடும்பி னென்றலோ
அன்பரா யிருந்தபேர்க ளாறுநீந்தல் போல்விடே.

(பொ - ரை) பின்னதாக எழுந்த மாமிசத்தை அறிவில்லாதவர்கள் கண்களால் பார்த்திருந்தும் அந்த மாமிசத்திலேயே மாய்கையாகிய போகத்தைப்பண்ணிஞல் துன்பத்தை விளைவிக்கக்கூடிய பல விணைகளும்வந்து கூட்டமாகக் கூடிப் பின்னர் வருத்தஞ் செய்விக்கும் என்றல்லவா? அன்பராக விருந்தவர்களெல்லாம் ஆற்றைக் கடப்பது போல் போகத்தை கடந்திருக்கிருர்கள் எ - று.

விந்து ஊறியபின்னரே சரீரமுண்டானதென்பார், 'பின்னெழுந்த மாங்கிஷத்தை' எனவும், அறிவில்லாதவர்களே போக விருப்பங் கொள்ளுகிறவர்களென்பார், 'பேதையர்கண் பற்றியே பின்புமாங்கிஷத்திஞல் போகமாய்கை பண்ணிஞல்' எனவும், அங்ஙனஞ் செய்வதால் தீவிணை அதிகப்படு மென்பார், 'துன்புறும் விணைகள்தான் சூழ்ந்திடும்பி னென்றலோ' எனவும், பெரியோர்கள் அது செய்யாரென்பார், 'அன்பராக விருந்தபேர்க ளாறுநீந்தல் போல்விடே' எனவுங் கூறிஞர். 418

## அந்தர்முக தரிசனம்

விட்டிருந்த தும்முளே விதனமற் றிருக்கிறீர்
கட்டிவைத்த வாசல்மூன்று காட்சியான வாசலொன்று
கட்டிவைத்த வாசலுங் கதவுதாள் திறந்துபோய்த்
திட்டமான வீசனைத் தெளியுமாங் கிஷத்துளே.

(பொ - ரை) உலகர்களே! நீங்கள் அடியில்வரும் வாசல்களை யெல்லாம் விட்டு அதனால் விசனமற்றிருக்கின்றீர், அந்த வாசல்களோ கட்டிவைத்த வாசல்கள் மூன்றும், காட்சியான வாசல்கள் ஒன்றும் ஆகுமாம். அந்த அப்படிப்பட்ட கட்டிவைத்த வாசலின் கதவினுடைய தாளைத்திறந்து அந்தவழியேபோய் அங்கு அளவாகக் கலந்திருக்கும் ஈஸ்வரனை மாமிசத்திற்குள் உணர்ந்து பாருங்கள் எ - று.

ஆறுவாசல்களையும் விடக்கூடா தென்பார், 'விட்டிருந்த தும் முளே விதனமற் றிருக்கிறீர்' எனவும், அந்த வாசல்கள் தாளைத் திறந்து போகவேண்டு மென்பார், 'கட்டிவைத்த வாசலுங் கதவுதாள் திறந்துபோய்' எனவும், சர்வேஸ்வரனை அந்தர் முகமாகத் தரிசிக்க வேண்டு மென்பார், 'திட்டமான வீசனைத் தெளியுமாங் கிஷத்துளே' எனவுங் கூறினர். 419

## சிவனை வணங்குதல்

ஆகுமாகு மாகுமே யனாதியான வப்பொருள்
ஏகர்பாதம் நாடிநாடி யேத்திநிற்க வல்லிரேல்
பாகுசேர் மொழியுமைக்குப் பாலனாகி வாழலாம்
வாகுடனே வன்னியை மருவியே வருந்திடீர்.

(பொ - ரை) அப்பொருளானது அநாதியாயுள்ளதாகும். ஆகையால், அப்பொருளாகிய முதற்பொருளும் தனிப்பொருளுமான இறை

வனை உள்ளபடியே விரும்பாது துதித்திருப்பீராஞல் சர்க்கரைப் பாகுபோலும் இனிக்கின்ற சொற்களையுடைய உமாதேவிக்குப் பாலகனாகவிருந்து வாழக்கூடும், அங்ஙனஞ் செய்வதால் மிகவும் பராக்கிரமத்துடன் அக்கினியிற் சம்பந்தப்பட்டுப் பரிதபிக்க மாட்டீர்கள் எ - று.

ஒருபொருள் அநாதியாயிருக்கிறதென்பார், 'ஆகுமாகு மாகுமே யநாதியான வப்பொருள்' எனவும், அந்தப்பொருளையே நாடவேண்டுமென்பார், 'ஏகபாதம் நாடிநாடி யேத்திநிற்க வல்லிரேல்' எனவும், அங்ஙனஞ் செய்வதால் உமாதேவிக்குப் புத்திரனுகக் கூடுமென்பார், 'பாகுசேர் மொழியுமைக்குப் பாலஞகி வாழலாம்' எனவும், அவர்கள் இறவாவரத்தை யடைவார்கள் என்பார், 'வாகுடனே வன்னியை மருவியே வருந்திடீர்' எனவுங் கூறினர். 420

## வாசி தாரணை

உண்மையான தொன்றதொன்றை யுற்றுநோக்கி யும்முளே
வண்மையான வாசியுண்டு வாழ்த்தியேத்த வல்லிரேல்
தண்மைபெற் றிருக்கலாம் தவமும்வந்து நேரிடும்
கன்மதன்ம மாகுமீசர் காட்சிதானுங் காணுமே.

(பொ - ரை) உண்மையாயுள்ள பொருள் ஒன்று இருக்கின்றது. அந்தப் பொருளை நீங்கள் உங்களுக்குள்ளாகவே உற்றுப்பார்த்து அதற்காக பிராணுயாமஞ்செய்து துதிசெய்ய வல்லமை யுடையீராஞல் சாந்தகுணத்தை யடைந்திருக்கலாம், எல்லாத்தவமும்வந்து கைகூடும் கர்மதர்மங்களைக் கடாட்சிக்கும் தன்மையையுடைய சர்வேஸ்வரன் தரிசனங் கொடுத்தருளுவான் எ - று.

எக்காலத்தும் உண்மைப்பொருள் ஒன்று உண்டென்பார், 'உண்மையான தொன்றது' எனவும், அதைத் தரிசிக்கவேண்டுமென்பார், 'உற்றுநோக்கி யும்முளே' எனவும், அங்ஙனஞ் செய்வதால்

மௌனஞானத்தை யடையலாம் என்பார், 'தன்மைபெற் றிருக்கலாம்' எனவும், அங்ஙனமிருந்தால் தவங் கைகூடுமென்பார், 'தவமும் வந்து சேரிடும்' எனவும், சர்வேஸ்வரனுடைய கிருபை கைகூடு மென்பார், 'கன்மதன்ம மாகுமீசர் காட்சிதானுங் காணுமே' எனவுங் கூறினர். 421

## யோகம்

பாலனாக வேணுமென்று பத்திமுற்று மென்பரே
நாலுபாத முண்டதில் நனைந்திரண் டடுத்ததால்
மூலநாடி தன்னில்வன்னி மூட்டியந்த நீருண
ஏலவார் குழலியோடே யீசர்பாத மெய்துமே.

(பொ - ரை) பாலர்களாகவேண்டுமென்று எண்ணங்கொண்டு அதற்காகப் பக்தியானது முற்றவேண்டுமென்று சொல்லுகின்றீர். உங்களுக்கு அது வேண்டிய தன்மையானால் நான்கு பாதங்களுண்டு அதில் இரண்டு பாதங்களை யடுக்கவேண்டும். அங்ஙனம் அடுத்தால் மூலாதாரத்தில் அக்கினியை மூட்டி அந்த நீரை உண்ண வாசனை பொருந்திய நீண்ட கூந்தலையுடைய சர்வேஸ்வரி சர்வேஸ்வரன் இவர்களுடைய திருவடிகள் கைகூடும் எ - று.

கற்பஞ்செய்து என்றும் பாலனாக விருக்கவேண்டுமானால் அன்பு அதிகம்வேண்டு மென்பார், 'பாலனாக வேண்டுமென்று பத்திமுற்று மென்பரே' எனவும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்கள் உண்டென்பார், 'நாலுபாத முண்டதில்' எனவும், அவற்றில் இரண்டுபாதங்களே உயர்ந்த தென்பார், 'இரண்டடுத்த தால்' எனவும், அதற்கு மூலாதாரமே ஆதாரமென்பார், 'மூலநாடி தன்னில்வன்னி மூட்டியந்த நீருண' எனவும், இவர்களுக்கு அர்த்த நாரீஸ்வரர் வெளிப்படுவா ரென்பார், 'ஏலவார் குழலியூடே யீசர்பாத மெய்துமே' எனவுங் கூறினர். 422

## அன்பு

எய்துநின்னை யன்பினு லிறைஞ்சியேத்த வல்லிரே
லெய்துமுண்மை தன்னிலே யிறப்பிறப் பகற்றிடும்
மையிலங்கு கண்ணிபங்கன் வாசிவானி லேறிமுன்
செய்தவல் வினைகளுஞ் சிதறுமது திண்ணமே.

(பொ - ரை) சர்வ ஆன்மகோடிகளுக்கும் மோட்சங் கொடுப்பவனைப் பொருந்திய உன்னை உள்ளன்பினுல் வணங்கித் துதிசெய்ய வல்லமையுடையீராயினும் உண்மையாகவே பிறப்பிறப்புக்கள் உங்களை விட்டு நீங்கும். ஆயினும், மைதீட்டிய கண்களையுடைய உமாதேவியின் பங்கனுகிய பரமேஸ்வரன் எழுந்தருளியிருக்கின்ற ஆகாயத்தில் வாசியாகிய குதிரைமேலேறிச்சென்றால் நீங்கள் பூர்வத்தில் செய்த கொடிய வினைகளெல்லாஞ் சிதறுண்டுபோகும், இது உண்மையாகும் எ - று.

சிவபெருமான் சர்வ ஜீவான்மாக்களுக்கும் சுதந்தரமுடையவனென்பார், 'எய்துநின்னை' எனவும், அவனை உள்ளன்பினுல் வணங்க வேண்டு மென்பார், 'அன்பினு லிறைஞ்சியேத்த வல்லிரேல்' எனவும், அவர்களுக்கு ஜெந்மம் வருவதில்லை யென்பார், 'உண்மை தன்னிலே யிறப்பிறப் பகற்றிடும்' எனவும், ஆஞ்ஞாஸ்தானத்தில் இறைவனை உணரவேண்டு மென்பார், 'மையிலங்கு கண்ணிபங்கன் வாசி வானி லேறி' எனவும், அங்ஙனஞ் செய்வதால் வினைகள் ஒழியு மென்பார், 'செய்தவல் வினைகளுஞ் சிதறுமது திண்ணமே' எனவுங் கூறினர். 423

## வாசி யோகம்

திண்ணமென்று சேதிசொன்ன செவ்வியோர்கள் கேண்மி
யண்ணலன்பு ளன்புகுந்து யறிந்துநோக்க லாயிநிம் [னே

மண்ணதிர விண்ணதிர வாசியை நடத்திடில்
நண்ணியெங்க ளீசனும் நமதுட லிருப்பனே.

(பொ - ரை) அது உண்மையென்று வார்த்தைசொன்ன பெரியோர்களே! நீங்கள் கேளுங்கள். பெருமையிற் சிறந்த பரமேஸ்வரனிடத்தில் வைத்த அன்பினால் மனமானது இளகி உண்மையாகவுணர்ந்து பார்க்க வல்லமையுடையீரானாலும், பூமியும் ஆகாயமும் குலுங்கும்படி குதிரையை நடத்தினாலும், எங்களுடைய சர்வேஸ்வரனவன் நம்முடைய சரீரத்தில் கலந்திருப்பான் எ - று.

சர்வ காரியங்களையும் உண்மையை யுணர்ந்தவர்களே ஆராய வேண்டுமென்பார், 'திண்ணமென்று சேதிசொன்ன செவ்வியோர்கள் கேண்மினோ' எனவும், உள்ளன்பினால் தரிசிப்பவர்கட்கே இறைவன் திருவருள் செய்வானென்பார், 'அண்ணலன்பு ளன்புருகி யறிந்து நோக்க லாயிடும்' எனவும், பிருதிவி பூதத்திற்கும், ஆகாச பூதத்திற்குஞ் சம்பந்த மிருக்கிறபடியால் பிராணயாமஞ் செய்யுங்கால் இவ்விரண்டும் நடுங்குமென்பார், 'மண்ணதிர விண்ணதிர வாசியை நடத்திடில்' எனவும், சர்வேஸ்வரன் வாசியோகத்தார்க்கே வெளிப்படுவானென்பார், 'நண்ணியெங்க ளீசனும் நமதுட லிருப்பனே' எனவுங் கூறினார். 424

## சர்வ வியாபகம்

இருப்பனெட்டெட் டெண்ணிலே யிருந்துவேற தாகுவன்
நெருப்புவாயு நீருமண்ணும் நீள்விசும்பு மாகுவான்
கருப்புகுந்து காலமே கலந்தசோதி நாதனைக்
குருப்புனலில் மூழ்கினர் குறித்துணர்ந்து கொள்வரே.

(பொ - ரை) சிவபெருமானானவன் எட்டெட்டு அறுபத்து நான்கு என்னும் எண்ணைக்கொண்ட தத்துவங்களிற் கலந்திருந்து

மீண்டும் அவைகளுக்கு வேருகுவன். அன்றி, நெருப்பு, வாயு, நீர், மண், ஆகாசம் ஆகிய இவைகளுமாகுவன். கருவின்கண் புகுந்த சீக்கிரத்தில் கலந்து தேஜோமயமாய் விளங்கிக்கொண்டிருந்த தலைவனை, ஆசாரியாபிஷேகத்தால் மூழ்கப் பெற்ருேர் நன்ரு யறிந்துணர்ந்து கொள்வார்கள் எ - று.

சிவபெருமான் புறத் தத்துவங்களிலும் வாழ்வானென்பார், 'இருப்பனெட்டெட் டெண்ணிலே' எனவும், அவைகட்கு வேருகவு மிருப்பா னென்பார், 'இருந்துவேற தாகுவன்' எனவும், பஞ்சபூத சொரூபனுமாவா னென்பார், 'நெருப்புவாயு நீருமண்ணும் நீள்விசும்பு மாகுவன்' எனவும், அவனே கருவிலிருந்த நாள்முதல் காப்பாற்று கின்ரு னென்பார், 'கருப்புகுந்த காலமே கலந்துசோதி நாதனே' எனவும், இதைக் குருபதேசம் பெற்றவர்க ளுணர்வார்க ளென்பார், 'குருப்புனலில் மூழ்கினுர் குறித்துணர்ந்து கொள்வரே' எனவுங் கூறினுர்.

425

## சோதி சொரூபம்

கொள்ளுவார்கள் சிந்தையிற் குறிப்புணர்ந்த ஞானிகள்
விள்ளுவார்கள் பக்குவத்தில் வேண்டிவேண்டி யேத்தினுல்
உள்ளுமாய் புறம்புமா யுணர்வதற் குணர்வுமாய்த்
தெள்ளிதாக நின்றசோதி செம்மையைத் தெளிந்திடே.

(பொ - ரை) குறிப்புக்களை யெல்லாம் உள்ளபடியே உணர்ந்த ஞானிகள் சிவபெருமானுடைய திருவடிகளை எக்காலத்திலும் மனத்திற்கொண்டு சிந்திப்பார்கள் அப்படிப்பட்டவர்களைப் பலமுறையும் வேண்டி வேண்டித் துதிசெய்தால் அவர்கள் பக்குவமறிந்து உபதேசிப்பார்கள். அதின் பின்னர் உள்ளிடமாகியும், வெளியிடமாகியும், உணர்வுக் குணர்வாகியும் தெளிவுடனே எழுந்தருளியிருந்த தேஜோமயக் கடவுளை நீங்கள் நன்ருய்த் தெரிந்துகொள்ளுங்கள் எ - று.

ஞானசிரியர்கள் சீடர்களுடைய பரிபாகத்தை நன்றா யுணர்ந்தே உபதேசிக்க வேண்டு மென்பார், 'கொள்ளுவார்கள் சிந்தையிற் குறிப்புணர்ந்த ஞானிகள் விள்ளுவார்கள் பக்குவத்தில்' எனவும், அங் ஙனமான உபதேசத்தைப்பெற அவர்களைப் பன்முறையுந் துதிக்க வேண்டுமென்பார், 'வேண்டிவேண்டி யேத்தினல்' எனவும், சர்வேஸ்வரன் சர்வவியாபக முள்ளவனெனபார், 'உள்ளுமாய்ப் புறம்புமா யுணர்வதற் குணர்வுமாய், தெள்ளிதாக நின்றசோதி செம்மையைத் தெளிந்திடே' எனவுங் கூறினர். 426

## நால்வகை முத்தி

தெளிந்தநற் சரியைதன்னில் சென்றுசா லோகம்பெறும்
தெளிந்தநற் கிரியைபூசை சேரலாஞ் சாமீபமே
தெளிந்தநல் யோகந்தன்னில் சேரலாகுஞ் சாரூபந்
தெளிந்தஞானம் நான்கிலுஞ் சேரலாஞ் சாயுச்சியமே.

(பொ - ரை) யாவராலும் ஆராய்ந்தறிந்த நல்ல சரியா மார்க்கத்தில் சாலோகத்தையும், தெளிவாகிய கிரியாபூசையால் சாமீபத்தையும், யோகமார்க்கத்தால் சாரூபத்தையும், ஞானமார்க்கத்தால் சாயுச்சியத்தையும் அடையலாம் எ - று.

மார்க்கங்கள் நான்கனுள் சரியாமார்க்கத்தின் பயன் சாலோகமென்பார், 'தெரிந்தநற் சரியைதன்னில் சென்றுசா லோகம்பெறும்,' எனவும், கிரியாமார்க்கத்தின் பயன் சாமீபமடைவ தென்பார், 'தெளிந்தநற் கிரியைபூசை சேரலாஞ் சாமீபமே' எனவும், யோகமார்க்கத்தால் சாரூபத்தை யடையக் கூடுமென்பார், 'தெளிந்தநல் யோகந்தன்னில் சேரலாகுஞ் சாரூபம்' எனவும், ஞான மார்க்கத்தால் சாயுச்சிய பதவியை யடையலாமென்பார், 'தெளிந்தஞானம் நான்கிலுஞ் சேரலாஞ் சாயுச்சியமே' எனவுங் கூறினர்

இக்கருத்து சிவஞான சித்தியாரிற் கூறப்பட் டிருக்கிறது அதனு லறியக் கடவர். 427

புத்தி கூறல்

சேருவார்கள் ஞானமென்று செப்புவார் தெளிவுளோர்
சேருவார்கள் நாலுபாதச் செம்மையென்ற தில்லையே
சேருவார்கள் சிவகதி திருவளைப் பெற்றபேர்
சேறுமாறு கண்டுநாலுஞ் செய்தொழில் திடப்படே.

(பொ - ரை) அறிவுள்ளவர்கள் ஒன்ருகச்சேர்ந்து ஞானமென்று ஒன்று இருக்கிறதென்று சொல்லுவார்கள். அன்றி, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையுஞ் சேருவார்கள். ஆனல், அந்த நான்கு பாதங்களில் செம்மையென்பது இல்லையாகும். திருவருளை யடைந்தவர்கள் சிவகதியை யடைவார்கள். அதுபோலவே சிவகதியை அடையும்படி பார்த்து மேற்படி நான்கு பாதங்களையும் நன்ருயாராய்ந்து அத் தொழில்களில் திடப்படுவீராக எ - று.

அறிவுள்ளவர்கள் ஞானமென்கிற ஒன்று உண்டென்று சொல்லு வார்க ளென்பார், 'சேருவார்கள் ஞானமென்று செப்புவார் தெளி வுளோர்' எனவும், நான்கு பாதங்களின் முத்தியே உயர்ந்ததென்பார், சேருவார்கள் நாலுபாதஞ் செம்மையென்ற தில்லையே' எனவும், திருவருளை யடைந்தவர்களே சிவகதியை யடைவார்க ளென்பார், 'சேருவார்கள் சிவகதி திருவருளைப் பெற்றபேர்' எனவும், யாவரும் இந்த நான்கு வழியிலேயே உய்யவேண்டு மாகையால் அவைகளைக் கைப்பற்றவேண்டு மென்பார், 'சேருமாறு கண்டுநாலுஞ் செய் தொழில் திடப்படே' எனவுங் கூறினர். 428

வாசி யோகம்

திறமலிக்கு நாலுபாதஞ் செம்மையுந் திடப்படார்
அறிவிலிகள் தேசநாடி யவத்திலே யலைவதே !

குறியதனைக் காட்டியுட் குறித்துநோக்க வல்லிரேல்
வெறிகமழ் சடையுடையோன் மெய்ப்பத மடைவரே.

(பொ - ரை) வண்மை விளங்குகின்ற சரியை முதலிய நான்கு பாதங்களின் வகைகளை திறமையா யறியார்கள். அறிவில்லாதவர்களெல்லாம் பலபல தேசங்களை நாடிச் சென்று அலைவது ஏன்? சர்வேஸ்வரனுடைய குறியைக் காட்டி அவரை உள்ளபடியே குறித்து நோக்க வல்லமை யுடையீரானல் வாசனை வீசுகின்ற சடாமுடியை யுடைய பரமேஸ்வரனுடைய திருவடிகளை அடைவீர்கள் எ - று.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கும் உயிர்க்கு வெற்றியைக் கொடுப்பதென்பார், 'திறமலிக்கு நாலுபாதஞ் செம்மையுந் திறப்படார்' எனவும், அஞ்ஞானிகள் பல விடங்களிலுந் தேடுவார்களென்பார், 'அறிவிலிகள் தேசநாடி யலைவதே' எனவும், அந்தர்முக தரிசனத்திலேயே இறைவனுடைய திருவருள் கைகூடுமென்பார், 'குறியதனைக் காட்டியுங் குறித்துநோக்க வல்லிரேல் வெறிகமழ் சடையுடையோன் மெய்ப்பத மடைவரே' எனவுங் கூறினர். 429

இதுவுமது

அடைவுளோர்கள் முத்தியை யறிந்திடாத மூடரே
படையுடைய தத்துவமும் பாதகங்க ளல்லவோ
மடைதிறக்க வாரியின் மடையிலேறு மாறுபோல்
உடலில்மூல நாடியை யுயரவேற்றி யூன்றிடே.

(பொ - ரை) அடைவு உள்ளவர்களாகிய பெரியோர்களால் உணரக்கூடிய மோட்சத்தை அறியாத மூடர்களே! வரிசை வரிசையாகவுள்ள தத்துவக் கூட்டங்களும் பாதகங்களே யல்லவா? ஒருவன் தான் போட்டுவைத்திருந்த மடையை எடுக்க அந்தச் சலமானது சமுத்திரத்தின் மடையைத்திறந்து பாய்வதுபோல சரீரத்திலுள்ள மூல நாடியை ஆஞ்ஞைவரைக்கு மேற்றி ஊன்றிப் பாருங்கள் எ - று.

மோட்ச சாதனத்தைப் பரிபாகிகளே விரும்புவார்க ளென்பார், அடைவுளோர்கள் முத்தியை' எனவும், இதை அஞ்ஞானிகள் அறிய மாட்டார்க ளென்பார், 'அறிந்திடாத மூடரே' எனவும், தத்துவஞான மும் போராட்டமே யென்பார், படையுடைய தத்துவமும் பாதகங்க ளல்லவோ' எனவும், அளவுகடந்த பிராணயாமத்தால் அது கைகூடு மென்பார், மடைதிறக்க வாரியின் மடையிலேறு மாறுபோல் உடலில் மூல நாடியை யுயரவேற்றி யூன்றிடே' எனவுங் கூறினர். 430

## இதுவுமது

ஊன்றியேற்றி மண்டல முருவிமூன்று தாள்திறந்
தான்றுதந்தி யேறிடி லமுர்தம்வந் திறங்கிடும்
நான்றிதென்று தொண்டருக்கு நாதனும் வெளிப்படு
மான்றியு முயிர்பரம் பொருந்திவாழ்வ தாகவே.

(பொ - ரை) ஊன்றியூன்றி வாசியை ஏற்றிமூன்று மண்டலங் களின் தாளைத் திறந்து அதன் வழியாகச் செல்லுகின்ற பெருமை பொருந்திய நாடியின் வழியாக ஏறிச்சென்றால் அமிர்தமானது வந்து இறங்கும், இது தொங்கினதென்ற தொண்டர் நாதனாகிய பரமேஸ்வ ரன் தர்சனங் கொடுத்தருளுவான். தவிர, உயிரும் பரவஸ்துவில் கலந்து வாழா நிற்கும் எ - று.

வாசியை நன்றாக ஊன்றியேற்றினால் சோம, சூரிய, அக்கினி மண்டலங்கள் திறக்கப்படுவனவாகு மென்பார், 'ஊன்றியேற்றி மண் டல முருவிமூன்று தாள்திறந்து' எனவும், அங்ஙனஞ் சோமமண்ட லத்தில் அமிர்தம் வந்து இறங்கு மென்பார், 'ஆன்றுதந்தி யேறிடி லமிர்தம்வந் திறங்கிடும்' எனவும், இங்ஙனஞ் செய்வதால் சர்வேஸ்வ ரன் வெளிப்படுவா னென்பார், 'நான்றிதென்று தொண்டருக்கு நாத னும் வெளிப்படும்' எனவும், அங்ஙனஞ் செய்வதால் சீவனும் சிவனுக்க

கூடும் என்பார், 'ஆன்றியு முயிர்பரம் பொருந்தி வாழ்வதாகவே' எனவுங் கூறினர். 431

## இதுவுமது

ஆகமூல நாடியி லனலெழுப்பி யன்புடன்
மோகமான மாயையில் முயல்வது மொழிந்திடில்
தாகமேரு நாடியேக னேகமான வாறுபோ
லேகர்பாத மன்புட னிறைஞ்சினு ரறிவரே.

(பொ - ரை) பொருந்திய மூலாதாரத்தில் கிளம்புகின்ற நாடியிலிருந்து அக்கினியை எழுப்பி அன்புடனே யாவரும் மோகிக்கக்கூடிய மாய்கையில் செய்வதைச் சொல்லுமிடத்தில் மேருவாகிய நாடியில் அநேகவிதமாக ஒருவனுகிய பரமேஸ்வரனுடைய திருவடிகளில் அன்புடன் வணங்கினவர் உணர்வார்கள் எ - று.

மூலாதார நாடியில் யோகஞ்செய்வோர் பிராணுயாமத்தால் அக்கினி எழுப்பவேண்டு மென்பார், 'ஆகமூல நாடியி லனலெழுப்பி' எனவும், எவைகளையும் அன்பினுல் அடையவேண்டு மென்பார், 'அன்புடன்' எனவும், மாய்கையின் கொடுமை மிகவும் பெரிதென்பார், 'மோகமான மாயையில் முயல்வது மொழிந்திடில்' எனவும், மேருவாகிய சிரசின்கண் வாசியைச் செலுத்தினுர்க்கே மோட்சகர்த்தாவாகிய இறைவனுடைய கிருபை கைகூடுமென்பார், 'தாகமேரு நாடியே கனேகமான வாறுபோல், ஏகர்பாத மன்புட னிறைஞ்சினு ரறிவரே' எனவுங் கூறினர். 432

## இதுவுமது

அறிந்துநோக்கி யும்முளே யயன்தியான மும்முளே
யிருந்திராம லேகர்பாதம் பெற்றிருப்ப துண்மையே

யறிந்துமீள வைத்திடா வகையுமரண மேத்தினர்
செறிந்துமேலை வாசலைத் திறந்துபாரு மும்முளே.

(பொ - ரை) உண்மையை யாராய்ந்து பார்த்து உங்களுக்குள்ளாகவே பிரம தியானத்தைச் செய்து உங்களுக்குள்ளேயே அடங்கி வீணாக விராமல் எந்த அடக்கத்தில் ஒருவனாகிய பரமேஸ்வரனுடைய திருவடிகளை உங்களுடைய மனத்தின்கண் உண்மையாகப் பெற்றிருக்கவேண்டும். அன்றி, அந்தக்கிரமத்தை உள்ளபடியே உணர்ந்தும் அவைகளை மறுபடியும் மறவாமல் மரணபரியந்தம் துதிசெய்து அவ்விடத்தில் கலந்திருந்து மேல் வாசலைத் திறந்து உங்களுடைய இருதயத்தின்கண் வெளிப்படையாய்ப் பாருங்கள் எ - று.

எவ்வெவ் வான்மாக்களும் தங்களால் செய்யக்கூடிய தியானத்தை அந்தர்முகமாகவே செய்யவேண்டு மென்பார், 'அறிந்துநோக்கி யும்முளே யயன்தியான மும்முளே' எனவும், சிவபெருமானுடைய திருவடிகளையே உண்மையாகப் பெற்றிருக்க வேண்டு மென்பார், 'இருந்திராம லேகர்பாதம் பெற்றிருப்ப துண்மையே' எனவும், இவ்வண்ணம் மரணபரியந்தம் துதி செய்யவேண்டு மென்பார், 'அறிந்துமீள வைத்திடா வகையுமரண மேத்தினர்' எனவும், இவைகளெல்லாம் மேல்வாசலைத் திறந்தாலே பயன்படுவ தென்பார், 'செறிந்துமேலை வாசலைத் திறந்துபாரு மும்முளே' எனவுங் கூறினர். 433

## தேஜோ ரூபம்

சோதியாக வும்முளே தெளிந்துநோக்க வல்லிரேல்
சோதிவந் துதித்திடுந் துரியாதீத முற்றிடு
மாதிசக் கரத்தினி லமர்ந்துதீர்த்த மாடுவன்
பேதியாது கண்டுகொள் பிராணனைத் திருத்தியே.

(பொ - ரை) உங்களுடைய உள்ளத்தின்கண் சிவபெருமானைத் தேஜோ சொரூபமாகப் பாவித்து தரிசிக்க வல்லமை யுடையீரானால் அந்தத் தேஜோமயப்பொருளானது வந்து தோன்றும், அப்பொழுது துரியாதீதம் என்பதும் கைகூடும். அப்பொழுது ஆதிப் பொருளானது உடற்சக்கரத்தில் பொருந்தி தீர்த்தமாடுவன். மனம் பேதியாமல் சர்வேஸ்வரனைத் திருத்திக் கண்டுகொள்க எ - று.

ஆன்மாக்கள் சர்வேஸ்வரனை சோதி சொரூபமாகத் தரிசிக்க வேண்டுமென்பார், 'சோதியாக வும்முளே தெளிந்துநோக்க வல்லிரேல்' எனவும், அப்போது துரியாதீதப் பொருள்வந்து தோன்றிடுமென்பார், 'சோதிவந் துதித்திடுந் துரியாதீத முற்றிடும்' எனவும், அவனும் உடலின்கண் அமர்ந்து விளையாடுவனென்பார், 'ஆதிசக்கரத்தினி லமர்ந்துதீர்த்த மாடுவன்' எனவும், ஆனால் மனோவிகற்ப மில்லாமல் உணரவேண்டுமென்பார், 'பேதியாது கண்டுகொள் பிராணனைத் திருத்தியே' எனவுங் கூறினர். 433

## இதுவுமது

திருவுமாய் சிவனுமாய் தெளிந்துளோர்கள் சிந்தையில்
மருவிலே யெழுந்துவீசும் வாசனைய தாகுவன்
கருவிலே விழுந்தெழுந்த கன்மவாத னையெலாம்
பருதிமுன் னிருளதாய் பறியுமங்கி பாருமே.

(பொ - ரை) இலட்சுமியாகியும், சிவனாகியும், தெரிந்தவர்கள் மனத்தில் எழுந்து வீசுகின்ற உயர்ந்த மணமுள்ள வஸ்துவைப்போலாவான். கருவிலுண்டான கர்மத்தால் விளையும் வேதனைகளெல்லாம் அவனுக்குமுன் காணப்பட்டால் சூரியன்முன் காணப்பட்ட இருளைப்போல் நீங்கும். ஆயின், இது அக்கினிமயத்தின் விசேஷமாகும் எ - று.

சிவபெருமான் சத்திகளுமாவா னென்பார், 'திருவுமாய் சிவனுமாய்' எனவும், ஞானிகள் சிந்தையில் மணக்கின்றவ னென்பார்,

'தெளிந்துளோர்கள் சிந்தையில் மருவியே யெழுந்துவீசும் வாசனையை தாகுவன்' எனவும், இவனை உள்ளபடியே உணர்ந்தார்க்கு கர்மங்கள் விட்டோடுவனவாகு மென்பார், 'கருவிலே விழுந்தெழுந்த கன்மவா தனையெலாம், பருதிமுன் னிருளதாய் பறியுமங்கி பாருமே' எனவுங் கூறினர். 435

## ஈஸ்வர சோரூபம்

பாருமெந்தை யீசர்வைத்த பண்பிலே யிருந்துநீர்
சேருமே நடுவறிந்து செம்மையான வப்பொருள்
வேரையும் முடியையும் விரைந்துதேடி மாலயன்
பாரிடந்து விண்ணிலே பறந்துங்கண்ட தில்லையே.

(பொ - ரை) உலகத்தவர்களே! நீங்கள் கவனித்துப் பாருங்கள் எம்முடைய தந்தையாகிய சிவபெருமான் ஏற்படுத்திவைத்த குணத் தில் நீங்களிருந்துகொண்டு அவைகளின் நடுவு நிலைமைகளை நன்கு யுணர்ந்து செம்மையாகிய அந்தப் பொருளை ஆதியந்தமாக அநுபவத் தில் தேடி விஷ்ணு, பிரமர்கள் பூமியைத் தோண்டியும், ஆகாசத்தில் பறந்துங் காணாத இறைவனை உள்ளபடியே ஆராய்ந் துணருங்கள் எ-று.

சிவபெருமான் ஆன்மாக்களுக்கென்றே வேதவிதி ஏற்படுத்தின னென்பார், 'பாருமெந்தை ஈசர்வைத்த பண்பிலே' எனவும், அவற் றின் வழி நிற்கவேண்டு மென்பார், 'இருந்துநீர்' எனவும், சிவபெருமா னது அடிமுடிகளைத் தேட எவராலும் முடியாதென்பார், 'வேரையு முடியையும் விரைந்துதேடி மாலயன், பாரிடந்து விண்ணிலே பறந் துங்கண்ட தில்லையே' எனவுங் கூறினர்.

இறைவன் விஷ்ணு பிரமர்களால் அறியப்படான் என்றதை:

"யாதவர் குலத்துநெடு மாதவன் மருப்புடைய
வேன மிருகத் துருவமாய்

வேதமொழி பெற்றவயனோதிம மெனப்பறவை
வேடமு மெடுத்த திலையோ
ஓதருணை வித்தகரை மூவரி லொருத்தரென
வோதியிடு மற்ப மதியீர்
சீதமதி வைத்தமுடி பாதமலரைச் சிறிது
நேடுத னினைத்த பரமே'' எனவுங் கூறியதினாலறிக.

சிவபெருமான் அழியாதவன் என்றதை:

"கோடிவிதி மாளில் குலாவுகமலக் கண்ணன்
ஓடிவட வாலுறங் குமே—நாடுங்கால்
அக்கண்ணர் கோடி யழியி லருணகிரி
நக்கனருள் சற்றே ஈகும்'' என்பதினாலறிக.

வேதம் சிவபெருமானால் ஏற்படுத்தப்பட்டதென்று சிலரும், அநாதியாயுள்ளதென்று சிலரும் சொல்லிக்கொண்டு வருவது சகசமா யிருப்பதால் அந்தச் சந்தோஷத்தைத் தீர்த்து மனத்தை தெளிவு படுத்த சிவபெருமானால் தோற்றப்படுத்தப்பட்டதே யென்று சாதிப் பார், 'பாருமெந்தை யீசர்வைத்த பண்பு' எனக் கூறினார்.

இதனை:

வேதமோ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக
நாத னுரையிவை நாடிலிரண் டந்தம்
பேதம தென்னில் பெரியோர்க் கபேதமே'' என்பதினாலறிக. ()

## இதுவுமது

கண்டிலா தயன்மாலென்று காட்சியாகச் சொல்லுறீர்
மிண்டினா லரனுடன் மேவலா யிருக்குமோ
தொண்டுமட்டு மன்புடன் தொழுதுநோக்க வல்லிரேல்
பண்டுமுப் புரமெரித்த பத்திவந்து முற்றுமே.

(பொ - ரை) பிரமனும் விஷ்ணுவும் சர்வேஸ்வரனைக் காட்சிப் பொருளாகக் காணவில்லை யென்று சொல்லுகின்றீர். ஆனாலும், அதிக மாக மிருந்தவர்களாகவானாலும், சர்வேஸ்வரனுடன் கலந்திருக்க ஆகுமோ? ஆகாது! ஆகாது!! ஆகையால், அன்பர்களுடன் சேர்ந்து கொண்டு தொண்டுசெய்து அன்பினால் வணங்கித் தரிசிப்பீரானால் பூர்வத்தில் திரிபுரங்களையும் எரித்தவனான பரமேஸ்வரனுடைய பக்தியானது வந்து கைகூடும் எ - று.

பிரம, விஷ்ணுக்கள் மாயாசகிதர்களாகையால் அவர்களால் சர் வேஸ்வரன் அறியப்படா னென்பார், 'கண்டிலா தயன்மாலென்று காட்சியாகச் சொல்லுறீர்' எனவும், உயர்ந்தவனுடன் தாழ்ந்தவர்கள் சேரமுடியா தென்பார், 'மிண்டினா லரனுடன் மேவலாக யிருக்குமோ' எனவும், அன்பர்களுடன் சேர்ந்து தானுமொரு அன்பனாய் வணங்க வேண்டுமென்பார், 'தொண்டுமேட்டு மன்புடன் தொழுதுநோக்க வல்லி ரேல்' எனவும், இங்ஙனஞ் செய்வதனால் சிவபெருமானுடைய திரு வருள் கைகூடு மென்பார், 'பண்டுமுப் புரமெரித்த பத்திவந்து முற் றுமே' எனவுங் கூறினார். 437

இதுவுமது

முற்றுமே யவனொழிந்து முன்பினென்றுங் காண்கிலேன்
பற்றிலாத தொன்றுதன்னை பற்றிநிற்க வல்லது
கற்றதாலே யீசர்பாதங் காணலா யிருக்குமோ
பெற்றபேரை யன்புடன் பிரியமாகக் கேளுமே.

(பொ - ரை) யாதொரு பொருளினிடத்தும் பற்றில்லாத ஒரு பொருளை நான் பிடித்துநிற்க முழுவதும் அவனொழிந்து முன்னும் பின்னும் அவனிருப்பதாகக் காணப்படவில்லை. ஆகையால், சிலர் கற் றிருக்குங் கல்வியால் சிவபெருமானுடைய திருவடிகளைக் காணலா மென்று சொல்லுகிறார். ஆனால், அங்ஙனமாகாது. அவ்வண்ணம்

யாராவது கற்ற கல்வியால் ஈஸ்வரனுடைய திருவருளைப் பெற்றிருந் தால் அவர்களைச் சொல்லுங்கள் பார்ப்போம் எ - று.

சிவபெருமானுடைய திருவருள் முழுமையுங் கிடைக்கப் பெற்றால் அவனுடைய தரிசனங் காணப்படுவதன்றி வேறொன்றுங் காணப் படாதென்பார், 'முற்றுமே யவனொழிந்து முன்பின்னொன்றுங் காண் கிலேன்' எனவும், இறைவன் யாதொன்றிலும் பற்றில்லாதவனென் பார், 'பற்றில்லாத தொன்று தன்னை' எனவும், அவனையே எவரும் பற்றவேண்டுமென்பார், 'பற்றிநிற்க' எனவும், வித்தை கற்றதனால் சிவபெருமானுடைய திருவருள் கிடைக்குமோ என்பார், 'கற்றதாலே ஈசர்பாதங் காணலா யிருக்குமோ' எனவும், அச்சிவப் பேறுபெற்ற தினால் அவர்களுடைய பெருமைபேச இடங்கொடுக்கிறதென்பார், 'பெற்றபேரை யன்புடன் பிரியமாகக் கேளுமே' எனவுங் கூறினார் ()

## யோகம்

கேட்டுநின்ற வுன்னிலை கிடைத்தகா லத்துளே
வாட்டமுள்ள தத்துவ மயக்கமு மகற்றிடும்
வீட்டிலே வெளியதாகும் விளங்கவந்து நேரிடுங்
கூட்டிவன்னி மாருதங் குயத்தைவிட் டெழுப்புமே.

(பொ - ரை) யாவராலும் கேட்கப்பட்டுநின்ற உன்னுடையநிலை யானது எங்களுக்குக் கிடைத்தகாலத்தில் மனவாட்டத்தைக் கொடுத்து வந்த தத்துவ மயக்கத்தையும் கொடுக்கும். வீட்டில் வெளியுமாய் நேரி டும் அக்கினியையுங் காற்றையும் குய்யத்தைவிட்டு எழுப்பும் எ - று.

சிவபெருமானுடைய உண்மை நிலையானது பரிபாகிகளுக்கே வெளிப்படுவதென்பார், 'கேட்டுநின்ற வுன்னிலை கிடைத்த காலத் துளே' எனவும், அவனருள் வெளிப்பட்டுழி தத்துவமயக்கங்கள் தலை காட்டா வென்பார், 'வாட்டமுள்ள தத்துவமயக்கமு மகற்றிடும்' என

வும், மோட்சமுங் கைகூடுமென்பார், 'வீட்டிலே வெளியதாகும் விளங்கவந்து நேரிடும்' எனவும், இங்ஙனம் நிகழ்வதற்கு மூலாதாரத்தி லிருந்து பிராணயாமஞ் செய்யவேண்டு மென்பார், 'கூட்டிவன்னி மாருதங் குயத்தைவிட் டெழுப்புமே' எனவுங் கூறினர். 439

## இதுவுமது

எழுப்பிமூல நாடியை யிதப்படுத்த லாகுமே
மழுப்பிலாத சபையைநீர் மலித்துவாங்க வல்லிரேல்
சுழுத்தியுங் கடந்துபோய் சொப்பனத்தி லப்புற
மழுத்தியோ ரெழுத்துளே யமைப்பதுண்மை யையனே.

(பொ - ரை) மூலாதாரத்திலுள்ள நாடியை எழுப்பி அதைப் பக்குவப் படுத்தக் கூடும். ஆகையால், என்றைக்கும் அழிதலில்லாத அசபாமந்திரத்தால் வலித்துவாங்க வல்லமை யுடையீரானல், சுழுத்தி ஸ்தானத்தைக் கடந்துபோய் சொப்பனவிடத்திற் சென்று அதற்கப் புறத்தில் தியானத்தை யழுத்தி எழுத்தாகிய பிரணவத்திற்குள் அமர்ந்திருப்பது உண்மை வழியாகும் எ - று.

யோகசாதக முள்ளவர்கள் மூலாதாரத்தின்கண் செய்யும் பிராணயாமத்தால் வாசியைப் பக்குவப் படுத்தவேண்டு மென்பார், 'எழுப்பி மூல நாடியை யிதப்படுத்த லாகுமே' எனவும், அங்ஙனமே அசபா மந்திரத்தையும் உச்சரிக்க வேண்டுமென்பார், 'மழுப்பிலாத சபையை வலித்துவாங்க வல்லிரேல்' எனவும், சுழுத்திஸ்தான மாகிய இருதயத்தையும், சொப்பன ஸ்தானமாகிய கண்டத்தையும் கடந்துநிற்கின்ற துரிய ஸ்தானத்தில் பிரணவத்தை உச்சரிக்க வேண்டுமென்பார், 'மழுப்பிலாத சபையைநீர் மலித்துவாங்க வல்லிரேல், சுழுத்தியங் கடந்துபோய் சொப்பனத்தி லப்புறம், அழுத்தியோ ரெழுத்துளே யுமைப்பதுண்மை யையனே' எனவுங் கூறினர். 440

## இதுவுமது

அல்லதில்லை யென்றுதா னுவியும் பொருளுடல்
நல்லவீசர் தாளிணைக்கு நாதனுக்கு மீந்திலை
என்றுமென்னுள் நேசமும் வாசியை வருந்தினல்
தொல்லையாம் வினைவிடென்று தூரதூர மானதே.

(பொ - ரை) இருந்து அல்லாதபொருளோ அது இல்லாதபொருளாகும். ஆகையால், ஆவி, பொருள், உடல் இம்மூன்றையும் யாவருக்கும் உயர்ந்த சர்வேஸ்வரனுடைய திருவடிகளுக்குத் தத்தஞ்செய்து கொடுக்கவேண்டும். அங்ஙனங் கொடுத்தால் உன்னிடத்தில் விஸ்வாசமும் வைக்க விரும்புவார். ஆகையால், வாசியினிடத்தில் விருப்பம்வைத்து அதை விரும்பி நடத்தினல் புராதனமாகச் செய்து வைத்திருக்கின்ற வினைகளெல்லாம் கிடைக்கவேண்டியது வீடென்று தூரமாக ஓடிவிடும் எ - று.

இல்லாத பொருள் உண்டாகா தென்பார், 'அல்லதில்லை யென்று' எனவும், உடல், பொருள், ஆவி யென்கிற மூன்றையும் ஆசாரியனிடத்தில் தத்தஞ்செய்ய வேண்டுமென்பார், 'ஆவியும் பொருளுடல் நல்லவீசர் தாளிணைக்கு நாதனுக்கு மீந்திலை' எனவும், அங்ஙனஞ் செய்வதால் சர்வேஸ்வரன் திருவருள் செய்வா னென்பார், 'என்று என்னுள் நேசமும்' எனவும், சிவசொரூபத்தை யடைய விரும்புகின்ற ஒவ்வொருவரும் பிராணயாமஞ் செய்யவேண்டு மென்பார், 'வாசியை வருந்தினல்' எனவும், வினைகளெல்லாம் தூரவிலகு மென்பார், 'தொல்லையாம் வினைவிடென்று தூரதூர மானதே' எனவுங் கூறினர்.

441

## மல பரிபாகம்

ஆனதே பதியது யற்றதே பசுபாசம்
போனதே மலங்களும் புலன்களும் வினைகளும்

கானகத்தி லிட்டதீயிற் காற்றுவந் தடுத்ததோ
வூனகத்தில் வாயுவுன்னி யொன்றியே யுலாவுமே.

(பொ - ரை) காட்டின்கண் வைக்கப்பட்ட தீயில் காற்றானது வந்துபட்டு வாயுவும், அக்கினியும் ஒன்றாய்ச் சேர்ந்து ஒரு இடத்தி லிருப்பதுபோலவே பதி என்று முள்ளதும், பசுபாசங்கள் அற்றுப் போனதும், திரிமலங்களும் ஒழிந்ததும், புலன்களும் வினைகளும், நீங்கினவைகளு மாகும் எ - று.

பதிப்பொருளானது என்று முள்ளதென்பார், 'ஆனதே பதி யது' எனவும், பசு பாசங்களே ஒழியவேண்டு மென்பார், 'அற்றதே பசுபாசம்' எனவும், மும்மலம், ஐம்புலன், இருவினையாகிய இவை களும் நீங்கவேண்டுமென்பார், 'போனதே மலங்களும் புலன்களும் வினைகளும்' எனவும், காட்டின்கண் தீயுங்கலந்தே யிருக்கு மென்பார், 'கானகத்தி லிட்டதீயிற் காற்றுவந் தடுத்ததோ, வூனகத்தில் வாயு வுன்னி யொன்றியே யுலாவுமே' எனவுங் கூறினர். 442

## மந்திர பீஜம்

உலாவுமுவ்வு மவ்வுமா யுதித்தடர்ந்து நின்றது
முலாவியைம் புலன்களு மொருதலத் திருந்திடும்
நிலாவுமங்கு நேசமாகி நின்றமுர்த முண்டுதாங்
குலாவுமெங்க ளீசனைக் குறித்துணர்ந்து கும்பிடே.

(பொ - ரை) பொருந்திய உகாரமும், மகாரமும், உதித்து அடர்ந்து நின்றது ஐம்புலன்களும் சரீரத்தில் பொருந்தி ஒரே இடத்தி லிருந்திடும். ஆகையால், விளங்குகின்ற சந்திரமண்டலத்தில் விருப்பம் வைத்து அவ்விடத்திலிருந்து உண்டாகும் அமிர்தத்தை யுண்டு ஆஞ்ஞாஸ்தானத்தில் எங்களுடைய சிவபெருமானைக்குறித் துணர்ந்து கொண்டு கும்பிடுங்கள் எ - று.

சரீரத்தில் உகார மகாரங்கள் விசேஷித்த மந்திரபீஜங்களென் பார், 'உலாவுமுவ்வுமவ்வுமா யுதித்தடர்ந்து நின்றது' எனவும், ஐம்புலன்க ளெல்லாம் ஒருங்கேநின்று சேஷ்டைசெய்வ தென்பார், 'உலாவியைம் புலன்களு மொருதலத் திருந்திடும்' எனவும், யோகஞ் செய்பவர்கள் சந்திரமண்டலத்தினின்று அங்கிருந்துவரும் அமிர்தத்தைப் பானஞ் செய்யவேண்டு மென்பார், 'நிலாவுமங்கு நேசமாகி நின்றமிர்த மூண்டு' எனவும், அங்ஙனஞ் செய்வோர்க்கு வெளிப்படுஞ் சிவபெருமானை உள்ளபடியே நமஸ்காரஞ் செய்யவேண்டு மென்பார், 'குலாவுமெங்க ளீசனைக் குறித்துணர்ந்து கொள்ளுமே' எனவுங் கூறினர்.

சந்திரமண்டலத்தில் யோகஞ் செய்வோர் தங்கவேண்டிய அளவு இரேசக, பூரக, கும்பகஞ் செய்து அமிர்தத்தை யுண்டாக்கிக் கொள்ள வேண்டியது மரபாகலின் இங்ஙனங் கூறினர். 443

இதுவுமது

கும்பிடுங் கருத்துளே குகனையைங் கரனையும்
நம்பியே யிடம்வலம் நமஸ்கரித்து நாடிட
வெம்பிரானு மம்மையு மிருத்தியே நடுவணைத்
தும்பிபோல வாசகந் தொடர்ந்துசோம்பி நீங்குமே.

(பொ - ரை) உலகர்களே! உங்களுடைய மனத்தின்கண் சுப்பிர மணியனையும், ஐந்து திருக்கரங்களை யுடைய விக்கிந விநாயகனையும் நன்றாய்க் கும்பிட்டு அவர்களை உண்மையாக நம்பி இடம் வலமாக பிரதட்சிணஞ் செய்து நமஸ்காரம் பண்ணி எம்பெருமானையும், பெரு மாட்டியையும் நடுவணையி லிருக்கச் செய்து அவர்களையும் உள்ள படியே விரும்ப தும்பியைப்போல் உங்களுடைய வாசங்களெல்லாம் தொடர்ந்து உங்களுக்கிருக்கும் சோம்பல்களெல்லாம் அறவே நீங்கும்.

ஆறாதார யோகஞ் செய்வோர்கள் முதலில் மூலாதாரத்திலுள்ள விநாயகக் கடவுளையும், நடுவணையி லிருக்கின்ற சுப்பிரமணியக்கடவுளை

யும் உள்ளபடியே வணங்கவேண்டு மென்பார், 'கும்பிடுங் கருத்துளே குகனையங் கரனையும், நம்பியே யிடம்வலம் நமஸ்கரித்து நாடிட' எனவும், நடுவணையில் சிவபெருமானையும் உமாதேவியையும் நிறுத்தி வைக்கவேண்டு மென்பார், 'எம்பிரானு மம்மையு மிருத்தியே நடு வணை' எனவும், இங்ஙனஞ் செய்வதால் சோம்பல் அறவே நீங்கு மென்பார், 'தும்பிபோல வாசகந் தொடர்ந்துசோம்பி நீங்குமே' எனவுங் கூறினர். 444

## சிவோபதேசம்

நீங்குமைம் புலன்களும் நிறைந்தவல் வினைகளும்
ஆங்காரமா மாசையு மருந்தடர்ந்த பாவமும்
ஓங்காரத்தி னுள்ளிருந்த வொன்பதொழிந் தொன்றிலத்
தூங்கவீசர் சொற்படி துணிந்திருக்க சுத்தமே.

(பொ - ரை) நீங்கக்கூடிய ஐந்துபுலன்களும் நிறைந்திருக்கின்ற கொடிய வினைகளும், ஆங்காரமும், ஆசையும், நெருங்கி யடர்ந்திருக்கின்ற பாவமும், ஓங்காரமாகிய பிரணவ பீஜத்திற்குள் கட்டுப்பட்டிருந்த நவநாதங்களும், அவைகளை யெல்லாம் நீங்கிய ஒரு மொழியாகிய உபதேசத்தில் மௌனத்தை யடைந்திருந்து தூங்க, அங்கு தரிசனங் கொடுக்குஞ் சர்வேஸ்வரனுடைய சொல்லின் பிரகாரம் துணிந்து பொருந்தியிருக்க சுத்த ஞானங் கைகூடும் எ - று.

ஐம்புலன்களும் அநாதி சிவ ரூபமாகிய ஆன்மாக்களுக்குப் பெருத்த துன்பத்தை விளைவிக்கின்றன வென்பார், 'நீங்குமைம் புலன்களும்' எனவும், அங்ஙனமே வினைகளுமா மென்பார், 'நிறைந்தவல் வினைகளும்' எனவும், ஆங்காரமே இதற்குக் காரண மென்பார், 'ஆங்காரமாம்' எனவும், எல்லாவற்றிற்குங் காரணமாயுள்ளது ஆசையே யென்பார், 'ஆசையும்' எனவும், இவைகளெல்லாவற்றாலும் பாவம் உண்டாவதென்பார், 'அருந்தடர்ந்த பாவமும்' எனவும், இவையனைத்

தம் பிரணவத்தாலொழிய சுத்த ஞானவானகக் கூடு மென்பார், 'ஓங் காரத்தி னுள்ளிருந்த வொன்பதொழிக் தொன்றிலத், தூங்கவீசர் சொற்படி துணிந்திருக்க சுத்தமே' எனவுங் கூறினர். 445

## சிவ ஜீவைக்கியம்

கருக்கலந்த காலமே கண்டுநின்ற காரணம்
உருக்கலந்த போதலோ வுன்னைநா னுணர்ந்தது
விரிக்கிலென் மறைக்கிலென் வினைக்கிசைந்த போதெலா
முருக்கலந்து நின்றபோது நீயும்நானு மொன்றலோ.

(பொ - ரை) நான் தாயின் கர்ப்பத்தில் கலந்தகாலத்தில் அவ் விடத்தில் கண்டிருந்த காரணத்தை சரீரத்தில் கலந்தபின் னல்லவா உன்னை நான் உள்ளபடியே உணர்ந்தது? அதை நான் விரித்தா லென்ன? மறைத்தாலென்ன? உங்களுடைய வினைகளுக்குத் தகுந்த போதெல்லாம் என்னுடைய சரீரத்தில் நீகலந்து நின்றாய் அங்ஙனம் நின்றபோது நீயும் நானும் ஒன்றேயல்லவா? எ - று.

ஆன்மாக்கள் தாயின் கருப்பத்தில் கலக்கும்போது எதையு முணரா வென்பார், 'கருக்கலந்த காலமே கண்டுநின்ற காரணம்' என வும், அங்ஙனங் கருவிற் கலந்து ரூபமேற்பட்ட பின்னரே அறிவு உதய மாவதென்பார், 'உருக்கலந்த போதலோ வுன்னைநா னுணர்ந்தது' எனவும், இதை விரித்தாலும் மறைத்தாலும் பயனொன்றுமில்லை யென்பார், 'விரிக்கிலென் மறக்கிலென்' எனவும், சிவபெருமான் அவ் வவர்களுடைய பரிபாகத்திற்குத் தக்க வியாபிக்கின்றா னென்பார், 'வினைக்கிசைந்த போதெலா முருக்கலந்து நின்றபோது நீயும்நானு மொன்றலோ' எனவுங் கூறினர். 446

## ஞானிகள் நிலை

ஞான நூல்கள் தேடியே நவின்றஞான யோகிகாள்
ஞானமான சோதியை நாடியுள் ளறிகிலீர்

ஞானமாகி நின்றதோர் நாதனை யறிந்தபின்
ஞானமல்ல தில்லைவேறு நாமுரைத்த துண்மையே.

(பொ - ரை) ஞானமார்க்கங்களைச் சொல்லுகின்ற நூற்களைத் தேடிதேடி அவற்றை ஆராய்ந்தறிந்து அவற்றிலுள்ள மர்மங்களைப் போதிக்கின்ற ஞான யோகிகளே! நீங்கள் ஞான யோகிகளா யிருந்தும் ஞானமே தேஜோ ரூபமாய் விளங்குகின்ற பொருளை உங்களுடைய மனத்தின்கண் நாடிப் பார்த்து அந்தர்முகமாக இறைவனை உணரமாட்டீர். ஆகையால், அதைவிட்டு [1]ஞான சொரூபனாயிருந்த தலைவனை உள்ளபடியே உணர்ந்த பின்னர் ஞானமே முன்னிற்ப தல்லாது வேறு பொருள் நிற்காது. நாம் இப்பொழுது எடுத்துச் சொன்னதே உண்மையான விஷயம் எ - று.

ஞானிகளும், யோகிகளும் தாங்கள் அநுபவித்தற்குரிய ஞான நூல்களையே தேடவேண்டியது அவசிய மென்பார், 'ஞான நூல்கள் தேடியே நவின்றஞான யோகிகாள்' எனவும், சர்வேஸ்வரன் ஞான சோதி வடிவின னென்பார், 'ஞானமான சோதியை' எனவும், அவனை அந்தர்முகமாக உணரவேண்டு மென்பார், 'நாடியுள் ளறிகிலீர்' எனவும், இறைவனை ஞானசாதகத்தாலன்றி ஏனைய சாதனங்களால் அறியலாகா வென்பார், 'ஞானமாகி நின்றதோர் நாதனை யறிந்தபின், ஞானமல்ல தில்லைவேறு' எனவும், எம்முடைய சொல் உண்மையாகு மென்பார், 'நாமுரைத்த துண்மையே' எனவுங் கூறினார்.

447

## இதுவுமது

கருத்தரிப்ப தற்குமுன் காயம்நின்ற தெவ்விடம்
உருத்தரிப்ப தற்குமுன் னுயிர்ப்புநின்ற தெவ்விடம்
மருட்பொதிந்த சிந்தையில் மயக்கம்நின்ற தெவ்விடம்
வுருப்புணர்ந்த ஞானிகள் விரித்துரைக்க வேணுமே.

(பொ - ரை) விருப்பமுள்ள ஞானிகளே! நீங்கள் எங்களுக்குச் சொல்லவேண்டிய காரியம் ஒன்று இருக்கிறது. அதாவது, கருவானது தாயின் கர்ப்பத்தில் நின்றிருப்பதற்குமுன் இந்தச் சரீரம் எவ்விடத்தி லிருந்தது? ரூபமேற்படா முன்னர் இந்தப் பிராணவாயு எவ்விடத்தில் நின்றது? மயக்கமானது இந்த மனத்தில் எந்த இடத்திலிருந்து வந்து குடிகொண்டது? இவ்விஷயங்களையே நீங்கள் எங்களுக்கு விரித்துச் சொல்ல வேண்டும் எ - று.

சரீரமானது விந்து தாயின் கர்ப்பத்தில் தங்கியபின்னரே உண் டாவதென்பார், 'கருத்தரிப்ப தற்குமுன் காயநின்ற தெவ்விடம்' எனவும், சரீரம் ஏற்பட்டபின் வந்து புகுந்த ஆன்மா முன்னிருந்த இடம் தெரியவில்லை யென்பார், 'உருத்தரிப்ப தற்குமுன் னுயிர்ப்பு நின்ற தெவ்விடம், எனவும், சுத்தமாக விருந்த மனத்திற்கு வயது ஏற ஏற மாயைவந்து சேர்ந்தவிதமுந் தெரியவில்லை என்பார், 'மருட் பொதிந்த சிந்தையில் மயக்கம்நின்ற தெவ்விடம்' எனவும் இவை அஞ்ஞானிகளுக்குத் தெரியமாட்டா வென்பார், 'விருப்புணர்ந்த ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே' எனவுங் கூறினர். 448

## ஞானி விடை

கருவினிற் கருவதா யெடுத்தவேழு தோற்றமு
மிருவினைப் பயத்தினால் பிறந்திறந் துழன்றிடும்
மருவினைப் பிறவிமூன்று காலமும் வகுத்தபின்
உறுவினைப் பயனிதென் றுணர்ந்தஞானி சொல்லுமே.

(பொ - ரை) கருக்களாய் எடுத்த எழுவகைத் தோற்றங்களும், நல்வினை, தீவினை என்னும் இருவினைகளின் விசேஷத்தால் பிறந்து பிறந்து இறந்து இறந்து வருந்தித் திரிவனவாகும் இந்த வினைவயத் தால் வருகின்ற ஜன்மத்தில் மூன்றுகாலங்களையும் ஏற்படுத்தின பின்

னர் பொருந்திய வினைப்பயன் இதுவே யாகுமென்று சகல கலைகளை யும் உள்ளபடியே உணர்ந்த ஞானிகளே! நீங்கள் சொல்லுங்கள் எ - று

சரீரங்கள் எழுவகைத் தோற்றமுடைய தென்பார், 'கருவினிற் கருவதா யெடுத்தவேழு தோற்றமும்' எனவும், தோற்றம் இருவினைப் பயத்தால் 'பிறந்திறந் துழன்றிடும்' எனவும், இதற்கு முக்காலவகுப் புண்டென்பார், 'மருவினைப் பிறவிமூன்று காலமும் வகுத்தபின்' எனவும், இவைகளை ஞானிகளே உணரவேண்டு மென்பார், 'உறுவி னைப் பயனிதென் றுணர்ந்தஞானி சொல்லுமே' எனவுங் கூறினர்.

## இதுவுமது

வாயிலெச்சில் போகவே நீர்குடித்துத் துப்புவீர்
வாயிருக்க எச்சில்போன வாறதென்ன தெவ்விடம்
வாயிலெச்சி லல்லவோ நீருரைத்த மந்திரம்
நாதனை யறிந்தபோது நாடுமெச்சி லேதுசொல்.

(பொ - ரை) உலகர்களே! வாயில் எச்சிலானதுபோக அந்த வாயில் நீரைக்குடித்துத் துப்புவீர்கள். அந்தப்படி துப்பினவா யிருக்க எச்சிலானது போனவிதம் எப்படி? வாயின்கண் நீர்சொன்ன மந்திரம் வாயின்கண்ணுள்ள எச்சிலல்லவோ? இப்பொழுது சொல்லப்பட்ட எச்சிலானது சர்வேஸ்வரனை உணர்ந்தபோது எங்கிருந்துவரும் எ - று.

உலகத்தில் நீரை வாயில் வார்த்துச் சுத்திசெய்ய வேண்டியது சுபாவமென்பார், 'வாயிலெச்சில போகவே நீர்குடித்துத் துப்புவீர்' எனவும், அங்ஙனந் துப்பினும் வாயிருக்க எச்சில்போன வாறதென்ன தெவ்விடம்' எனவும், அந்த எச்சிலுள்ள வாயினல் சொல்லப்பட்ட மந்திரமும் எச்சிலேயாக வேண்டுமல்லவோ என்பார், 'வாயிலெச்சி லல்லவோ நீருரைத்த மந்திரம்' எனவும், சர்வேஸ்வரனை உணர்ந்த வுடன் எச்சிலில்லை யென்பார், 'நாதனை யறிந்தபோது நாடுமெச்சி லேதுசொல்' எனவுங் கூறினர்.

450

## தேஜோ சொரூபம்

தொடக்கதென்று நீர்விழத் தொடங்குகின்ற வூமர்காள்
தொடக்கிருந்த தெவ்விடஞ் சுத்தியான தெவ்விடம்
தொடக்கிருந்த வாறறிந்து சுத்திபண்ண வல்லிரேல்
தொடக்கிலாத சோதியைத் தொடர்ந்து காணலாகுமே.

(பொ - ரை) எந்தப்பொருளுந் தொடக்கினை யுடையதென்று நீரின்கண் விழத் தொடங்குகின்ற ஊமர்களே! தொடககாகிய உங்க ளுடைய சரீரமானது இருந்த இடம் எது? நீ சுத்தியையடைந்த இடம்எது? இவைகளையும் தேகமிருந்த விதத்தையும் நன்றாயுணர்ந்து அதைச் சுத்திசெய்ய வல்லமை யுடையீரானல் எதிலும் சம்பந்தப் படாத தேஜோரூபனைத் தொடர்ந்து தரிசிக்கக் கூடும் எ - று.

உலகர்கள் சர்வபொருள்களிலும் பற்றுள்ளவர்கள் ஆவாரென் பார், 'தொடக்கதென்று நீர்விழத் தொடங்குகின்ற வூமர்காள்' எனவும், தொடக்குஞ் சுத்தியும் எவ்விடத்திலுமில்லை யென்பார், 'தொடக்கிருந்த தெவ்விடஞ் சுத்தியான தெவ்விடம்' எனவும், தொடக்கிருக்கு மிடத்தை உண்மையாக வுணர்ந்து சுத்திசெய்ய வேண்டுமென்பார், 'தொடக்கிருந்த வாறறிந்து சுத்திபண்ண வல்லி ரேல்' எனவும், இந்த எந்தச் சம்பந்தமுமில்லாத இறைவனையே தரி சிக்கவேண்டு மென்பார், 'தொடக்கிலாத சோதியைத் தொடர்ந்து காண லாகுமே' எனவுங் கூறினர். 451

## சாதி பேதம்

மேதியோடு மாவுமே விரும்பியே புணர்ந்திடில்
சாதிபேத மாயுருத் தரிக்கும்வாறு போலவே
வேதமோது வானுடன் புலைச்சிசென்று மேவிடில்
பேதமாய்ப் பிறக்கிலாத வாறதென்ன பேசுமே.

(பொ - ரை) எருமையுடன் பசுவானது விரும்பிப் புணர்ந்தால் சாதிபேதமாக சரீரந்தாங்குவதுபோல வேதபாராயணஞ் செய்கின்ற பிராமணனுடன் பறைச்சியானவள் புணர்ந்தால் அந்த வித்தியாசமில்லாமல் பிறக்கின்ற விதம்என்ன? இதை எடுத்துச் சொல்லுங்கள் எ-று.

எருமைக்கடாவும் பசுவுஞ் சம்போகஞ்செய்தால் வித்தியாசரூபத்துடனே குழந்தை பிறக்குமென்பார், 'மேதியோடு மாவுமே விரும்பியே புணர்ந்திடில், சாதிபேத மாயுருத் தரிக்கும்வாறு போலவே' எனவும், உயர்குலத்தானுடன் தாழ்ந்தகுலப் பெண் சேர்ந்தால் அந்த விகற்பமில்லை யென்பார், வேதமோது வானுடன் புலைச்சி சென்று மேவிடில், பேதமாய்ப் பிறக்கிலாத வாறதென்ன பேசுமே' எனவுங் கூறினர். 452

## இதுவுமது

வகைக்குலங்கள் பேசியே வழக்குரைக்கு மாந்தர்காள்
தொகைக்குலங்க ளானநேர்மை நாடியேயு ணர்ந்தபின்
மிகைத்தசுக்கில மன்றியே வேறுமொன்று கண்டிலீர்.

(பொ - ரை) விதம்விதமான சாதிகளைப்பேசி அவைகளின் வித்தியாசங்களால் வழக்கிட்டுப் பேசும் மாந்தர்களே! சாதிகள் அநேக வகைகளான தன்மையை உண்மையாக ஆராய்ந்து பார்த்துணர்ந்த பின் எந்தச் சாதியும் சுக்கில சம்பந்தத்தா லுண்டானவை யென்று ஏற்படுமே யல்லாமல் வேறு வகையா யிராது எ - று.

சாதிபேதங்கள் அநேக வகைகளாக இருக்கின்றன வென்பார், 'வகைக்குலங்கள்' எனவும், அவைகளால் வழக்கிடுவது சகசந்தானே யென்பார், 'பேசியே வழக்குரைக்கு மாந்தர்காள்' எனவும், இவ்வளவு சாதிகள் எப்படிவந்ததென் றுணரவேண்டு மென்பார், 'தொகைக் குலங்க ளானநேர்மை நாடியே யுணர்ந்தபின்' எனவும், எல்லாஞ் சுக்

கிலமயமேயா மென்பார், 'மிதைத்தசுக்கில மன்றியே வேறுமொன்று கண்டிலீர்' எனவுங் கூறினர். 453

## இதுவுமது

ஓதும்நாலு வேதமு முரைத்தசாஸ் திரங்களும்
பூததத் துவங்களும் பொருந்துமாக மங்களும்
சாதிபேத வன்மையுந் தயங்குகின்ற நூல்களும்
பேதபேத மாகியே பிறந்துழன் றிருந்ததே.

(பொ - ரை) பிராமணர்களால் பாராயணஞ் செய்யப்பட்டு வரும் நான்கு வேதங்களும், ஆறு சாஸ்திரங்களும், ஐந்து பூதங்களும், தொண்ணூற்றாறு தத்துவங்களும் பொருந்துகின்ற ஆகமங்களும், சாதிபேதங்களை எடுத்துச் சொல்லுகின்ற நூல்களும், ஆகிய இவைக ளெல்லாம் பல வித்தியாசங்களை யுடையதாய்ப் பிறந்து மீண்டும் சரி யான முறையி லில்லாமையால் உழன் றிருந்தது எ - று.

சகல சாஸ்திரங்களும் தங்களுக்குள் மாறுபாட்டை யடைந் திருக்கின்றன என்பது கருத்து. 454

## பற்றில்லாமை

உறங்கிலென் விழிக்கிலெ னுணர்வுசென் றொடுங்கிலென்
திறம்பிலென் றிகைக்கிலென் சிலதிசைக ளெட்டிலென்
புறம்புமுள்ளு மெங்கணும் பொதிந்திருந்த தேகமாய்
நிறைந்திருந்த ஞானிகள் நினைப்பதேது மில்லையே.

(பொ - ரை) வெளியிலும், உள்ளிலும், மற்றுமுள்ள இடங்களி லும், பொருந்தியிருந்து ஏகமாக எங்கும் நிறைந்திருந்த ஞானிகள் யாதொரு பொருளையும் நினைப்பதில்லை. ஆகையால், அவர்கள் நித் திரை செய்தாலென்ன? விழித்துக்கொண் டிருந்தாலென்ன? அறி

வானதுபோய் ஒடுங்கினுலென்ன? வண்மையை யடைந்தாலென்ன? சில திசைகளிற்போய்ச் சேர்ந்தாலென்ன? எ - று.

ஞானிகள் எந்தப் பொருள்களிலும் விருப்பமில்லாதவர்களாகை யால் அவர்கள் எப்படியிருந்தாலுங் கெடுதியில்லை என்பது கருத்து. ()

### சர்வம் சிவம்

அங்கலிங்கம் பூண்டுநீ ரகண்டபூசை செய்கிறீர்
அங்கலிங்கம் பூண்டுநீ யமர்ந்திருந்த மார்பனே
யெங்குமோடி யெங்குமெங்கு மீடழிந்து மாய்கிறீர்
செங்கல்செம்பு கல்லெலாஞ் சிறந்துபார்க்கு மூடரே.

(பொ - ரை) செங்கல், செம்பு, மற்றுமுள்ள கருங்கல் முதலிய வைகளையெல்லாஞ் சிறந்து பார்க்கின்ற மூடர்களே! நீங்கள் அங்க லிங் கந் தரித்துக்கொண்டு அகண்டபூசை செய்கிறீர்கள். அன்றி, நீங் கள் மேலேசொன்ன அங்கலிங்கத்தைப் பூண்டு சர்வ இடங்களிலும் பொருந்தியிருந்த மார்பனை நீங்கள் எவ்விடத்திலுமோடித் தேடி ஈடழிந்து மாய்கிறீர்கள் எ - று.

உலகத்தில் மானிடர்கள் லிங்கந் தரித்துக்கொள்ளுகின்ற சுபாவ முண் டென்பார், 'அங்கலிங்கம் பூண்டுநீர்' எனவும், அதனுல் பெரிய பூசைகளையெல்லாஞ் செய்கின்ருர்களென்பார், அகண்டபூசை செய் கிறீர்' எனவும், சர்வேஸ்வரனும் நம்போன்றவனே யென்பார், 'அங்க லிங்கம் பூண்டுநீ ரமர்ந்திருந்த மார்பனே' எனவும், மர்மந் தெரியாமல் அழிகின்றீ ரென்பார், 'எங்குமோடி யெங்குமெங்கு மீடழிந்து மாய்கி றீர்' எனவும், கல் முதலிய விக்கிரகங்களால் யாதொரு பயனில்லை யென்பார், 'செங்கல்செம்பு கல்லெலாஞ் சிறந்துபார்க்கு மூடரே' எனவுங் கூறினர். 456

## தீட்டு

தீட்டந்தீட்ட மென்றுநீர் தினமுழுகு மூடரே
தீட்டமாகி யல்லவோ திரண்டுகாய மானது
பூட்டகாய மும்முளே புகழுகின்ற பேயரே
தீட்டுவந்து கொண்டலோ தெளிந்ததே சிவாயமே.

(பொ - ரை) தீட்டுபட்டது தீட்டுப்பட்டது என்றுசொல்லித் தினமும் ஸ்நானஞ்செய்துகொண்டு வருகின்ற மூடர்களே! முன்னர் தீட்டா யிருந்தல்லவா பின்னர் அந்தத் தீட்டானதுநின்று நின்ற அது திரண்டு சரீரமாகப் பரிணமித்தது? அப்படியிருக்க அதைவிட்டு உங்களுடைய சரீரத்தை உங்களுக்குள்ளாகவே புகழ்ந்து கொள்ளுகின்ற பசாசத் தன்மையை யுடையவர்களே! அந்தத் தீட்டு பரந்து கொண்டே யிருந்தல்லவா பஞ்சாட்சரத்தை தெளிந்தது எ - று.

தீட்டே சரீரமானதாகையால் தீட்டென்று சொல்லக் கூடாது என்பது கருத்து.

தீட்டு என்பது மாதவிடாய்காலத்தையே பெரும்பாலுஞ் சொல்லியதெனக் கொள்ளவேண்டும். 457

## இதுவுமது

உந்திமேலே நாலுமூன்று ஓம்நமசி வாயமாஞ்
சந்திசந்தி யென்றுநீர் சாற்றுகின்ற பேயரே
முந்தவந்து நம்முளே மூலநாடி யூடுபோய்
அந்தசந்தி யற்றிட மறிந்துணர்ந்து பாருமே.

(பொ - ரை) சந்தி சந்தி யென்று சொல்லும் பேய்த் தன்மையை யுடையவர்களே! உந்திக்குமேல் பன்னிரண்டு இதழ்களையுடைய அநாகதத்தில் ஓம் நமசிவாய என்னும் பஞ்சாட்சரத்தை

மூன்னதாக உச்சரித்து அவர்களுக்குள் ளிருக்கும் மூலாதார நாடியின் வழியாக ஊடுருவிச் சென்று அந்திசந்தி நீங்கின இடங்களை நன்ரு யாராய்ந் தறிந்து உணர்ந்து பாருங்கள் எ - று.

மணிபூரக ஸ்தானத்திற்கு பன்னிரண்டு விரலுக்குமேல் பன்னிரண்டு இதழ்களுடனுள்ளது அநாகதஸ்தான மென்பார், 'உந்திமேலே நாலுமூன்று' எனவும், பஞ்சாட்சர உண்மையும் விளங்கவேண்டு மென்பார், 'ஓம்நமசி வாயமாம்' எனவும், சந்திகளில் இறைவன் இருப்பானென்று உரைப்பவர்கள் பிசாசர்களென்பார், 'சந்திசந்தி யென்றுநீர் சாற்றுகின்ற பேயரே' எனவும், இறைவனை யடைய வேண்டின் மூலாதார யோகமே உயர்ந்ததென்பார், 'முந்தவந்து நம் முளே மூலநாடி யூடுபோய், அந்திசந்தி யற்றிட மறிந்துணர்ந்து பாருமே' எனவுங் கூறினர். 458

## இதுவுமது

வன்னிமூன்று தீயினில் வாழுமெங்கள் நாதனுங்
கன்னியான துள்ளிருக்கக் காதல்கொண்ட தெவ்விடஞ்
சென்னிநாலு கையிரண்டு சிந்தையி லிரண்டிலொன்று
உன்னியுன்னி நம்முளே யுய்த்துணர்ந்து பாருமே.

(பொ - ரை) மூன்றுவகையான தீயினிடமாக வாழ்கின்ற எங்களுடைய தலைவனும், கன்னியாகிய பரமேஸ்வரி உள்ளே யிருக்க நீங்கள் ஆசைகொண்டுள்ளது எந்தவிடம்? நான்கு தலைகளும், இரண்டு கைகளும், மனம் ஒன்றும் ஆக இவைகளால் நினைந்து நினைந்து உங்களுக்குள்ளாகவே நன்ருயாராய்ந்து பாருங்கள் எ - று.

காருக பத்தியம் முதலிய தீக்கள் மூன்று உண்டென்பார், 'வன்னிமூன்று தீயினில்' எனவும், இறைவன் வாழ்வதும் அந்த இடமே யென்பார், 'வாழுமெங்கள் நாதனும்' எனவும், •சர்வேஸ்வரி அந்தர் முகத்தில் எழுந்தருளி யிருக்கின்ருளென்பார், 'கன்னியான

துள்ளிருக்க' எனவும், வேறு இடங்களிலுள்ள தேவர்களை விரும்புகின்றார்களென்பார், 'காதல்கொண்ட தெய்விடம்' எனவும், சரீரத்தோடு கூடியிருக்கின்ற மனத்தால் அந்தர் முகத்தில் தரிசிக்கவேண்டுமென்பார், 'சென்னிநாலு கையிரண்டு சிந்தையி லிரண்டிலொன்று உன்னியுன்னி நம்முளே யுய்த்துணர்ந்து பாருமே' எனவுங் கூறினர். 459

## இதுவுமது

தொண்டுசெய்து நீங்களுஞ் சூழவோடி மாள்கிறீர்
உண்டுழன்று நம்முளே யுற்றுணர்ந்து பார்க்கிலீர்
வண்டுளாடு சோலைசூழ் வாழுமெங்கள் நாதனும்
பண்டுபோல நம்முளே பகுத்திருப்ப னீசனே.

(பொ - ரை) உலகர்களே! நீங்கள் தொண்டுசெய்து சூழ்ந்து ஓடி வீணே மாள்கின்றீர்கள். ஆனல், நல்ல போசனத்தையுண்டு நமக்குள்ளாகவே பொருந்தி நன்று யுணர்ந்து பார்க்கமாட்டீர்கள். ஆகையால், வண்டுக்கள் உள்ளிருந்து விளையாடுகின்ற சோலையைச் சூழ்ந்து வாழ்கின்ற எங்களுடைய தலைவன் முன்போலவே நமக்குள் சூழ்ந்திருப்பன் எ - று.

சரியா கிரியா மார்க்கங்களில் தொண்டு செய்வது வீணாகவே முடியுமென்பார், 'தொண்டுசெய்து நீங்களுஞ் சூழவோடி மாள்கிறீர்' எனவும், சிவபெருமான் அந்தர்முகத்தில் வியாபித்துள்ளவனென்பார், 'உண்டுழன்று நம்முளே யுற்றுணர்ந்து பார்க்கிலீர், வண்டுளாடு சோலைசூழ் வாழுமெங்கள் நாதனும், பண்டுபோல நம்முளே பகுத்திருப்ப னீசனே' எனவுங் கூறினர். 460

## பரத்துவம்

பரமுனக்கெனக்குவேறு பயமுமில்லை பாரையா
காமுனக்கு நித்தமுங் குவித்திடக் கடமையாஞ்

சிரமுருக்கி யமுதளித்த சீருலாவு நாதனே
யுரமெனக்கு நீயளித்த வுண்மையுண்மை யுண்மையே.

(பொ - ரை) சிவபெருமானே! உனக்குப் பரமென்கிறபேர் உண்மையா யிருப்பதைப்பற்றி எனக்கு யாதொரு பயமுமில்லை. இது விஷயத்தை நீ கவனிக்கவேண்டும். ஆகையால், எனக்கு கித்தமுங் கைகளால் உன்னை நமஸ்காரஞ் செய்யவேண்டியது கடைமையாகும். சிரத்தின்கண் ணுள்ள சந்திர மண்டலத்தி லிருந்து அமிர்தத்தை வெளிப்படுத்திக் கொடுத்த சிறப்புப் பொருந்திய தலைவனே! எனக்குப் பலமாயுள்ளது நீ கிருபைசெய்த உண்மை விஷயமாகும் எ - று.

சிவபெருமானே எல்லாத் தேவர்களுக்கும் உயர்ந்தவ னென்பார், 'பரமுனக்கு' எனவும், இறைவனை உள்ளபடியே உணர்வார்க்கு யாதொரு பயமுமில்லை யென்பார், 'வேறுபயமுமில்லை பாரையா' எனவும், சர்வேஸ்வரனைக் கைகுவித்து நமஸ்காரஞ் செய்யவேண்டியது கடைமை யென்பார், 'கரமுனக்கு கித்தமுங் குவித்திடக் கடைமையாம், எனவும், சிவபெருமான் சந்திரபானத்தை சீவர்களில் பரிபாகிகளுக்கு அளிப்பவ னென்பார், 'சிரமுருக்கி யமுதளித்த சீருலாவு நாதனே' எனவும், இவையனைத்தும் உன்னுடைய உபதேச வன்மையே யன்றி வேறல்ல வென்பார், 'உரமெனக்கு நீயளித்த வுண்மை யுண்மை யுண்மையே' எனவுங் கூறினர். 461

பஞ்சாட்சரம்

மூலவட்ட மீதிலே முளைந்தவைந் தெழுத்திலே
கோலவட்ட மூன்றுமாய்க் குளிர்ந்தலர்ந்து நின்றதீ
ஞாலவட்ட மன்றுளே நவின்றஞானி மேலதா
யேலவட்ட மாகியே யிருந்ததே சிவாயமே,

(பொ - ரை) மூலாதாரமாகிய வட்டத்தின்கண் முளைத்தெழுந்த பஞ்சாட்சரத்தில் ரூபமுள்ள மூன்று வட்டமாகக் குளிர்ந்து மீண்டும் அலர்ந்து நின்ற தீயானது உலகத்திலும் சிதாகாசத்திலும் சொல்லப் லப்பட்ட ஞானிகளிடத்திலும், பொருந்தி அவைகளை அடக்கிக்கொள் ளத்தக்க வட்டமாக நின்றதாகும் எ - று.

சர்வமந்திர பீஜங்களும் மூலாதாரத்தின்கண் உதிப்பதால் பஞ் சாட்சரமும் அவ்விடத்தில் தோன்று மென்பார், 'மூலவட்ட மீதிலே முளைத்தவைந் தெழுத்திலே' எனவும், அவ்விடத்தில் அக்கினியும் மூன்றுவிதமாக வெளிப்படு மென்பார், 'கோலவட்ட மூன்றுமாய் குளிர்ந்தலர்ந்து நின்றதீ' எனவும், இதுசர்வ இடங்களிலும் வியாபிப்ப தென்பார், 'ஞாலவட்ட மன்றுளே நவின்றஞானி மேலதா, யேல வட்ட மாகியே யிருந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 462

## இதுவுமது

முச்சதுர மூலமாகி மூன்றதான பேதமா
யச்சதுர மும்முளே யடங்கவாசி யோகமா
மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமா
யுச்சரித்த மந்திர மோம்நமசி வாயவே.

(பொ - ரை) மூன்று சதுரங்களையுடைய மூலமாகவும், மூன்று பேதமாகவும், அந்தச் சதுரங்களெல்லாம் உங்களுக்குள்ளேயே யடங்க வாசியோகஞ் செய்து, உண்மையான சதுரமாகிய சரீரத்திற்குள் விளங்குகின்ற ஞானவொளிவாகி உச்சரித்துக் கொண்டுவரும் மந்தி ரமாயுள்ளது ஓம், நமசிவாய என்கிற பஞ்சாட்சரங்களாகும் எ - று.

சர்வ ஜனங்களும் உச்சரித்துப் பயனை யடையக்கூடிய மந்திர மாயுள்ளது ஓம், நமசிவாய என்னும் பஞ்சாட்சரங்களாம் என்பது கருத்து. 463

## பூசை

இடங்கள்பண்ணி சுத்திசெய்தே யிட்டபீட மீதிலே
யடங்கநீறும் பூசல்செய் தருந்தவங்கள் பண்ணுவீர்
ஒடுங்குகின்ற நாதனு ருதிக்குஞான மெவ்விட
மடங்குகின்ற தெவ்விட மறிந்துபூசை செய்யுமே.

(பொ - ரை) உலகர்களே! நீங்கள் நல்ல இடங்களைத்தேடி அவைகளைச் சுத்திசெய்து ஒருங்கே திருநீறுபூசி, அருமையாகத் தவங்கள் செய்வீர். ஆனால், ஒடுங்குகின்ற தலைவராகிய ஆன்மாவானது உதிக்கின்ற ஞானமானது எவ்விடம்? மீண்டும் அது மடங்குவது எவவிடம்? இவைகளை யுணர்ந்து நன்றாய்ப் பூசை செய்யுங்கள் எ - று.

பூசை செய்கின்றவர்கள் ஆன்மா தோற்றுமிடத்தையும் அடங்குமிடத்தையு முணர்ந்தே செய்யவேண்டும் என்பது கருத்து. 464

## ஞானம்

புத்தகங்க ளைச்சுமந்து பொய்களைப் பிதற்றுவீர்
செத்திடம் பிறந்திடம தெங்ஙனென் றறிகிலீர்
அத்தனைய சித்தனை யறிந்துநோக்க வல்லிரே
லுத்தமத் துளாயசோதி யுணரும்போக மாகுமே.

(பொ - ரை) உலகர்களே! நீங்கள் தேடிவைத்துள்ள புஸ்தகங்களைச் சுமந்து வீணாக பொய்வார்த்தைகளை பிதற்றுவீர்கள் செத்த இடத்தையும், பிறந்த இடத்தையும் எவ்விடமென்று உணரமாட்டீர்கள். ஆகையால், அத்தனும் சிந்தனை யற்றவனும் ஆகிய இறைவனை உள்ளபடியே தரிசிக்க வல்லமையுடையீரானால் உத்தமர்கள் மனத்தில் விளங்குகின்ற தேஜோமயப் பொருளை உணருகின்ற போக முண்டாகும் எ - று.

உலகத்தில் பெரும்பாலார் பொய்ச் சாஸ்திரங்களைக் கற்றுப் பொய் பேசுகின்றார்களென்பார், 'புத்தகங்க ளைச்சுமந்து பொய்களைப் பிதற்றுவீர்' எனவும், வந்தவிடம் போகுமிடம் இரண்டையும் அவர் கள் அறியாதவர்களே யென்பார், 'செத்திடம் பிறந்திடம தெங்ங னென் றறிகிலீர்' எனவும், இதை யறியாவிட்டாலும், சர்வேஸ்வரனை முக்கியமாக உணரவேண்டு மென்பார், 'அத்தனைய சிந்தனை யறிந்து நோக்க வல்லிரேல்' எனவும், உணர வருந்துவோர்க்கே உடையவன் வெளிப்படுவா னென்பார், 'உத்தமத்து ளாயசோதி யுணரும்போக மாகுமே' எனவுங் கூறினர் 465

வன்னி நிலை

அருளிலே பிறந்துதித்து மாயைரூப மாகியே
யிருளிலே தயங்குகின்ற வேழைமாந்தர் கேண்மினோ
பொருளிலே தவம்புனைந்து பொருந்திநோக்க வல்லிரேல்
மருளதேது வன்னியின் மறைந்ததே சிவாயமே.

(பொ - ரை) சிவபெருமானுடைய திருவருளால் பிறந்தும் பின்னர் அதை மறந்து மாயாரூபமாகி அந்தகாரத்திலிருந்து வருந்து கின்ற அறிவில்லாத மானிடர்களே! நீங்கள் நான் சொல்வதைக் கேளுங்கள். உண்மைப் பொருளை மனத்திற்கொண்டு தவஞ்செய்து திருவருளைப் பொருந்தி தரிசிக்க வல்லமையுடையீரானால் உங்களுக்கு மயக்கமுண்டாவதேது? அங்ஙனமுண்டானாலும், அது மூலவன்னி யால் மறைக்கப்பட்டதாகும் எ - று.

மானிடப் பிறவி உண்டானது சிவபெருமானுடைய திருவருளா லென்பார், 'அருளிலே பிறந்துதித்து' எனவும், உலகத்தில் வந்தபின் னர் திருவருளை மறந்து மாயாமயமாகின்றன ரென்பார், 'மாயை ரூபமாகியே இருளிலே தயங்குகின்ற' எனவும், இங்ஙனஞ் செய் வோர் அறிவில்லாதவர்க ளென்பார், 'ஏழைமாந்தர் கேண்மினோ'

எனவும், உண்மைப்பொருளை யுணர்ந்தே தவஞ்செய்ய வேண்டுமென்பார், 'பொருளிலே தவம்புனைந்து பொருந்திநோக்க வல்லிரேல்' எனவும், அங்ஙனஞ்செய்வார்க்கு மாய்கை பொருந்தா தென்பார், 'மருளதேது வன்னியின் மறைந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். ()

ஈஸ்வர தரிசனம்

தன்மசிந்தை யாமளவுந் தவமறியாத் தன்மையாய்க்
கன்மசிந்தை வெயிலுழன்று கருத்தமிழ்ந்த கசடரே
சென்மசென்மந் தேடியுந் தெளியொணாத செல்வனை
நன்மையாக வும்முளே நயந்துகாண வேண்டுமே.

(பொ - ரை) உங்களுக்கு தர்மசிந்தனை யுண்டாகின்றவரைக்கும் தவத்தினை உண்மையாக உணராத குணத்தோடுகூடிக் கர்மசிந்தனையென்னுங் கொடிய வெயிலில் சுழன்று மனமழிந்த வஞ்சகர்களே! அநேக சன்மங்களில் தேடியுந் தெளிந்து காணப்படாத செல்வனை, நீங்கள் உங்களுக்குள்ளாக விரும்பித் தரிசிக்கவேண்டும் எ - று.

உலகத்தில் ஆன்மகோடிகளுக்கு தர்மசிந்தை யுண்டாவது வெகு கஷ்டமென்பார், 'தர்மசிந்தை யாமளவும்' எனவும், தவம் நல்லெண்ணமுடையார்க்கே கைகூடுமென்பார், 'தவமறியாத் தன்மையாய்' எனவும், கர்மசிந்தையினாலேயே கசடர்களாகி நின்றார்களென்பார், 'கன்மசிந்தை வெயிலுழன்று கருத்தமிழ்ந்த கசடரே' எனவும், சர்வேஸ்வரன் சன்மாந்தரங்களிலும் அறியப்படாதவனென்பார், 'செந்மஜென்மந் தேடியுந் தெளியொணாத செல்வனை' எனவும், யாவரும் அவனை அந்தர் முகத்தில் நாடவேண்டுமென்பார், 'நன்மையாக வும்முளே நயந்துகாண வேண்டுமே' எனவுங் கூறினர். 467

ஞானம்

கள்ளவுள்ள மேயிருக்க கடந்தஞான மோதுவீர்
கள்ளமுள் ளறுத்தபோது கதியிதன்றிக் காண்கிலீர்

ருள்ளமே விளக்கிநித்த மொளியணுக வல்லிரேற்
றெள்ளுஞான மும்முளே சிறந்ததே சிவாயமே.

(பொ - ரை) உலகர்களே! உங்களுக்குக் கள்ளத்தன்மை கூடிய மனமிருக்க அதை வைத்துக்கொண்டே வரம்புகடந்த ஞானத்தை வெளிப்படையாகச் சொல்லுவீர்கள். அந்தக் கள்ளத்தன்மையை மனத்திலில்லாமல் அறுத்த காலத்தில் கதியிதுவாகு மென்று வேறு உண்மையில் உணரமாட்டீர்கள். ஆகையால், நீங்கள் உங்களுடைய மனத்தைச் சுத்தஞ்செய்து தினமும் தேஜோமயமாகிய பொருளை சேரவல்லமை யுடையீரானல் உங்களுடைய மனத்தின்கண் தெளிவாகிய ஞானமானது சிறந்தமர்ந்திருக்கும் எ - று.

உலகத்தில் ஞானிகளென்கிற பேருள்ளவர்களெல்லாங் கள்ள வுள்ள முள்ளவர்களென்பார், 'கள்ளவுள்ள மேயிருக்க' எனவும், இவர்களோதும் ஞானத்தால் பயனின்றென்பார், 'கடந்தஞான மோதுவீர்' எனவும், வஞ்சகத்தை யுள்ளேயறுத்து விட்டாலும் இந்தக் குண முள்ளவர்கள் என்னசெய்வார்களென்பார், 'கள்ளமுள் ளறுத்தபோது கதியிதன்றிக் காண்கிலீர்' எனவும், இனி மனேசித்திசெய்ய வேண்டு மென்பார், 'உள்ளமே விளக்கி' எனவும், தேஜோமயனைத் தரிசிக்க வேண்டுமென்பார், 'நித்தம் ஒளியணுக வல்லிரேல்' எனவும்' ஞானத்தை அடையலா மென்பார், 'தெள்ளுஞான மும்முளே சிறந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 468

## சர்வம் சிவம்

காணவேண்டு மென்றுநீர் கடன்மலைக ளேறுவீர்
ஆணவம தல்லவோ வறிவில்லாத மாந்தரே
வேணுமென்றவ் வீசர்பாத மெய்யுளே தரிப்பிரேற்
றூணுவாக நின்றசீவன் றன்சிவம தாகுமே.

(பொ - ரை) அறிவில்லாத மனிதர்களே! நீங்கள் சர்வேஸ்வரனைக் காணவேண்டு மென்றல்லவா கடலிலும், மலைகள் மேலும், ஏறுவீர்கள் நீங்கள் வேண்டுமென்று அந்த சிவபெருமானுடைய திருவடிகளை சரீரத்தில் தரிக்க வல்லமை யுடையீரானல், பரம்பொருளாக இருந்த சீவன் சிவ பரம்பொருளாகும் எ - று.

உலகர்களெல்லாம் சிவபெருமானைக் காணுதற்கு பல விடங்களிற் செல்லுகின்றார்க ளென்பார், 'காணவேண்டு மென்றுநீர் கடல்மலைகளேறவீர்' எனவும், இவையனைத்துந் தெரியாமையே யென்பார், 'ஆணவம தல்லவோ வறிவிலாத மாந்தரே' எனவும், இவர்களெல்லாம் அந்தர்முகத்தில் சிவபெருமானுடைய திருவடிகளை நிறுத்திவைக்க வேண்டு மென்பார், வேணுமென்றவ் வீசர்பாத மெய்யுளே தரிப்பிரேல்' எனவும், இவர்களாகிய ஆன்மா சிவரூபத்தை யடையு மென்பார், 'தாணுவாக நின்றசீவன் றன்சிவம தாகுமே' எனவுங் கூறினர்

## முத்தி நிலை

அணுவினோ டகண்டமா யளவிடாத சோதியைக்
குணமதாக வும்முளே குறித்துநோக்கின் முத்தியாம்
மிணமிணென்று விரலையெண்ணி மீளொணு மயக்கமாய்த்
துணிவிலாத படியினாற் றொடர்ந்துபூசை செய்குவீர்.

(பொ - ரை) அணுவாகவும், அகண்டமாகவுமுள்ள யாவராலும் அளவிடப்படாத தேஜோரூபனை உங்களுக்குள்ளாக குணப்பொருளாகக் குறித்துப் பார்த்தால் மோட்சத்தை யடையக்கூடும். அன்றி, நீங்கள் முணமுணவென்று சொல்லி விரலையெண்ணி நீங்காத பிரமையாய் துணிவு இல்லாதபடியால் நீங்கள் தொடர்ந்து தொடர்ந்து பூசை செய்வீர் எ - று.

சர்வேஸ்வரன் அணு சொரூபனாகவும், அகண்டமாகவு மிருப்பவனென்பார், 'அணுவினோ டகண்டமாய்' எனவும், 'இறைவன் அள

விடப்படாத தேஜஸுள்ளவ னென்பார், 'அளவிடாத சோதியை' எனவும், இறைவனைக் குணப்பொருளாகக் கொள்ளவேண்டுமென்பார், 'குணமதாக வும்முளே குறித்துநோக்கின்' எனவும், இதனல் முத்தி யடையக்கூடு மென்பார், 'முத்தியாம்' எனவும், உலகர்கள் செய்யும் பூசைகளெல்லாம் வீணேயா மென்பார், 'மிணமிணென்று விரலை யெண்ணி மீளொணு மயக்கமாய்த் தணிவிலாத படியினற் றொடர்ந்து பூசை செய்குவீர்' எனவுங் கூறினர். 470

## எச்சில்

எச்சிலெச்சி லென்றுநீ ரிடைந்திருக்கு மேழைகா
டுச்சிலெச்சி லல்லவோ தூயகாய மானதும்
வைத்தவெச்சி றேனலோ வண்டினெச்சில் பூவலோ
கைச்சுதாவில் வைத்துடன் கறந்தபாலு மெச்சிலே.

(பொ - ரை) எச்சில், எச்சில் என்றுசொல்லி ஒதுங்கியிருக்கின்ற அறிவீனர்களே! உங்களுடைய சரீரமும் எச்சிலே யல்லவா? நீங்கள் குடிக்கின்றதேன் எச்சிலல்லவோ? நீங்கள் முடிக்கின்ற புஷ்ப வகைகளானவை வண்டுக் கூட்டங்களுடைய எச்சிலல்லவோ? அன்றி, ஆவினிடத்தில் கறந்தபாலும் எச்சிலேயல்லவா? எ - று.

அறிவில்லாதவர்களே! சர்வ பொருள்களையும் எச்சிலென்று சொல்லுவார்க ளென்பார், 'எச்சிலெச்சி லென்றுசொல்லி யிடைந்திருக்கு மேழைகாள்' எனவும், அங்ஙனங் கொள்வோமானல் அவரவர்களுடைய சரீரங்களும் எச்சிலாகவே முடியு மென்பார், 'துச்சிலெச்சி லல்லவோ தூயகாய மானதும்' எனவும், இது கொண்டு பார்த்தால் சிவபெருமானுக் கணியும் சர்வ புஷ்பங்களும் எச்சிலல்லவோ என்பார், 'வைத்தவெச்சில் தேனலோ வண்டினெச்சில் பூவலோ' எனவும், இங்ஙனங் கொள்வார்க்கு கறந்தபாலும் எச்சிலேயென்று ஸ்பஷ்ட

மாகச் சொல்லவேண்டு மென்பார், கைச்சுதாவில் வைத்துடன் கறந்த பாலு மெச்சிலே எனவுங் கூறினர். 471

## தீர்த்த விசேடம்

தீர்த்தலிங்க மூர்த்தியென்று தேடியோடுந் தீதரே
தீர்த்தலிங்க முள்ளினின்ற சிவனைத் தெளியுமே
தீர்த்தலிங்க மும்முளே தெளிந்துகாண வல்லிரேற்
தீர்த்தலிங்கந் தானதாய்ச் சிறந்ததே சிவாயமே.

(பொ - ரை) தீர்த்தம், லிங்கம், மூர்த்திகள் இந்தவூரில் நல்ல மூர்த்திகரத்தோ டிருக்கின்றனவென்று தேடியோடுகின்ற தீயர்களே! தீர்த்தமும், லிங்கமும், உள்ளினின்ற சிவனைத் தெளிந்து பாருங்கள். அங்ஙனமே தீர்த்தத்தையும், லிங்கத்தையும் உங்களுக்குள்ளாகவே தெளிந்துநோக்க வல்லமை யுடையீரானல் நீங்களே தீர்த்தமும், லிங்கமும் ஆகவாய்ச் சிறந்திருப்பீர்கள் எ - று.

உலகத்திலுள்ள மனிதர்களில் பெரும்பாலோர் தல யாத்திரைக்குச் செல்லுகின்றார்க ளென்பார், 'தீர்த்தலிங்க மூர்த்தியென்று தேடியோடுந் தீதரே' எனவும், அந்த யாத்திரையை அந்தர்முகத்தில் செய்தால் மிகுந்த பயனுண்டென்பார், 'தீர்த்தலிங்க முள்ளினின்ற சிவனைத் தெளியுமே' எனவும், அங்ஙனம் செய்பவர்களே உள்ளபடியே சிவனை உணர்ந்தவர்க ளென்பார், 'தீர்த்தலிங்க மும்முளே தெளிந்துகாண வல்லிரேல், தீர்த்தலிங்கந் தானதாய்ச் சிறந்ததே சிவாயமே' எனவுங் கூறினர். 472

## பூசை

ஆடுகொண்டு கூறுசெய் தமர்ந்திருக்கும் வாறுபோற்
றேடுகின்ற செம்பினைத் திடப்படப் பரப்பியே

நாடுகின்ற தம்பிரானு நம்முளே யிருக்கவே
போடுதர்ப்ப பூசையென்ன பூசையென்ன பூசையே.

(பொ - ரை) பல ஆடுகளைக் கொன்று கூறு போட்டதுபோல யாவராலும் தேடப்படுகின்ற செப்பு விக்கிரகங்களை திடமாக வரிசையாகப் பரப்பி யாவராலும் விரும்பப்படுகின்ற தம்பிரான் ஆகிய கடவுள் நமக்குள்ளாகவே யிருக்க நீங்கள் போடுகின்ற தர்ப்பப் பூசையானது என்ன பூசையாகும் எ - று.

உலகத்திலுள்ளவர்கள் விக்கிரக பூசையையே சிலாக்கியமாகக் கொள்ளுகின்றார்க ளென்பார், 'ஆடுகொண்டு கூறுசெய் தமர்ந்திருக்கும் வாறுபோல், தேடுகின்ற செம்பினைத் திடப்படப் பரப்பியே' எனவும், இந்தப் பூசையால் பயனில்லை யென்பார், 'நாடுகின்ற தம்பிரானு நம்முளே யிருக்கவே, போடுதர்ப்ப பூசையென்ன பூசையென்ன பூசையே' எனவுங் கூறினர். 473

## சதா துதி

என்னையற்ப நேரமு மறக்கிலாத நாதனே
ஏகனே யிறைவனே யிராசராச ராசனே
யுன்னையற்ப நேரமு மொழிந்திருக்க லாகுமே
வுனதுநாட்ட மெனதுநாவி லுதவிசெய்வீ ரீசனே.

(பொ - ரை) அடியேனை க்ஷணநேரமும் மறவாத தலைவனே! ஏகனே! இறைவனே! இராசராச ராசனே ஆகையால், உன்னை க்ஷண நேரமாவது நீங்கியிருக்கக் கூடுமோ? ஆகையால், உன்னுடைய நாட்டத்தை என்னுடைய நாவின்கண் திருவருள் செய்யவேண்டும் எ-று.

ஜீவான்மாக்கள் சர்வேஸ்வரனை நினையாம லிராதென்பார், 'என்னையற்ப நேரமு மறக்கிலாத வீசனே' எனவும், சர்வேஸ்வரன் சர்வ பெயரால் அழைக்கப்படுவா னென்பார், 'ஏகனே யிறைவனே

யிராசராச ராசனே' எனவும், சர்வேஸ்வரனை எந்நாளும் பிரியக்கூடா தென்பார், 'உன்னையற்ப நேரமு மொழிந்திருக்க லாகுமோ' எனவும், இதை சர்வேஸ்வரன் அருள்செய்யவேண்டுமென்பார், 'உனதுநாட்ட மெனதுநாவி லுதவிசெய்வீ ரீசனே' எனவுங் கூறினர். 474

## அமிர்த முண்ணல்

எல்லையற்று நின்றசோதி யேகமா யெரிக்கவே
யெந்தைபூர ணப்பிரகாச ரேகபோக மாகியே
நல்லவின்ப மோனசாக ரத்திலே யழுத்தியே
நாடொணாத வமிர்தமுண்டு நானழிந்து நின்றநாள்.

(பொ - ரை) அளவில்லாமல் நின்ற தேஜோமயப் பொருளானது எங்கும் ஒரேவிதமாக எரிக்கவே எம்முடைய தந்தையின் பரிபூரண பிரகாசமானது ஏகபோகமாகியே என்னை உயர்ந்த மௌனசாகரத்தில் முத்தியாவராலும் நாடப்படாத சந்திராமிர்தத்தை யுண்டு நான் என்னும் அகங்காரமற்று ஒடுங்கிச் சிலநாள்வரைக்கும் மௌனத்தில் அமர்ந்திருந்தேன் எ - று.

சர்வேஸ்வரனுடைய வியாபகத்திற்கு அளவில்லை யென்பார், 'எல்லையற்று' எனவும், இறைவன் தேஜோமய னென்பார், 'நின்ற சோதி' எனவும், சிவஞான வொளியுடைய தென்பார், 'ஏகமா யெரிக்கவே' எனவும், சர்வேஸ்வரன் பரிபூரண னென்பார், 'எந்தைபூரணப்பிர காசர்' எனவும், அவரது போகமே சீவர்களுடைய போகமுமாகு மென்பார், 'ஏகபோக மாகியே' எனவும், இதனால் மௌன ஞானத்தை யடையக்கூடு மென்பார், 'நல்லவின்ப மோனசாகரத் திலே யழுந்தியே' எனவும், அமிர்தபானமுஞ் செய்யக்கூடு மென்பார், 'நாடொணாத வமிர்தமுண்டு நானழிந்து நின்றநாள்' எனவுங் கூறினர். 475

## தேஜோ சொரூபம்

ஆனவாற தாயிடு மகண்டமான சோதியை
யூனைகாட்டி யும்முளே யுகந்துகாண வல்லிரே
லூனகாய மாளலா முலகபார மாளலாம்
வானநாடு மாளலாம் வண்ணநாட ராணையே.

(பொ - ரை) அகண்டமாக வேதத்திற் சொல்லிய வண்ண மாகும். தேஜோ சொரூபனை நீங்கள் உங்களுடைய சரீரத்தைக் காட்டி உங்களுக்குள்ளாக விரும்பிக் காண வல்லமை யுடையீரானல், ஊனமாகிய இந்தச் சரீரத்தை எக்காலமும் ஆளலாம். அன்றி, இராஜ்ய பரிபாலனஞ் செய்யலாம். சொர்க்க நாட்டுக்கும் அரசனாகலாம். இங்ஙனஞ் செய்யலாமென்பதற்கு வண்ணநாடராகிய பரமேஸ்வரன்மேல் ஆணையாகும் எ - று.

வேதத்தில் சர்வேஸ்வரனை அகண்ட சோதியாகச் சொல்லுகிற தென்பார், 'ஆனவாற தாயிடு மகண்டமான சோதியை' எனவும், மானைக்காட்டி மானைப் பிடிப்பதுபோல், ஊனைக்காட்டி இறைவனை வசப்படுத்த வேண்டு மென்பார், 'ஊனைக்காட்டி யும்முளே வந்து காண வல்லிரேல்' எனவும், இறைவனுடைய தரிசனம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கிய பின்னர் சர்வ சித்திகளை யு மடையலா மென்பார், 'ஊனகாய மாளலா முலகபார மாளலாம், வானநாடு மாளலாம் வண்ணநாட ராணையே' எனவுங் கூறினர். 476

## பூசை

நித்தலு மணிதுலக்கி நீடுமூலை புக்கிருந்து
கத்தியே கதறியே கண்கண்மூடி யென்பயன்
எத்தனைபே ரெண்ணினு மெட்டிரண்டு பத்தலோ
வத்தனுக் கிதேற்குமோ வறிவிலாத மாந்தரே.

(பொ - ரை) அறிவில்லாத மனிதர்களே! நீங்கள் பிரதிதினமும், மணி முதலியவற்றைத் துலக்கி மூலைகளில் புகுந்துகொண் டிருந்து கண்களை மூடிக்கொண்டு பலவகையாகக் கதறினல் என்ன பிரயோசன மிருக்கிறது? ஒன்றுமில்லை. ஆனல், இது எத்தனைபேர்கள் ஒன்ருகச் சேர்ந்து எண்ணி எண்ணிப் பார்த்தாலும் எட்டும் இரண்டும் பத்தேயல்லவா இறைவனுக்கு முக்கியமானது. ஆகையால், இறைவனுக்கு நீங்கள் செய்கிற பூசை ஏற்குமோ? ஏற்காது எ - று.

சரியா பூசை செய்வோர், மணி முதலிய விக்கிரகங்களை துலக்க வேண்டு மென்பார், 'நித்தலு மணிதுலக்கி' எனவும், இவர்கள் பூசை செய்வது மூலையி லென்பார், 'நீடுமூலை புக்கிருந்து' எனவும், கண்களை மூடிக்கொண்டே உருவேற்றுவா ரென்பார், 'கத்தியே கதறியே கண்கள்மூடி யென்பயன்' எனவும், எட்டும் இரண்டும் கூடியபத்திலேயே இறைவன் கலந்தறியக் கூடுமென்பார், 'எத்தனைபே ரெண்ணினு மெட்டிரண்டு பத்தலோ, வத்தனுக்கிதேற்குமோ வறிவிலாத மாந்தரே' எனவுங் கூறினர்.

477

பிறவி

எட்டிரண்டுங் கூடியே யிலிங்கமான தேவனை
மட்டதாக வும்முளே மதித்துநோக்க வல்லிரேற்
கட்டமான பிறவியென் கருங்கடல் கடக்கலா
மிட்டமான வெளியினே டிசைந்திருப்பீர் காண்மினே.

(பொ - ரை) எட்டும் இரண்டுங் கூடியே இலிங்க சொரூபமாயமைந்திருக்கின்ற சர்வேஸ்வரனை ஸ்தானமாக உங்களுக்குள்ளாக உள்ளபடியே நினைந்து பார்க்க வல்லமை யுடையீரானல் கட்டாயமாக வரும் என்று சொல்லப்படுகின்ற பிறவியென்னுங் கருங்கடலைக் கடக்கலாம். அன்றி, இஷ்டமானபடி சிதாகாசத்தில் கலந்து சிவபெருமா

னுடன் கலந்து இருப்பீர்கள். ஆகையால், இனி நீங்கள் இதைக் கவனி யுங்கள் எ - று.

அகாரம் எட்டும் உகாரம் இரண்டுமாகையால் இவ்விரண்டு மகாரத் துடன் சேர்ந்து ஓங்காரமாகலின் அவ்வோங்காரமே இலிங்கவடிவென் பார், 'எட்டிரண்டுங் கூடியே யிலிங்கமான தேவனே' எனவும், அந்தர் முகமாகத் தரிசிப்பதே உத்தம மென்பார், 'மட்டதாக வும்முளே மதித்துநோக்க வல்லிரேல்' எனவும், இதனல் ஜெந்மமே ரறபடுமென் பார், 'கட்டமான பிரவியென் கருங்கடல் கடக்கலாம்' எனவும், பிறவி யொழிந்தால் சர்வேஸ்வரனுடன் கலக்கத் தடையில்லை யென்பார், 'இட்டமான வெளியிலே டிசைந்திருப்பர் காணுமே' எனவுங் கூறி னர். 478

## பஞ்சாட்சரம்

உண்மையான மந்திர மொளியிலே யிருந்திடுந்
தண்மையான மந்திரஞ் சமைந்துரூப மாகியே
வெண்மையான மந்திரம் விளைந்துநீற தானதே
யுண்மையான மந்திரம தொன்றுமே சிவாயமே.

(பொ - ரை) உண்மையான மந்திரமானது தேஜோமயத்தில் கலந்திருக்கும் தண்மையான மந்திரமானது ரூபமா யமைந்திருக்கும் வெண்மையான மந்திரமானது நீராக அமையும். ஆனல், எப்படி யிருந் தாலும் உண்மையான மந்திரமானது பஞ்சாட்சரமாகிய ஒன்றே யாகும் எ - று.

மந்திரங்கள் பலவுள்ளும் தேஜோரூபத்தில் கலக்கப் பண்ணு வதே உண்மை மந்திரமா மென்பார், 'உண்மையான மந்திரம் ஒளி யிலே யிருந்திடும்' எனவும், அதுவே சத்துவகுண மந்திரமுமாகு மென்பார், 'தண்மையான மந்திரஞ் சமைந்துரூப மாகியே' எனவும்,

திருநீறும் பஞ்சாட்சர மகிமையை யுடையதே யென்பார், 'வெண்மை யான மந்திரம் விளைந்துநீற தானதே' எனவும், எங்ஙன மிருந்தாலும் நமசிவய என்னும் பஞ்சாட்சரம் உண்மையான தென்பார், 'உண்மை யான மந்திரம தொன்றுமே சிவாயமே' எனவுங் கூறினர். 479

## பிரம சோரூபம்

பன்னிரண்டு நாளிருத்திப் பஞ்சவன்ன மொத்திட
மின்னியவ் வெளிக்குணின்று வேரெடுத் தமர்ந்தது
சென்னியான தலத்திலே சீவனின் றியங்கிடும்
பன்னியுன்னி யாய்ந்தவர் பரப்பிரம மாவரே.

(பொ - ரை) வாசியைப் பன்னிரண்டு நாள்வரைக்கும் நிறுத்தி ஐந்துவர்ணங்களும் ஒத்துவர, பின்னர் அந்த வெளிக்குள்ளே நின்று வேரெடுத்துப் பொருந்தினது. சிரசாகிய இடத்தில் சீவனானவ னிருந்து சஞ்சரிக்கும். அந்தச்சீவனை பலகாலும் ஆராய்ந்து நினைந்து துதிசெய்தவர்கள் பரப்பிரம மாவார்கள் எ - று.

ஆசிரியனிடத்தில் உபதேசம்பெற விரும்புவோர் பன்னிரண்டு வருஷங் காத்திருப்பதுபோல் வெளியில்போகக் காத்துக்கொண் டிருக் கின்ற வாசிகள் பன்னிரண்டையும் நிறுத்த வேண்டு மென்பார், 'பன்னிரண்டு நாளிருத்தி' எனவும், அங்ஙனம் சமானது பஞ்சவர் ணத்தை யடையு மென்பார், 'பஞ்சவன்ன மொத்திட' எனவும், அங் ஙனம் அமரும்போது தேஜோசொரூபம் வெளிப்படு மென்பார், 'மின்னியவ் வெளிக்குணின்று வேரெடுத் தமர்ந்தது' எனவும், சீவ னானவன் மேலாலவஸ்தையில் சிரசில் நிற்குமென்பார், 'சென்னியான தலத்திலே சீவனின் றியங்கிடும்' எனவும், உயிரின் உண்மை நிலையை யுணர்ந்தவர்கள் பரப்பிரம சொரூப மாவார்களென்பார், 'பன்னி யுன்னி யாய்ந்தவர் பரப்பிரம மாவரே' எனவுங் கூறினர். 480

## சுடர்

தச்சிவாயி லுச்சிமே லாயிரந் தலங்களாய்
முச்சுடரு மூவிரண்டு மூண்டெழுந்த தீச்சுடர்
வச்சிரம தாகியே வளர்ந்துநின்ற தெவ்விடம்
இச்சுடரு மிந்திரியமு மேகமான தெங்ஙனே.

(பொ - ரை) தேவதச்சனால் அமைக்கப்பட்ட தச்சுவாயு என்னும் இந்தத் தேகத்தில் உள்ள உச்சிக்குமேல் ஆயிரந்தலங்களாய் மூன்று சுடர்களும், ஆறுசுடர்களும் மூண்டுஎழுந்த சுடரானது வச்சிரமாகி வளர்ந்திருந்தது எவ்விடம்? ஆகையால், இந்தச் சுடர்களும் இந்திரியமும் ஒன்றாயானது எந்தவித மாகும்? எ - று.

இந்தமானிட சரீரத்திலுள்ள யாவும் ஒன்றாயமைவது எங்ஙனம்? என்பது கருத்து. 481

## மூர்த்தி விசேஷம்

முத்திசித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தியை
மற்றுதித்த வைம்புலன்க ளாகுமத்தி மப்புலன்
அத்தனித்த காளகண்ட ரன்பினா லனுதின
முச்சரித் துளத்திலே யறிந்துணர்ந்து கொண்மினே.

(பொ - ரை) முத்தியும் சித்தியும் தொந்தமாய் ஒன்றாய்க் கலந்திருக்கின்ற மூர்த்தியை இந்தத் தேகத்திலுதித்த ஐம்புலன்களும் மத்திமப் புலன்களும் நீக்கப்பட்டால் அந்தத் தனித்த காளகண்டராகிய பரமேஸ்வரனுடைய அன்பினால் பிரதிதினமும் உச்சரித்து மனத்தின்கண் அறிந்துணர்ந்து கொள்ளுங்கள் எ - று.

சர்வேஸ்வரனுக்கு முத்தியுஞ் சித்தியும் ஒன்றேயா மென்பார், 'முத்திசித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தியை' எனவும், ஐம்

புலன்களும் அடக்கப்படவேண்டுமென்பார், 'மற்றுதித்த வைம்புலன்க ளாகுமத்தி மப்புலன்' எனவும், சர்வேஸ்வரனுடைய திருமந்திரத்தை உள்ளபடியே உணர்ந்து உச்சரிக்கவேண்டு மென்பார், 'அத்தனித்த காளகண்ட ரன்பினு லனுதின, முச்சரித் துளத்திலே யறிந்துணர்ந்து கொண்மினே' எனவுங் கூறினர். 482

## பிறவாமை

வல்லவாச லொன்பது மருத்தடைத்த வாசலுஞ்
சொல்லும் வாசலோரைந்துஞ் சொல்லவிம்மி நின்றதும்
நல்லவாச லைத்திறந்து ஞானவாச லூடுபோ
யெல்லைவாசல் கண்டபி னினிப்பிறப்ப தில்லையே.

(பொ - ரை) வல்லமையுடைய வாசல்கள் ஒன்பதும், சமீபத்தில் அடைத்து வைத்திருக்கின்ற வாசலும், யாவராலுஞ் சொல்லப்படு கின்ற வாசல்கள் ஐந்தையுஞ் சொல்லுதற்கு விம்மிவிம்மி நின்றதும், ஆகமுடிந்தது. ஆகையால், இவ் வாசல்களுள் நல்ல வாசலைத் திறந்து அதிலுள்ள ஞானவாசலின் ஊடுபோய் எல்லையாகிய வாசலைத் தரி சித்தபின்னர் அவர்கள் இனி பிறப்பது இல்லையாகும் எ - று.

உயர்ந்த ஞானவாசலின் வழியே சென்று தெரிசிப்பவர்களுக்கு பிறவி உண்டாவதில்லை என்பது கருத்து. 483

## வினை நீக்கம்

வண்டுபூ மணங்களோடு வந்திருந்த தேனெலாம்
உண்டுளே யடங்கும்வண்ண மோதிலிங்க மூலமாய்க்
கண்டுகண்டு வேரிலே கருத்தொடுங்க வல்லிரேற்
பண்டுகொண்ட வல்வினை பறந்திடுஞ் சிவாயமே.

(பொ - ரை) நல்ல வாசனையுடன் வண்டுகளால் வந்திருந்த தேன் எல்லாம் உண்டு உள்ளேயே யடங்கும்விதம் ஓதுகின்ற இலிங்கத்தின்

மூலமாய்க் கண்டுகண்டு வேரின்கண் கருத்தொடுங்கும் மார்க்கத்தைச் செய்ய வல்லமையுடையீராஞல் பூர்வத்தில்செய்து வைத்திருக்கின்ற கொடிய வினையானது பறந்து போய்விடும் எ - று.

தேஞனது வண்டினுல் புஷ்பங்களின் மணத்தை யடைந்திருக்கின்றதென்பார், 'வண்டுபூ மணங்களோடு வந்திருந்த தேனெலாம்' எனவும், ஆன்மா சந்திரபானத்தையுண்டு உள்ளடங்கவேண்டு மென்பார், 'உண்டுளே யடங்கும்வண்ண மோதுலிங்க மூலமாய்' எனவும், சர்வேஸ்வரனை உள்ளபடியே உச்சரித்தால் இருவினைகள் நாடமாட்டாவென்பார், 'கண்டுகண்டு வேரிலே கருத்தொடுங்க வல்லிரேல், பண்டுகொண்ட வல்வினை பறந்திடுஞ் சிவாயமே' எனவுங் கூறிஞர். 484

## பஞ்சாட்சரம்

ஓரெழுத்தி லிங்கமாக வோதுமக் கரத்துளே
யோரெழுத் தியங்குகின்ற வுண்மையை யறிகிலீர்
மூவெழுத்து மூவராய் முளைத்தெழுந்த சோதியை
நாவெழுத்து நாவுளே நவின்றதே சிவாயமே.

(பொ - ரை) ஒரு எழுத்தாகிய ஒன்றை லிங்கமாகச் சொல்லுகின்ற எழுத்தாகிய பிரணவத்திற்குள் அந்த ஒரு எழுத்தே சஞ்சரிக்கின்ற உண்மையை நீங்கள் உணரமாட்டீர்கள். அன்றியும், மூன்றெழுத்தானது மூன்று தேவர்களாய் முளைத்தெழுந்த தேஜோரூபனை நாவைக் கொண்டு உண்மைப் பீஜாட்சரங்களால் உச்சரித்து சுகத்தை யடையவேண்டும் எ - று.

பிரணவமே ஓரெழுத்தும் மூன்றெழுத்துமா மென்பார், 'ஓரெழுத் திலிங்கமாக வோதுமக் கரத்துளே, ஓரெழுத் தியங்குகின்ற வுண்மையை யறிகிலீர்' எனவும், இதுவே திரிமூர்த்திகளுடைய பிறவிக்கிடமா மென்பார், 'மூவெழுத்து மூவராய் முளைத்தெழுந்த சோதியை'

எனவும், இவ் வெழுத்தை பஞ்சாட்சரத்துடன்கூட்டி யுச்சரிக்க வேண்டு மென்பார், 'நாவெழுத்து நாவுளே நவின்றதே சிவாயமே' எனவுங் கூறினர். 485

## தூ ர ம்

தூரதூர தூரமும் தொடர்ந்தெழுந்த தூரமும்
பாரபார பாரமென்று பரிந்திருந்த பாவிகாள்
நேரநேர நேரமு நினைந்திருக்க வல்லிரேல்
தூரதூர தூரமுந் தொடர்ந்துகூட லாகுமே.

(பொ - ரை) தூரதூர தூரம்என்று தொடர்ந்தெழுந்த தூரமும் தொடர்ந்து சென்று பற்றுவது பாரமாகுமென்று அதில் பிரவேசியாமல் சரீர சுகத்தையே விரும்பியிருந்த பாவிகளே! நீங்கள் எந்நேரமும் நினைந்திருக்க வல்லமையுடையீரானல் தூரதூர தூரமுந் தொடர்ந்து அப் பரம்பொருளைச் சேரலாம் எ - று.

சிவபெருமானைப் பெரும்பாலார், அணுகமுடியா தென்கிறு ரென்பார், 'தூரதூர தூரமுந் தொடர்ந்தெழுந்த தூரமும்' எனவும், இதனலல்லவா நீங்கள் உணராமல் பாவிகளாகின்றீ ரென்பார், 'பாரபாரமென்று பரிந்திருந்த பாவிகாள்' எனவும், அந்தப் பொருளை சதா சிந்திப்பவர்கள் சர்வேஸ்வரனை அடைவார்க ளென்பார், 'நேரநேர நேரமு நினைந்திருக்க வல்லிரேல், தூரதூர தூரமுந் தொடர்ந்து கூட லாகுமே' எனவுங் கூறினர். 486

## சி வ பூ ஜை

குண்டலங்கள் பூண்டுநீர் குளங்கடோறு மூழ்குறீர்
மண்டுகங்கள் போலநீர் மனத்தின்மா சறுக்கிலீர்
மண்டையேந்து கையரை மனத்திருத்த வல்லிரேற்
புண்டைமா லயன்றொழப் பணிந்துவாழ லாகுமே.

(பொ - ரை) உலகத்தில் ஆசாரியர்களென்று பேர் படைத்தவர்களெல்லாம் காதில் குண்டலங்களைப் பூண்டு குளங்கடோறும் மூழ்குவீர்கள். ஆனால், தவளைகள்போலவே மனத்தின்கண்ணுள்ள குற்றத்தை அறக்கமாட்டீர். ஆகையால், மண்டைகளை ஏந்திக்கொண்டிருக்கின்ற கைகளையுடையவரை மனத்தில் நிறுத்த வல்லமையுடையீரானல் பூர்வத்தின் விஷ்ணு அயன் முதலியவர்கள் தொழப் பணிந்து வாழலாகுமே எ - று.

பொய் வேடங்கள் பூண்டு குண்டலந் தரிக்கின்றவர்களும் ஆசாரியர்களாக விருக்கின்றார்க ளென்பார், 'குண்டலங்கள் பூண்டுநீர்' எனவும், தீர்த்தஸ்நானஞ் செய்வா ரென்பார், 'குளங்கடோறு மூழ்குநீர்' எனவும், இவர்கள் தவளை போன்றவர்க ளென்பார், 'மண்டுகங்கள் போலநீர் மனத்தின்மா சறுக்கிலீர்' எனவும், சர்வேஸ்வரனை உள்ளத்தி லிருத்தினால் எல்லாத் தேவர்களும் வணங்க வாழக்கூடுமென்பார், 'மண்டையேந்து கையரை மனத்திருத்த வல்லிரேல், பண்டைமா லயன்றொழப் பணிந்துவாழ லாகுமே' எனவுங் கூறினார். 487

வீடு

கூடுகட்டி முட்டையிட்டுக் கொண்டிருந்த வாறுபோ
லாடிரண்டு கன்றையீன்ற வம்பலத்து ளாடுதே
மாடுகொண்டு வெண்ணெயுண்ணு மானிடப் பசுக்களே
வீடுகண்டு கொண்டபின்பு வெட்டவெளியுங் காணுமே.

(பொ - ரை) கூண்டுகட்டி முட்டையிட்டுக்கொண் டிருந்த விதம்போல ஆடானது இரண்டு கன்றைப் பெற்ற அம்பலத்தின்கண் திருக்கூத்தாடுகின்றதே மாட்டைக்கொண்டு அதில் கிடைக்கும் வெண்ணெயை யுண்ணும் மானிடர்களாகிய பசுக்களே! நீங்கள் முக்கியமான மோட்சவீட்டைக் கண்டுகொண்ட பின்னர் வெட்ட வெளியாகிய சிதாகாசமானது வெளிப்படும் எ - று.

பட்சியானது முட்டையிடுவதுபோல ஞானிகளும் அடங்கி யிருக்கவேண்டு மென்பார், 'கூடுகட்டி முட்டையிட்டுக் கொண்டிருந்த வாறுபோல், ஆடிரண்டு கன்றையீன்ற அம்பலத்து ளாடுதே' எனவும், மோட்டசவீட்டை யுணர்ந்த பின்னரே சிதாகாசம் வெளிப்படு மென் பார், 'வீடுகண்டு கொண்டபின்பு வெட்டவெளியுங் காணுமே' எனவுங் கூறினர். 488

## கிரியை விலக்கல்

நட்டகல்லை தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து மொணமொணென்று சொல்லுமந்திர மேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ.

(பொ - ரை) சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ - சமைத்த கறியின் உருசியை அந்தச் சட்டியுஞ், சட்டுவமாகிய கிளறும் பொருளுந் தெரிந்து கொள்ளுமோ? தெரிந்து கொள்ளாது. (அது போல) நாதன் உள்ளிருக்க - பரம்பொருள் மனத்தின்கண்ணேயே யிருக்க அதைவிட்டு, நட்டகல்லை - சிற்பியினல் உருவமைக்கப்பட்டு நாட்டிய தாதுப்பொருளை, தெய்வமென்று - சகல நிட்களாதீதமாகிய பரம்பொருளென்று நினைத்து, நாலுபுட்பஞ் சாத்தி - நான்கு வகையாகிய மலர்களைத் தரித்து, சுற்றிவந்து மொணமொணென்று சொல்லு மந்திர மேதடா - முறைப்படி பிரதட்சணஞ் செய்து இருதயாதி கண்டாந்தத்துக்குள் தன்னுடைய அறிவுக்கு மாத்திரம் அறியப்படும் மத்திமை வாக்கினல் சொல்லும் மந்திரம் எங்குள்ளது, (இப்படி யிருக்கையில்) நட்டகல்லும் பேசுமோ - நடப்பட்ட சிலாரூபமானது பேசக்கூடியதோ? அன்று எ - று.

ஆயினும், இவ் விஷயம் பாரமார்த்திகர்க்கே யன்றி ஏனையோர்க் கன்று. இஃதறியாத சிலர் இவ்வாறு சொல்லுகின்றதே யென்று

பாரமார்த்திகத் தன்மையை யடைந்தவர்போன்று நடித்துச் சிலா ரூபத்தை வணங்குதற் கேதுவாகிய அன்பை யிழந்து அலைந்து தத் தமக் கேற்றவண்ணம் பேசித் திரிகின்றனர். அது கிற்க,

இனி இச் செய்யுளின் கருத்தை வியவகாரத்தன்மை யுளார்க்கே என்று விளக்குதும். எப்படி யெனில்:—வேத முதலிய கலைகளிற் சொல்லப்படுவது துவிதம், அத்துவிதம் என்கிற இரண்டு மார்க்கங் களே. அவற்றில், துவிதமே அத்துவிதத்திற்கு முதற்காரணமா யுள் ளது. அம் மார்க்கத்தில் ஒவ்வொருவரும் பதி, பசு, பாசங்களை விசாரிக்கவேண்டிய அவசியமுள்ளது. அப்படி விசாரிக்குங்கால் பதி நிர்மல முடையவ னென்றும், பசு தனக்குள்ள பாசமாகிய சகச மலத் தால் அநிர்மலனென்றும் விளங்கும். அங்ஙனமுள்ள மலத்தைப் போக்கிக்கொள்ளுதற் பொருட்டே பதியானவர் அப் பசுவுக்குத் தநு கரண புவனபோகங்களை நல்கி கருடோஹம்பாவனை செய்தோனுக்கு, அக் கருடன் இவனுய்நின்று விஷங்களைத் தீர்த்தானேயொழிய, இவ னது பாவனை யொன்றினாலேயே தீர்த்துக் கொள்ளாமை போலவும், இரசவாதஞ் செய்வோன் செம்பிலுள்ள களிம்பைப் போக்கப் பிரயத் தனஞ் செய்தானேயொழிய இவனது பிரயத்தனங் களிம்பைப் போக்காமல், மருந்தின்காரமே அக் களிம்பை உள்ளேயே அடங்கச் செய்தமை போலவும் தான் கலவாமற் கலந்துநின்று, அச் சகச மலத் தின் வலியை அடக்கத் தன்னடிப்படுத்த நியமித்த மார்க்கங்கள் நான்கு. அவையாவன:—சரியை, கிரியை, யோகம், ஞானம். இந் நான்கும் ஒவ்வொன்றில் நந்நான்காகப் பதினாறாகும். அங்ஙனங்கூறிய பதினாறில், இச் செய்யுட் கருத்து கிரியையில் ஞானமாகும். எப் படியெனில், சர்வபரிபூரணனென்னுந் திருப்பெயரை விசாரிக்கின் எங்கு நிறைந்தவனென்று புலப்படும். அங்ஙனம் எங்குநிறைந்த கட வுள் மனம் ஒன்றிலேயே இருக்கின்றானென்றும், மற்ற இடங்களி லில்லையென்றும் சொல்லுதற் கூடாமை. இதை நோக்கியே, "அங்

கிங்கெனுதபடி யெங்கும் பிரகாசமாய்'' எனவும், "பார்க்குமிட மெங்கு மொரு நீக்கமற நிறைகின்ற'' எனவும், "கல்லிலும் செம்பி லுமோ விருப்பானெங்கள் கண்ணுதலே'' எனவும், ஆன்றோர் கூறி னர். ஆகையால், எங்குமுள்ள கடவுளைக் கல்வி லில்லையென்று சொன்னால் பூரணத்துவங் குறையும். அது குறைந்தபோது, ரூபகற் பித முண்டாகும். அது உண்டானபோது, கடவுள் என்பது போய் எல்லாம் நாமேயாய் அகங்காரவாத முண்டாய்ப் பிறவிப் பெருங் கட லில் வீழ்ந்து கரையேறக்கூடாமல் அலைந்தலைந்து தவிக்கச் சந்தேகமே யில்லை. ஆகையால், கிரியையாகிய சிலாரூப வணக்கமும், பூரணத்தை நோக்குவதாகிய ஞானமுங் கலந்து நிற்றலால், இச் செய்யுளின் கருத்து கிரியையில் ஞானமேயாகச் சாதிக்கப்படும்.

இவ்வாறு சொன்னமையால் உண்டான கருத்தென்னவெனின்: இந்நூலாசிரியர், பரமார்த்திகத்தைப் பற்றிச் சொன்னமையால் குற்ற மன்றென்றும், வியவகாரத்தார் இவ்விஷயத்தையே கொண்டபோது பூரணத்துவத்தை நோக்கி நடக்கவேண்டுமென்றுங் கல்வியறிவில்லாத சிறியேன் சிற்றறிவிற் கெட்டினவரை யெழுதினதற்குப் பயன் யாதெனில்: இதைப் பார்த்துக் கற்றோரும், மற்றோரும் நகைத்தல் ஒன்றுமே என்க. இன்னும் விரிக்கின் நன்றாய் விளங்கும், ஆயின் பெருகுமென்று விடுத்தாம்.

கல்விலு மிருந்தா ரென்பதற்குப் பிரகலாதாழ்வானும், மார்க் கண்டேயருமே சான்றாம்

489

## ஐக்கியம்

நானுமல்ல நீயுமல்ல நாதனல்ல வோதுவேன்
வானிலுள்ள சோதியல்ல சோதிநம்மு ளுள்ளதே
நானுநீயு மொத்தபோது நாடிக்காண லாகுமே.
தானதான தத்ததான நாதனான தானனே

(பொ - ரை) நான் சொல்லுகின்ற ஒன்றைக் கேளுங்கள் உண்மையாகிய பொருளானது நானுமல்ல, நீயுமல்ல, நாதனுமல்ல, ஆகாயத்திலுள்ள சோதியல்ல. ஏனென்றால், அந்தச் சோதியானது நானும், நீயும் ஒத்தபோதே காணக்கூடிய பொருளாகும். ஆகையால், இது உண்மையே யாமென்று தந்தனு அடியுங்கள் எ - று.

சீவனும் சிவனும் ஒத்தபோதே இறைவனைக் காணக் கூடுமென்பார், 'நானுமல்ல நீயுமல்ல நாதனல்ல வோதுவேன், வானிலுள்ள சோதியல்ல சோதிநம்மு ளுள்ளதே, நானுநீயு மொத்தபோது நாடிக் காண லாகுமே' எனவும், இது விஷயத்தை உணர்ந்தபின் ஆநந்தக் கூத்து ஆடவேண்டு மென்பார், 'தானதான தத்ததான நாதனுன தானனு' எனவுங் கூறினர். 490

நிச்சயம்

நல்லதல்ல கெட்டதல்ல நடுவில்நிற்ப தொன்றுதான்
நல்லதென்ற போதது நல்லதாகி நின்றுபின்
நல்லதல்ல கெட்டதென்றால் கெட்டதாகு மாதலால்
நல்லதென்று நாடிநின்று நாமஞ்சொல்ல வேண்டுமே.

(பொ - ரை) பரம்பொருளானது நல்லதல்ல, கெட்டதல்ல, நடுவுநிலைமையாக நிற்கின்ற ஒரு பொருளாகும், அந்தப் பொருளானது நல்ல தென்று சொன்னபோது நல்லதாகவும், கெட்ட தென்று சொன்னபோது கெட்டதாகவும் நிற்கும். ஆகையால், உலகர்களே! நீங்கள் அந்தப் பொருளை நல்லதாகவே விரும்பி அதின் நாமங்களைச் சொல்லி வணங்கவேண்டும் எ - று.

'தெய்வ முளதென்பார் தீயசெயப் புகின்
தெய்வமே கண்ணின்ற முன்னெறுக்கும்—தெய்வம்
இல தென்பார்க் கில்லை'

என்று கூறியவாறே யாரொருவர் நல்ல பொருளாகக் கொள்வார் களோ அவர்களுக்கு நல்லவனுகக் காணப்படுவா னென்பார், 'நல்ல தல்ல கெட்டதல்ல நடுவினிற்ப தொன்றுகாண், நல்லதென்ற போதது நல்லதாகி நின்றபின்' எனவும், கெட்டதாகக் கொள்வோர்க்கு கெட்ட பொருளாகக் காணப்படுவா னென்பார், 'கெட்டதென்றால் கெட்ட தாகு மாதலால்' எனவும், நல்லவனுகவே கொள்ளவேண்டு மென்பார், 'நல்லதென்று நாடிநின்று நாமஞ்சொல்ல வேண்டுமே' எனவுங் கூறினர். 491

## பிறவி விலக்கல்

பேய்கள்கூடிப் பிணங்கடின்னும் பிரியமில்லாக் காட்டிலே
நாய்கள்சுற்ற நடனமாடு நம்பன்வாழ்க்கை யேதடா
தாய்கள்பாலு திக்குமிச்சை தவிரவேண்டி நாடினுல்
நோய்கள்பட் டுழல்வதேது நோக்கிப்பாரு மும்முளே.

(பொ - ரை) பேய்களெல்லாம் ஒன்றுகச்சேர்ந்து பிணங்களைத் தின்னுகின்ற யாவராலும் பிரியப்படாத காட்டிலே நாய்களானவை சுற்றும்படி நடனஞ்செய்கின்ற பரமேஸ்வரனுடைய வாழ்க்கை ஏது? தாய்மார்களுடைய பாலைக்குடிக்கின்ற இச்சையானது தவிரவேண்டி விரும்பினுல் நோய்களையடைந்து அவைகளால் வருந்துவது ஏது? இதை உங்களுக்குள் ஆராய்ந்து பாருங்கள் எ - று.

சுடுகாடானது பேய்கள் பிணங்களைத் தின்னக் கூடியதென் பார், 'பேய்கள்கூடிப் பிணங்கள்தின்னும் பிரியமில்லாக் காட்டிலே' எனவும், இறைவன் அவ்விடத்திலேயே நடனஞ்செய்யுந் தன்மை யுள்ளவனென்பார், 'நாய்கள்சுற்ற நடனமாடு நம்பன்வாழ்க்கை யேதடா' எனவும், கடவுளுடைய திருவடிகளை விரும்பினுல் இனிப் பிறப்பதில்லை யென்பார், 'தாய்கள்பா லுதிக்குமிச்சை தவிரவேண்டி

நாடினால், நோய்கள்பட் டுழல்வதேது நோக்கிப்பாரு மும்மூளே' எனவுங் கூறினார். 492

## நிலையாமை

உப்பைநீக்கி லழுவிப்போகு மூற்றையாகு முடலில்நீ
அப்பியாசை கொண்டிருக்க லாகுமோசொ லறிவிலா
தப்பிலிப்பொய் மானங்கெட்ட தடியனுகு மனமேகேள்
ஒப்பிலாசெஞ் சடையனுகு மொருவன்பாத முண்மையே.

(பொ - ரை) ஒழியாமற் பொய்பேசுகின்ற மானங்கெட்ட தடியனான மனமே! நீகேள் உப்பைநீக்கிவிட்டால் அழுகிப் போகக்கூடிய இந்த ஊற்றையாகிய தேகத்தில் நீசேர்ந்துகொண்டு அதன்மேல் மிகுந்த ஆசையை வைத்திருக்கலாகுமோ? ஆகாது. ஆகையால், ஒப்புயர்வற்ற செவந்த சடாமுடியைத் தரித்தவனான ஒருவனாகிய பரமேஸ்வரனுடைய திருவடிகளே உண்மையானதாகும். ஆகையால், அவைகளை நீ நம்பக்கடவை எ - று.

இந்தச் சரீரமானது உப்பிட்ட பாண்டமென்பார், 'உப்பைநீக்கி லழுவிப்போகு மூற்றையாகு முடலில்' எனவும், ஆன்மாவுக்கு இதன்மேல்மிக்க ஆவலுண்டென்பார், 'அப்பியாசை கொண்டிருக்க லாகுமோசொல்' எனவும், இது ஈஸ்வரன்மேல் உண்மையா மென்பார், 'அறிவிலா தப்பிலிப்பொய் மானங்கெட்ட தடியனுகு மனமேகேள், ஒப்பிலாசெஞ் சடையனுகு மொருவன்பாத முண்மையே' எனவுங் கூறினார். 493

## இதுவுமது

பிறப்பதெல்லா மிறப்பதுண்டு பேதைமக்கள் தெரிகிலா
திறப்பதில்லை யெனமகிழ்ந்து மெங்களுங்கள் சொத்தென

குறிப்புபேசி திரிவரன்றி கொண்டகோல மென்னவோ
நிறப்பும்பொந்தி யழிந்தபோது நேசமாமோ யீசனே.

(பொ - ரை) உலகத்தில் பிறக்கின்ற ஜந்துக்களெல்லாம் பிறக்க வேண்டிய துண்டாகையால் அறிவில்லாத மானிடர்களே! இது தெரியாமல் நீங்களெல்லாரும் இறப்பதில்லை என்று எண்ணி அது விஷயமாகச் சந்தோஷித்து இது எங்கள் சொத்தென்றும், அது உங்கள் சொத்தென்றும் குறிப்பாகப்பேசித் திரிவார்களேயன்றி எடுத்துக் கொண்ட கோலம் என்னவோ? ஆகையால், தேகமானது அழிந்த காலத்தில் ஈசனுடைய திருவருளானது உங்களுக்கு நேசமாகுமோ?

எவ்வெவ் வஸ்துக்களும் பிறந்தபோதே இறப்பைக் கூடவைத்திருக்குமென்பார், 'மறப்பதெல்லாம் பிறப்பதுண்டு' எனவும், இதை அறிவீனர்கள் உணரமாட்டார்களென்பார், 'பேதைமக்கள் தெரிகிலா திறப்பதில்லை யெனமகிழ்ந்து எங்களுங்கள் சொத்தென குறிப்பு பேசித் திரிவரன்றி கொண்டகோல மென்னவோ' எனவும், சரீரம் அழிந்து பட்டபின் சர்வேஸ்வரனுடைய திருவருள் கைகூடுவது என்ன என்பார், 'திறப்பும் பொந்தி யழிந்தபோது நேசமாமோ வீசனே' எனவுங் கூறினர். 494

## மாயை விலக்கல்

சுட்டெரித்த சாந்துபூசும் சுந்தரப்பெண் மதிமுகத்
திட்டநெட் டெழுத்தறியா தேங்கிநோக்கு மிதிவலீர்
பெட்டகத்துப் பாம்புறங்கும் பித்தலாட்ட மறியிரோ
கட்டவிழ்த்துப் பிரமன்பார்க்கில் கதியுமக்கு மேதுகாண்.

(பொ - ரை) சுட்டு எரித்த சாம்பலைப் பூசுகின்ற அழகிய பெண்ணினுடைய நெட்டெழுத்தை யுணராமல் ஏங்கியேங்கிப் பார்க்கின்ற புத்தி வல்லவர்களே! நீங்கள் பெட்டியில் பாம்பானது தூங்கு

கின்ற பித்தலாட்டத்தை அறிவீர்களோ? ஆகையால், பிரமனுனவன் கட்டவிழ்த்துப் பார்த்தால் உங்களுக்குக் கதியில்லை எ - று.

நீங்கள் செய்யும் தப்பு வழிகளுக்காக பிரமன் கண்திறந்து பார்த்தால் என்ன செய்ய வல்லமையுடையீராவீர் என்பது வினு? 495

## சரியை விலக்கல்

வேதமோது வேலையோ வீணதாகும் பாரிலே
காதகாத தூரமோடி காதல்பூசை வேணுமோ
ஆதிநாதன் வெண்ணெயுண்ட வவனிருக்க நம்முளே
கோதுபூசை வேதமேது குறித்துபாரு மும்முளே.

(பொ - ரை) உலகத்தின்கண் வேத பாராயணஞ் செய்வது வீண் காரியமேயாகும். பூசையானது அநேக காத தூரஞ்சென்று செய்ய வேண்டுமோ? ஆதியேயுள்ள தலைவனும் வெண்ணெயுண்டவனுமாகிய விஷ்ணுவானவன் நம்முடைய இருதயத்தின்கண்ணிருக்க கோதுகோதாகச் செய்யும் பூசை யேது? வேத பாராயணம் ஏது? இல்லை. ஆகையால், நீங்கள் இதை நன்ருயுணர்ந்து பாருங்கள் எ - று.

சர்வேஸ்வரன் ஒவ்வொரு ஆன்மாக்களிலும் கலந்திருக்கிறபோது வெளிமயக்காகச் செய்யும் பூசை முதலியவற்ருல் பயனில்லை என்பது கருத்து. 496

## சர்வ வியாபகம்

பரமிலாத தெவ்விடம் பரமிருப்ப தெவ்விடம்
அறமிலாத பாவிகட்கு பரமிலைய துண்மையே
கரமிருந்துப் பொருளிருந்து மருளிலாத போதத்
பரமிலாத சூன்யமாகும் பாழ்நரக மாகுமே.

(பொ - ரை) பரம்பொருளானது இல்லாதது எவ்விடம்? இருப்பது எவ்விடம்? தருமஞ் செய்யாத பாவிகளுக்கு பரமென்பது இல்லையாகும். இது உண்மையேயாகும் கைகளிருந்தும் பொருள்களிருந்தும், திருவருளில்லாதபோது அது பரமில்லாத சூநியமாகும். பாழ்நரகமுண்டாகும் எ - று.

சர்வேஸ்வரனுக்கு சர்வ வியாபகமுள்ளபோது இறைவன் ஒரு இடத்திலிருக்கிறாரென்றும், ஒரு இடத்திலில்லையென்றுஞ் சொல்லவொண்ணாதென்பார், 'பரமிலாத தெவ்விடம் பரமிருப்ப தெவ்விடம்' எனவும், கருமிகட்கு சிவபெருமானுடைய வியாபகம் வேண்டியதில்லை யென்பார், 'அறமிலாத பாவிகட்கு பரமிலைய துண்மையே' எனவும், கொடுக்க கைகளும் பொருள்களு மிருந்தும் ஈயார்க்கு நரகமே சித்திக்கு மென்பார், 'கரமிருந்தும் பொருளிருந்து மருளிலாத போதது, பரமிலாத சூன்யமாகும் பாழ்நரகமாகுமே' எனவுங் கூறினர். 497

## போத நிலை

மாதர்தோள்சே ராததேவர் மானிலத்தி லில்லையே
மாதர்தோள் புணர்ந்தபோது மனிதர்வாழ் சிறக்குமே
மாதராகுஞ் சக்தியொன்று மாட்டிக்கொண்ட தாதலால்
மாதராகும் நீலிகங்கை மகிழ்ந்துகொண்டா னீசனே.

(பொ - ரை) பெண்களுடைய தோளில் சேராத தேவர்கள் உலகத்தில் ஒருவருமில்லை. ஆகையால், பெண்களுடன் கூடினால் மனிதர்களுடைய வாழ்வு சிறக்கும். எங்ஙனமெனில், பெண் என்றது ஒரு சக்தியாக மாட்டிக்கொண்ட தாகையால், இதுபற்றியே யன்றோ சிவபெருமானும் கங்காதேவியை தலைமேல்வைத்து மகிழ்ந்திருப்பது எ - று.

பெண்களால் உலகவிர்த்தியுண்டாம் என்பது கருத்து. 498

## ஈஸ்வர கிருபை

சித்தரென்றுஞ் சிறியரென்று மறியொணாத சீவர்காள்
சித்தரிங் கிருந்தபோது பித்தரென்று எண்ணுவீர்
சித்தரிங் கிருந்துமென்ன பித்தனாட் டிருப்பரே
அத்தனாடு மிந்தநாடு மவர்களுக் கெலாமொன்றே.

(பொ - ரை) இவர்கள் சித்தப்புருஷர்களென்றும், இவர்கள் சிறியவர்களென்றும் உணர்ந்துகொள்ளாத சீவர்களே! நீங்கள் சித்தர்கள் இவ்விடத்தி லிருந்தகாலத்தில் அவர்களைப் பித்தர்களென்று நினைப்பீர்கள். அவர்கள் இங்கே யிருந்தாலும் பித்தனுடைய நாட்டிலு மிருப்பார்கள். ஆகையால், அவர்களுக்கு கைலாசமென்றும் மண்ணுலகமென்றும் வித்தியாசமில்லை எல்லாம் ஒன்றேயாகும் எ - று.

சித்தர்களுக்கு எந்த இடமும் ஒன்றேயாகும் என்பது கருத்து. ()

## மாதர் மையல்

மாந்தர்வாழ்வு மண்ணிலே மறந்தபோது விண்ணிலே
சாந்தனான ஆவியைச் சரிப்படுத்த வல்லிரேல்
வேந்தனாகி மன்றுளாடும் விமலன்பாதம் காணலாம்
கூந்தலம்மை கோணலொன்றுங் குறிக்கொணாதி துண்மையே.

(பொ - ரை) மாந்தர்களுடைய வாழ்க்கையானது உலகத்திலாகும் அந்த வாழ்க்கையை மறந்தகாலத்தில் சொர்க்கத்திலாகும். இவர்கள் தங்களுடைய ஆன்மாவைச் சரிப்படுத்த வல்லமையுடையவர்களானால் அரசனாய் சிற்றம்பலத்தில் நடனஞ்செய்கின்ற பரமேஸ்வரனுடைய திருவடிகளை உண்மையாய்த் தரிசிக்கலாகும். ஆனால், கூந்தலையுள்ள பெண்கள் மாய்கையாகிய யாதொரு கோணலையும் கொள்ளப்படாது. இது உண்மையாகும் எ - று.

ஆன்மாக்கள் பரிபக்குவத்தை யடையுமானல் சர்வேஸ்வரனை தரிசிக்கக்கூடும் என்பது கருத்து. 500

### சரியை நியமனம்

சருகருந்தி நீர்குடித்து சாரல்வாழ் தவசிகாள்
சருகருந்தில் தேகங்குன்றி சஞ்சலமுண் டாகுமே
வருவிருந்தோ டுண்டுடுத்தி வளர்மனை சுகிப்பிரேல்
வருவிருந்தோ னீசனகி வாழ்வளிக்குஞ் சிவாயமே.

(பொ - ரை) உதிர்ந்த இலைச்சருகுகளைத் தின்று அந்த மலைச் சாரல்களில் விளங்குகின்ற சலத்தைக் குடித்து வாழ்கின்ற தவசிகளே! நீங்கள் அந்த இலைகளைத் தின்பதினல் சரீரங்குன்றி துக்கமுண்டாகும். ஆகையால், உம்மை வந்தடுக்கின்ற விருந்தினர்களோடிருந்து உண்டு உடுத்திவளர்கின்ற வீட்டின்கண் சுகமாக இருப்பீர்களானல் சர்வேஸ்வரனனவன் ஒரு விருந்தினவன்போல உங்களிடத்தில்வந்து உங்களுக்கு சுக வாழ்வைக் கொடுப்பான் எ - று.

தவஞ்செய்பவர்களிற் பெரும்பாலோர் சருகு முதலியவற்றைத் தின்றுகொண்டே மலைகளில் தவஞ்செய்வது சுபாவமென்பார், 'சரு கருந்தி நீர்குடித்துச் சாரல்வாழ் தவசிகாள்' எனவும், அங்ஙனஞ் சரு கருந்துவதால் சரீரம் கெடுதியை யடையுமென்பார், 'சருகருந்தில் தேகங்குன்றி சஞ்சலமுண் டாகுமே' எனவும், இதைவிட்டு இல்லற வாழ்க்கையி லமர்ந்து விருந்தோம்பி அதில்நின்றல் சர்வேஸ்வரனும் விருந்தாளியாகவேவந்து திருவருள் செய்வானென்பார், 'வருவிருந் தோ டுண்டுடுத்தி வளர்மனை சுகிப்பிரேல், வருவிருந்தோ னீசனகி வாழ்வளிக்குஞ் சிவாயமே' எனவுங் கூறினர் எ - று.

சிவபெருமான் விருந்தாளியாகவந்து ஆட்கொள்வது உண்மை யென்பதற்கு இளையான் குடிமாற நாயனரும், சிறுத்தொண்ட நாய னருமே சான்றும். 501

## பூவலம் விலக்கல்

காடுமேடு குன்றுபள்ளங் கானிரு றகற்றியும்
நாடுதேசம் விட்டலைவர் நாதன்பாதங் காண்பரோ
கூடுவிட்ட கன்றுன்னுவி கூத்தனூர்க்கே நோக்கலால்
வீடுபெற் றரன்பதத்தில் வீற்றிருப்ப ரில்லையே.

(பொ - ரை) உலகத்திற் பெரும்பாலார் காடுகள், மேடுகள், பெரிய பள்ளங்கள் காட்டாறுகள் இவைகளை யெல்லாந் தாண்டி தங்களுடைய நாடுகளையும் தேசங்களையும் விட்டு அலைவார்கள் அங்ஙனம் அலைந்தாலும் சர்வேஸ்வரனுடைய திருவடிகளைக் காணுவார்களோ? காணமாட்டார்கள். ஆகையால், இந்த ஆன்மாவானது இப்போது இருக்குஞ் சரீரத்தைவிட்டு நீங்கி எமதருமனுடைய ஊருக்குப் போகப் பார்ப்பதால் மோட்சத்தை யடைந்து சர்வேஸ்வரனுடைய திருவடிகளில் என்றும் வீற்றிருப்பவர்கள் ஒருவருமில்லை எ - று.

சிவபெருமானைக் கண்டுணரும் மார்க்கத்தைத் தீர்க்கமாக உணர்ந்துகொள்ளாமையால் ஆன்மாக்கள் எமனூர் சேர்வார்களே யல்லாமல் மோட்சவீட்டை யடையமாட்டார்கள் என்பது கருத்து. 502

## சிதாகாச ஸ்தாபனம்

கட்டையாற்செய் தேவருங் கல்லினுற்செய் தேவரும்
மட்டையாற்செய் தேவரும் மஞ்சளாற்செய் தேவரும்
சட்டையாற்செய் தேவருஞ் சாணியாற்செய் தேவரும்
வெட்டவெளிய தன்றிமற்ற வேறுதெய்வ மில்லையே.

(பொ - ரை) மரங்களாற் செய்யப்பட்ட தேவர்களும், கல்லினுற் செய்யப்பட்ட தேவர்களும், மட்டையினுற் செய்யப்பட்ட தேவர்களும், மஞ்சளினுற்செய்யப்பட்ட தேவர்களும், சட்டையினுற் செய்யப்

பட்ட தேவர்களும், சாணியினுற் செய்யப்பட்ட தேவர்களும், வெட்ட வெளியே யாவார்களன்றி வேறுதெய்வங்களாக மாட்டார்கள் எ - று.

தெய்வங்கள் பலபலவோக முதலியவற்றுல் அவ்வவர்கள் மதக் கோட் பாட்டைப்போல் செய்யப்பட்டாலும் முடிவில் எல்லாம் வெளியில் வாழுந் தெய்வமாகவே முடியும் என்பது கருத்து. 503

## கோலை விலக்கல்

தங்கள்தேக நோய்பெறில் தனைப்பிடாரி கோயிலிற்
பொங்கல்வைத்து வாடுகோழிப் பூசைபலி யிட்டிட
நங்கச்சொல் நலிமிகுத்து நாளுந்தேஞ்சி மூஞ்சூராய்
உங்கள்குல தெய்வமுங்க ளுருகுலைப்ப துண்மையே.

(பொ - ரை) தங்களுடைய தேகத்தில் நோயானது உண்டா னல் பிடாரியார் கோயிலுக்குச் சென்று அவ்விடத்தில் பொங்கல் வைத்து ஆடு, கோழி இவைகளை பலிகொடுத்து பூசைசெய்து நக்கு சொல்மிகுத்து தினமும் மூஞ்சூறுபோல் இளைத்து வெறுக்கப்பட்டு உங்களுடைய குலதெய்வங்கள் உங்களுடைய உருவைக் கெடுப்பது உண்மையேயாகும் எ - று.

உலகத்தார்கள் தங்களுக்கு ஏதாவதொரு நோய்வந்தால் கொல்லா விரதத்தை எள்ளளவுங் கொண்டாடாமல் கோழி முதலியவற்றைப் பலி கொடுப்பதால் வீணைச் சரீர கெடுதியை யடைவார்கள் என்பது கருத்து. 504

## மோசம் விலக்கல்

ஆசைகொண் டனுதினமு மன்னியர் பொருளினை
மோசஞ்செய் தபகரிக்க முற்றிலு மலைபவர்

பூசையோடு நேமநிட்டை பூரிக்கச்செய் பாதகாள்
காசினியி லெழுநரகைக் காத்திருப்ப துண்மையே.

(பொ - ரை) அந்நியர் பொருள்களின்மேல் ஆசையைவைத்து தினந்தோறும் அந்நியர்களுடைய பொருள்களை யெல்லாம் மோசஞ் செய்து அபகரிப்பதற்காக எப்பொழுதும் அலைந்து திரிபவர்கள் பூசை, நியமம், நிட்டை இவைகளை வெளியார் மயங்கசெய்யும் பாவிக ளாவார்கள். ஆகையால், அவர்கள் இவ்வுலகத்தில் ஏழு நரகங்களையும் காத்துக்கொண்டிருப்பவ ராவார்கள். இது உண்மையாகும் எ - று.

மோசஞ்செய்ய விரும்புவோர்கள் நரகவாதனையை யநுபவிப் பார்கள் என்பது கருத்து. 505

## சரியை விலக்கல்

நேசமுற்றுப் பூசைசெய்து நீறுபூசிச் சந்தனம்
வாசமோ டணிந்துநெற்றி மைதிலர்த மிட்டுமே
மோசம்பொய் புனைசுருட்டு முற்றிலுஞ்செய் மூடர்காள்
வேசரிக ளம்புரண்ட வெண்ணீறுரு மேனியே.

(பொ - ரை) மனத்தின்கண் விருப்பம்வைத்து பூசைசெய்து திருநீறு பூசி வாசனையுடன் சந்தனந் தரித்து நெற்றியிற் பொட்டிட்டு மோசம், பொய், புனைசுருட்டு முதலியவைகளை முழுதுஞ் செய்கின்ற மூடர்களே! நீங்கள் இங்ஙனஞ் செய்வதால் கழுதை புரண்ட களத்தி லுள்ள நீறும் உங்களுடைய தேகத்திலணிந்திருக்குந் திருநீறு எ-று.

சிவ வேடதாரிகளா யிருந்து மோச முதலியவற்றைச் செய் வோர் அவ்வேடத்தாற் பலனை அடையமாட்டார்கள் என்பது கருத்து.

## வாதிகள் தன்மை

வாதஞ்செய்வேன் வெள்ளியும்பொன் மாற்றுயர்ந்த தங்கமும்
போதவே குருமுடிக்கப் பொன்பணங்கள் தாவென
சாதனைசெய் தெத்திசொத்து தந்ததைக் கவர்ந்துமே
காததூர மோடிசெல்வர் காண்பது மருமையே.

(பொ - ரை) வெள்ளி, பொன், மாற்றுயர்ந்த தங்கம் இவைகளைச் செய்வதாகிய வாதத்தைச் செய்வேன். ஆனால், இது முடிவுபெற குரு மருந்து முடிக்கவேண்டும். அங்ஙனம் அதை முடிப்பதற்கு பணம் கொடும் என்று சொல்லி, அவர்கள் கொடுக்க வாங்கிக்கொண்டு அநேக காத தூரஞ்சென்று ஒளித்துக் கொள்வார்கள் அவர்களை மறுபடியுங் காண்பது கஷ்டமாகும். ஆகையால், அப்படிப்பட்டவர்களை உண்மையானவர்களென்று நம்பவேண்டாம் எ - று.

பொய் வாதிகளை நம்பி மோசம் போகவேண்டாம் என்பது கருத்து. 507

## பொய் யோகி

யோகஜாடை காட்டுவார் உயரவும் எழும்புவார்
வேகமாக வட்டசித்து வித்தைகற்று கெட்டுவார்
மோகங்கொண்டு மாதரின் மூத்திரப்பை சிக்கிப்பின்
பேயது பிடித்தவன்போற் பேருலகிற் சாவமே.

(பொ - ரை) உலகத்திற் பெரும்பாலோர் யோகஞ் செய்வதில் தேர்ந்தவர்களைப்போல் யோக ஜாடை காட்டுவார்கள். அதை நம்பும்படி உயரவும் எழும்புவார்கள். அஷ்டமா சித்துகளை வெகுவாகவுங் காட்டுவார்கள். கடைசியாக பெண்கள்மேல் மோகங்கொண்டு அவர்க

ளுடைய மூத்திரப்பையாகிய அல்குலிற்சிக்கி பிறகு பேய்பிடித் தவன்போ லலைந்து உலகத்தில் சாவார்கள் எ - று.

உலகத்தில் பொய் யோகிகளாய் வேடம்பூண்டு வருகின்றவர்கள் பலரிருக்கின்றனர். ஆகையால், அவர்களெல்லாம் பெண்களை மயக்கு கின்றவர்க ளாகையால் அவர்களை நம்பிச் சேராதீர்கள் என்பது கருத்து. 508

## பொய்க்காய கற்பம்

காயகாய முண்பதாகக் கண்டவர் மதித்திட
மாயவித்தை செய்வதெங்கு மடிப்புமோசஞ் செய்பவர்
நேயமாக் கஞ்சாவடித்து நேரபினைத் தின்பதால்
நாயதாக நக்கிமுக்கி நாட்டினி லலைவரே.

(பொ - ரை) உலகத்தில் பெரும்பாலார் காயகற்பம் உண்பதாகப் பார்ப்பவர்க ளெல்லாம் மதிக்கமாய வித்தைகளைச் செய்து எவ்விடத் திலும் மோசஞ் செய்வார்கள். ஆனல், அவர்கள் கஞ்சாவில் விருப்பம் வைத்தடித்து அபினியைத் தின்பதால் நாய் சென்மமாகி இவ்வுலகத் தில் நக்கி முக்கி அலைவார்கள் எ - று.

உலகத்தில் பெரும்பாலார் காயகற்பஞ் செய்வதாகச் சொல்லி மயக்குவார்கள். ஆகையால், நீங்கள் அவர்களை நம்பவேண்டாம் என்பது கருத்து 509

## சரீர நிலையாமை

நீரினிற் குமிழியொத்த நிலையிலாத காயமென்று
ஊரினிற் பறையடித்து தாரியாய்த் திரிபுவர்

சீரினி லுனக்குஞான சித்திசெய்வேன் பாரென
நேரினிற் பிறர்பொருளை நீளவுங் கைப்பற்றுவார்.

(பொ - ரை) இந்தச் சரீரமானது நீரிற் குமிழிபோலும் நிலையில்லாததென்று ஊரிலறிவித்து உதாரியாகத் திரிபவர்கள் உனக்கு நான் நன்றாக ஞானசித்தி செய்விப்பே னென்று அவர்களிடத்தில் பொருளை யபகரித்துக்கொண்டு செல்லுவோர் பெரும்பாலா ராவார்கள் எ - று.

ஞானபோதஞ் செய்வார் போன்று நடித்து பிறர்பொருளை அபகரிப்பவர்கள் உலகத்தில் பெரும்பாலோ ரிருக்கின்றமையால் அவர்களை நம்பவேண்டாம் என்பது கருத்து. 510

## வேஷ தாரிகள்

காவியுஞ் சடைமுடி கமண்டலங்க ளாசனம்
தாவிருத்தி ராட்சம்யோக தண்டுகொண்ட மாடுகள்
தேவியை யலையவிட்டுத் தேசமெங்கும் சுற்றியே
பாவியென வீடெலாம் பருக்கைகேட் டலைவரே.

(பொ - ரை) காவியும், சடைமுடியும், கமண்டலமும், உருத்திராட்சமும், யோகதண்டமும் கொண்டமாடுகள் தங்கள் தங்கள் பெண்சாதிமார்களை அலையவிட்டு சகல தேசங்களிலுஞ் சுற்றி பாவியென்று சொல்லும்படி வீடுகள்தோறும் பிச்சையெடுத் தலைவர்கள் எ - று.

பொய் வேடதாரிகள் வீணாகப் பிச்சை யெடுத்தே அலைவார்கள் என்பது கருத்து. 511

## போய் ஞானிகள்

முத்திசேர சித்தியிங்கு முன்னளிப்பேன் பாரெனச்
சத்தியங்கள் சொல்லியெங்குஞ் சாமிவேடம் பூண்டவர்

நித்தியம் வயிர்வளர்க்க நீதிஞானம் பேசியே
பத்தியாய்ப் பணம்பரித்துப் பாழ்நரகில் வீழ்வரே.

(பொ - ரை) மோட்சத்தை யடையத்தக்க சித்தியாகின்ற மார்க்கத்தை நான் முன்னர் கொடுப்பேன் பாரென்று சத்தியங்கள் பேசி சாமியார் வேடந் தாங்கினவர்கள் தினமும் வயிற்றைவளர்க்க மேலுக்கு நீதியாக வாய்ஞானம் பேசி பக்தியா யிருந்து பணத்தைப் பரித்துக் கொண்டு பாழாகிய நரகத்தில் வீழ்வார்கள் எ - று.

பொய் ஞானத்தைப் பேசி உலகர்களை மயக்கி பணம்பறிப்பவர்களெல்லாம் நரகத்தில் விழுந்தழுந்தி வீணாகக் கெடுவார்கள் என்பது கருத்து. 512

## சிலாஸ்துதி விலக்கல்

செம்மைசேர் மரத்திலே சிலைதலைகள் செய்கிறீர்
கொம்மையற்ற கிளையில்பாத குறடுசெய் தழிக்குறீர்
நம்முளே விளங்குவோனை நாடிநோக்க வல்லிரேல்
இம்மளமு மும்மளமு மெம்மளமு மல்லவே.

(பொ - ரை) செழிப்பான மரத்தினால் சிலைகளையுந் தலைகளையுஞ் செய்கிறீர்கள் கொழுமையில்லாத கிளைகளால் பாதக் குறடுகளைச் செய்து அழிக்கிறீர்கள். ஆனால், நமக்குள் விளங்குவோனான பரமசிவனை நாடிப்பார்க்க வல்லமை யுடையீரானால் இம்மளமும், மும்மளமும், எம்மளமு மல்லவாகும் எ - று.

பலபல வேலைகளைச் செய்கிறீரே யன்றி சர்வேஸ்வரனை உணரமாட்டீர்கள் என்பது கருத்து. 513

## போய் வேடர்கள்

எத்திசையெங் கெங்குமோடி யெண்ணிலா நதிகளிற்
சுற்றியுந் தலைமுழுகச் சுத்தஞானி யாவரோ

பத்தியோ டரன்பதம் பணிந்திடாத பாவிகாள்
முத்தியின்றி பாழ்நரகில் மூழ்கிநொந் தலைவரே.

(பொ - ரை) எந்தத் திசைகளிலும் எங்கெங்குமோடி அங்கங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தாலும் சுத்த ஞானிகளாக ஆவார்களோ? ஆகமாட்டார்கள்; உள்ளன்போடு சிவபெருமானுடைய திருவடிகளை வணங்காதபாவிகள் மோட்சமென்பது கிடைப்பதின்றி பாழாகிய நரகத்தில் வீழ்வார்கள் எ - று.

உலகத்திற் பெரும்பாலோர் தீர்த்தஸ்நான நிமித்தம் சகல தேசங்களிலுந் திரிந்து வீண் சங்கடங்களை அடைகின்றார்களென்பார், 'எத்திசை யெங்கெங்குமோடி யெண்ணிலா நதிகளில், சுற்றியுந் தலைமுழுகச் சுத்தஞானி யாவரோ' எனவும், ஈஸ்வரனை உள்ளபடியே நாடினால் சர்வேஸ்வரனுடைய திருவடிகளை வெகுசீக்கிரத்தில் அடையக் கூடுமென்பார், 'பத்தியோ ரன்பதம் பணிந்திடாத பாவிகாள் முத்தியின்றிப் பாழ்நரகில் மூழ்கிநொந் தலைவரே' எனவுங் கூறினர். 514

## சிலாஸ்துதி விலக்கல்

கல்லுவெள்ளி செம்பிரும்பு காய்ச்சிடுந் தராக்களில்
வல்லதேவ ரூபபேத மங்கமைந்து போற்றிடில்
தொல்லையற் றிடப்பெருஞ் சுகந்தருமோ சொல்லவாய்
இல்லையில்லை யில்லையில்லை யீசனாணை யில்லையே.

(பொ - ரை) கல், வெள்ளி, செம்பு, இரும்பு, தரா, இவைகளால் ரூபபேதங்கள் உண்டாக்கி அவைகளை ஸ்தாபித்து போற்றுதல் செய்தால் அவைகள் தொல்லையற்று இருப்பதற்கு பெரிய சுகங் கொடுக்குமோ சொல்லுங்கள், அங்ஙனம் சுகந்தருவது சர்வேஸ்வரனுடைய திருவாணைப்படி இல்லை இல்லை எ - று.

உலகத்தில் வாழ்மனிதர்கள் சிலாரூபவணக்கஞ் செய்வதனால் பயனின்று என்பது கருத்து. 515

## பஞ்சாட் சரம்

இச்சகஞ் சனித்ததுவு மீசனைந் தெழுத்திலே
மெச்சவுஞ் சராசரங்கள் மேவுமைந் தெழுத்திலே
உச்சிதப் பலஉயிர்க ளோங்கலஞ் செழுத்திலே
நிச்சயமெய்ஞ் ஞானபோத நிற்குமைந் தெழுத்திலே.

(பொ - ரை) சர்வேஸ்வரனுடைய பஞ்சாட்சரத்தின் கண்ணே இந்த உலகம் உண்டானதாகும், சராசரங்களும், பலவுயிர்கள் விர்த்தியடைவதும், உண்மையான உண்மைஞான போதமும் அந்தப் பஞ்சாட்சரத்திலேயே யாகும் எ - று.

சர்வ தோற்ற வொடுக்கங்களிலும் பஞ்சாட்சரமே காரணமாகவிருக்கும் என்பது கருத்து. 516

## சாஸ்திரம்

சாத்திரங்கள் பார்த்துபார்த்து தான்குரு டாவதால்
நேத்திரங்கெட வெய்யோனை நேர்துதிசெய் மூடர்காள்
பாத்திர மறிந்துமோன பக்திசெய்ய வல்லிரேல்
சூத்திரப்படி யாவருஞ் சித்தராவ ரங்ஙனே.

(பொ - ரை) சாஸ்திரங்களைப் பார்த்துப் பார்த்து தாங்கள் குருடாவதால் நேத்திரமானது கெடவும் சூரியனை கோரசத் துதிசெய்கின்ற மூடர்களே! நீங்கள் அங்ஙனஞ் செய்வதைவிட்டுப் பாத்திர மறிந்து மௌனமாகப் பக்திசெய்ய வல்லமையுடையீரானல் அவ்விடத்திலேயே சூஸ்திரஸ்தானப்படி யாவருஞ் சித்தராவார்கள் எ - று.

சர்வேஸ்வரனை மௌனஞானத்தினல் பக்திசெய்வோர் உண்மையாகச் சித்தராவார்கள் என்பது கருத்து. 517

### மன நிச்சயம்

மனவுறுதி தானிலாத மட்டிப்பிண மாடுகள்
சினமுறப் பிறர்பொருளைச் சேகரித்து வைத்ததை
தினந்தின மூரெங்குஞ்சுற்றி தீண்டிக்கே யலைபவர்
இனமதிற் பலர்கள்வையு மின்பமற்ற பாவியே.

(பொ - ரை) மனவுறுதி என்பது சிறிதுமில்லாத மட்டிப் பிணங்களாகிய மாடுகள் பலருங் கோபிக்க அந்நியர்களுடைய பொருளை அபகரித்துவைத்து அதனல் நாள்தோறும் ஊர்களெல்லாஞ் சுற்றி சாப்பாட்டுக்கே அலைவார்கள். ஆகையால், இவர்கள் சுற்றத்தாரில் பெரும்பாலோரால் வையப்படுகின்ற பாவிகளே யாவார்கள் எ - று.

மனேதிடமின்றிப் பிறர் பொருளை அபகரிக்கும் பாவிகள் பல பேர்களாலும் அவமதிக்கப்பட்டு சாப்பாட்டுக்காகப் பிச்சை யெடுத்துத் திரிவார்கள் என்பது கருத்து. 518

### பஞ்சாட்சரம்

சிவாயவசி யென்னவுஞ் செபிக்கவிச் சகமெலாம்
சிவாயவசி யென்னவுஞ் செபிக்கயாவுஞ் சித்தியாம்
சிவாயவசி யென்னவுஞ் செபிக்கவான மாளலாம்
சிவாயவசி யென்பதே விருதலைத்தீ யாகுமே.

(பொ - ரை) சிவயவசி என்று சபஞ்செய்ய இந்த உலகங்கள் யாவும் சர்வ காரியங்களும் சித்தியாகும். அன்றி சொர்க்கலோகத்தையும் அரசாளலாம். ஆகையால், அந்தச் சிவாயவசி என்பதே இருதலைத் தீயாகும் எ - று.

சிவயவசி என்பது இரண்டு பக்கத்திலும் சிவயவசியாகவே உச்சரிப்பதால் இருதலைத் தீயாகுமென்பார், சிவாயவசி யென்பதே யிரு தலைத்தீ யாகும்' எனவும், அந்த மந்திரத்தால் சர்வ சித்திகளையு மடையக்கூடு மென்பார், 'சிவாயவசி யென்னவுஞ் செபிக்கவிச் சகமெலாம், சிவாயவசி யென்னவுஞ் செபிக்கயாவுஞ் சித்தியாம், சிவாயவசி யென்னவுஞ் செபிக்கவான மாளலாம்' எனவுங் கூறினர். 519

## ஸ்ரீ சிவவாக்கியர் பாடல்

### மூலமும் - உரையும்

முற்றிற்று.

திருமகள் விலாசம் பிரஸ் சென்னை—1932.

# பாட்டுகளின் அட்டவணை

பாட்டுகளின் அட்டவணை

முற்றிற்று

திருமகள் விலாசம் பிரஸ் மச்சணை—1932.

# பட்டினத்துப்பிள்ளையார்

திருவாய்மலர்ந்தருளிய

# பிரபந்தத்திரட்டின் விருத்தியுரை

[பட்டினத்தடிகள் திருவுருவப்படத்துடன் உயர்ந்த காலிகோ பைண்டு செய்தது: விலை ரூபா **3—8—0**]

பட்டினத்தடிகளால் ஆங்காங்கு எம்மனோரை யுய்விக்கு மாத்திரையானே திருவாய் மலர்ந்தருளப்பெற்று நம்பியாண்டார் நம்பிகளால் பதினொருந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ள பிரபந்தங்களாகிய கோயினான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் வொருபா வொருபஃது என்பனவற்றிற்கும், கோயிற்றிருவகவல், திருவேகம்பமாலை, திருவிசைப்பா, பொது முதல்வன் முறையீடு, அருட்புலம்பல், இறந்தகாலத் திரங்கல், நெஞ்சொடுபுலம்பல், பூரணமாலை, நெஞ்சொடு மகிழ்தல் என்னுமிவைகளடங்கிய திருப்பாடற்றிரட்டு, உடற்கூற்றுவண்ணம் என்பனவற்றிற்கும் அநேகர் பதவுரையும் பொழிப்புரையும் சிற்சில வற்றிற்கு எழுதியிருக்கின்றனர். அவைபோல் அல்லாது சென்னை பச்சையப்பன் கல்விச்சாலைத் தமிழ்ப்பண்டிதர் ம-௱-௱-ஸ்ரீ, ஆ. சிங்காரவேலு முதலியார் அவர்களால் பதவுரையும், விசேடம், உதாரணம், இனனும் இவைகளமைந்த விருத்தியுரையையும் எடுத்துக்காட்டி, பெரியோர்களுடைய ஞானசாத்திரங்களி லிருந்து மேற்கோட்பாக்கள் உதகரிக்கப்பட்டிருக்கின்றன.

**கவனிப்பு:**—இதில் பட்டினத்தார் பிரபந்தவுரை, பாடலுரை, புலம்பலுரை, அன்னார் சீடராகிய பத்திரகிரியார் புலம்பலுரை இவைகளெல்லாம் அடங்கி யிருக்கின்றன. இப்படி யெல்லாம் ஒன்றுசேர்த்து இதுவரையில் யாரும் அச்சிடவில்லை.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
நெ. 41, வெங்கடாசலமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.

பரமார்த்ததரிசன மென்னும்

# ஸ்ரீ பகவத்கீதை விரிவான வசனம்

[இதில் ஸ்ரீ பகவத்கீதா மான்மியமும், ஸ்ரீ சங்கர-ராமாநுஜ-மாத்துவ பாஷ்யங்களின் குறிப்புகள் முதலியன அடங்கியுள்ளன: உயர்ந்த காலிகோ பைண்டு ஆப்டோன் போடோ படங்களுடன்: ரூபா **2.**]

இந்த அரிய நூலானது மனிதராயினோர்க்கு அஞ்ஞான இருளைப் போக்கி நல்வழிக் கடைப்பிடித் தொழுகுமாறு எல்லா தத்துவங்களையும் விளக்கிக்காட்டி உண்மைப்பொருளை யடைதற்குரிய நூல்களுள் இதுவே முதன்மைபெற்றதாகும். இங்ஙனம் இது சிறப்புடையதாயிருத்தல்பற்றியே இதற்கு; ஸ்ரீ சங்கரர்-ஸ்ரீ ராமநுஜர்-ஸ்ரீ மாத்துவர்-ஸ்ரீதரர்-இராகவேந்திரர் முதலியவர்கள் பாஷ்யங்களு மியற்றியிருக்கின்றனர். அன்னிய மதஸ்தர்களும் இந்நூலை ஆங்கில முதலிய பல பாஷைகளில் மொழிபெயர்த்திருக்கின்றனர் என்றதற்கு இந்நூலின் பெருமையே யாகும்.

நமது சுருதி, ஸ்மிருதி. இதிஹாச புராணங்களிலுள்ள சகல வேதாந்த சாரங்கள் சகலருக்கும் சந்தேகந்தீர சர்வேசுவரனே ஸ்ரீ கிருஷ்ண பகவானாக அவதரித்து அர்ஜுனனை வியாஜமாக வைத்துக் கொண்டு சகல ஜீவகோடிகளுக்கும் உபயோகமாகத் திருவாய் மலர்ந்தருளியிருப்பதை நம் தமிழ் நாட்டார் அனைவரும் படித்து ஞானமடைந்து கிருதார்த்தர்களாக வேண்டுமென்ற எண்ணத்துடன் தெள்ளிய வசனநடையில் ஆங்காங்கு மதத்திரய பாஷ்யங்களின் அபிப்ராய பேதங்களுடன் விரிவாய் எழுதப்பட்டிருக்கிறது.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
நெ, 41. வெங்கடாசுமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.

யோகவித்தியா யென்னும்

# முக்திசோபானம்

[23-யோகாசன படங்களடங்கியது. விலை அணா **12**.]

புருஷார்த்த சாதனங்களுள் முக்கியமானது யோகமென அறிஞர் பலர் அறிந்திருந்தும் சாதகம் செய்வது மிக கஷ்டமென்று சிலர் விட்டுவருகின்றார்கள். லோகோபகாரமாக இவ்வருமையான நூல் யாவரும் மிகு எளிதிற் சாதகம் செய்யுமாறு வடமொழியினின்று சில பிரமாணங்களை எடுத்து நான்கு அத்தியாயங்களாக அமையப்பட்டுள்ளது. முதல் அத்தியாயத்தில் பக்தி, சிரவணம், ஸ்மரணை முதலிய லக்ஷணங்களும் அவற்றின் வேறுபாடுகளை இருபத்திமூன்று யோகாசன படங்களால் விவரித்துக் காட்டியும்; இரண்டாம் அத்தியாயத்தில் பிராணாயாமம், பிரத்தியாகாரம் இவற்றின் இலக்ஷணங்களும்; மூன்றாம் அத்தியாயத்தில் ஞானயோக இராஜயோக லக்ஷணமும்; நான்காம் அத்தியாயத்தில் பரமார்த்த தத்துவ விளக்கத்தின் துறவு லக்ஷணங்களும் பல உவமானங்களால் விளக்கப்பட்டிருக்கின்றன. இதுவரையிலும் இம்மாதிரி யோகநூல் வெளிவந்ததில்லை.

எல்லா புஸ்தகங்கள் அடங்கிய கிரயஜாபிதா தேவையுள்ளவர்கள் தங்கள் விலாசத்தை தெரிவித்தால் இனாமாக அனுப்பப்படும்.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
நெ. 41, வெங்கடறாமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.

